# தமிழர் ஆடைகள்

முனைவர் கு. பகவதி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | tamiḻar āḍaigaḷ |
| Author | : | Dr. K. Bhagavathi, M.A., Ph.D.,<br>Associate Professor<br>International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No. | : | 460 |
| Language | : | Tamil |
| Edition | : | Second; Frist - 1980 |
| Year of Publication | : | 2003 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 21/14 cms. |
| Printing type Used | : | 10, 12, 14, 18 points |
| No. of Pages | : | xiv + 422 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 90/- (Rupees ninety only) |
| Printing | : | Powerman Printers<br>89, Coral Merchant Street<br>Mannady, Chennai - 600 001<br>Ph. 25248342 |
| Subject | : | Costumes of the Tamils |
| Special Information | : | This is the first Book on costumes of the Tamils |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

# அணிந்துரை

மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஆடை இன்றியமையாதது. 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்பது முதுமொழி. மனிதனுடைய அடிப்படைத் தேவையாகவும் பண்பாட்டுச் சின்னமாகவும் விளங்குவது ஆடை. ஆடையைக் குறிப்பதற்கு இலக்கியங்களில் பல சொற்கள் ஆளப்பட்டுள்ளன. உடுக்கை, துணி, ஆடை, உடுப்பு, குப்பாயம், மெய்ப்பை, பட்டுடை, கலிங்கம், புடவை, கச்சு, தானை, படாம் என ஆடைகளைக் குறிக்கும் பல்வேறு சொற்கள் நிலவிவந்துள்ளதைக் காணும்போது இத்தகு பண்பாடுடைய சமுதாயமாகத் தமிழ்ச் சமுதாயம் இருந்தது என்பதை நாம் அறியலாம். உடுக்கை இழந்தவன் கைபோல என்று ஆடையின் இன்றியமையாமை மான உணர்வோடு இணைத்துக் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. பண்டைத் தமிழர்களின் தொழில்களில் ஆடை நெய்தல் தொழில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றிருந்தது.

நெசவு இன்றியமையாத தொழிலாகப் பண்டைத் தமிழர்க்கு இருந்தது. பஞ்சு எடுத்தல், நூல் நூற்றல், ஆடை நெய்தல், சாயம் தோய்த்தல், ஆடை தைத்தல் போன்ற பல்வேறு தொழில்கள் நடைபெற்றதாக இலக்கியங்களில் காண முடிகின்றது. பஞ்சு எடுத்தல், நூல் நூற்றல் போன்ற பணிகளைக் கணவனை இழந்த பெண்கள் மேற்கொண்டதாக இலக்கியங்கள் கூறுகின்றன. அவர்கள் பருத்திப் பெண்டிர், ஆளில் பெண்டிர் என்று வழங்கப்பட்டனர். மிக நுட்பமான ஆடை வகையையும் முன்னோர் நெய்ததற்கான சான்றுகள் நிரம்பக் காணப்படுகின்றன. நூல் ஆடையோடு பட்டு ஆடை நெய்வதிலும் வினைநுட்பஞ் சான்றவர்களாகப் பண்டைத் தமிழர்கள் இருந்தனர். நீலப்பட்டு, பூம்பட்டு, வெண்பட்டு, வண்ணப்பட்டு, ரோமப்பட்டு என்றெல்லாம் பட்டின் வகைகளைப் பற்றிப் பல்வேறு இலக்கியங்களில் பேசப்படுகின்றன. நூற்ற இழையின் இழையைக் காணமுடியாத அளவிற்கு மிக நுட்பமான ஆடைகளையும் முன்னோர்கள் நெய்தனர் என்பதற்குச் சான்றுகள் நிரம்ப உள்ளன. 'இழைமருங்கு அறியா நுழைநூல் கலிங்கம்' என்று மலைபடுகடாம் ஆடையின் சிறப்பை வெளிப்படுத்திக் காட்டுகின்றது. ஆடை நெய்தல் என்ற செய்தியைக் கொண்டு நெய்வதற்குத் தறிகள் இருந்தன என்று கருத இடம் உண்டு. ஆனால் 1885இல்தான் பிரிட்டனைச் சார்ந்த இ. கார்ட்ரைட் என்பவர்

விசைத்தறியைக் கண்டுபிடித்தார் என்பதை அறியமுடிகிறது. இந்நிலையில் மிக நுட்பமான ஆடைகளை நெய்யும் நுட்பத்தைத் தமிழர்கள் முன்பே அறிந்திருந்தனர் என்பதைக் காணும்பொழுது வியப்படையாமல் இருக்கமுடியவில்லை. ஆடைகளைத் தைக்கும் தொழில் நடைபெற்றதற்கான குறிப்பும் காணப்படுகிறது. துன்னல்காரர், துன்னூசி போன்ற சொற்கள் ஆடை தைக்கப்பட்டதைக் குறிப்பதாக அமைகின்றன. துணியைத் தைத்து ஆடையாக அணிந்துகொள்ளும் நிலை இருந்ததால் அதற்கான பொறிகள் இருந்திருக்கவேண்டும் என்று கருதலாம். பிரான்ஸ் நாட்டைச் சார்ந்த பார்த்திலேமீ என்பவர் *1829*இல்தான் தையல் பொறியைக் கண்டுபிடித்தார் என அறியமுடிகிறது. இதனால் *2000* ஆண்டுகளுக்கு முன்பு துணி நெய்வதும், உடல் அமைப்பிற்கேற்ற வகையில் ஆடைகள் தைத்துக் கொள்வதும் ஆகிய நிலைகள் இருந்தன என்பது வியக்கத்தக்கதாக உள்ளது. இத்தகைய நிலையில் பண்டைய தமிழர்கள் நாகரிகத்தின் மிக உயர்ந்த நிலையில் வாழ்ந்திருந்தனர் என்பதற்கு நம்முடைய இலக்கியங்களில் சான்றுகள் நிரம்பவுள்ளன. தமிழர்களின் நாகரிக அடையாளங்களாகக் காணப்படும் பல்வேறு கூறுகளுள் ஆடை இன்றியமையாதது என்பதால் இது பற்றிய செய்திகள் இலக்கியங்களில் பயின்று வந்துள்ள நிலையில் அவற்றைத் தொகுத்துக் காண்பது என்பது நம்மை நாமே மீளாய்வுக்கு உட்படுத்துவதாகும். இந்நிலையில் தமிழர் பண்பாடு வரிசையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 'தமிழர் ஆடைகள்' எனும் தொகுப்பாய்வை மேற்கொண்டது. இந்த நூலின் இன்றியமையாமை கருதி இதனை மறுபதிப்பாக வெளியிட இந்நிறுவனம் முடிவுசெய்தது. இதனை மறுபதிப்பாக வெளியிட இசைவளித்த நிறுவனப் பதிப்புக்குழு உறுப்பினர்களுக்கு முதற்கண் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இது போன்று தமிழர்களின் பெருமையை, புகழை வெளிப்படுத்திக்காட்டும் நூல்கள் நிரம்ப வெளிவரவேண்டும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வியமைச்சர் திருமிகு செ. செம்மலை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.**, அவர்களுக்கும், **கூடுதல் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.**, அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலினை அழகுற அச்சிட்டுத்தந்த சென்னை பவர்மேன் அச்சகத்தார்க்கும் நன்றி.

*22-07-2003*
**சென்னை**

**இயக்குநர்**

# முதற்பதிப்பின் முகவுரை

**டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்**

மேனாள் இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்

தமிழரின் பண்பாட்டை விளக்குவதற்குப் பயன் படும் பல நூல்களை நிறுவனம் வெளியிட எண்ணி யுள்ளது. முயன்று கொண்டிருக்கிறது. அவ்வகையில் முதல் நூலாக நிறுவனத்திலிருந்து தமிழர் நாட்டு விளையாட்டுகள் என்ற நூல் அக்டோபர் எண்பதில் வெளிவந்தது. இரண்டாவது நூலாக இந்நூல் வெளி வருகின்றது. ஆயின் இந்நிறுவனத்தில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்ற ஆய்வேடு என்ற முறையில் அந்நிலையில் முதல் நூலாக வெளிவருகின்றது. இதைத் தொடர்ந்து தமிழரின் பழக்கவழக்கங்களும் நம்பிக்கை களும், தமிழர் உணவு, தமிழர் கண்ட மனம் போன்ற நூல்கள் வெளிவரவிருக்கின்றன.

இந்நூலாசிரியை டாக்டர் சே. பகவதி அவர்களின் கடுமையான முயற்சியையும் உழைப்பையும் ஆய்வைப் பகுத்தும் வகுத்தும் செய்கின்ற முறையையும் நூலின் ஒவ்வொரு பக்கமும் எடுத்தியம்புகின்றது. அதோடு ஆடை பற்றிய கலைச்சொற்கள் 1750-க்கு மேல் தொகுத்துத் தந்துள்ளமை வருகின்றஆராய்ச்சிக்கு வழி வகுக்கும். ஆடை பற்றிய பழமொழிகள், நம்பிக்கைகள், இலக்கியத்தில் ஆடை பயிலும் இடங்கள் இவைகளை யெல்லாம் திரட்டிப் பின்னிணைப்பாகத் தந்துள்ளமை பாராட்டத்தக்க முயற்சி. திருமதி பகவதி இதுபோன்ற பல நல்ல ஆய்வு நூல்களை வருங்காலத்தில் எழுத வேண்டும். எழுதுவார் என்ற நம்பிக்கையோடு வாழ்த்து கிறேன்.

இந்நூலினைச் சிறப்புற குறுகிய காலத்தில் அச்சிட்டு தந்த நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ் அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர் களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

அடையாறு
சென்னை—600 020.

அன்பன்
ச. வே. சுப்பிரமணியன்

# நன்றியுரை

தமிழர் பண்பாட்டையும் நாகரிகத்தையும் உணர்த்தும் நூல்களை வெளியிடும் முயற்சியில் செயல்பட்டு வரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தினால் தமிழர் ஆடைகள் எனும் இவ்வாய்வு நூல் வெளிவருகிறது. இவ்வாய்ப்பினை நல்கிய நிறுவனத்திற்கும் இயக்குநருக்கும் என் நன்றியைச் சமர்ப்பிக்கின்றேன்.

நூலின் உருவாக்கத்திற்குத் தேவையான அரிய கருத்துக்களை நல்கி துணை புரிந்த எனது மதிப்பிற்கும் வணக்கத்திற்குமுரிய பேராசிரியர் டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் அவர்கட்கு என் இதய நன்றியைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்வுக் கட்டுரை எழுதும் போது தங்கள் உயர்ந்த எண்ணங்களை அளித்து வழிகாட்டிய முனைவர் குழுவிற்கு என் நன்றி உரித்து. நூலாக்குங்கால் தனது சிந்தனைகள் பலவற்றைச் சிறக்க அளித்த நெசவுத் தொழில்நுட்பக் கல்லூரி முதல்வர் திரு. பி. எஸ். சுந்தரராஜன் அவர்கட்கு என் நன்றி. எழுந்த சில ஐயப்பாடுகளைப் போக்கி, இன்முகத்துடன் உதவி புரிந்த திரு. ஆ. சிவலிங்கனார் அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது. மற்றும் பல நிலைகளிலும் இந்நூல் வெளியீட்டிற்குத் துணைபுரிந்த என் சகோதர சகோதரியர்க்கும் நன்றி.

இவ்வாய்வேட்டினை வெளியிட அனுமதி அளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை

கே. பகவதி

# Introduction

The history of costumes is as old as the history of humans, a knowledge of which will be of immense use to the historians of human civilization. The complexities of culture and civilization cannot be unfathomed fully without a deep understanding of the customs and conventions underlying the day-to-day lives of the individuals. These customs and conventions are an organic blend of various things of which the costumes are of cardinal importance. We cannot think of a human being who could not 'obsess' himself with his dress, at least a few moments of his every-day routine. That costumes have become deeply embedded in the life of man and consequently in the culture of mankind is too obvious to need further elucidation. A complete understanding of the costumes of a people is not just one of the essential realms of a historian's exploration; it is of unceasing interest to the generality of mankind too, in so far as it unravels before them the nuances of the daily lives of a people at a particular point of time, and also it may both in positive and negative ways influence our ways of dressing. We cannot afford to be the students of human history without having a 'working' knowledge of the history of costumes, since, as the Tamil saying goes, without cloths to cover him a man is but half of himself.

And, living is a serious business, tremondously serious and important. All our modes of knowing and being costitute this vital business of mankind. Our 'being' is the infrastructure and 'knowing' the superstructure of this wonderful edifice of human life. No doubt, these two structures, well-balanced, *complete* the life on this earth. But there is an element of crudeness and primitivity in this 'building'. It must be polished, given emblishment. An extrinsic ornamentation done with the same seriousness and care must be added to its intrinsic strength and beauty. Such a refinement may not enhance the inner splendour of the structure, but it is never a luxury; it makes the 'form' of the

building what it ought to be. This external beauty is the clothes. As long as human *civilization* continues, custumes will be there, organically connected with our modes of living.

Hence a study of the custumes is as important as the study of any other facet of human life. No literature worth the name could ignore it. After all, literature and the other arts are but the off springs of the artist's *passion* for life, a fuller life, and his inexhaustible interest in representing it in the artefacts. In fact even a superficial survey of the literatures of the world reveals the astonishing fact that the modes of dressing of the individual literary characters and personalities have a significant bearing not only on their individual lives but on the thematic organization of the literary works also. It is not uncommon to come across a change in the course of events, an unexpected shift in emphasis, a dramatic appeal to the readers, a felt compulsion and immediacy in the evolution and interrelatedness of life portrayed in the works of art due solely to the costume styles which the writer conceives for the people of his artistic world. In the hands of matured artists it is much more than this. The adoptation of a particular kind of dress may give an unmistakable clue to the unfathoming of the very conception of the writer that underlies the overall thematic structure of the work. The garments worn by the characters have been used by many poets as a rich source of creating images and symbols. The inward greatness or littleness of a man could be judged through his outward appearance, the obvious manifestation of which is his dress. It is not for nothing that Shakespeare has given considerable importance to the robes and crowns and jewels and garments in his plays wherein *live* the universal man and woman. They may give a clue toward unravelling the puzzle behind his overriding concern with kings and nobles and courts. The assignment of garments and ornaments to his characters is not the result of any arbitrary conventions. For Shakespeare, for that matter, for most of the writers of the Classical age crowns and robes, rich costumes and jewels were the fitting outward manifestations of the person's inward majesty. Such

costumes of the characters along with their other outward grandeurs may indicate something of the conception of human being by the writer as a supreme being and also they may point toward the artist's vision of the amplitude and greatness of human life. The modern writer's preoccupation with the commonplace souls and their unglamourous adventures, and their ultimate conception of human soul as commonplace and its emotions as mean may be reflected among other things by the attire assigned to the characters. Consequently, a comparative study of the costume-pattern of the characters in a literature of one epoch with that of another epoch, of the costumes used by one cultural group with that of another may lead toward the discovery of valuable materials for a historical and sociological study of the peoples of different ages and cultures.

Again, as Dr. Sachidand Sahay puts it, rightly, "Dress is the most eminet form of individual as well as racial self-expression. It is at the same time an excellent embodiment of their sense of beauty...... For individual self expression no human activity affords so much scope to the average man or woman as does dress or personal adornments" (*Indian Custume Coiffure and Ornament*, Delhi, 1973 p.1.) It is not only that One's way of dressing may, in unmistakable terms, determine one's tastes and temperaments in general and one's aesthegtic sense in particular. The more subtle and finer spheres of human life like love and sensuousness are, at least in a limited way, organically connected with one's self-expression' through one's costumes. Or, to put it precisely, one's manner of dressing may help us to 'judge' though not dicisively, one's whole mode of aesthetic living. Applying the principle of reductive process, we may even go to the extent of saying that this 'style' in dressing may have a bearing on one's material existence too, since one's wordly living and aesthetic living are not unrelated to one another.

So much for the relationship of dress with *life* and literature. A detailed study of the 'evolution' of costumes among different cultural groups may bring to the fore hitherto unexplored

avenues in the civilization of mankind. But this is too ambitious a project for the present writer who has to remain contented with the study of the costumes of Tamils, an illustrious race which is at once complex and unsophisticated, highly cultured and primitive, extraordinarily valorous and yet incredibly gentle and soft. An attempt to gain some insight of the cultural pattern of this people has had to be made only on the basis of the evidences we find in their literature, sculpture and painting since there is no concrete historical evidence. This is especially so with the Caṅkam Tamils, a people who lived, as their literatures passionately illustrate, an exemplary life at the dawn of the Christian era and even before. But art is not a figment of imagination nor is it the offspring of a 'neurotic' mind. It is the product of the *living* experiences of a member of the society, its unique spokesman, its 'unacknowledged legislator'. He is different from the historian in the sense that he is an inseparable blend of a historian, a bard (a creator), and a prophet. The sense of history in poetry is masked by prophecy and 'creation', no doubt, but it is only *masked*, never destroyed. A learned and skilful critic can unearth it and reconstructure the cultural facets of the people represented in the given work of art.

# உள்ளே...

# முன்னுரை

உண்டி முதற்றே உலகம் இயங்கினும் உண்டியையும்விட உலகில் இன்றியமையாதது ஆடை என்பது சான்றோர் தம் முடிபு. இதனை, 'கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்ப தூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்'என்னும் வள்ளுவர் வாக்குத் தெளிவாக்கும். தெய்வப் புலவர் இக்குறளில் உயிர் கொடுக்கும் உண்டியை முதலில் கூறவில்லை. மயிர் நீப்பின் வாழாக் கவரி மான் அன்ன மாந்தர்க்குத் தேவையான உடையையே சொல்லிச் செல்கின்றார். மாந்தனிடம் தனிச்சிறப்புப் பெற்ற ஆடை எண் வகை இன்பம்,[1] எண்ணெண் கலைகள்[2] இவற்றுள் ஒன்றெனத் திகழும் தன்மையையும் பெற்றுள்ளது. ஆடையில்லா மனிதன் அரைமனிதன், ஆள்பாதி ஆடைபாதி என்ற தமிழர் மொழி களும் இதன் காரணமாகக் கிளைத்தனவே. அறிஞர் பலரும் இதன் மேன்மையினைத் தம் சொற்களால் சிறப்பித்துள்ளனர்.[3]

---

1. "Dress, ornament, perfume, women, couch, singing, food and betel were regarded by ancient Indian savants as the eight enjoyments of life."
   Costumes of India and Pakistan, S.N.Dar, P. 180.

2. Tamil Lexicon, Vol.I, part-I, P. 180.

3. "Clothes in short, in primitive as in modern times are not merely the covering of the body, but the vesture of the soul." - Encyclopaedia Britannica, Vol.7, 677.
   "In the life of a man the first and foremost are food and clothing. To man these two are fetters and chains which bind him to the field of re-birth."
   -Costumes Textiles Cosmetics and Coiffure,
   Dr. Motichandra, P. 49.

இவற்றால் தன்னையும், தன்னைச் சுற்றியுள்ள மாந்தரின் சிறப்பியல்புகளையும் உணர்த்தி நிற்பதில் முதன்மை பெறுவன வற்றுள் ஆடையும் ஒன்று எனல் மிகையில்லை.

இத்தகைய பெருஞ்சிறப்புடைய ஆடை பற்றிய கல்வி, நமக்குத் தரும் மாந்தர் வாழ்க்கைக் கூறுகள் பல.

1. உடையின் தன்மை, உடுத்தும் முறை
2. ஆடைத் தொழில் அறிவு
3. மக்களின் பழக்கவழக்கங்கள், கலையுணர்வு, நம்பிக் கையுணர்வு, நாகரிக உணர்வு

போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

இக்கூறுகள், பல்வேறு இனத்தாரிடையே அமைந்து கிடக்கும் ஒற்றுமைகள், வேற்றுமைகள், பிற நாட்டார் தொடர்பால் ஏற்பட்ட பண்பாட்டுப் பரிமாற்றங்கள் போன்றனவற்றையும் புலப்படுத்துகின்றன.

## ஆடையின் தோற்றம்

மக்கள் வாழ்வு முறையினைத் தெளிவுபடக் காட்டுவதில் ஒரு கூறான ஆடையின் தோற்றம் பற்றிய வரலாறு இன்றைய நிலை யிலும் தெளிவாகாத ஒன்று. அறிஞர் பலர் பல எண்ணங்களைக் கூறிச் செல்கின்றனர். இவற்றுள் தட்ப வெப்ப நிலையைக் காரணமாகக் காட்டுதல் பரவலான கருத்தாகத் தென்படுகிறது.

ஆக்னெஸ் ஆலன் உடையின் தோற்றம் சூழலைப் பொறுத் துப் பலபடியாகத் தோன்றி இருக்க வேண்டும் என்பர். தட்ப வெப்ப நிலை என்று சொல்வது ஆய்வின் முதற்படிதான் என்று இதற்குப் பல விளக்கங்களையும் நவில்வார். ஆடையின் தோற்றம், அணிகலன் என்ற நிலையில் அல்லது ஒரு இனத்தா ரிடம் இருந்து இன்னொரு இனத்தாரைப் பிரித்தல் அல்லது தனது தகுதி காட்டல் அல்லது மந்திர சக்தியில் உள்ள நம்பிக்கை போன்ற காரணங்களாகலாம் என்பர்.[4]

தட்ப வெப்பநிலை மட்டுமன்றி, மாந்தர் இனத்தை விலங்கு களிடம் இருந்துப் பிரித்தலில் இருந்தும் தோன்றியிருக்கலாம்

4. "So we have seen clothing may have started as ornament or to distinguish one tribe from another or to show rank or because certain things were believed to have magic qualities." - The Story of Clothes, Agnes Allen, Pp. 15, 16.

என்பர் சிங்காரவேலு.[5] மனிதனிடம் மயிரில்லாமையும், செயற்கையாகப் போர்த்தலுக்கு மனிதனைத் தூண்டியிருக்கக் கூடும் என்றும் இவர் கருதுகின்றார். அறிஞர் சிலரின் எண்ணங்களாக அழகுபடுத்தல், கவர்ச்சி, அடையாளச் சின்னத்தின் வளர்ச்சி நிலை, மாறுவேடம் போன்றவற்றையும் இவர் இயம்புகின்றார்.[6]

மேரியட்டா கெட்டுனென் என்பார், தட்பவெப்ப நிலையை விடவும், பொருட்களை அணிந்து கொள்வதில் உள்ள ஆர்வமே உடையின் தோற்றம் என முடிவுரைப்பதற்கான வாய்ப்புக் கூறுகள் மிகுதியாக உள எனக் காட்டுவார்.[7]

எஸ். என். தார் ஆடையின் தோற்றம் தட்பவெப்பம் கருதியதன்று என்றுரைப்பர். இதற்கு இவர் கூறும் காரணம் வெவ்வேறு இடங்களில் உள்ள பல சமுதாயத்தினரைப் பார்க்கும்போது மிக மோசமான தட்ப வெப்ப நிலையிலும் அவர்கள் எவ்வித பாதுகாப்பையும் நாடாமையே.[8] ஆதாம் ஏவாள் தொடர்பானதொரு கருத்தும் காணப்படுகிறது.[9]

இவ்வாறு, அறிஞர் பலரின் எண்ணங்களையும் நோக்க, நாணம், அடக்கம், அடிப்படையில் உடுத்தத் தொடங்கினர்

---

5. "The fact that climatic condition...has been an important factor in the origin of the use of clothing cannot be doubted for after all it is one of those factors that has differentiated human beings from animals which grow warm coats and transmit them to their offspring by heridity. It is even assumed an account of the loss of hair of the body, man was compelled to seek for an artificial covering." - The Social Life of the Tamils, S. Singaravelu. P. 70

6. The Social Life of the Tamils, S. Singaravelu. P. 75

7. Fundamentals of Dress, Marietta Kettunen, P. 192.

8. "If we turn to study the various societies of primitive savages, he says we find in many cases where the climate is far worse than our own they do not seem to need the least protection from it"-Costumes of India and Pakistan, S.N. Dar.

9. "The art of Dress did never begin till Eve, our mother learnt to sin." Ibid, Introduction.

என்னும் குறிப்பு யாண்டும் தென்படவில்லை. தட்பவெப்ப நிலையும் ஆடைத் தோற்றத்திற்குரியதொரு காரணமே தவிர, முதன்மையானது அன்று. 'அழகு படுத்திக் கொள்ளல்' என்னும் சிந்தனைக்கே இவர்தம் எண்ணங்கள் பொருந்தி வருகின்றன. இந்நிலையில் ஆடையின் தோற்றம் உடலை அழகுபடுத்திக் கொள்வதினின்றும் உருவானது என்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதே. இதனை, லெஸ்டர் கருத்தும் உறுதிப்படுத்துகின்றது.[10]

## ஆடையும் சூழலும்

1. மானவுணர்வுக்குத் துணையாதல் 2. அழகினை மிகுவித்தல் 3. தட்பவெப்ப நிலையினின்றும் பாதுகாத்தல் 4. தன் தகுதியியம்பல் 5. உடுத்தவர் தகுதியியம்பல். 6. கலையுணர்வு எடுத்துக் காட்டல் போன்ற பல்வேறு பயன்களைத் தன்னில் வெளிப்படுத்தி நிற்கும் உடை, நாட்டின் தட்ப வெப்பம், நாட்டில் உற்பத்தியாகும் மூலப்பொருள், உளவியல், சமுதாயநிலை, உடலின் தன்மை, பொருளாதாரம் என்ற பல நிலைகளுக்கிணங்க அமையும் என்பர்.[11]

இன்று பல்துறைகளிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றம், மாறுபாடுகள் இக்கட்டுப்பாடுகளைத் தளர்த்திவிட்டதைக் காண்கின்றோம்.

அதிக வெப்ப நிலைக்கேற்ப குறைந்த அளவு உடையுடுத்திய தமிழர், பண்பாட்டுக் கலப்பு காரணமாக இன்று அதிகமாக ஆடையுடுத்தல் கண்கூடு. ஒரு நாட்டில் மூலப் பொருட்கள் எல்லா நாட்டினருக்கும் கிடைக்கத் தொடங்கவே எல்லா வகை ஆடைகளையும் எல்லா மாந்தரும் பயன்படுத்தும் தன்மையும் அமைகின்றது.

---

10. The beginning of dress, that from which dress came to be was in the form of body decoration. The painting, cutting and tatooing of the skin are forms of body decoration which were the first step toward modern dress. - Historic Costume, Lester.

11. Indian Costume Coiffure and Ornament
- Sachidanand Sahay, P. XV.

உடல் இயல்புகளுக்கேற்ப உடை உடுத்தல் சாதாரண மாந்தர் நிலையே. மகளிர் ஆடவர் உடையை உடுத்தும் வழக்கமும் இன்று காணப்படுகின்றது. சமுதாய நிலை எனக் காணின், சாதி மதம் போன்றவற்றில் உள்ள கட்டுப்பாடு இன்று தளர்ந்து விட்டிருக்கக் காண்கின்றோம். உளவியலுக்கேற்றபடி உடுத்தல் ஓரளவுக்குப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

எனவே, காலந்தோறும் ஏற்படும் அரசியல், பொருளாதாரம், சமயம் போன்ற சூழல்களுக்கேற்ப ஆடையும் மாறுபட்டு அமைகின்றது எனல் பொருந்தும்.

## மூலப் பொருட்களும் முதல் ஆடையும்

இன்று மாந்தர், இயற்கை நல்கும் தாவர (vegetable) விலங்கு (animal) இழைகளுடன், தன்னால் உருவாக்கப்பட்ட செயற்கை யிழைகளையும் (synthetic fibre) ஆடைக்காகப் பயன் படுத்துகின்றனர். செயற்கை இழைகள் கண்டு பிடிக்கப்படா நிலையில், முதலிரு இழைகளையுமே மாந்தர் பயன்படுத்தினர். இவற்றுள்ளும் தழை, மரவுரி, தோல் இவையே ஆதி மனிதன் உடைகள். இவற்றுள் எது முதலாடை என்பது இன்றும் முடிவு செய்யப்படாத ஒன்று.[12] அறிஞர் சிலர் தோலினையும்,[13] சிலர் தழையினையும்[14] முதலாடை என்பர். தழைபற்றிய எண்ணங்களே அதிகமாகக் காணப்படுகின்றன. சில சான்றுகளை இவண் காணலாம்.

1. ஆடையின் தோற்றத்துக்கு அழகு படுத்தலே காரணம் எனக் கண்டோம். இதற்குத் தோலினை விடவும் இலை தழைகளைப் பயன்படுத்தினர் என்பதே பொருத்தமானதாகும்.

---

12. "Which fibres were the very first to be used we cannot say."
- The Story of Clothes, Agnes Allen, P. 19.

13. "Man's earliest clothing consisted of animal pelts and hides." - Fundamentals of Dress-Marietta Kettunen-143.

14. தழையாடைகளுக்கும் மரப்பட்டை ஆடைகளுக்கும் பிறகு தான் தோல் ஆடைகள் கண்டு பிடிக்கப்பட்டு இருக்க வேண்டும் பழந்தமிழகத்தில் நெசவுத் தொழில், அரங்க பொன்னுசாமி, கொங்கு இதழ், 15-3-1976, பக்-59.

2. இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மனிதன் முதலில் பயன்படுத்ியது இயற்கையினின்றும் கிடைத்த பொருட்களே யாம். இயற்கையாகக் கிடைத்த காய் கனிகளே புலாலுக்கு முன்னர் அவன் உண்ணும் பொருளாக இருந்திருக்க வேண்டும். இதைப்போன்று இயற்கை வழங்கிய இலை தழைகள், மரவுரியைப் பயன்படுத்திய பின்னரே, உணவுக்காகப் பெற்ற விலங்குகளின் தோலினை அவன் உடையாகவும் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

3. ஆதாம் ஏவாள் முதலில் உடுத்தியது தழையுடை. இறைவன் அவர்க்குக் கொடுத்தது தோலாடை என்பது விவிலிய நூல் தரும் விளக்கம். எனவே விவிலிய நூல் காலத்திய எண்ணமாக இதனைக் கொள்ள, ஈண்டும் தோலாடை இரண்டாமிடமே பெறலைக் காணலாம்.

எனவே அழகு கருதி தழையுடைகளையும் பின்னர் பல் உணர்வுகளின் அடிப்படையில் பிற உடைகளையும் அணியத் தொடங்குகின்றான் மனிதன் எனக் கருதலாம். தழைகள் கிடைக்கவியலாத பனிப்பிரதேசம் போன்ற இடங்களில் வாழ்ந்த மக்கள் தோலினை முதலில் பயன்படுத்தியிருக்கக்கூடும் எனினும், பெரும்பான்மையான இடங்களில் தழையுடையினையே முதல் உடையாகக் கொண்டு இருந்திருக்க வேண்டும் என்பது ஈண்டு தெளிவு பெறுகின்றது.

இவ் வெண்ணங்கட்குத் துணையாக, தமிழர் ஆடை வரலாறும் சில கருத்துகளைத் தருகின்றது.

1. தமிழரின் உடைகளாகச் சங்க இலக்கியம் பல உடைகளை இயம்பினும், இவற்றுள் சிறப்பாக அமைவது தழையுடையே. ஆடவர் மரவுரி உடுத்தலும் காணலாகும் ஒன்று. பழமை மரபுடன் தொடர்புடைய பழக்க வழக்கமாக இதனைக் கொள்ளலாம்.

2. உலக உடை வரலாற்றில் ஆதிமுதல் தோல் மயிராடை இடம் பெறினும், தமிழர் இதனைப் பெரும்பாலும் பயன்படுத்தியிரார் என்பதையே அவர் தம் வரலாறு காட்டக் காண்கின்றோம். தோலாடை பற்றிய ஒரு சில குறிப்புகளையே தமிழர் ஆடை வரலாறு சொல்லிச் செல்கின்றது. இதற்கென்று தனித்த பெயர்கள் அமையாமையும் இக்கருத்தினை உறுதிப்படுத்த உதவும்.

## ஆடைபற்றிய ஆய்வு மூலங்கள்

வரலாற்றினை முழுமையாக உணர்வதற்கு உதவும் ஆய்வு மூலங்கள் பல. அவையாவன:- தொல்பொருள், இலக்கியம், வரலாறு, தொல்கதை, புராணம், பழக்க வழக்கம், மொழிநூல், புவியியல், கலைகள், கல்வெட்டு போன்றன. இம்மூலங்கள் அனைத்தையும் இணைத்து ஆராயும்போதுதான் உண்மையும் தெளிவும் பொருந்திய முழுமையானதொரு வரலாற்றை நாம் பெற இயலும். இணைத்து நோக்குதலின் முழுமையினைப் பெற தனித்தனியே நோக்குதல் அடிப்படை என்ற நிலையில் இவண் இலக்கியம் உணர்த்தும் ஆடை வரலாறு ஆராயப்படுகின்றது.

இலக்கியம் கொள்கைக்காகப் படைக்கப் படினும், பொழுது போக்கிற்காகப் படைக்கப்படினும் அவையுணர்ந்தோ உணராமலோ அவ்வக் கால வரலாற்றுச் செய்திகளையும், மக்களின் பண்பாட்டுக் கூறுகளையும் சொல்லிச் செல்கின்றன என்பது உண்மை. சுருங்கச் சொன்னால், சமுதாயத்தாக்கங்கள் அவ்வவ் கால இலக்கியங்களில் இருத்தல் இயற்கை எனலாம். சமுதாயத் தாக்கம் என்று நோக்க, மக்களிடம் முதன்மையிடம் பெற்றிருந்த ஆடைகளின் தோய்வும், பலநிலைகளில் அமைந்து கிடக்கக் காண்கின்றோம்.

அறிஞர், இலக்கியம் வரலாற்றுண்மைக்குத் தேவை எனக் கருதினும்,[15] சிலர் அதனை ஏற்றுக் கொள்ளாது மறுக்கின்றனர். தொலபொருட்களே ஆடைபற்றிய ஆய்வுக்கு மிகுந்த துணையாகும் என்று கருதுகின்றனர்.[16]

ஆயின் வரலாற்றுடன், ஆடை வரலாற்றுக்கும் இலக்கியம் மிக முக்கியத்துவம் வாய்ந்ததொரு ஆய்வு மூலம் என்பதைச் சில எண்ணங்கள் வழி நிறுவலாம்.

---

15. "ஒரு நாட்டின் வரலாற்றை எழுதுதற்கு அந்நாட்டில் எழுந்துள்ள இலக்கியப் படைப்புகள், கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள், புதை பொருட்கள், பழங்காலக் கட்டடச் சிதைவுகள், சிற்பச் சின்னங்கள், சமயக் கோட்பாடுகள் ஆகியவை சான்றுகளாக உதவி வந்துள்ளன." தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், கே. கே. பிள்ளை, பக். 12.

16. "In the study of such a subject archaeological accounts are more valuable as they enrich the knowledge by the actual representation of the object. Poets, dramatists and literatures however versatile they may be cannot

1. இலக்கியம் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் ஒரு கூறு.

2. ஆடை அணிகளைப் பொறுத்தவரை இலக்கியத்தில் புனைந்துரைகளைக் கலக்கத் தேவையில்லை. சான்றாக இன்றைய இலக்கியங்களைக் காணலாம். படைப்போன் படைக்கும் நிகழ்ச்சிகள், பாத்திரங்கள் புனைந்துரையாயினும், பாத்திரங்களின் ஆடை அவற்றுடன் கூடிய மாந்தர் தம் தொடர்பு ஆகியவை கற்பனையன்று. ஆசிரியன் தான் தினந்தோறும் காணும் நிலைகளையும், மாற்றங்களையுமே இவற்றுள் வடிக்கின்றான். இந்நிலையில் சங்க இலக்கியத்தை நோக்குவோம். புலவன் பல நிலைகளில் ஆடைகளை வருணிக்கின்றான். காம்புரியன்ன அறுவையையும், பருந்தின் ஈர்ஞ்சிறகன்ன சிதாரினையும் உரைக்கின்றான். இவண் உவமை ஆடையின் மேன்மையினையும், இழிவினையும் புலப்படுத்துகின்றது. ஆடையின் இயல்பினை ஓரளவுக்கு மிகைப்படுத்துவன இவை எனினும் உண்மை நிலையை உரைக்கவேண்டும் என்ற புலவன் தன் விழைவே இவ் வெளியீட்டு நிலை. இயல்பினை மிகைப்படுத்திக் கூறியுள்ளதால் இவ்வாடைகளே புனைந்துரை எனல் ஏற்றுக் கொள்ளத்தக்கதா? இவ்வாடைகள் அக்காலத்தில் வழக்கிலிருந்தன என்பது உண்மை தானே. எனவே ஆடைபோன்ற பயன்பாட்டு நிலையில் உள்ளவற்றைப் பொறுத்தவரையில் புலவர் தங்கள் கால எண்ணங்களைத்தான் பிரதிபலிப்பர்; பிரதிபலிக்க முடியும் என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இலக்கியச் செய்திகளுட் சில, புனைந்துரைத்தலாக இருத்தல் ஒப்புக்கொள்ளத் தக்கதே யாயினும் அவற்றை அத்துணை எளியனவாகக் கருதித் தள்ளிவிடுதல் எவ்வாற்றானும் ஏற்புடையதன்று என்னும் சதாசிவ பண்டாரத்தார் கூற்றையும் இவண் சுட்டலாம்.[17]

---

actually create the object before the eyes in such a vivid manner as a painter or a sculptor. actually portrays the inner ideas and places the object before the people." Indian costume coiffure and ornament, Sachidanand sahay P.xx.

17. இலக்கியமும் கல்வெட்டுகளும், சதாசிவபண்டாரத்தார், பக் 103.

3. சிற்பம் சித்திரம் போன்று காட்சிச் சான்றாகப் பயன் படாது இலக்கியம் என்பது ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மையே. ஆயின், காட்சிச் சான்று மட்டுமே ஆடை வரலாறு முழுமையும் உணர்த்த வல்லதாகாது. வரலாறு எனின் அது எவ்வாறு அரச வாழ்க்கை மட்டும் அல்லவோ, சாதாரண மக்களின் வாழ்க்கை நிலைகள் ஒவ்வொன்றையும் எடுத்தியம்பவேண்டுமோ அதைப் போன்று ஆடை வரலாறு என்பதும் ஆடையுடுத்தும் முறையை விளக்குவது மட்டுமன்று, ஆடையுடன் தொடர் புடைய மாந்தர் வாழ்வியற் கூறுகள் ஒவ்வொன்றையும் அது விளக்கவேண்டும். எனவே உடுத்தும் முறை ஓரளவே வெளிப்படி னும் பிற ஆடை வரலாற்றுக்குத் தேவையான விளக்கங்களைத் தெரிந்து கொள்வதற்குப் இலக்கியம் மிக முக்கியமானது என்பது மறுக்கமுடியாத நிலை. இலக்கிய ஆய்வு இயம்பும் உண்மையும் கூட.

தமிழர் ஆடைகளைப் பொறுத்தவரையில் இலக்கியத்தின் சிறப்பினை மேலும் சுட்டலாம். 7-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே தான் சிற்பம் சித்திரங்களைக் காண இயலும் நிலையில் அதற்கு முன்னைய, தமிழர் வாழ்வியற் கூறுகளில் தெளிவுபெற இலக்கியங்களே உறுதுணையாக அமைகின்றன எனும் உண்மை யில், இது தனிச் சிறப்பு பொருந்தியுள்ளமை வெள்ளிடைமலை.

## ஆடை வரலாறு

ஆடைவரலாற்றின் முதல் சான்றாக நாம் காண்பது நியாண்டர்தால் மனிதனைப் பற்றிய எண்ணம் என்பர். இதனை "மனித இனவரலாற்றில் சான்றுகளோடு கூடிய மிகப் பழமை யான மனிதர் நியாண்டர்தால் மனிதர்களே. டுரோ-மக்னான் காலத்தில் பிரான்ஸில் காவிலான் என்ற குகையில் கிடைத்த ஓர் எலும்புக் கூட்டின் அருகில் ஒரு கொண்டை ஊசி, சிறு கச்சை களுடன் கூடிய ஊசி போன்றவை கிடைத்தன,"[18] என்னும் எண்ணத்தால் உணரலாம். "கி.மு. 8000 ஆண்டிலேயே எகிப்திய விவசாயிகள் சணல் இழைகளைத் தயாரித்தனர். கிறித்துவுக்கு 4000 ஆண்டுகளுக்கு முன்னரே சணல் ஆடைகள் எகிப்தில் மலிந் திருந்தன. கம்பளி ஆடையும் காணக் கிடைத்தது. இதே காலப் பகுதியில் ஐரோப்பாவின் ஏரிப்பகுதி மக்கள் ஆட்டின் மயிரை

18. தமிழியல், தொகுதி-6, தமிழிலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீரா முகைதீன், பக். 90.

வெட்டி அதனின்றும் கம்பளி ஆடைகளை நெய்தனர்"[19] என அடுத்த நிலையில் எகிப்திய, ஐரோப்பிய மக்களின் உடைபற்றிய எண்ணங்களைக் காண்கின்றோம்.

இந்தியாவில் சிந்து சமவெளி நாகரிகத்தில் காணக் கிடைக்கும் பருத்தியிழைகளே இந்தியரின் ஆடைபற்றிய உணர்வினை நல்கும் முதல் சான்று ஆகும். கி.மு. 2303 அளவில் சிந்துவெளி வணிகர்களின் வெளிநாட்டு வணிகப் பொருட்களில் பருத்தியாடையும் ஒன்று என சுமேரியன் கையெழுத்துப்படிகள் சொல்கின்றன.[20] மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட எண்ணற்ற நூற்கதிர்த் திருகுகள் இம்மக்கள் ஏழையர்—செல்வந்தர் என்ற வேறுபாடின்றி நூற்கும் தொழிலில் ஈடுபட்டிருந்ததைத் தெரிவிக்கின்றன.[21]

பிற நாட்டாராகிய எகிப்தியர், கிரேக்கர் உடை வரலாற்றைக் காண, அவர்கள் பயன்படுத்திய பெரும்பாலான மூலப் பொருட்கள் தமிழரிடம் ஒன்றுபட்டே இருக்கக் காண்கின்றோம். ஆயின் உடுக்கும் நிலையில் மாறுபாடு அமைகின்றது. பொதுவாகப் பிற நாட்டார் உடுத்தியனவாக உடல் முழுவதும் மூடியதுபோன்ற உடைகள் அமைய, அன்று தமிழ் நாட்டார் இடையாடைக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்திருந்த நிலையைக் காண்கின்றோம். ஆடவர் பெண்டிர் ஆடைகளில் வேறுபாடு அதிகமாக அமையாமை பிறநாட்டர் பண்பாக அமைகின்றது. தமிழர் அன்று உடுத்திய நிலை விளக்கமுறாவிடினும், இன்றைய நிலை கொண்டு, உடுக்கும் விதத்தில் ஓரளவுக்கு வேறுபாடு இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது.

வடஇந்தியரிடம் இருந்து தமிழர் வேறுபடுதல் இன்றும் கண்கூடு. அன்றும் சில நிலைகளில் வேறுபட்டு இருந்தனர். அ. மீரா முகைதீன் தனது ஆய்வுக் கட்டுரையில் இந்தியரின் ஆடைபற்றிப் பேசுமபோது,

"சிந்துவெளி நாகரிகக் காலம், வேதகாலம், பௌத்த காலம், மௌரியர் காலம், குப்தர் காலம், மொகலாயர் காலம், ஆங்கிலேயர் காலம் ஆகியவை வளர்ந்து வந்த நாகரிகத்தின்

---

19. தமிழியல், தொகுதி-6, தமிழிலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீரா முகைதீன், பக்-92.
20. மேற்படி பக். 92
21. ,, பக். 95

பலபடி நிலைகளைத் தருகின்றன" என்று கூறி அந்தந்தக் கால ஆடை வகைகளையும் விளக்குகின்றார். வடநாட்டாரின் ஆடையுடன் தொடர்புடைய சொற்களாக இவர்குறிப்பிடும் சொற்கள் பல. அவையாவன:-துர்சா, யான்ட்வா, வசனா அல்லது வஸ்திரம், வாசஸ் அதிவாசா, நீவி, அத்கா, டிராபி, பிசாசு, வாதுாயா, சுவாசஸ் கவாசனா, ஊர்னா-சூத்ரா, ஊர்னா, உத்தரீயம், அந்தரீயம், ஆப்ரபதீனபதா, கஸ்கவுமா, அகதா, கொடும்பரா, அந்தர்வாசா, உத்தராசங்கா உஷ்னிசா ஹாஸ்தி சவுந்திகா, மத்சய வாலாகா, காடுங்குர்னகா, சதவல்லிகா பத்கா, கமர்பந், சங்காத்தி அல்லது இரட்டைச்சடார், அந்தர் வசாக, உத்தராசங்கா அல்லது துப்பட்டா, பித்தியாஸ்தரானா, கண்கே பிராக்டீசதானா, வார்சிக சார்திகா, கஞ்சுகா, அவுர்நா ஜாதருபயரிஸ்கர்தான், பைலான், வார்சதம்சன, கம்பலான் விவிதான், வஸ்திரம், அகர்பாசம், ஆவிகம், ராங்காவா, உஸ்னிசா, வெஸ்தனி, யாக்சினி, தேவதாகுலகோகா, கண்டா, துப்பட்டா, லகோதி, சாஜுபாப், சௌவ்டார், பருத்தி, வல்வெட்டு, குல்லா, பக்கிரி, தார்வெஸ் குல்லாய், தலைப்பாகை, கமா, பைசாமா, பட்டாடை, உப்பக்சா, கபா, சார்வார், லங்கோடு, காக்ரா, பர்சாஸ் போன்றன.

இவற்றுள் பெரும்பான்மையன தமிழர் ஆடைபற்றிய சொற்களினின்றும் மாறுபட்டன. எனினும் ஒரு சில வடநாட்டார் தொடர்பு காரணமாகத் தமிழ் மொழியிலும் பயிலப் படுகின்றமையைக் காண்கின்றோம்.

வடநாட்டு மக்கள் தமிழரிடம் இருந்து தோலாடைபற்றிய எண்ணத்திலும் மிகுந்த வேறுபாட்டுடன் அமைகின்றனர். பல்வகையான மயிராடை, தோலாடையைப் பயன்படுத்தியிருக்கின்றனர் அவர்கள். சான்றாக, "மௌரியர் கால மக்கள் பருத்தியாடையைப் பயன்படுத்தினர். மற்றும் கம்பளித் துணிக்கு அவுரிநா என்றும், தங்கவேலையுடன் கூடிய ஒப்பனை சால்வைக்கு ஜாதருபபரிஸ்கர்தன் என்றும் குழிக்குள் வாழ்சிற்றுயிர்களின் தோலாடையைக் குறிக்கப் பைலான் என்றும் காட்டுப் பூனைத் தோலாடையைக் குறிக்கப் வார்சதம்சன என்றும் பல வகைச் சொற்களைப் பயன்படுத்தினர். கம்பலான் விவிதான் என்ற ஆடை கால்நடைகளின் மயிர்களால் ஆனவை. ஆவிகம் என்பவை ஆடுகளின் மெல்லிய மயிர்களால் ஆனவை. ராங்காவா

என்பது மான்மயிர் மற்றும் கம்பளியாலான சால்வை"[22] என்பதனைச் சுட்டலாம்.

இம்முறையில் தோலாடை, மயிராடையை அதிகமாகப் பயன்படுத்தியமை, தமிழரிடத்தில் காணவியலாத ஒன்று.

எனவே "பண்பாட்டைப்பகுத்துணர ஆடை ஓர் உறுப்பு; அப்பண்பாட்டு அடிப்படையில் ஆடை வகைகள் ஒரு குறிப் பிட்டப் பிரிவினரின் தன்மையைக் காட்டுவதாக அமையும்"[23] என்ற கூற்றின் உண்மையை அயலார் ஆடையுடன் தமிழர் ஆடையையும் ஒப்பிடப் புலனாகின்றது.

இன்று பல்வேறு தொடர்புகள் பல்வேறு புதுமைகளைப் புகுத்தியிருப்பினும் தேசிய உடையாகவும் தமிழர் உடையாகவும் திகழ்வது வேட்டியும் புடவையுமே. ஆயின் பொது நிலையில் பண்டைய நிலையினின்றும் காலவண்ணம் (Fashion) காரண மாகக் குறைத்தும் நிறைத்தும் உடலோடு ஒட்டியும் தளர்த்தியும் பலவேறுபட்ட இயல்புகளில் உடையினை உடுத்துவதை இன்று நாம் காண்கின்றோம்.

### ஆடை வரலாற்று நூல்கள்

ஆடையைப் பற்றிய எண்ணங்கள் அண்மையில்தான் ஆய்வு செய்யப்படும் நிலையை அடைந்துள்ளன என்பர்.[24] இக்கருத்து நம் நாட்டைப் பொறுத்தவரையிலும் ஏற்றுக் கொள்ளத் தக்கதே.

அயல்நாட்டார் ஆடையின் தோற்றம், ஆடையின் கதை, வரலாற்று நிலையில் ஆடையின் இயல்பு, மனிதனும் ஆடையும், காலவண்ணம், தேசிய உடைகள் போன்ற பல கருத்துகளின் அடிப்படையில் பல நூல்களை எழுதியுள்ளனர்.

இந்திய ஆடை வரலாற்று நூல்களுள் சிறப்பாக மோதிச் சந்திரா, சச்சிதானந்த் சகாய், எஸ். என். தார்

---

22. தமிழியல், தொகுதி 6, தமிழிலக்கியத்தில் ஆடை வகைகள் அ. மீராமுகைதீன், பக். 98
23. மேற்படி பக். 93
24. "It is only comparatively very recently that people have begun to take an interest in the costume of the Past'. —Costume through the ages.—James Laver, Introduction, P. 5.

போன்றோரின் நூல்கள் குறிப்பிடத் தக்கன. இந்தியரின் உடைகள் வெவ்வேறு காலநிலைகளில் எத்தன்மையன என்பதைப் பல மூலங்கள் வழித் தெளிவுற எடுத்தியம்புகின்றன இவை.

ஆயின் தொன்றுதொட்டே பெரும் சிறப்புடன் வாழ்ந்து உலகெங்கும் தங்கள் பெருமையைப் பரவச் செய்த தமிழரின் ஆடையினைப் பற்றியதொரு தனித்த நூல் ஒன்றினையும் நாம் காணக். கூடவில்லை. இந்திய வரலாற்றில் தமிழரின் ஆடை வரலாறு இடம் பெறினும் அவை முழுமையுணர்வினை நல்க வாய்ப்பில்லாமையால் ஒரு சில எண்ணங்களையே உரைத்து அமைகின்றன. அ. மீராமுகைதீன் எழுதிய தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள் என்ற வெளிவராத பொருட்கட்டுரை ஒன்றும் (கேரளப் பல்கலைக் கழகம் 1971,) மற்றும் சில தனிக் கட்டுரைகளுமே தமிழர் உடை வகைகளை விளக்குவன. பொருட்கட்டுரை சில குறிப்பிட்ட இலக்கியங்கள் இயம்பும் ஆடைகளை விளக்குகின்றது. தொடர் கட்டுரையாக, பி. எல். சாமியின் 'சங்க இலக்கியத்தில். ஆடை அணிகலன்கள்' என்ற கட்டுரையினைக் (செந்தமிழ்ச் செல்வியில் வெளிவந்தவை) காண்கின்றோம். ஆடைபற்றிய பல்வேறு சொற்களின் வரலாற்றையும் இவர் சொல்லிச் செல்லும் விதம், சில நிலைகளில் மேலும் ஆய்வுக் குரியதாக அமையினும் ஆய்வாளருக்கு மிகுந்த பயனுடையது.

திருமதி. தியாகராசன், ரா. பி. சேதுப்பிள்ளை போன்ற அறிஞர் பலரும் ஆடைபற்றிய கருத்துகளைச் சொல்லிச் செல்கின்றமையும் சுட்டத் தக்கது.

இலக்கியம் தரும் செய்திகளை விளங்கிக் கொள்வதற்கும், விரித்துக் கொள்வதற்கும் கல்வெட்டு ஆய்வாளர் குறிப்புகள் சிறந்த துணையாகின்றன.

## ஆய்வு நோக்கம்

உள்ளதன் நுணுக்கம் ஆய்தல் என்பார் தொல்காப்பியர். ஆய்வானது புதியது காணல், தெரிந்ததன் மேன்மேற் காணல். முன்னைய குறைகளை நீக்கல், சமுதாயத் தேவையைப் பூர்த்தி செய்தல், குறிப்பிட்ட பயன் கருதிச் செய்தல், அறிவுச் சிக்கலை விடுவித்தல் என்ற எண்ணங்களின் அடிப்படையில் அமைதல் தேவை. எனவே ஈண்டு,

1. தமிழர் ஆடைபற்றிய நூல்.இன்மையை நீக்குதற்கும்

2. தமிழர் ஆடைபற்றிய அறிவைப் பெறுதற்கும்

3. அதன்வழிப் புலனாகும் தமிழரின் வாழ்வியற் கூறுகளை அறிதற்கும் தமிழர் ஆடைகள் பற்றிய செய்திகள் ஆய்வு செய்யப்படுகின்றன.

## ஆய்வின் தன்மை

தொல்காப்பியம் முதற்கொண்டு கி. பி 12-ஆம் நூற்றாண்டு வரையிலான சில குறிப்பிட்ட இலக்கியங்கள் உணர்த்தும் ஆடைகளை அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு அமைகின்றது. எடுத்துக் கொண்ட இலக்கியங்கள்,

தொல்காப்பியம்,எட்டுத் தொகை,பத்துப்பாட்டு,பதினெண் கீழ்க் கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சீவக சிந்தாமணி, நாலாயிர திவ்வியப் பிரபந்தம், தேவாரம், நந்திக் கலம்பகம், கம்பராமாயணம், சூளாமணி, கல்லாடம், முத்தொள்ளாயிரம், மூவருலா, தஞ்சைவாணன் கோவை, கலிங்கத்துப் பரணி, அம்பிகாபதிக் கோவை, பெரிய புராணம் ஆகியன.

வரலாற்றுக் கண்ணோட்டத்தில் அமையும் இவ்வாய்வு இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற் பகுதி நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

### முதலாம் இயல்

உடைபற்றிய சொற்கள்—ஓர் ஆய்வு .

இந்தியாவின் பிறபகுதி மாந்தர் குறித்த, ஆடையுடன் தொடர்புடைய பல சொற்களைப் போன்று, தமிழரும் எண்ணற்ற சொற்களைக் கொண்டிருந்தனர். அவற்றுள் பெரும்பாலனவற்றைக் கலைச்சொல்லகராதி என்னும் பகுதியாக இந் நூல்இறுதியில் காணலாம்:இவண் தங்கள் ஆடைகளைக் குறித்து, தமிழர் வழங்கிய சொற்கள் என்னென்ன? அவை பல் நிலைகளில் பெயர் பெற்றமை, பல் மாற்றத்திலும் மாற்றமடையாத சில சொற்களின் தனிமை,சூழல் காரணமாகத்திரிந்த மாற்றமடைந்த சொற்களின் இயல்பு போன்ற பலவற்றையும் காணலாம்.

### இரண்டாம் இயல்

தமிழர் உடைகள்-உடுத்தும் விதங்கள்

உடை உடுத்தும் முறை என்று நோக்க, ஒரு குறிப்பிட்ட இனத்தாருக்கு நாகரிகமாகத் தோன்றுபவை மற்றொரு

பிரிவினருக்கு நாகரிகமாகத் தோன்றாது. எனவே நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் உடுத்தும் முறையும், உடையின் தோற்றமும் மாறுபட்டு அமைகின்றன. இஸ்லாமியப் பெண்கள் தங்கள் முகத்தை மூடிக் கொள்வதை இன்றளவும் நாகரிகமெனக் கொண்டுள்ளனர். ஆடை அணியும் போது தங்கள் கால்களை மறைக்கின்றனர் சைனப் பெண்கள். மேல் நாட்டார் கால்கள் தெரிய உடை அணிகின்றனர். தென்னிந்தியப் பெண்கள் புடவையால் தம்முடம்பை, பெரும்பாலும் முழுமையாக மறைத்துக் கொள்கின்றனர். இன்றளவும் தம் மார்பை மறைக்காமை வேறுபாடாகத் தெரியவில்லை, சில மலையாள மகளிர்க்கு. எனவே அ. மீரான்முகைதீன் குறிப்பிடுவது போன்று நாகரிகம், நாகரிகமின்மை என்பவை எல்லாம் அவரவர் சமுதாய மனவளர்ச்சியைப் பொறுத்ததே எனல் ஒப்புக் கொள்ளக் கூடிய எண்ணமேயாகும்.

இந்நிலையில் தமிழகத்தில் வாழ்ந்தோர் அன்று உடுத்திய உடைகள் என்னென்ன? அவற்றை எவ்வாறு உடுத்தினர் என்பதனை, இலக்கியங்கள் உணர்த்தும் நிலையில் விளக்கமாக இவண் காணலாம்.

### மூன்றாம் இயல்

#### பழக்க வழக்கங்கள்-நம்பிக்கைகள்-மீவியல்புக் கூறுகள்

இப்பகுதியில் தமிழர், ஆடையுடன் தொடர்புடையதாகக் கையாண்டு வந்த பழக்க வழக்கங்கள், இன்னும் அவற்றுள் ஒருசில நம்மிடம் காணப்படும் தன்மை, சிலவற்றை எச்சக் கூறுகளாக மட்டுமே காணக்கூடிய நிலை ஆகியவை பேசப்படுகின்றன.

நம்பிக்கைகள் என்னும் பகுதியில், பலவித மனவுணர்வுகள் அடிப்படையில் அவர்களிடம் காணப்பட்ட நம்பிக்கைகளைக் காணலாம்.

மீவியல்புக் கூறுகளும் உடையும் என்ற பகுதியில், வேறுபட்ட தெய்வத்திற்கென, இவர்கள் சாத்திய உடைகள், இவை தெளிவு படுத்தும் தமிழரின் பல எண்ணங்கள், புராணக் கதைகள், போன்றவை ஆராயப்படுகின்றன. இயக்கன், அரக்கன், பூதம் போன்ற பிற மீவியல்புக் கூறுகளின் உடைகள் பற்றிய எண்ணங்களும் இவண் இயம்பப்படுகின்றன.

நான்காம் இயல்

ஆடைத் தொழில்

பல்கலை வல்லுநரான தமிழரின் ஆடைத் தொழிலின் சிறப்பு இவண் விரிக்கப்படுகின்றது. நெய்தல் தொழிலுடன் வாணிபம், ஆடைவெளுத்தல் ஆகியனவும் ஆடையுடன் தொடர்புடைய தொழில்கள் என்பதால் இங்கே இணைத்து நோக்கப்படுகின்றன.

இரண்டாம் பகுதி தொகுப்புச் செய்திகளை உள்ளடக்கியது. இங்கு ஆடைபற்றிய கலைச் சொற்கள், பழமொழிகள், நம்பிக்கைகள் ஆகியன முறையே தொடர்ந்து இடம் பெறுகின்றன.

பின்னிணைப்பாக இலக்கியத்தில் ஆடை இடம்பெறும் இடங்கள் பொருளடிப்படையில் பகுத்துத் தொகுத்தளிக்கப் பட்டுள்ளன.

# குறுக்க விளக்கம்

அகம்-அகநானூறு
அம்பி-அம்பிகாபதிக்கோவை
ஆசாரக்-ஆசாரக்கோவை
இன்னா-இன்னா நாற்பது
ஐங்-ஐங்குறுநூறு
ஐந். ஐம்-ஐந்திணை ஐம்பது
கம்ப-கம்பராமாயணம்
கம்ப.ஆரணிய-கம்பராமாயணம் ஆரணிய காண்டம்
கம்ப. சுந்தர-கம்பராமாயணம் சுந்தர காண்டம்
கல்-கல்லாடம்
கலிங்-கலிங்கத்துப்பரணி
கலித்-கலித்தொகை
குறள்-திருக்குறள்
குறிஞ்சி-குறிஞ்சிப்பாட்டு
குறுந்-குறுந்தொகை
சிலப்-சிலப்பதிகாரம்
சிறு-சிறுபாணாற்றுப்படை
சிறு-மூலம்-சிறுபஞ்சமூலம்
சீவக-சீவகசிந்தாமணி
சீவக-பதி-சீவக சிந்தாமணி பதிகம்
சூளா-சூளாமணி
தஞ்சை-தஞ்சைவாணன் கோவை
திணை.நூற்-திணைமாலை நூற்றைம்பது
திருமுருகு-திருமுருகாற்றுப்படை
தேவா-தேவாரம்
தொல்-தொல்காப்பியம்
தொல்.பேரா-தொல்காப்பியம் பேராசிரியம்
தொல்.மெய்ப்-தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல்
நந்திக்-நந்திக் கலம்பகம்
நற்-நற்றிணை
நாலடி-நாலடியார்
நாலா.திவ்-நாலாயிர திவ்விய பிரபந்தம்
நீல-நீலகேசி

ஆண். திருப்-ஆண்டாள் திருப்பாவை
திருப்பாண். அமலன்-திருப்பாணாழ்வார் அமலனாதிபிரான்
திருமங்.சிறிய-திருமங்கை மன்னன் சிறிய திருமடல்
நம்மா.திருவாய்-நம்மாழ்வார் திருவாய்மொழி
நாச்சி.திரு—நாச்சியார்திருமொழி
பெரி. திரு.-பெரியாழ்வார் திருமொழி
பெரிய. திரு-பெரிய திருமொழி
பெரு. திரு-பெருமாள் திருமொழி
நெடு-நெடுநல்வாடை
பட்டின-பட்டினப்பாலை
பதி-பதிற்றுப்பத்து
பரி-பரிபாடல்
பழ.நா—பழமொழி நானூறு
பெரிய-பெரிய புராணம்
அமர்-அமர்நீதி நாயனார் புராணம்
இடங்கழி-இடங்கழி நாயனார் புராணம்
ஏயர்-ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்
ஏனாதி-ஏனாதி நாத நாயனார் புராணம்
கண்ணப்ப-கண்ணப்ப நாயனார் புராணம்
கழறிற்-கழறிற்றறிவார் நாயனார் புராணம்
சாக்கிய–சாக்கிய நாயனார் புராணம்
சிறுத்-சிறுத்தொண்ட நாயனார் புராணம்
திருஞான-திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்
திருநாவு-திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்
புகழ்ச்சோழ-புகழ்ச்சோழ நாயனார் புராணம்
மானக்-மானக் கஞ்சாற நாயனார் புராணம்
பெரிய.தடுத்-பெரிய புராணம் தடுத்தாட்கொண்ட புராணம்
வெள்ளானை-வெள்ளானைச் சருக்கம்
பெருங்-பெருங்கதை
பெரும்-பெரும்பாணாற்றுப்படை
பொருநர்-பொருநராற்றுப்படை
மணி-மணிமேகலை
மது-மதுரைக்காஞ்சி
மலை-மலைபடுகடாம்
மு.கலி-முல்லைக்கலி
முத்-முத்தொள்ளாயிரம்
முல்லை-முல்லைப்பாட்டு
மூவரு-மூவருலா

# ஆடைபற்றிய சொற்கள்—ஓர் ஆய்வு

## முன்னுரை

'நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே' 3

என்று நட்புக்கு இலக்கணம் வகுத்தான் குறுந்தொகைப் புலவன். ஆய்வுக்கும் இது பொருந்தும். ஆய்வின் ஆழமும் அகலமும் வரையறைக்குட்படாதது. கற்றது கைம்மண்ணளவே ஆய்வின் நிலையுமாகும்.

அறிவியல் ஆய்வு, இலக்கிய ஆய்வு, மொழிநூல் ஆய்வு போன்ற பல்வகை ஆய்வுகளுள் சொற்பொருள் பற்றிய ஆய்வும் ஒன்று. இதனை 1. பல்துறைச் சொற்கள் பற்றிய ஆய்வு 2. ஒருதுறைச் சொற்கள் பற்றிய ஆய்வு 3. ஒருசொல் பற்றிய ஆய்வு என்ற முந்நிலைகளில் நோக்கலாம். இவற்றுள் ஒவ்வொரு சொல்லும் 1. சொல்லின் தோற்றம் 2. பொருள் 3. காலந்தோறும் ஏற்ற உருமாற்றம் 4. பொருள் மாற்றம் என்ற நான்கு கூறுகளையும் கொண்டிலங்குதல் வேண்டும்.

மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா எனினும் எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்பது அறிஞர் சுட்டிய உண்மை. மனித எண்ணங்கள் சொற்களில் பாதுகாக்கப் படுகின்றன என்ற கருத்தினையும் காண்கின்றோம்.[1]

1. "The beautiful thoughts and images, the imagination and feeling of past ages are preserved in words"—says Trench.
Words and Their Significance—Dr. R. P. Sethupillai, Page 1.

எனவே இச் சொல்லாய்வு, மொழிவளம், கால வளர்ச்சியில் மொழியில் புகும் புதுமைகள், சமுதாயம் பண்பாடு இவற்றில் உண்டாகும் மாறுபாடுகள் போன்ற பல எண்ணங்களைத் தெளிவுபடுத்த உதவும் என்பதில் ஐயமில்லை.

## சொற்பொருள் ஆய்வு அன்றுமுதல் இன்றுவரை

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த குடியினர் எனப் போற்றப்படுவோர் தமிழர். இவர் தம் முதல் இலக்கியங்களே இவரது நாகரிகச் சிறப்பினைத் தெளிவாக்கும். பல்துறை வல்லுநர்களாகிய இவர்கள் அன்றே ஆய்வு மனப்பான்மையுடனும் திகழ்ந்தனர். இதற்கு,

'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார்' புலவர் (தொல். சொல். 156)

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் அமையும் என்மனார் புலவர் என்ற சுட்டினைச் சிறந்ததொரு எடுத்துக்காட்டு ஆக்கலாம். இவ்வெண்ணத் தொடர்ச்சி இன்றுவரைத் தொடர்கின்றது. இதனை இலக்கணங்களில் காணப்படும் சொல்விளக்கம், நிகண்டுகள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், ஒரு சொல் பற்றிய அறிஞர் ஆய்வுகள் போன்றன காட்டுகின்றன.

## ஆடைபற்றிய சொற்கள்

மனித வாழ்வில் மிகுந்த செல்வாக்குப் பெற்ற ஆடைத் தொடர்பாகத் தமிழன் பயன்படுத்திய சொற்கள் பல. அவை ஆடையைக் குறிப்பன; ஆடைத்தொழிலுடன் தொடர்புடையன; ஆடை உருவாக்கப்பட்ட பொருட்களைச் சுட்டுவன என்ற பல நிலைகளில் அமையும். இவண் ஆடையைக் குறிக்க, தமிழன் பயன்படுத்திய சொற்களையும் அவற்றின் வரலாற்றையும் காணலாம்.

12-ஆம் நூற்றாண்டு வரையிலும் ஆடைபற்றிய சொற்களாக நூற்றுக்கும் மேற்பட்ட சொற்கள் அமைகின்றன.

இவற்றுள் பல சொற்கள் சங்கத் தமிழர் பயன்படுத்தியன. உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரைநீலம், உத்தரீயம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர்வை, சிதவல்,

வார், மெய்ப்பை, துகின்முடி, மெய்ம்மறை, மெய்யாப்பு, வாலிது, வெளிது, புட்டகம், நூல், பக்குடுக்கை போன்றன.

நீதிநூற் காலத்தில் புதியனவாக அரத்தம், ஈர்ங்கட்டு, கோடி, கூறை, புடைவை, மாசுணி, பட்டம் அமைகின்றன.

சிலப்பதிகாரத்தில் கஞ்சுகம், மணிமேகலையில் உடுப்பு, சிதர், சிதவற்றுணி, வட்டுடை போன்றனவும் முகிழ்க்கின்றன.

பெருங்கதை வட்டம், வடகம், மீக்கோள், குப்பாயம், நீலம், வங்கச் சாதர், சேலம் இவற்றைப் புதுமையாகக் காட்டும்.

சிந்தாமணியில் கோசிகம், பஞ்சி, கருவி, சாலிகை, பூண், ஆசு, கிழி, வட்டு, தலைக்கீடு போன்றன மேலும் இடம் பெறுகின்றன.

கம்பர் கோதை, சீரம், சேலை, நீலி, வற்கலை, புட்டில் போன்றனவற்றை வடமொழி மணம்கமழத் தருகின்றார். கலையையும் ஆடையெனக் குறிப்பார்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தம் காம்பு, நேத்திரம், மேலாப்பு ஆகியவற்றையும் பெரியபுராணம் பாவாடை, கீள், கோவணம் போன்றவற்றையும் நல்குகின்றன.

சிலப்பதிகாரம் வாயிலாக உடைகள்பற்றிய எண்ணம் மிகுதியாக வெளிப்படாவிடினும் அடியார்க்கு நல்லார் உரையின் மூலம் பல ஆடைவகைகளை அறியக் கூடுகின்றது. இவர் முப்பத்தாறு வகையானது துகிலின் வர்க்கம் என்றுரைக்கின்றார். இவற்றுள் பல இவர்க்கு முன்னைய காலத்தன—கோசிகம், பீதகம், அரத்தம், நுண் துகில், வடகம், பஞ்சு.

சில சொல்லளவில் புதுமையாகவும் பிற சொற்களுடன் இவற்றிற்குரிய தொடர்பு காரணமாக முன்னரேயே இருந்திருக்கக் கூடும் என்ற எண்ணத்தையும் தருவன—கவற்றுமடி, குருதி, பச்சிலை, கோபம், புங்கர்க் காழகம்.

பிற இவர் காலத்தனவாக அமைவன இரட்டு, சுண்ணம் பாடகம், கோங்கலர், சித்திரக்கம்பி, கரியல், வேதங்கம், பாடகம், சில்லிகை, தூரியம், பங்கம், கத்தியம், வண்ணடை, நூல்யாப்பு,

திருக்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறைஞ்சி ஆகியன.

இன்று நாட்டின் பல்வித வளர்ச்சி நிலைகளுக்குமேற்ப, மொழியில் புகுந்துள்ள உடை பற்றிய சொற்கள் பல. உதாரணமாகப் பாரசீகச் சொற்களான லுங்கி, சமக்காளம், சால்வை, உருதுச் சொற்களான லங்கோடு, குடுத்துணி, ஆங்கிலச் சொற்களான டை, வெல்வெட்டு, தெலுங்குச் சொற்களான ரவிக்கை, சொக்காய், தோவத்தி போன்ற பல சொற்களைச் சுட்டலாம்.[2]

இவை எந்தெந்த மொழிச் சொற்கள் என்பதைத் தெளிவாக அறிய இயல்வதுபோன்று, முன்னைய சொற்களை அறிய இயலவில்லை. ஓரளவுக்கே அவற்றின் வரலாறு விளக்கமுறுகின்றது. தொழில், பண்பு, நிறம், இடம் போன்றவற்றின் காரணமாக இச்சொற்கள் தோற்றம் பெற்றது எனினும் சிலவற்றின் சொல்லாக்க நிலையைத் தெளிவாக அறிய இயலாமைக்கு விளக்கமின்மையும், நீண்டகால இடைவெளியும், கிடைக்கும் சான்றுகளின் சுருக்க நிலையும் காரணமாகலாம். டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையின் கருத்தும் இதனை வலியுறுத்துகின்றது.[3]

## அமைப்பு முறை

இன்று உடையைச் சுட்டப் பொதுச்சொற்களாக அமையும் உடை, ஆடை என்பன முதலிலும், சங்க காலத்துச் செல்வாக்குப் பெற்றிருந்த தழை உடை, இதனோடு தொடர்புடைய நாருடைகள் பின்னரும் இடம்பெறுகின்றன. இதற்கு அடுத்தாற்

2. தமிழும் பிறபண்பாடும்—டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், பக்கம். 77. 79.
3. "'The Tamil Vocabulary furnishes numerous instances of faded metophars which bear the marks of ancient wisdom we fail to recognise them, partly from long familiarity with them, partly from insufficient knowledge partly it may be from never having had an attention called to them. —The Study of Words-Trench.''

   —Words and their Significance—Tamil Literary and collequial, Dr. R. P. Sethupillai, Page—1.

போன்று வரலாற்று அடிப்படையில் காலந்தோறும் செல்வாக்கு மிகுதிபெற்ற ஆடை வகைகளும் பெயர்த் தொடர்பும், பொருட் தொடர்பும் உடைய ஆடைகள் ஒருங்கிணைத்தும் நோக்கப்படு படுகின்றன. இச்சொற்களின் அமைதியைத் தொடர்ந்து காணலாம்.

## 1. உடை

பழந்தமிழரின் பண்பாட்டுக் கருவூலமெனத் திகழும் தொல் காப்பியம் தரும் உடைபற்றிய ஒரே சொல் உடை. தொன்று தொட்டு இன்றுவரை, தன் சொல் நிலையிலும், பொருண்மை யிலும் மாற்றமேதுமின்றி, தலைமையிடம் பெறும் பெருமை யுடையது இச்சொல்.

உடையின் வேர்ச்சொல் ‘உடு’ என்பதாகும். உடுத்துதல், சூழவிருத்தல் என்ற இதன் பொருண்மையில் கிளைத்த உடுக்கை, உடுப்பு போன்ற பிற சொற்கள் காணக்கிடைப்பினும், உடை போன்று இலக்கியப்பயிற்சி பெறவில்லை. இச்சொற்களில் பலவும், இதனோடு தொடர்புடைய பல சொற்களும், திராவிட மொழிகள் பலவற்றில் காணப்படும் தன்மை, உடு என்ற சொல் திராவிடச் சொல் என்பதையும் உணர்த்தவல்லது.[4]

---

4. Ta. uṭu (-pp- -tt-) to put on (as clothes) surround, encircle uṭuttu (uṭutti) to dress one; uṭukkai-clothing; uṭuppu-cloth unseen garment, clothes; uṭai - clothes, garment, dress.
Ma. uṭukka to dress, put on (Chiefly the lower garment); uṭuppu - dressing. clothes; uṭuppikka, uṭukkuka to dress another, marry; uta - cloth, danceri Pantaloons.
To. uḍu dress of non - Todas.
Ka. uḍu (utt-) to put round the waist and fasten there by tucking in or by a knot, wind or wrap round the waist; udisu to cause to put on in a peculiar manner (as certain clothes); uḍi, uḍu, uḍe, uḍike, uḍige, uḍugu act of putting on in a peculiar manner (as certain clothes). r iment put on in that manner, raiment in general; uḍuka, uḍuta winding or wrapping round the waist; uḍapu, uḍupu clothes of any kind.
Kod. uḍi - uḍis - uḍit - to put on (sari); uḍipi clothe (in songs).
Tu. uḍusre clothing, a female's garment.
Te. udupu a suit of clothes, dress.
Go. nittana - to put on a peticoat utitana uttana to dress (of women); (M) ursana to wear, Ga (S) uḍ-to wear.
— A Dravidian Etymological Dictionary - No. 502.

இலக்கியத்தில்—

1. உடை—உடை பெயர்த்துடுத்தல்-தொல். மெய்ப்.14.
புகை முகந்தன்ன மாசில் தூஉடை-திருமுருகு.138.
பொன்னிறம் கொண்ட உடை-சிலப். 22:67:
மேயுடை அணிந்த கணி-சூளா. 1098.
செறிந்தவுடை மேல் வீக்கி-பெரிய. ஏனாதி. 11.

2. உடுக்கை—குன்றி யேய்க்கும் உடுக்கை-குறுந். கட. வாழ்த்து.
உடுக்கை யுலறி-நாலடி.141.
புன்மயிர்ச் சடைமுடிப் புலராவுடுக்கை-சிலப்.25:126.
துவருடுக்கை-நாலா. திருவாய். 4:8: 4.

போன்ற நிலைகளில் பயிற்சி பெறுகின்றன. இக்கருத்துகள் எத்துணியாயிலும் உடுக்கும் உடையினை உடை,உடுக்கை என்று குறிப்பிட்டனர் என்பதை உணர்த்தும். பொதுநிலையில் உடையினைக் குறித்தலும், ஆடையுடன் இணைந்து உடையின் தனித்துவத்தைக் காட்டலும் இச் சொற்களின் இயல்பாகின்றது.[5]

உடுப்பு என்ற சொல் உடையினைக் குறித்தலை மணிமேகலை காட்டும்.

'தொடுத்த மணிக்கோவை உடுப்பொடு துயல்வர'-மணி3.140

உடை, ஆடை இரண்டும் ஒரே பொருளன என்பதும் மாறுபட்டவை என்பதும் அறிஞர் தம் முரணான எண்ணங்கள்.[6]

---

5. "மாசுணுடுக்கை"—புறம். 54.
"பொன்புனையுடுக்கை"—பரிபாடல்-1.
"பீதக உடை"—சூளா. 1879.
"பாயுடை"—பெரிய திருஞான.724.

6. "ஆடை என்றால் உடை என்றே பொருள்படும். இது உடம்பின் மேல் அணிகின்ற எல்லாவகையான உடுக்கும் அமைப்புக்களைச் சுட்டும். "தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள்"—அ. மீராமுகைதீன்.
தமிழியல்-டிசம்பர் 1974—பக். 90.
"உடை என்னும் சொல் பயன்படுத்தப்படும் தொடர்பு அது நெருங்கி அணியப்படுவதுபோல் தோன்றுகிறது. ஆனால் ஆடை என்றால் தோற்றத்திற்காக அணியப்படுவது என்ற பொருளைத் தருவதுபோல் இருக்கிறது என்கின்றார் டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள்......இம்மாறுபாடு ஆராய்ச்சிக்கு உரியது"—தமிழர் ஆடை, டாக்டர் திருமதி தே.தியாகராசன், தாமரைச் செல்வர் வ. சுப்பையாபிள்ளை பவளவிழா மலர்-பக்.100.

இலக்கியச் சான்றுகளை நோக்க வேறுபட்டது என்னும் கருத்தே வலுப்பெறக் காண்கின்றோம்.

உடை, உடம்பைச் சுற்றி உடுத்தப்படும் உடையைக் குறிக்கின்றது. ஆடை, ஆதியில் இப்பொருளிலிருந்து பின்னர் துணியைக் குறிக்கும் பரந்த பொருளில் வழங்கத்தலைப்படுகின்றது. எனவே உடை, உடையினையும் (dress) ஆடை, துணியினையும் (Cloth) குறித்து மக்களிடம் பயிலப்பட்டது என்பது பொருத்தமானதாகும். சில எண்ணங்களைக் காணலாம்.

1. மரனாருடுக்கை, தழை என்ற தமிழர் உடைகளை இலக்கியங்கள் சாற்றுகின்றன. இவ்வுடைகள் உடையாக மட்டுமே பயன்பட்டன. எனவே உடை என்று மட்டுமே இவை சுட்டப்படுகின்றன. ஆயின் பருத்தி, பட்டு, மயிர் போன்ற பிறவற்றால் உருவானவை உடுத்துதற்கே அன்றி போர்வை, அணை, எழினி போன்ற பிற பயன்பாடுகளையும் நல்கிய காரணத்தால் ஆடை என்றும் அழைக்கப்படக் காணலாம்.

2. சிந்தாமணியில் மூசிய ஆடை உடையாக (2929) என்று இழிந்த ஆடையை இரவலரின் உடையாகக் காட்டியிருத்தல், உடையை ஆடையிலிருந்து வேறுபடுத்தி இருத்தலை இயம்பும். உடைக்கும் ஆடைக்குமுரிய இந்நுண்ணிய மாறுபாடு ஒருசில இடங்களில் நெகிழ்ச்சியுற்றிருக்கக் காண்கிறோம்.

> பூப்புடை அணிந்த பொய்கை-உடை-போர்த்தியிருத்தல்
> சீவக. 2772.

> தொடையுறு வற்கலை ஆடைசுற்றி-வற்கலை உடை ஈண்டு ஆடை
> கம்ப. யுத்த. 7252.

எனவே பெரும்பாலான காட்டுகளை நோக்க உடை, ஆடை இரண்டும் முதலில் ஒரே பொருளில் நின்று பின்னர் மாறுபாடாகக் கருதப்பட்டது எனத் தெரிகின்றது. இன்றும் இம்மாறுபாடு உள்ளதைக் காணலாம்.

உடை, உடுக்கை இன்றும் உடையைக் குறிக்க, உடுப்பு பெரும்பான்மையாகச் சட்டையைக் குறிக்க வழங்குகின்றது. உடுக்கும் உடையினை உடுப்பு என்று வழங்கும் மரபும் தென் தமிழ்நாட்டில் வழக்கிலுள்ளது. இதனால், மரபுத் தொடர்ச்சியுடன் பொதுப்பொருட் பேற்றினையும் இது அடைந்தமைப் புலப்படுகின்றது.

## 2. ஆடை

சங்க காலம் முதல் காணப்படும் சொல் இது.

1. உடம்பை அடுத்திருப்பதால் ஆடை என்ற பெயர் பெறும்.[7]

2. அடை என்றால்இலை அடையைத் தைத்து உடுத்தினர். அது ஆடையாயிற்று.[8]

3. தமிழோடு இயைபுடைய தெலுங்கு மொழியில் இச் சொல் மீஅடை என்று வழங்கப்படுகின்றது. ஆதலின் ஆடை, உடைக்குக் காரணக் குறியாயிற்று[9] என்ற பல எண்ணங்கள் ஆடையின் சொல்லாக்க நிலை கருதி எழுந்தன.

இவற்றுள் உடம்பை அடுத்தலால் ஆடை என்னும் கருத் திற்கே இலக்கியச் சான்றுகள் துணையாகின்றன.

1. சங்கப் பாக்களில் உடை என்ற பொருளில் ஆடை என்ற சொல் பயிற்சி பெறுகின்றது. உடம்பை அடுத்தல் காரணமாகத் தோற்றம் பெற்றிருக்கலாம் என்பதற்கு உரிய அரணாக இக் கருத்து அமைகிறது.

2. தமிழரைப் பொறுத்தவரை முதல் ஆடை தழையே. எனவே அடையில் பிறந்த ஆடையே அதிகச் செல்வாக்குப் பெற்றிருக்க வேண்டும். ஆயின் உடைக்கே அதிக செல்வாக்குக் காணப்படுகிறது.

3. அடை ஆடைக்குரிய காரணம் எனின் மிகுதியான பயிற்சி பெறும் தழையினையும் ஆடை என்று புலவர் ஓரிடத்திலாவது சுட்டிச் சென்றிருப்பர். ஆயின் ஓரிடத்தும் தழை ஆடை என்ற குறிப்பில்லை.

4. அடுத்தல் என்ற வினையைத் தவிர பிற வினைகள் இதற்கில்லை.

---

7. தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள்-அ.மீராமுகைதீன், தமிழியல், டிசம்பர், 1974, பக்கம். 90.
8. தமிழர் ஆடை-டாக்டர் திருமதி தே. தியாகராசன், தாமரைச் செல்வர் வ. சுப்பையாபிள்ளை பவளவிழா மலர், பக்கம்.100.
9. தமிழ்ரும் ஆடையும்—வீ. உலகவூழி தமிழ்ப் பொழில், தொகுதி-5, 1929-30, பக்கம். 41.

5. உடம்பை அடுத்தலால் உடை பெயர் பெறும் என்பதும் நாம் கேள்வியுறும் ஒன்று.[10]

சங்கப் பாக்களில் துவர்செய் ஆடை (நற்றிணை 33), கொடுந்திரை ஆடை (புறம். 275) என பயிற்சி பெறுகின்றது. உடை என்ற இப்பொருள் சிலப்பதிகாரத்தில் சூழ்தல் (4 : 7). போர்த்தல் (7 : 25). அடுத்தல் (28 : 63) என்று பல்கிய நிலையைக் காண்கின்றோம். பின்னரும் இம்மரபுத்தொடர்ச்சியைசிந்தாமணி, கம்பராமாயணம் போன்ற இலக்கியங்களில் காண்கின்றோம்.[11] இன்று அடையுடன் இணைந்து துணி என்னும் பொருளைச் சுட்டினும்(நடைப்பாவாடை)சிறப்பாக உடுத்தும் உடையினையே குறிக்கின்றது.

## 3. தழை

தன்மையுடையது தழை. தண் - தள் - தழ் - தழ் + ஐ என்னும் இணைவு இச்சொல்லின் தோற்றமாகலாம். இயற்கையோடு இயைந்தது மனித வாழ்வு என்பதற்கு தழையுடையும் ஓர் சான்று.

நெசவுக் கலையை அறியுமுன்பு உடுத்திய பாங்கினைப் பகரும் தழையுடைகளைத் தமிழனும் பயன்படுத்தியுள்ளான். தமிழர் தழைக்குக் கொடுத்த செல்வாக்குச் சங்கப் பாடல்களில் சிறப்பாகச் சித்திரிக்கப்படுகின்றது. சங்கப் பாக்களில் விளக்க முறும் உடைகளின் வரலாற்றில் முதலிடம் பெறும் இதன் இலக்கியப் பயிற்சி 66 இடங்களில் அமைகின்றது.

---

10. The under tunic justaucorps(i.e.,"next to the body")made of linen reached to the knees.-Discovering Costume-Audery.-I. Barfoot Univ. of London Press Ltd., 1955, p. 10.

11. கலந்தெழுதிரை நுண்ணாடைக் கடிக்கய மடந்தை சீவக. 954.

 தெண்டிரை ஆடை வேலி இருநிலமகள்-சீவக. 744.
 ஆய்ந்த முகிலாடை திங்கட் கண்ணி-சீவக. 2860.
 ஓதம் நெடுங்கடல் ஆடை-கம்ப. 217.
 எழுமுகில் ஆடையா அகன்பந்தர் ஒத்தது-கம்ப. 6815.
 பன்மலர் நறும் பொற்சுண்ணம் பரந்த பாவாடைமீது
 முன்னிழிந்தருளி வந்தார்-பெரிய. திருஞான. 1226.

தழையுடை, பகைத்தழை, மடிவை, குழை எனப்பல பெயர் பெறும். இவை, பெரும்பான்மையான காட்டுகளில் தழை என்றே சுட்டப்படுகின்றன. தழை என்று குறிப்பிட, மக்கள் தழையுடை என்று புரிந்து கொள்ளுமளவிற்குச் செல்வாக்குடன் திகழ்ந்திருப்பதே இதற்குரிய காரணமாகும். இதனை மிகுதிப் பற்றிவந்த பெயர் என்பார் உ. வே. சாமிநாதையர் அவர்கள் (குறுந். 125) மடிவை என்பது இதனை மடித்து, தொடுத்து அணிந்தமையின் பெற்ற பெயராகும் (பதி. 27). தழையின் குழைந்த தன்மை காரணமாக அல்லது குளிர்ச்சி காரணமாகப் பெற்ற பெயராகக் குழை இருக்கலாம் (அகம். 269). இன்றும் தழையினைக் குழை என்று சுட்டும் வழக்கு உள்ளது. பல் தழைகள், பூக்கள், தளிர்கள் இவற்றை விரவித் தொடுத்து அமைத்த தழையுடைகளைப் பகைத்தழை என்றனர் (நற். 96). பகை அழகற்றது ஆயின் ஈண்டு அழகூட்டுகிறது.

தழையுடை அமைக்க நெய்தல், ஞாழல், ஆம்பல், குவளை, செயலை, நொச்சி போன்றவற்றின் தழைகள் பயன்பட்டன.[12] வேண்டுமளவு நூற்றால் வெண்ணெயையும் நூற்றிடலாம் என்ற மொழிக்கேற்ப இத்தழைகள் தமிழர் கைவண்ணத்தில் கலைப் பொருளாயின. மேலும் முழுமையான பூக்கள், தளிர்களால் இதனை உருவாக்கிய தன்மை, சங்க மக்களின் மனச் செம்மையையும் பறைசாற்றவல்லது.

நிலத்திற்கேற்ப இத்தழைகள் மாறுபட்டு இருந்தன என்பதையும் நாம் காணலாம், தழை அல்லது அதனை அமைக்கும் தன்மையில் மாறுபாடு அமைகின்றது.

உடுக்கும் தழை தந்தனனே அதையாம்
உடுப்பின் யாயஞ் சுதுமே - நற். 359.

---

12. "சிறுகரு நெய்தல் கண்போன் மாமலர்ப்
பெருந்தண் மாத்தழை யிருந்த அல்குல்" — கலி. 130.
"கானல் ஞாழற் கவின் பெரு தழை" - ஐங். 191.
"சிறு வெள்ளாம்பல் இளையமாகத் தழையாயினவே"
-புறம். 248.
"சுனைப்பூத்த குவளைக் காம்பு அவிழ் முழுநெறி
புரள்வரு மல்குல்." - புறம். 110.
"செயல்பகைத் தழை வாடும் – ஐங். 211.
"கருங்குர னொச்சி .. தொடலை யாகவும்
கண்டனம் இனியே." - புறம். 271.

என்ற பாடல், தலைவன் தழை கொடுக்க, தலைவி அதனைத் தாய்க்கு அஞ்சி மறுப்பதை இயம்புகின்றது. தழையுடையின் மாறுபாடு இதனால் தெளிவுறுகின்றது (இக் கருத்திற்கு ஏற்ற தொரு பாடலை தஞ்சைவாணன் கோவையும் நல்குகின்றது.

மல்குற்ற தண்புனல் சூழ் தஞ்சைவாணன் மலய வெற்பா
நல்குற் றவையிந்த நாட்டுள வன்மை யினன்னுதலாள்
அல்குற் றடத்தெமர் கண்டால் அயிர்ப்பர் அதுவுமன்றிப்
பல்குற்றமும் வருமால் யாங்கள் வாங்கும் பசுந்தழையே -(98)

ஈண்டும் தழை மாறுபாடு கருதி, பாங்கி தழையினை மறுக்கின்றாள்).

தழையுடைகளைப் பற்றிய மற்றுமொரு சிறப்பு, இதன் மெல்லிய இயல்புக்கேற்ப மெல்லியலார் மட்டுமே உடுத்திக் கொண்டமையாகும். ஐந்நில மகளிரும் இதனை உடுத்தித் தங்களை வனப்பாக்கிக் கொண்டனர் (அகம். 7, 156, 348, ஐங். 147, கலித். முல். 2). சீவக சிந்தாமணி வேட்டுவ மகளின் உடையாக இதனைக் காட்டும் (1231).

விழவு, வழிபாடு, நீராட்டு, விளையாட்டு,விற்பனை போன்ற பல பொழுதுகளிலும் இதனை மகிழ்வுடன் ஏற்றனர் (அகம். 201, 320, ஐங். 73, குறுந். 295, நற். 80).

மகளிரிலும் இளைய மகளிரே இதனை உடுத்தினர். முதியோர் தழையுடுத்தியதாகச் சான்று இல்லை. எனவே ஆடை பற்றிய பிற எண்ணங்களிருந்தும் இதனை உடுத்தலுக்குப் பஞ்சமன்று; பாசமே காரணம் எனக் கருதுதல் பொருந்தும். முதியோர் அணிவது நாகரிகமின்மையாகக் கருதப்பட்டிருக்கலாம். இன்று நாட்டுப்புறங்களில் இளைய மகளிர் புடைவை கட்டிக்கொள்ள முதியோர் கண்டாங்கிச் சேலைகளை அணிவது போன்றதொரு நிலையாக இதனைக் கொள்ளலாம்.

அனைத்துச் சான்றுகளும் இடையாடையாகக் காட்டும் இதனை, உடையின் மேல் உடுத்தினரா அல்லது தனியே ஏற்றனரா என்ற எண்ணம் தெளிவாக இல்லை. ஆயின் ஒரு பாடல் 'அங்குழைத் தழையினும் உழையிற் போகான்' (குறுந். 294) என்றுரைக்கின்றது. உடலோடு நெருங்கியமையும் தழையினைக் காண இதனை மட்டுமே அணியும் வழக்கு இருந்ததோ என்ற எண்ணம் எழுகின்றது.

இவ்வாறு சங்கப் பாக்களில், சிறப்பாகச் சாற்றப்படும் தழையுடைகள் பின்னர் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டதாகத் தெரியவில்லை. மகளிரின் மனமாற்றம், பிற துணிவகைகளின் செல்வாக்கு, நீண்ட கால உழைப்பின்மை காரணமாகத் தன் மதிப்பினை இழந்திருக்கக் கூடும். எனினும், இதன் மரபு இன்றும் தொடருகின்ற ஒன்று என்பதனை, பசுந்தழையும் மரவுரியும் இசைந்திடவே உடுப்போம் என்ற பொதியமலைக் குறவஞ்சியின் பாடலால் அறிகின்றோம்.

## 4. நாருடை

தொன்று தொட்டு இன்றுவரை மாந்தர் ஆடை வரலாற்றில் பங்குபெறும் பாங்குடையது நாருடைகள். மரனாருடுக்கை, சீரை, பக்கு, நார்ப்பட்டு, நார்நூல், வெண்டுகில், சீரம், வற்கலை என்ற பல சொற்கள் இதனைக் குறித்தமைகின்றன. இச் சொல்லாட்சிகளுள் சீரை, பக்கு, சீரம், வற்கலை தவிர ஏனையவை தன் பெயரிலேயே விளக்கம் அளிப்பன.

சீரம், சீரை மரவுரியைக் குறித்தல் உரையாசிரியர்களின் உரைதரும் விளக்கமாகும். பக்கு-நாருடுக்கை என அகராதிகளினின்றும் தெரியவருகின்றது.[13] வற்கலை-வர்க்கலா என்ற வடமொழியின் திரிபு என உரைப்பர் (கம்ப. ஆரணிய. 241) சீரையின் திரிபே சீரமாகும்.

சங்க இலக்கியத்தில் சீரை, பக்கு, மரனாருடுக்கையும் மரவுரியுடை மணிமேகலையிலும், பெருங்கதையில் நார்நூல் வெண்டுகிலும், கம்பனில் சீரம், வற்கலை என்ற புதுச் சொற்களும் அமைகின்றன.

குறவர் (நற். 64), முனிவர் (திருமுருகு. 126). புலவன் (புறம் 194), விருச்சிகன் (மணி. 17:28), விரிசிகை (பெருங். 2:15: 40) வேட்டுவன் (சிந்தா. 1231) போன்றோர் மரவுரியுடையினை உடுத்தியோராகக் காட்டப்படுகின்றனர்.

சீரையினைப் பற்றிய அதிகமான எண்ணங்களைக் கம்பன் காவியம் காட்டும். இராமன் முதலிய மூவரும் வனம் செல்லும் போது சீரை உடுத்திச் செல்கின்றனர் (1843), வசிட்டன் (659)'

13. பக்கு - Duter bark of a tree; மரப்பட்டை - Lexicon Vol. IV, Part-I.

தவக்கோலத்தில் சுயம்பிரபை (4672), கலைக்கோட்டு முனி (152) ஆகியோரும் சுற்றிய சீரையுடன் காட்சியளிக்கின்றனர்.

இவ்வெண்ணங்கள் அனைத்தும், மரனாருடை அணிந்தோர், துறந்தோரும், நாகரிக முதிர்ச்சி அற்றோருமே என்பதையுணர்த் தவல்லன. மேற்கண்டவற்றால், 'சீரை' என்பது சங்க காலத் திலேயே ஆடவர் பெண்டிர் அணியும் முழு ஆடைக்கு வழங்கப்பட்டு, பின்னர் பெண்டிர் ஆடைக்கு மட்டுமே வழங்கியது என்னும் எண்ணம்[14] முற்றும் முரணாகக் காணலாம்.

மரவுரியினை அமைத்த விதத்தையும் சில விளக்கங்கள் தெளிவாக்குகின்றன.[15]

நாரினை உயர்ந்தோர் செப்பம் செய்து உடுத்தியிருக்கின்ற னர். இதற்கு பெரிப்புளூஸ் நார்ப்பட்டுகளைப் பற்றிக் கூறுவதை யும் பெருங்கதை நாரினும் இயன்ற ஆடைகளைக் குறிப்பதையும் (1:42:210) சான்றாக்கலாம். எனினும் உயர்ந்தோர் மிகுதியாக அணிந்தமைக்குரிய சான்றுகள் இல்லை.

துறந்தோர் உடுத்தியன மட்டுமே சீரம், சீரை, வற்கலை, மரவற்கலை, பக்கு என்று தனித்த சொற்களால் குறிக்கப்படப் பிறமாந்தர் உடுத்தியன தனிப் பெயர் பெறாமையும் நோக்கத் தக்கது. துறந்தோரிடம் செல்வாக்குப் பெற்றமை காரணமாக அவர்களிடம் நாருடைகள் தனிப்பெயர் பெற்றன. பிற மாந்தர் முக்கியத்துவம் அளிக்காமையே தனிப்பெயர் பெறாமைக்குரிய காரணமாகும்.

சீரை என்ற சொல் இன்று காணக்கிடைக்காத ஒன்று. எனினும், 'சீலை' சீரையின் மாற்றமே என்பர்.[16]

---

14. சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள் - பி. எல். சாமி, செந்தமிழ்ச் செல்வி, ஜூன். 78.
15. 'துன் நெடுஞ்சீரை' - கம்ப. 1873.
 'தொடையுறு வற்கலை' - கம்ப. 7252.
16. மரவுரியை உணர்த்திய சீரை பின்னர் ஆடையைக் குறித்தது. இதன் ஈற்றுயிர் ஏறிய ரகரம் லகரமாகத் திரிந்து மருவலாற் சீலை என்றாயிற்று. ஆரை ஆலை என்றாற்போல. -தமிழரும் ஆடையும் - வீ உலகவூழி தமிழ்ப்பொழில், தொகுதி-5, 1929-30, பக்கம்—41.

 சேலை, சீலை, சீரை என்னும் சொற்கள் மரவுரியின் வரலாற்றை விளக்குவதாகும்-இலெமூரியா முதல் ஹரப் பாவரை-இரா. மதிவாணன், பக்கம். 218.

ஆயின், சீரையினின்றும், சீலை மருவியதைவிட, சேலையினின்றும் சீலை திரிந்திருக்கக் கூடும் என்பதற்கே சான்றுகள் அமையக் காண்கின்றோம் எவ்வாறு என்பதைக் காணலாம்.

1. சீரை, சீலை என்ற இரு சொற்களையும் கம்பன் வேறுபட்ட பொருட்களில் கையாண்டுள்ளான்.

(அ) ஊரை நூறுங் கருங்கனலுட் பொதி
சீரை நூறவை சேமம் செலுத்துமோ

-கம்ப. சுந்தர. 1144.

என்ற பாடலில் சீரை என்ற சொல், பயிற்சி பெறுகின்றது.

(ஆ) இராவணன் முன்னிலையில் சேலையாற் செய்யவாய்ப் புதைத்த செய்கையனாக யமன் காட்டப்படுகின்றான் (ஆரணிய. 570).

இவ்விரு எண்ணங்களையும் காணப் பொருள் மாறுபாடு தெளிவாகும்.

1. துறந்தாரின் உடையாகக் காட்டப்படுவது சீரை; சீலை யமனின் உடையாகக் காட்டப்படுகின்றது.

2. இலக்கியப் பயிற்சிகளைக் கொண்டு நோக்க, யமனின் சேலை இடையாடை என்று உரையாசிரியரால் சுட்டப்படினும் அது மேலாடையே: இடையாடை கொண்டு வாய்புதைத்தல் பொருந்தாது: ஆடவர் மேலாடை அணியும் வழக்கு, தமிழரிடம் இருந்தமையும் இதனை உறுதிப்படுத்துகின்றது. ஒரே இலக்கியம் சுட்டும் இரு பொருட்களையுடைய இரண்டு சொற்கள் தொடர்புடையதாக இருக்க இயலுமா என்பதும் எண்ணுதற்குரிய ஒன்று.

இந்நிலையில், சீரை, சீலை இரண்டும் மாறுபட்டு அமைய சேலையினின்றும் சீலை உருவாகியிருக்கக் கூடும் என்பதற்கும் ஒரு சில எண்ணங்கள் அரணாகின்றன.

1. பெருங்கதை சேலம் என்ற ஆடையினைச் சுட்டுகின்றது (4:12:97). எனவே சேலம் சேலை என்றாகி சீலை என்று திரிந்திருக்கலாம்.

2. கண்வடிவம் எழுதப்பட்ட ஆடையினைக் கண்டாங்கி என்று அழைத்தாற்போன்று (இன்று மகளிரின் சேலையினைப் பொதுவாகக் கண்டாங்கி என்பர்) சேல் வடிவம் எழுதப்பட்டதன் காரணமாக துணி, சேலை என்று வழங்கப்பட்டிருக்கலாம்.

சேலை - சீலை மாற்றம் இயல்பானது. எனவே சீரையின் திரிபே சீலையாகும் என்பது மீண்டும் ஆராய்வதற்குரிய ஒன்று.

## 5. துகில்

சங்க இலக்கியத்தில் தழைக்கு அடுத்தாற்போன்று மிகுதியாகப் பயின்றுவரும் தன்மையது துகில். பின்னைய இலக்கியங்களிலும் இந்நிலை தொடருகின்றதைக் காண்கின்றோம்.

இந்தியாவின் வடபகுதியிலும் துகில் பற்றிய எண்ணங்கள் காணப்படல் எம்மொழிச் சொல் இது என்னும் ஐயத்திற்கு இடமாகின்றது.[17] அறிஞர் கருத்துகளும் போதிய விளக்கத்தை அளிக்கவில்லை. ஆயின் தமிழ்ச்சொல்லாக இருக்கப் பல சான்றுகள் உள.

1. துகில், துயில் என்றும் துகின் என்றும் ஒரு சில இடங்களில் வழங்கப்படுவதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இவற்றுள், துயில் என்பதன் பகுதி, 'துய்' என்பது. பஞ்சின் மெல்லிய பகுதியும் துய் என்று வழங்கப்படும். எனவே பஞ்சின் மெல்லிய பகுதியைக் கொண்டு உருவாக்கப்பட்டதால், துயில் என்ற பெயர் அமைந்தது என்பது பொருத்தமானதாகும். இதுவே துகில் என்றும், துகின் என்றும் வழங்கப்பட்டது. மிகவும் மெல்லியதொரு பகுதியாக, இலக்கியங்கள் துகிலினைக் காட்டுவதையும் இதனுடன் இணைத்து நோக்கலாம்.

2. துகிலாய்ச் செய்கைப் பாவிரித்தன்ன (அகம். 269) என்னும் எண்ணத்தைச் சங்க இலக்கியத்தில் காணலாம். துகிலாய்ச் செய்கை என்னும் தொடர் நெய்யும் தொழிலை விளக்குமாற்றான் இத்துயிலுக்கும் தமிழருக்குமுரிய தொடர்பும் விளக்கமுறுகின்றது.

---

17. "Another interesting word is dugulla or Sanskrit dukula which was a fine stuff though its exact nature has not been defined. In the Arthasastra it is mentioned in Bengal which was either made of cotton or cotton and silk mixed. The Divyavadana says that cloth was woven of fibre and wool mixed together......The medieval lexicons are also not very clear about its exact meaning."

—Costumes Textiles Cosmetics & Coiffure, Dr. Moti Chandra, page-115.

3. துயில் எனும் இடப்பெயரை, துகில் நெய்யப்பட்டதால் ஏற்பட்ட காரணப் பெயராகச் சுட்டுவர்.[18]

4. கன்னடம், மலையாளம் போன்ற பிற திராவிட மொழிகளிலும் துணியைக் குறிக்க இச் சொல் பயன்படுகிறது.[19]

தமிழரிடம் நெருங்கிய தொடர்பு கொண்ட நிலையில் காணப்படும் இவ்வெண்ணங்கள் 'துகில்' தமிழ்ச்சொல் என்பதை ஐயமின்றி நிறுவுகின்றன.

இத்துகில் சங்க இலக்கியத்தில்,

கொன்றை மெல்சினை பனி தவழ்பவை போல்
பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க-பெரும்பாண். 329.

அவிர்துகில் புரையு மவ்வெள்ளருவி-குறிஞ். 55.

துகில் விரிகடுப்ப நுடங்கித் தண்ணென
அகிலார் நறும்புகையைது சென்றடங்க-புறம். 337.

என்ற பல்நிலைகளில் காட்டப்படுகின்றது.

சிலப்பதிகாரம் மென்றுகில் (4:48) அந்துகில் (4:30) பற்றிய எண்ணங்களைத் தரும்.

மென்றுகில் (16:123) பூந்துகில் (3:140) மணிமேகலையில் காணப்படுகின்றன.

பெருங்கதை ஆவிநுண்டுகில் (1:36:64) தூத்துகில் (1:39:21) நார்நூல் வெண்டுகில் (1:40:146) நுரைபுரை வெண்டுகில் (1:40:286) கோடி நுண்டுகில் (3:22:229) நிலாவுறழ் பூந்துகில் (5:1:137) என்று துகிலின் பல்இயல்புகளை இயம்பும்.

விலை வரம்பறிதலில்லாத வெண்டுகில் (617) பானுரைய்யன பைந்துகில் (2520) நுரை கிழித்தனைய துகில் (699) பாணிலாக் கதிரென அம்மென் பைந்துகில் (2635) மின்னிருந் துகில் (2434) மங்கலத் துகில் (1146) கண்கொளாத் துகில் (2685) திருவிழைத் துகில் (2737), போன்று சிந்தாமணியில் பயிற்சி பெறும் துகில்

18. 'A Place in South India noted for the manufacture of tuyil.' —words and their significance, Dr. R.P. Sethupillai, page-14.

19. Ta : tukil, tuyil-Fite cloth, rich attire.
Ma: tukil, tuyil-cloth, dress.
Ka: dukula, dugula, dukūla - woven silk, very fine cloth or raiment. Cf. Skt. dukūla - (Whence Ka. dukūla - etc.,)
—A Dravidian Etymological Dictionary, No. 2687.

பற்றிய விளக்கங்கள், இக்காலத்தில் இதன் செலவாக்கு உச்ச நிலையில் இருந்திருக்கவேண்டும் என்னும் உணர்வினைத்தருவன வாகும்.

கம்பனில், ஆவியந்துகில் (சுந்தர.340) சந்த நுண்டுகில் (பால 870) நிலவிளக்கிய துகில் (சுந்தர.1206) போன்றவற்றைக் காண லாம்.

சூளாமணி, மின்னுப் பூந்துகில் (537)கோடி மென்றுகில் (621) போன்றவற்றைக் காட்டும். அடியார்க்கு நல்லார் கூறும் துகில் வருக்கத்துள் பல (14:108) அவர் காலத்தனவே.

தஞ்சைவாணன் கோவையில்,

வரைப்பால் மதுரத்தமிழ் தெரிவாணன் தென்மாறைவையை
நுரைப்பால் முகந்தன்ன நுண்டுகிலாய் (217)

என வையையாற்றின் நுரையையும் பாலையும் முகந்து கொண்டாலொத்த நுண்ணிய நூலால் செய்த துகில் எனப் புலவர் உவமிக்கும் தன்மை துகிலின் மென்மைக்குச் சிறந்ததோர் காட்டு}ஆகின்றது.

இவற்றுடன் மணம் போன்ற மங்கலப் பொழுதுகளில் துகிலை உடுத்திக் கொள்ளும் தன்மையும் (பெருங். 2:5:78, சீவக. 617, கம்ப. 1280) இதன் மேன்மையினை உறுதிப்படுத்தும்.

இலக்கியக் காட்டுகளில் மிகுதியானவை இதன் வெண்மை குறித்தும், சிற்சில வண்ணம் பற்றிய உணர்வையும் தந்து அமை கின்றன (திருமுருகு-15, 296, சிலப். 6:88,பெருங். 1:42:145, சிந்தா. 431, 1783, கம்ப. 1885, சுந்தர. 1085).

பூந்துகில் என்று இது சுட்டப்படும் தன்மைக்கு, பூத்தொழில் நிறைந்த ஆடை என்பதே உரையாசிரியர்களின் உரையாக அமை கின்றது. பூப்போன்ற மென்மையான துகில் என்றதொரு பொருளையும் இதற்குக் கொள்ளலாம்.

துகிலின் மென்மையைக் குறித்த எண்ணங்கள் பல காணப் படுகின்றன. இன்றும் பூந்துவாலை, பூந்தளிர் என்பனவற்றை மென்மைப் பொருளில் கொள்கின்றோம். எனினும் பிற பூக்கள் நிறைந்த ஆடைகளான பூங்கலிங்கம், பூவிரிக்கச்சை போன்ற வற்றைக் காணமென்மையான துகிலில் பூப்போட்டு அழகூட்டி னர் என்றும் இருபொருட்களையும் பூந்துகிலுக்குக் கொள்ளல் பொருத்தமாக அமையும்.

பருத்தியிழையினால் நெய்யப்பட்டஆடையே முதலில் துகில் என்றழைக்கப்பட்டது. இதனை,

பட்டு நீக்கித் துகிலுடுத்தும்-பட்டினப். 107.
பட்டும் துகிலும் உடுத்து-நாலடி. 264.

என்ற எண்ணங்களால் உணரலாம். பட்டும், துகிலும்வேறானவை என்பது இங்கே சுட்டப்படுகின்றது. துகிலின் வேர்ச் சொல்லான 'துய்' பஞ்சுத் துய்யினைக் குறித்து அமைவதும் இதனை உறுதிப் படுத்தும்.

பெருங்கதை, வெண்ணூல் பூந்துகிலுடன் நார்நூல் வெண்டு கிலையும் நவிலுகின்றது. பிற இழை ஆடையையும் குறிக்கும் மரபு இங்கு முகிழ்க்கத் தொடங்கிவிடுவதைக் காண்கின்றோம்.

முத்தியிலம்பகத்தில் விசயை சுநந்தை இருவரது தவக் கோலம் பற்றிச் சொல்லும்போது,

பாலினாற் சிறடி கழுவிப் பைந்துகில்
நூலினால் இயன்றன நுனித்த வெண்மைய(2634)

உடுத்தினர் என்பர் திருத்தக்க தேவர். பைந்துகில் நூலினால் இயன்றன என்னும்போதே வேற்றிழையும் உள என்னும் பிறிதொரு பொருளும் தொக்கி நிற்பதையுணர்கின்றோம். உரையாசிரியரும் இக்கருத்திலேயே 'மெல்லிதாக நூற்ற வெண் மையுடைய நூல் எனவே பட்டாகாதாயிற்று' என்று உரைக் கின்றார்.

இன்னொரு பகுதியில் சீவகன் தந்தை விளையாட்டணியினை விளக்கப் போந்த புலவர்,

உடுத்த பட்டொளிப்ப ஒண்பொன் மேகலை
ஒன்றும் பேசா கிடப்ப
மற்றரசன் நோக்கி கெட்டதுன் துகின் மற்றென்ன (2666)

என்றியம்புவதாகக் காட்டுகின்றார். உடுத்தது பட்டு கெட்டது துகில் என்றுரைக்கும் தன்மை, பட்டினையும் துகிலெனச் சுட்டும் வழக்கினைக் காட்டுகிறது. தழைத்துகிற் பெண் (சீவக. 1231) என்ற எண்ணமும், இவ்வுணர்வில் முகிழ்த்ததேயாம்.

துகில் 'ஆடை' என்ற நிலையில் பல்வேறு பயன்பாடுகளை யும் தமிழர்க்கு அளித்தமையை,

1. தூமமார்ந்த துகிலணைப்பள்ளி-சீவக. 1715.
2. தூமமார்ந்த துகிலுறை நல்யாழ்-சீவக. 719.
3. வடிவுடைத் துகின் முடிவலவர் பண்ணினார்-சீவக.2213.
4. ஏகாய மிட்ட வெண்டுகிலின் மகளிர் உழை நின்றேத்த —சூளா. 153.

என்னும் சான்றுகள் நவில்கின்றன.

இன்று துகில், ஆடையைக் குறிப்பிட வழங்காவிடினும், துகில்என்றால் உடை என்பதனைப் புரிந்துகொள்ளும்தமிழரைக் காண்கின்றோம்.

## 6. கலிங்கம்

இடத்து நிகழ் பொருளை இடத்தாற் கூறுதல் மொழியில் காணப்படும் பொதுக்கூறாகும். கலிங்கம் என்ற ஆடைப் பெயரும் கலிங்க நாட்டில் உருவானது காரணமாக அமைந்ததே. அறிஞர் எண்ணங்களும் இதனையுறுதிப்படுத்துகின்றன.[20]

இலக்கியத்தினின்றும் நாம் வெளிப்படையாகக் கலிங்கம் வெளிநாட்டு ஆடை என்பதை அறிய முடியவில்லை. சில எண்ணங்கள் இலைமறை காயாக இதனையுணர்த்துகின்றது; பல ஆடைகளிருப்பினும், கலிங்கம் பகர்நரை மட்டும் காட்டும் மதுரைக்காஞ்சி (513) வெளிநாட்டு ஆடையாக, சிறந்த ஆடையாக, இருத்தலின் தனியே எடுத்தியம்பியிருக்கலாம். உ.வே. சாமிநாதையர் அவர்கள் 'வழங்கு வங்கக் கலிங்கக் கடகம்' (சிந்தா. 8638) என்னும் பகுதிக்குக் கப்பலில் வந்த ஆடை என்று பொருள் எழுதுகின்றார். இலக்குவன் அரக்கர் சேனையை விரைந்து நூறுதலைக் கலிங்கக் கம்மியரின் நூலிற்கு உவமையாகக் காட்டுவார் கம்பர். (9120). கலிங்கக் கம்மியர் ஆடை சிறந்தது. கலிங்கக் கம்மியர் நெய்வதில் தேர்ந்தோர் என்ற எண்ணங்களே இவ்வுவமை வெளிப்பாடாகும்; பிறந்த இடம் கொண்டு பெயர் பெறும் பிற ஆடை பற்றிய

20. "In South india the members of the Naga Tribe were skilled in many crafts and specially wearing. The Nagar of the Kalinga Cauntry were so famous in the art of weaving that the word Kalingam in Tamil came to signify cloth.-Costumes Textiles cosmetics & Coiffure - Dr. Motichandra,Page-29.

எண்ணங்களும்[21], கலிங்க நாட்டு ஆடையே கலிங்கம் என்ற கருத்தினை உறுதிப்படுத்த வல்லன.

சங்க காலத்தில் கலிங்கம் மிகச் சிறந்ததொரு ஆடையாகக் காணப்பட்டது. புலவரின் விளக்கங்கள் இதன் பல்வகைச் சிறப்பினையும் புலப்படுத்தும் படியாக அமைகின்றன.

கழைபடு சொலியினிழையணி வாரா ஒண்பூங் கலிங்கம் — புறம். 383.

இழை மருங்கறியா நுழை நூற்கலிங்கம்—மலை. 561.

வெயிற் கதிர் விழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்
செக்கரன்ன சிவந்து நுணங்குருவிற்
கண்பொரு புகூஉ மொண்பூங்கலிங்கம்— மது. 431-33.

போன்றன அவற்றுட் சில.

மேலும், மணமகளின் ஆடையாகச் சுட்டப்படுவது அனைத்து இடத்திலும் கலிங்கமே. கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து ஒடுங்கிய நிலையிலும் (புறம். 86) முருங்காக் கலிங்கம் முழுவதும்வளைஇயும் (புறம்.136) காதல் கொள்வதுவை நாட் கலிங்கத்துள் ஒடுங்கியும் (மருதக்கலி 69) மணமகள் காட்டப்படுகின்றாள். மன்னன் தன்னை நாடிவந்த புலவனுக்கு அளிப்பதிலும் கலிங்கம் இடம் பெறுகின்றது (பெரும். 469).

இத்தகைய பெருஞ்சிறப்பு, பிற்காலத்தில் குறைந்து விடுகின்றது. பெருங்கதை, சீவகசிந்தாமணி ஆகியன சிறந்த ஆடையாகக் காட்டினும், இடங்கள் அருகிவிட்ட தன்மையையும் இதன் பெரும் சிறப்பினைத் துகில் அடைந்து விடுகின்ற தன்மையையும் காண்கின்றோம். பெரிய திருமொழியிலும் (10:8:1) இரட்டையரின் 'அப்பிலே தோய்த்திட்டு' என்று

---

21. "Another fabric, which we knew as 'friese' has an interesting origin. It was first made in Friesland the most northerly province of the Netherlands."

—Fundamental of Dress, Marietta Kettunen, Page-148.

"Cina as its name indicates, was imported from China."
—Costumes Textiles Cosmetics& Coiffure- Dr Motichandra, Page-30.

"Damash, which took its name from the city of its origin"
-Historic Costuming, Nevil Truman, Page-11.

தொடங்கும் பாடலிலும் சாதாரண ஆடை என்ற பொருளே இதற்கமைகின்றது. எனவே பிற உள்நாட்டுத் துணியின் மதிப்புக் காரணமாக, படிப்படியாக இதன் மதிப்புத் தமிழரிடம் குறைந்து விட்டமை புலப்படுகின்றது.

கலிங்கம் பற்றிய பயிற்சிகள், இதனை நூலாலும், பட்டாலும் ஆகியதாகக் காட்டுகின்றன. நேர் கரை நுண்ணூற் கலிங்கத்தைப் புறம் சுட்ட (392), நூலாக் கலிங்கத்தை வாலரையில் கொள்ளும் தன்மையைப் பதிற்றுப்பத்து இயம்பும் (2:2). நூலாக் கலிங்கம்-நூற்காத நூலால் ஆகிய கலிங்கம் என்னும் பொருளில், பட்டு நூல் என்னும் எண்ணத்தைத் தந்து நிற்கின்றது.

கலிங்கம் பல நிலைகளில் பயன்பட்டமையை,
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇ - (உடையாக) குறுந். 167.
முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇ - (போர்வையாக) புறம். 136.
காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
தோடமை தூமடி விரித்த சேக்கை - (விரிப்பாக) நெடுநல். 134-5.

போன்ற பல காட்டுகள் விளக்குகின்றன. இன்று கலிங்கம் என ஆடையைச் சுட்டல் இல்லை.

## அறுவை

அறுஎன்ற வினையடியிற் தோன்றிய சொற்களுள் அறுவையும் ஒன்று. சங்க இலக்கியத்தில் கலிங்கத்திற்கு அடுத்த நிலையில் பயிற்சி பெற்ற அறுவை, பிறஇலக்கியங்களில் அதிகமாகச் சுட்டப் படவில்லை.

பிற திராவிட மொழிகளிலும் அமைவது இச்சொல். கன்னடம் துணியையும், துளு, தெலுங்கு இரண்டும் பழந்துணியைக் குறிக்கவும் இதனைப் பயன்படுத்துகின்றன.[22]

22. Ta : aṟuvai - cloth, garment.
Ka : aṟa, aṟave, aṟive, aṟuve - Cloth.
Tu : aṟve - a cloth, old rag.
Te : aṟa - rag.
- A Dravidian Etymological Dictionary, No. 268.

அறுவை என்ற சொல்லுடன், இலக்கியப் பயிற்சியும் இதன் பொருளான துணியினின்றும் அறுத்து எடுத்துப் பயன்படுத்தின தன்மையை யுணர்த்துகின்றது. அரவுரி (பொருநர். 82-3) காம்பு சொலித்தல் (சிறுபாண். 236) அருவி (புறம். 154) குருகின் தூவி (நற். 70) போன்றவற்றுடன் உவமிக்கப்படும் நிலையிலும் உவமை யாகும் நிலையிலும் சிறந்ததொரு ஆடையாகத் திகழும் அறுவை, ஒருசில இடங்களில் சாதாரண ஆடையையும் சுட்டுகின்றது (சீவக. 2010). ஆடையைக் குறிக்கும் பொதுச்சொல் இது என்பது இதனால் தெளிவாகின்றது.

ஆடை வணிகன் அறுவை வணிகன் எனப்படுதலும் (குறுந் 185, நற். 33) நறுமடி செறிந்த அறுவை வீதியைச் சிலப்பதிகாரம் சுட்டலும் (14:207) வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகினை. மணிமேகலை காட்டலும் (28:53) பெரிய புராணம் அறுவையர் குலமென நெசவாளரைக் குறிப்பிடலும் (நேச. நாய-2) இக் கருத்தினை உறுதிப்படுத்த வல்லன.

அறுவையை அறுத்து எடுத்துப் பயன்படுத்தினர்[23] என்பதிற்கிணங்க, தலையில் கட்டும் துணியாக (அகம். 195) நிலந்தோயும் அளவிற்கு உடுத்திய உடையாக (பதி. 34:3) விரிந்த அறுவை மெல்லணையாக (நற். 40) தூ வெள்ளறுவை போர்வையாக (புறம். 280) பயன்பட்டமையும் நாம் காண்கின்றோம்.

அறுக்கப்பட்டதால் அறுவை எனப் பெயர்பெற்ற இதனைப் போன்று, கிழிக்கப்பட்டதால், துணியினைக் கிழி என்றும் வழங்கினர் (சீவக. 104, 1003).

அறுவை, கிழி என்பன இன்று ஆடையைக் குறித்தல் இல்லை.

---

23. "Aruvai is a literary word which means cloth. A specific dimension cut out of a long cloth woven in the loom has been aptly called Aruvai."

- Words and their Significance - Dr. R. P. Sethupillai, Page-43.

## 8. சிதார்

சிதைந்த பண்பு காரணமாக அமைந்தது சிதார் என்னும் பெயர்.[24] வேற்றிழை நுழைந்த, பாறிய திறனில், தொன்றுபடு, நிலந்தினச் சிதைந்த, வேர் புரை, துரும்புபடு, நீர்ப்படு பருந்தின் ஈர்ஞ்சிறகன்ன, ஈன்ற அரவினாவுரிக் கடுக்கும் போன்ற பல அடைகள், உவமைகள் சிதாரின் நிலையைச் சித்திரிப்பவை; இதனது இழிந்த பழம் இயல்பினைக் காட்டுபவை. இதனையுடுத்திய தன்மையில் சங்ககாலப் புலவன் (புறம். 400), பாணன் (புறம். 138) சுட்டப்படுகின்றனர். இவர்தம் ஏழ்மை நிலையினை மிகுவிக்கும் வண்ணம் இவை சுட்டப்பட்டு இருப்பினும், சிதார் சிதைந்த ஆடை என்பதில் ஐயமில்லை. சிதாரினைச் சிதர்வை என்றும் சுட்டினர் (பெரும். 467). இதனைச் சீரையுடன் தொடர்பு படுத்திப் பேசும் கருத்துகள் சில உள்ளன.[25] ஆயின் அவை பொருந்தா.

சிதார், சிதர்வை என்பன மணிமேகலை காலத்தில் சிதர் (11:109) என்றும், சிதவற்றுணி (3:106) என்றும் வழங்கப்படத் தொடங்கின. சிதவற்றுணி என்பது 'சிதைந்த ஆடை' என்னும் பொருளை அவ்வாறே பிரதிபலிக்கக் காண்கின்றோம்.

வாழ்வில் தாழ்ந்தநிலை மாந்தர் உடுத்திய இழிந்த ஆடையின் இயல்பு ஈண்டும் புலனாகின்றது.

மணிமேகலைக்குப் பின்னர், இச்சொல்லாட்சிகளைக் காண இயலவில்லை. நாலடியார், உடுக்கை யுலறி (141) என இயம்பும். எனவே சிதார், சிதர்வை, சிதர், சிதவற்றுணி என்ற சொற்களால்

---

24. Citar - Ta - Citar (-v-, -nt–)

    Ta scatter, strew, be scattered, strewn, spread ever; (-pp-; -tt-) to shed, scatter:n........

    Citar Ta : Citar (-p -; -tt-) to separate, split, cut...

    -A Dravidian Etymological Dictionary, No. 1294, 1295.

25. The Anthologies Purananuru and Kurunthokai have refer; ences to what has been identified as a kind of bark cloth and this is known as Citarvai (சிதர்வை) Citar (சிதார்) and Citaval (சிதவல்).

    - Social Life of the Tamils, S. Singaravelu, University of Malaya, Malaya, 1966, page-70.

பண்டு தமிழர் பழந்துணியைக் குறித்து வந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. பின்னர் கந்தை என்ற சொல்லாட்சியும் அமைந்தது. இவற்றுள் கந்தை என்ற சொல்லே இன்றுவரை மக்களிடம் பயின்று வரும் சொல்லாகும்.

கந்தையானாலும் கசக்கிக் கட்டு என்னும் எண்ணத்தில் இச் சொல் வழக்கினைக் காண்கின்றோம். கூரம் சாசனம் 'பரமேசுவர வர்மன் சாளுக்கியரைத் தோற்கடித்தான்; நூறாயிரம் வீரர்களுடன் வந்த விக்கிரமாதித்தன் ஒன்றியாய்க் கந்தையைப் போர்த்துக் கொண்டு ஓடினான்' என்றுரைக்கும் நிலை[26] கந்தையின் தாழ்வினைத் தெளிவாக்கும்.

கந்தை என்ற சொல்லுடன், கந்தல் என்ற சொல்லாட்சியும் இன்று உண்டு.

சிதைந்த ஆடை என்னும் பொருளுடன் தொடர்புடையதாக அமைவது துணி என்ற சொல்லுமாகும். 'துணி' என்ற சொல், சங்க காலத்தில் துண்டுபட்ட அனைத்தையும் குறித்தது. ஆயின், துண்டுபடுத்தப்பட்ட ஆடையைக் குறிக்குமிடத்தில் இவை சிறந்த துணியைச் சுட்டவில்லை. துணிச் சிதர் என்றும் சிதவற்றுணி என்றும் சிதைந்த துணியையே சுட்டுகின்றது.

நந்திக் கலம்பகம் பாணனின் ஏழ்மை நிலையை, 'நெருநல் துணியரைச் சுற்றி'த் திரியும் தன்மையால் இயம்பும்(23). எனவே 'துணி' என்னும் சொல் துணிக்கப்பட்ட பொருளைக் குறித்ததுடன், இழிந்த ஆடையைக் குறிக்கவும் பயன்பட்டது என்பது தெரிகிறது. இன்றைய நிலையில், இது எல்லா வகைத் துணிகளையும் குறிக்கும் பொதுப்பெயராக, தன்னிலையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளது.

## 9. தானை

உடையைக் குறிக்கும் இச்சொல் சங்கப் பாக்களில் இருந்தே பயிற்சி பெறுகின்றது.

தாழ்தானை (கலித். நெய். 147), அரிவையதுதானை (பரி. 11), தாரும் தானையும் (புறம் 276), கொடுந்தானைக்கோட்டழகு (நாலடி - 131), நீலத்தானை (சிலப். 16:204), பூந்துகிற்றானை (பெருங். 1:35:202), தானை வீக்கற விசித்து (சீவக. 1086)

26. குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு — கா. அப்பாதுரை, பக்கம். 69.

என்ற எண்ணங்கள் இதனை யுடையாகக் காட்டுகின்றன. பாம்புரியன்ன மீக்கொடானை (1:42:244) தானையாற் தடங்கணீரைத் துடைத்தல் (சீவக. 1051) என்னுமிடங்களில் மேலாடையாகக் காண்கின்றோம். இவற்றால் இடையில் உடுத்தும் உடை, மேலாடை இரண்டையும் குறிக்கும் பொதுச்சொல் இது என்பது விளங்கவல்லது. தானை இன்று, அடையுடன் இணைந்து, மேலாடையைக் குறிக்கிறது. தானை என்ற தனிச் சொல் ஆடையைக் குறித்தல் இன்றில்லை. இன்று போன்றே அன்றும் முன்தானையையே குறிக்க இது வழங்கியதோ எனில் இல்லை. அன்றே இப்பொருள் எனின், முன் என்ற அடை சேர்த்துச் சுட்ட வேண்டிய தேவை இல்லை.

## 10. காழகம்

சங்கத்தமிழர் உடுத்திய மற்றுமொரு உடை காழகமாகும். இவ்வுடை குறித்துப் பல எண்ணங்கள் அமைகின்றன.[27] காளகம், காழகம் என்ற இரண்டு சொல்லாட்சிகளும் இதற்குண்டு.

கரையிடைக் கிழிந்த காழகம் உடுத்திய தலைவன்.
(கலித். மரு 73)
புலராக்காழகத்தைப் புலர உடீஇய முனிவர்
(திருமுருகு-176
அகலல்குலில் காழகம் உடுத்திய பெண்ணொருத்தி
(கலித். மரு. 92)

---

27. "கழாகத் தாக்கம் என்று பட்டினப்பாலையில் கூறப்பட்ட பொருட்களில் நெய்யப்பட்ட ஆடையும் கூறப்பட்டு இருக்கலாம். காழகம் என்பதைப் பர்மாநாடு எனச் சிலர் கொண்டனர். அறிஞர் சிலர் காழகம் எனப்படும் கடாரம் தாய்லாந்திலிருந்த Kedha என்ற துறைமுகத்தையும் அதைச் சுற்றிய நாட்டையும் குறித்தது என்பர். காழகம் என்ற ஆடை நீலநிற ஆடை என்பது தெரிகின்றது."-சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள் - பி. எல். சாமி, செந்தமிழ்ச் செல்வி, மார்ச்சு 1978.

"காழகம் கடாரம் என்பது நச்சினார்க்கினியர் கூற்று. மலாய்நாட்டில் மேல் கரை ஓரமாயுள்ள கடே என்னும் இடமே பண்டைக் காலத்தில் கடாரம் எனப்பட்டது. கடாரம் என்ற காழகத்திலிருந்து நெய்து அனுப்பப்பட்ட ஆடை காழகம் எனப்பட்டது."

- பத்துப்பாட்டாராய்ச்சி - மா. இராசமாணிக்கனார், பக்கம்-518.

போன்றோரைச் சங்க இலக்கியம் காட்டுகின்றது. சிலப்பதிகாரத்தில் வணிக பூதம் காளகஞ் செறிந்த உடையினனாகக் காட்டப்படுகின்றது. (22:98). காழக மூட்டப் பட்ட காரிருட்டுணியை ஒப்பான் என வேட்டுவனைத் திருத்தக்கதேவர் தம் சிந்தாமணியில் இயம்புவார் (1230). எனவே அனைவராலும் பயன்படுத்தப்பட்டதொரு துணி இது என்பது புலனாகின்றது.

காளகம் சேர்ந்த உடை, காழக மூட்டப்பட்ட காரிருட்டுணி என்ற எண்ணங்களை நோக்க,காழகம் கறுத்த ஆடை என்பதும், கருமை யூட்டப்படுதல் இதன் இயல்பு என்பதும் விளக்கமாகின்றது.[28] மேலும் காழகம் சேர்ந்த, காழகம் ஊட்டப்பட்ட போன்ற எண்ணங்கள் இவ்வுடையின் தொழில் தன்மையையே இயம்புகின்றன. எனவே முதலில் காளகத்தில் இருந்து வருவிக்கப்பட்டது காழகம் என்பதும் பின்னர் தமிழர் தம் நுண்ணறிவினால் தாமே இதனை உருவாக்கத் தொடங்கியிருக்க வேண்டும் என்பதும் ஈண்டு எழும் எண்ணங்கள். இதன் நிறத்திற்கேற்ப இதனை உடுத்திய மாந்தரும் சாதாரணமானவர்களாகவே சுட்டப்படல்சிறப்புடைய ஆடை அன்றுஇதுஎன்பதை யுணர்த்துகின்றது. அதிக பயிற்சியின்மையும், பின்னர் இதனைப் பற்றிய எண்ணமின்மையும் இக்கருத்தினை யுறுதிப்படுத்தும்.

அடியார்க்கு நல்லார் உரைக்கும் துகில் வகையுள் ஒன்றான புங்கர்க்காழகம் என்ன துணி என்பது புலப்படவில்லை. காளக வகையாகவும் இருந்திருக்கலாம்.

## 11. மடி

மடித்து வைக்கப் பெற்றமையின் நெய்த துணியின் பெயர் மடி என்றாயிற்று. இது திராவிட மொழிச்சொல் என்பதைத்

---

28. நெடுங்கரை காழக நிலம்பரலுறுப்ப என்னும் மதுரைக் காஞ்சியடிகளும் (598)
கரிய மணலை யுடைய நிலத்தைச் சுட்டல் இதனுடன் இயைபுடைய ஒன்று.

தமிழ், கன்னடம், துளு, தெலுங்கு, கோடா போன்ற பல மொழி களிலும் பயிலப்படும் தன்மை பகரும்.[29]

தூமடி (அகம்-13), திருமலரன்ன புதுமடி (புறம்-390), பூந்து இல் இருமடி (பெருங். 1. 42 : 145), மங்கல வனப்பினதோர் கோடி மடி (சூளா. 1093) போன்ற இலக்கியப் பயிற்சிகள் மடியின் சிறப் பினை யுணர்த்தவல்லது. தூய்மையானதொரு ஆடையினைக் குறித்ததைத் தெரிவிக்கவல்லது. மேலும், குறியவும் நெடியவும் மடிதரூஉ விரித்து என்ற எண்ணமும் (நெடு. 135) அரசன் கொடுக்க அதனையுடுத்தும் புலவன் நிலையும் (புறம். 393) வெண்டுகிலிணைமடியினை விரித்துடுத்தும் தன்மையும் (பெருங் 2:5:131), துணியைக் குறிக்கும் பொதுச்சொல்லாகும் இது என்பதை உறுதிப்படுத்தவல்லன. அடியார்க்கு நல்லார் உரைக் கும் கவற்றுமடி இதனைக் குறிக்குமொரு வழக்காயிருக்கலாம்.

இன்றும் மடி என்ற சொல் கோடித் துணியை அதாவது பதினாறு முழ வேட்டியை (இரண்டு இரட்டை வேட்டி அல்லது நான்கு முழ வேட்டி இணைந்தது. துப்பட்டி என்றும் இதனைக் கூறுவார்கள்) குறிக்க வழங்குகின்றது (கன்னியாகுமரி மாவட்டம்).

ஆயின் பண்டைய இலக்கியச் சான்றுகளை நோக்க இத்தகைய அளவு இருந்ததாகத் தெரியவில்லை. ஏனெனில் குறி யவும் நெடியவும் என்று கூறுவது (மது. 520) அளவற்ற தன்மை யையே காட்டுகிறது.

தூய்மை, சிறப்பு கருதி, அன்று மடித்து வைத்த புதிய ஆடையினைத் தூமடி என்று உரைத்த தன்மை மரபாக வழங்கி வந்துள்ள நிலையில், 'மடி' என்ற சொல்லே புத்தாடையையும்,

---

29. Ta. mati - Ceremonial purity, as of one who has bathed, cloth made of the fibre of trees, Coarse silk cotton, etc., as ceremonially pure.

Ka. Maḍi - cleanness, purity; a washed, clean cloth; madi vala.........

Kod. Madi-ritual purity; madi oatte clean clothes.

Tu. madi-a newly washed cloth, bleached cloth, a garment of bark, silk or wool worn by brahmins and other high caste peoples during meals or any ceremony;......

தூய்மையையும் குறிக்க வழங்குதல் ஆடையின் சிறப்பினையும், இன்றுவரை பொருள் மாற்றமிலாது வழங்கும் தன்மையையும் தெளிவுபடுத்தும்.

ஈரப் புடவையைத் தொடாது, உலரவைத்து, பூசைக்கு உடுத்தும் தன்மையில் அதனை மடிப்புடவை என்று அந்தணர் குறிப்பிடுவது இன்றும் நாம் காணக்கூடியது. பட்டு, கம்பளி இரண்டும் எப்பொதுமே மடி என்ற எண்ணமும் அவர்களிடம் உள்ளது.

## 12. பட்டு

உடைக்குரிய இழைகள் அனைத்தினும் உறுதியும் பளபளப்பும் மிகவுடையது பட்டு. பட்டின் பசுமையே பட்டு என்னும் சொல் ஆக்கத்திற்குக் காரணமாகலாம். உலண்டு என்றும் பட்டு நூலினைப் பெருங்கதை யியம்பும் (1:42:211).

மேலும் 'அறிவு புறம் போய உலண்டதுபோல' (56·28) என்னும் கல்லாடம் பாடலடிக்கு உரையாசிரியர், அறிவில்லாதது என்றறியப்படும் அவ்வுலண்டு புழுப்போல, உலண்டு-ஒரு வகைப் புழு; கோற்புழு; இப்புழு தன் எச்சிலாலேயே தன் உடம்பைச் சுற்றி, கூடு அமைத்துக்கொண்டு வெளிப்படுதற்கு வாயில் இல்லாமல் அக்கூட்டினுள்ளேயே இறந்துபடும் என்பது என்று உரை அமைக்கின்றார். பெருங்கதை ஆசிரியர்கூறும் உலண்டுடன் இவ்வுலண்டு பற்றிய எண்ணத்தையும் நோக்க இவ்விரண்டும் ஒன்றா இல்லையா என்ற கருத்து மேலும் ஆய்வுக்குரிய ஒன்றாகவே அமைகின்றது.

இருவிதப் பட்டுப் புழுக்களினின்றும் உருவாக்கப்படும் பட்டு இழைகள்,[30] நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் தன் மதிப்பில் உயர்ந்து வருவது கண்கூடு. தமிழ் இலக்கியத்திலும் இப்பட்டினைப் பற்றிய பல எண்ணங்கள் அமைகின்றன.

---

Te. madi, madugu purity, state of being unpolluted cloth; a pure or unpolluted cloth;........

– A Dravidian Etymological Dictionary, No. 3804.

30. "There are two general varieties of silk worm-the cultivated and the wild"-Fundamentals of Dress, Marietta Kettunen, Page—145.

சங்க இலக்கியம் கொட்டைக் கரைய பட்டினையும் (பொரு. 155) சிலப்பதிகாரம், அரத்தப்பட்டினையும் (20:14) பெருங்கதை, பிணர்முரிப்பட்டு (1:40:226) நீலப்பட்டினையும் (4:12:262) சிந்தாமணி, அரத்தப்பட்டு (173) பால்பரந்தன்ன பட்டு (541) பூம்பட்டு (923) பச்சிலைப்பட்டு (2090) வெண்பட்டு (2358) வண்ணப்பட்டு (2694) போன்றவற்றையும் பகர்கின்றன. கம்பராமாயணம் மிக்க பட்டு வகை என்றியம்பும் (10365). அடியார்க்கு நல்லார் துகில் வகையுள் உரைக்கும் பச்சிலை (சிலப். 14:108) பச்சிலைப் பட்டினைக் குறிக்கும் வழக்காகயிருக்கலாம். குருதியும் குருதிப் பட்டினைக் குறித்தமைந்திருக்கலாம்.

முக்கூடற்பள்ளு, செம்பொன் இடைக்கிடைப் பெற்றிடும் பட்டு (6) பஞ்சவணப்பட்டு (8) பற்றிய எண்ணங்களைத் தருகின்றது. பஞ்சவணப்பட்டு, சரிகை போட்ட பட்டுகளை இன்றும் நாம் காண்கின்றோம். பட்டு காலந்தோறும் வளர்ந்த வளர்ச்சி நிலையை இப்பாக்கள் வழி உணரமுடிகின்றது.

இப்பட்டு பற்றிய செய்திகளை நோக்க, இவை தனிப்பெயர் பெற்றதாகத் தெரியவில்லை (குருதி, பச்சிலை பற்றிய எண்ணம் வெளிப்படையாக இல்லை). வடமொழியில் கோசிகம், நேத்திரம் போன்ற பட்டுகள் தனிப்பெயருடன் திகழ்வன. தமிழ் இலக்கியத்திலும் தனிப்பெயருடன் திகழ்வன இவையே. கல்வெட்டு ஒன்று 'புலியூர்ப்பட்டு' என உரைப்பினும்[31], ஈண்டும் தனிப்-பெயர் அமையாதது குறிப்பிடத் தக்கது.

பட்டுப் புழுக்களினின்றும் பட்டு எடுத்தல் தவிர பிற இழைகளினின்றும் தயாரித்த துணிவகைகள் அதன் பட்டு போன்ற தன்மை காரணமாகப் பட்டு என்று குறிக்கப்பட்டதையும் இலக்கியம் காட்டும். சான்றாக, நார்ப்பட்டு, உரோமப்பட்டு போன்றவற்றைக் கூறலாம். நார்ப்பட்டு பற்றி பெரிப் புளுஸிலேயே காணும் நாம், உரோமப்பட்டு (2667) பற்றிய எண்ணத்தைச் சிந்தாமணிக் காலத்தில்தான் காண்கின்றோம் ஆயின் பட்டினின்றும் இவை வேறுபட்டமையைச் சுட்ட அடை சேர்த்து வழங்கும் வழக்கினைத் தமிழர் கொண்டிருந்தனர். இன்று இப்பட்டில் அதிக வளர்ச்சி நிலைகளைக் காண்கின்றோம்.

---

31. கல்வெட்டுகளால் அறியப்படும் சோழர் காலத்தியசமுதாய. அமைப்பு-க. த. திருநாவுக்கரசு, கல்வெட்டுக் கருத்தரங்கு, பதிப்பாசிரியர் ஆர். நாகசாமி, பக்கம்-229.

## 13. பூங்கரை நீலம்

சங்க இலக்கியம் குறிப்பிடும் இவ்வுடை பற்றிப் பிற்கால இலக்கியங்கள் ஏதும் பகரவில்லை. ஆயின் பெருங்கதையில் 'நீலம்' என்றதொரு ஆடைப்பெயரினைக் காண்கின்றோம் (1:42:208). இதனை நோக்க, அரத்தம், கரியல் போன்று, நீலநிற ஆடை முதலில் பூங்கரைநீலமெனப்பட்டு, பின்னர் நீலமென நின்றிருக்கக் கூடும். அல்லது நீல ஆடை நீலமெனவும்,கரைமட்டும் நீலமாக அமைவது பூங்கரை நீலமெனவும் வழங்கப்பட்டிருக் கலாம்.

சங்கப் பாக்களில் ஈரிடங்களில் இவ்வுடை பற்றிய எண்ணம் அமைகின்றது.

'யாய்தந்த பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇ'
(மு. கலி. 11)

'யானு மென் சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலம் தழீஇத் தளர்பொல்கி' (மு. கலி. 15)

இரண்டு இடங்களிலும் தலைவியின் உடையாகக் காட்டப் படும் இவ்வுடை, நிலம் தாழ உடுத்தப்படும் உடை எனத் தெரிகின்றது. வேறு எண்ணங்கள் புலனாகவில்லை.

## 14. தூசு

பிற திராவிட மொழிகளில் இல்லாது, தமிழில் மட்டும் காணக் கிடக்கும் ஆடைபற்றிய சொல் தூசு. சங்க காலத்தில் இத்தூசுபற்றிய கருத்து அருகிக் காணப்பட (பட்டினப்பாலை 148) பின்னைய காலங்களில் இதன் செல்வாக்கு மிகுகின்றது.

உயர்நிலை மாந்தரால் உடுத்தப்படுதலிலும் (சீவக. 550, 1320) கம்ப. சுந்தர. 413) மன்னன் கொடையிலும் (கம்ப. 10516, 10518) அதிகமாகப் பயின்று வருவதால் தூசு மிகச் சிறந்ததொரு ஆடை என்பதைக் காட்டும். பயிற்சி அதிகமிருப்பினும் இது எந்த இழையால் நெய்யப்பட்ட ஆடை என்பது தெளிவுறவில்லை. பொதுநிலையில் ஆடை என்ற பொருளில் பருத்தி, பட்டில் சிறந்த ஆடைகளைக் குறிக்கும் சொல்லாக இது திகழ்ந்திருக்கக் கூடும். வெண்ணிறத் தூசு சிறப்பாகக் காணப்படினும் நிறத் தூசும் இருந்தன என்பதனை ஒரு சில சான்றுகள் உணர்த்தவல்லன (கம்ப. சுந்தர. 413).

தூசுபோன்ற பல சொற்களை வடமொழியிலும் காணக் கூடுகின்றது. அவை கம்பளி பின்னப்பட்ட கம்பளி என்ற

பொருளைக் குறிக்கின்றன. ஆயின் தமிழில் பயிலும் தூசு, பட்டாடை பருத்தியாடையே தவிரக் கம்பளி ஆடையாக இருந்தமைக்குரிய எண்ணம் ஏதும் இல்லை. இது தோலாடையும் அன்று என்பது,

தூ சொடும் அணியும் முந்நூல்
தோல்தரும் தோற்றம் போன்றும் (கம்ப. 674)

என்னும் அடியால் விளக்கமுறுகின்றது. அணிந்திருந்த தூசு அழகற்றதாய் தோல் போன்று காட்சி அளித்தது என்னும் பொருள் தூசு, தோலாடை அன்று என்பதைத் தெளிவாக்கும்.

இன்று தூசு ஆடையைக் குறித்தல் இல்லை.

## 15. புட்டகம்

பரிபாடல் உரைக்கும் உடை இது.

புட்டகம் பொருந்துவ புனைகுவாரும் (12:17) என்ற பாடலடியில் காணும் புட்டகம் நீராடுவதற்கேற்ற உடை என்னும் பொருளுடையது என்பர்.[32] பிற இலக்கியங்களில் இதனைப் பற்றிய எண்ணமில்லை. எனவே வேறு விளக்கங்கள் தெளிவுற வில்லை. வடமொழியிலும் புட்டகா என்றதொரு உடையினைக் காண்கின்றோம். இதுவும் புட்டகம் போன்று தெளிவு பெறாததே.[33]

## 16. கம்பல்

தறைந்த தலையுந் தள் கம்பலும் (கலித். 65) என்னும் பாடலடியில் அமையும் கம்பல், ஆடை என்பது அகராதி தரும் விளக்கம்.[34] பிற காட்டுகள் இல்லை.

32. புட்டகம்—Bathing Dress—Pre-Pallavan Tamil Index, Dr. N. Subramanian.
33. Phuttaka—This was some sort of cloth which I have not been able to identify. This material apparently seems to have been in a great demand as a shop at Separa exclusively dealing in this material (Phuttaka—Vastravari) is mentioned. Could it be some sort of printed ealice?—Costumes, Textiles, cosmetics & Coiffure, Dr. Motichandra, page—32.
34. கம்பல்—Garment; ஆடை.
—Tamil Lexicon, Vol.II, Part-I

## 17. நூல்

பட்டு எனப் பட்டாடையைக் குறித்தல் போன்று நூல், பஞ்சு, இழை என்று பருத்தியாடையைச் சுட்டும் மரபும் தமிழரிடம் காணப்பட்டது.

நுண்நூல் ஆகம் பொருந்தினள் (அகம். 198) என்னும் பாடலடியில் நூல் நுண்மையான நூலால் ஆகிய ஆடையை விளக்குவதாகும்.

பஞ்சாடை பஞ்சி எனச் சிந்தாமணி,சூளாமணியில் காட்டப் படுகின்றது.

பஞ்சிமேற் கிடந்துடை ஞாண்பதைத்திலங்க -சீவக. 2240.

பஞ்சிலங்கு அல்குலாள் - சூளா. 495.

இன்று, இவ்விரண்டு சொற்களும் வழக்கற, நூலினைக் குறித்த இழை என்ற சொல் (கம்ப. 309) உடையைச் சுட்டும் நிலையில் அமைகின்றது. ஆயின் இதுவும் திரிந்தே பயில்கிறது.

நேரியல் என்பது மேலாடையின் பெயராக இன்று வழங்கு கின்றது. நேரிய இழையாலாகிய ஆடையே, நேரிய இழை என நின்று நேரியல் என மருவி நிற்கின்றது. நேரியது என்ற வழக்கும் உண்டு.

## 18. வாலிது

நிற ஆடைகளை நிறம் கொண்டு சுட்டல்போன்று, ஆடை யின் இயல்பு கொண்டு பெயர் சூட்டுதலும் உண்டு. சங்க இலக் கியத்தில் புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை, வாலிது என அழைக்கப்பட்டது (புறம். 262). இதனைப் போன்று அழுக்குடை யினை மாசு உண்ணல் காரணமாக மாசுணுடுக்கை (புறம். 54) மாகணி (ஆசாரக். 12) என வழங்கும் வழக்கினையும் காணக்கூடு கின்றது.

இன்று வெள்ளை, சலவை என்று, வெளுத்த ஆடையைக் குறித்தும், அழுக்கு என மாசுணியைக் குறித்தும் தமிழர் வழங்கு கின்றனர்.

## 19. கச்சை

கச்சை என்ற சொல் குறித்துப் பகரப்படும் எண்ணங்கள் இதனை வடமொழிச்சொல் எனக் காட்டுகின்றன. இதனைப்

பற்றிய தெளிவினை நம் இலக்கியங்கள் தராமை மேற்கூறிய வடமொழிச் சொல் என்னும் கருத்தினை ஏற்கச் செய்கின்றன.

'வடமொழியில் உள்ள 'கக்ஷ' என்ற சொல்லினின்றும் தோன்றியது இது. இதிலிருந்து இந்தோ-ஆரிய மொழிகளிலுள்ள கச்சா, காசா என்னும் சொற்கள் பெறப்பட்டன.[35] என்பர். திரு. எஸ். வைத்தியநாதன் கருத்தும் இதனோடு ஒப்புமையுடையதாகும்.[36]

திராவிட மொழிகள் பலவற்றிலும் இச்சொல்லின் பயிற்சி அமைகின்றது.[37]

கச்சை பயிலும் நிலைகள், இதனை அமைக்க எல்லாவகைத் துணிகளையும் பயன்படுத்தினமையைக் காட்டும் (சிறு. 239, குறிஞ். 125, பெருங். 1.41:98, சூளா. 538). அரையில் இறுக்கிக் கட்டினர்; தாழ்வாகக் கட்டினர் என்பனவும் புலனாகும் எண்ணங்கள். பெரும்பாலான காட்டுகள் தொழில் செய்யும் நிலையில் இதனை வரிந்து கட்டினர் எனச் சுட்டுகின்றன.

---

35. ஆண்களின் உடை - பிரனாப் குமார் தாஸ் குப்தா, இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை - தமிழாக்கம்: எஸ். இலட்சுமி, பக்கம். 79.

36. Indo Aryan Loan Words in Old Tamil—S. Vaidyanathan, Page-85.

37. Ta. Kaccai—rope, girth girale, belt, piece of new cloth; kaceu –belt, girdle.

Ma. Kacca—girdle, waist, belt, long cloth.

Ko. Kacu—perineal cloth.

To. Kscu—embraidered perineal cloth; koc—cloth given at funeral.

Ka. Kacce—cloth passed between the legs to cover the privites, girdle, Kod. Kacce—perineal cloth.

Tu. Kacce—end of lower garment gathered up behind and tucked into waist bend.

Te. Kacce—end of the lower garment passed between the legs and tucked in behind.

cf. Skt. Kaksya—A Dravidian Etymological Dictionary No.922.

அகராதிகள் பொருளுரைத்தலைப் போன்று,[38] உரையாசிரியர்களும் உடை என்ற பொதுப் பொருளையே உரைக்கின்றனர். எனவே இடையில் இறுக்கமாகக் கட்டப்பட்டதொரு உடை என்பது தெளிவாகின்றது.

இன்று கச்சம் வைத்துக் கட்டுதல் என்பது வேட்டி உடுத்தும் முறையைச் சுட்டுதலாகும். இது தவிர, இடுப்பில் துணி கட்டிக் கொள்ளலையும் கச்சை கட்டுதல் என்பர். இறப்புச் சடங்கில் (கன்னியாகுமரி மாவட்டம் - செட்டியார்) கச்சை கட்டுதல் தனியிடம் பெறுகிறது. இது இடுப்பில் கட்டும் துணியையே குறிக்கின்றது.

## 20. கச்சு

சங்க காலத்திலிருந்தே தமிழ் மகளிர் மார்பு ஆடை, கச்சு வம்பு, வார் என்று அழைக்கப்பட்டது. இவற்றுள் அதிக செல்வாக்குப் பெறுவது கச்சு ஆகும்.

வரிந்து கட்டிய ஆடை, கச்சை என்று அழைக்கப்பட, மார்பிலும் வயிற்றிலும் இறுகக் கட்டப்பட்டதன் காரணமாக கச்சு என வழங்கப்பட்டிருக்கலாம். மலையாள மொழியிலும் இச்சொல் வழக்குண்டு.[39]

துணி, பொன் இரண்டாலும் கச்சுகள் செய்யப்பட்டன. பொன்னாலாகியது அருகியே காணப்பட்டது. பல வண்ணத் துகில்கள் கொண்டு இவை அமைந்தன என்பது கருங்கச்சு, விரவு வரிக்கச்சு, நீலக்கச்சு, செம்பூங்கச்சு, அம்பூங்கச்சு போன்ற எண்ணங்களால் தெளிவுபடும்.

கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று - அகம். 376.
வார் கச்சிற் றானை வீக்கல் - சீவக. 878

போன்றன இடைக்கச்சினையும்,

---

38. Girdle Belt—
கச்சை—whole piece of அரைக்கச்சு
—Lexicon—Vol. III., part-I, முழுப் புதுத்துணி.

39. Ta: Kaccu. a kind of Corset worn by Indian Women in ancient Times.
Ma: Kaccu—bedice to confine the breast.
—A Dravidian Etymological Dictionary, No.921.

கச்சியாப்புறுத்த கால் வீங்கிள முலை - பெருங். 1.34:202
கருங்கணிள முலை கச்சற வீக்கி - சீவக. 2116

என்பன மார்புக் கச்சினையும் காட்டும் சில சான்றுகள்.

இன்றைய நிலையில் மகளிர் அணியும் மார்பாடை (பிரா) ஆடவர் பயன்படுத்தும் வார் (பெல்ட்) போன்று இதனைக் கொள்ளலாம்.

மேலாடை இன்றியமையாததெனை எண்ணாத மகளிர், புதுமையாக ஏற்றுக்கொண்டமையின் வம்பு எனவும் வழங்கப் பட்டிருக்கலாம்.

அம்பணைத் தடைஇய மென்றோள் முகிழ்முலை
வம்பு.விசித்தியாத்த வாங்கு சாய்நுசுப்பின் - நெடு. 149-50.

வப்பு வீக்கி வருமுலைப்புட் கரந்து-சீவக. 633.

வம்பின்பொங்கும் கொங்கை சுமக்கும்வலி இன்றி-கம்ப.1002

போன்ற இதன் பயிற்சி நிலைகள், மார்பில் இறுக்கிக் கட்டப்பட்ட, இதன் தன்மையை இயம்பும். உவமைகள், அடைகள் போன்றன இதனுடன் சுட்டப்படாக் காரணத்தால் கச்சு போன்றதொரு ஆடை என்பது மட்டுமே விளக்கமாகின்றது.

கச்சு, வம்பு போன்று வரிந்து கட்டப்பட்டமை, வார் என்ற சொல்லாக்கம் பெற வாய்ப்பு அளிக்கின்றது. வார் முலை முற்றத்தை மறைத்தல் காரணமாகவும் (அகம். 361) இப்பெயர் அமைந்திருக்கலாம். ஆடவர் கட்டும் கச்சினை இன்றும் வார் என்னும் வழக்கு கச்சு, வார் ஆகியவற்றின் தொடர்பினையே காட்டும்.

இன்று இச்சொற்கள் வழங்கப்படவில்லை. இரவிக்கை ஜெம்பர், சட்டை, பாடி, பிரா போன்ற பல பெயர்கள் இப்பொருளில் அமைகின்றன.

## 21. மெய்ப்பை

பண்டைத் தமிழன் வரலாற்றில் சட்டை அணியும் பண்பாடு இடம்பெறவில்லை. பிற நாட்டார் தொடர்பு இப்பழக்கத்தை அவனிடம் உருவாக்கியது. சட்டை பற்றிய சொற்கள் சட்டையுடன் தமிழரின் தொடர்பினை விளக்கி நிற்கின்றன.

சங்க இலக்கியத்திலும், சிலப்பதிகாரத்திலும் சட்டையைக் குறிக்கப் பயன்படும் சொற்களுள் மெய்ப்பையும் ஒன்று.

மெய்ப்பை புக்கு வெருவரு தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்

என்று முல்லைப்பாட்டும் (60-61), மெய்ப்பை புக்கு விலங்கு நடைச் செலவினையுடைய பொற்கொல்லனைச் சிலம்பும் (16:106) காட்டும். முல்லைப்பாட்டு அடிக்கு உ.வே. சாமிநாதையர் 'சட்டை இட்ட அச்சம் தரும் தோற்றத்தினையுடையோர்' என்று பொருள் எழுதுகின்றார்.

மெய்ப்பையுடன் தொடர்புடைய மெய்யாப்பு என்ற சொல்லும் (பரி.தி. 2.19) இதனைக் குறித்தமைகின்றது. வழக்கம் இல்லாத பண்டைத்தமிழர் பிறநாட்டார் சட்டையிடும் தன்மையையும், அதனைக் கண்டு, தங்களுள் ஒரு சிலர் அணிவதையும் காண்கின்றனர். மக்கள் மனதில் சட்டையைப் பற்றிய எண்ணமின்மையின் தனிப்பெயர் ஏதும் தெரியவில்லை. தாங்கள் கண்ட காட்சியிலேயே மெய்யினை மறைப்பது என்ற பொருளில், மெய்ப்பை, மெய்ம்மறை, மெய்யாப்பு என்ற பல பெயர்களைச் சூட்டுகின்றனர். காலப்போக்கில் பிற கஞ்சுகம், குப்பாயம் போன்ற சொற்கள் அமைய இவை மறைந்து விடுகின்றன.

ஆடையில் சித்திரம், ஓவியம் எழுதும் வழக்கம் பழமையானது. சித்திரச் செய்கைப் படாம் என்று உவவனம் ஒப்புமையாக்கப்படும் தன்மையில் இவ்வெண்ணம் விளக்கம் பெறும் (மணி. 3:165). இன்று சித்திரங்களைப் படம் எனச் சுட்டல் போன்று. அன்று, சித்திரங்கள் அமைந்த துணியினைப் படம் என்று குறித்திருக்கின்றனர்.[40] இந்நிலையில் படம்கொண்டு செய்த சட்டையினை படம் என்று வழங்கினர்.

படம் புகு மிலேச்சரையும் (முல்லை. 66) படம் புக்க வம்பலரையும் (பெரும். 69) சங்க காலத்தில் காண்கின்றோம். பின்னர்,

---

40. புதிவதியன்ற மெழுகு செய்படமிசை......
முரண்மிகு சிறப்பிற் செல்வனோடு நிலைஇய
—நெடுநல். 159-62.

வண்ணங் கொளீஇய நுண்ணூற் பூம்படம்
எழுதுவினைக் கம்மமொடு முழுது முதலளைஇ
—பெருங். 1.42:34-5

உறை என்று சிலப்பதிகாரம் சுட்டுகின்றதே தவிர, சட்டை என்ற பொருளில் இதன் பயிற்சி இல்லை. ஆடையைக் குறிக்கும் பொது வழக்காகத் திகழ்ந்தமையின் படம் என்னும் சட்டையைக் குறிக்கும் நிலை, செல்வாக்கு இழந்து விடக் காண்கின்றோம்.

வடநாட்டார் தொடர்பு தமிழருக்கு அளித்த உடையே கஞ்சுகமாகும். சிலப்பதிகாரத்தில் முதன் முதலாக அமையும் இச்சொல்லாட்சி 12-ஆம் நூற்றாண்டு வரையிலும் தொடர் கின்றது.

கஞ்சுகி மாக்கள், கஞ்சுகி அவரொடு, கஞ்சுகியவர், கஞ்சுகி மாந்தர், காஞ்சுகி முதியர் எனப் பல பெயர்களால் கஞ்சுகம் அணிந்தோர் குறிப்பிடப் படுகின்றனர். உரையாசிரியர் உரைகளும், வடமொழி நூற்குறிப்புகளும் கஞ்சுகம், மேலே அணியும் சட்டை என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.[41]

சிலம்பில் முதன் முதலாகக் காட்டப்படும் கஞ்சுகமாக்கள் வடநாட்டாரே.

சஞ்சயன் முதலாத் தலைக் கீடு பெற்ற
கஞ்சுக முதல்வர் ஈரைஞ்ஞூற்றுவரும் (சிலப். 26:137-8)

வடநாட்டுடன் கஞ்சுகத்திற்குரியத் தொடர்பு இதனாலும் விளக்கம் பெறும்.

கஞ்சுகத்தின் அமைப்பு கம்பன் பாக்களில் தெளிவாகின்றது.

தாழ்ந்து விரிந்த கஞ்சுகம்-கம்ப. 680.

மெய்புகத் துன்னிடு கஞ்சுகத் துகிலர்-கம்ப. ஆரணிய-569.

---

41. Kancuka and Varabana according to the Amarakesa are the body armour. But from the description of the kancuka as worn by the Chieftains it was evident it was a tunic like garment. At one place it is said to have been made from spotted cloth and at another place from cloth of lapis lazuli shade. - Costumes Textiles Cosmetics & Coiffure- Dr. Motichandra, page-61.

The upper garment has been alluded to by the terms uttariya, patta, varabana and Kancuka. - Sachidanand Sahay - page-26.

முற்றும் மூடிய கஞ்சுகன்-கம்ப. 6926.

இவை, கஞ்சுகம் முதலில் சட்டைபோன்றும் பின்னர் தளர்ந்த அங்கிபோன்றும் அமைந்திருக்கக் கூடும் என்ற எண்ணங் களைத் தருகின்றன. இதற்கு ஏற்றாற்போன்று பிற எண்ணங் களும் உள.[42]

கஞ்சுகத்தை வடநாட்டில் ஆடவரும் மகளிரும் அணிந் தனர்.[43] ஆயின் தமிழகத்தில் ஆடவரிலும் ஒரு சிலரே அணிந்த னர். எனவே, இதன் அமைப்பு முறையிலும் மாறுபாடுகள் இருக்க வாய்ப்புண்டு. சூளாமணியில் 'கஞ்சுகமுகத்த' (1796) என்று மகளிர் அணிந்ததாகக் காட்டப்படினும், விளக்கமின்மை யாலும், பிற சான்றுகள் மகளிர் அணிந்தமையைத் தெரிவிக் காமையாலும் இவ்வெண்ணம் தெளிவுறவில்லை.

பெருங்கதையில் தோற்றம் பெறுவது குப்பாயம் என்னும் சொல். மெய்ப்பை, படம், கஞ்சுகம் போன்ற பிற சொற்கள் பண்டுதொட்டே சட்டையைக் குறித்து அமையினும் குப்பாயம் போன்று இன்றுவரை செல்வாக்குடன் திகழும் தன்மை அவற்றுக் கில்லை. கேரளாவில் இன்றும் சட்டையைக் குறிக்கக் குப்பாயத் தைப் பயன்படுத்துகின்றனர். எனினும் அதிகமான இலக்கியப் பயிற்சி அமையாமை சுட்டத் தக்கது.

பெருங்கதை வரிக் குப்பாயத்து வார்பொற் கச்சையராகக் காவலரைக் காட்டும் (1:41:378)' வரிகள் போட்ட துணியால்

---

42. Kancuka was something like coat reaching down to the ankles and similar to the tunics of the Gupta Kings. Indian Costume Coiffure and Ornaments - Sachidanand Sahay, page-25.

43. The Bhikkhunis also seem to have been allowed to use Kancuka (Bodice) - Costumes Textiles Cosmetics & Coif - fure, Dr. Motichandra - page-13.

Kancuka - It was an unsewn garment three and a half hands in length and one hand in width. This piece was firmly tied on both sides of the waist. It also covered the firm breasts whose centours were brought into preminence by tight garments - Dr. Moti Chandra, page-71.

அமைந்த சட்டையாக இங்கு இது அமைகின்றது. திருத்தக்க தேவர்,

பதுமுகன் பரவை மார்பன் நெய்க்கிழிப்பயிலச் சேர்த்தி
நுதிமயிர்த் துகிற் குப்பாயம் புகுகென நூக்கினானே
சீவக. 678.

என்ற பாடலில் புதுமையானதொரு சட்டையினைக் காட்டுவார். இதற்கு உரை எழுதப்போந்த நச்சினார்க்கினியர், 'மருத்துவன் தான் பதுமுகன் மார்பிலே கிழியைச் சேர்த்தி, காற்று படாதபடி உள்ளே சீலையடைசின எலிமயிர்ப் படாத்தாற் செய்த சட்டையிலே புகுக என்று கூறிப் பரிகரித்தான் என்க' என்று நவில்கின்றார். மருத்துவ முறையிலும் சட்டையினை அமைத்தனர் தமிழர் என்பது இங்கே விளக்க முறுகின்றது.

பின்னர் சட்டை என்று குறிப்பிடும் வழக்குத் தொடங்கி விடக் காண்கின்றோம் (சீவக. 678-நச்சி-உரை). இன்று சட்டையுடன் உடுப்பு, சொக்காய், ஷர்ட் போன்ற சொற்களையும் தமிழர் பயன்படுத்துகின்றனர்.

## 22. உத்தரீயம்

மேலாடையின்றி சபை புகுந்தால் மதிக்கமாட்டார் மேதினியோர் என்ற எண்ணமும் மேலாடையைப் பற்றிய தமிழன் உணர்வைப் புலப்படுத்தும். தமிழர் ஆடை வரலாறும் இக் கருத்தினையே உறுதிப்படுத்துகின்றது.

உயர்ந்தோர் மேலாடை அணிந்தும், தாழ்நிலை மாந்தர் மேலாடை அணியாமலும் இருந்திருக்கின்றனர். சோழர் காலத்தில் 'குயவர்கள் ஒரு மேலாடை அணிந்துகொள்ளலாம்' என்ற தகுதி உயர்வு விதியும் சமுதாய மதிப்பிற்குரிய இதன் பங்கினைப் பறைசாற்ற வல்லது. ஆடவர் இவ்வுணர்வு காரணமாக இதனை அணிய மகளிர் நம்பிக்கை (சீவக. 353), அழகு கருதி இதனை ஏற்கின்றனர்.

மேலாடையினைக் குறிக்கத் தமிழர் உத்தரீயம், பட்டம், மீக்கோள், வடகம், உத்தரியம், உத்தராசங்கம், மேலாப்பு, ஏகாயம் போன்ற பல சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

உத்தரீயம் என்னும் சொல் கலித்தொகையுள் சுட்டப்படுகின்றது. இது வடமொழிச் சொல் என்பதனை இச்சொல் பற்றிய அறிஞர் எண்ணங்கள் தெளிவாக்குகின்றன.[44] உத்தரம்-மேற்பகுதி என்ற வடமொழிப் பொருளும், மேற்பகுதியில் அணிந்தமையின் இப்பெயர் பெற்றிருக்கக் கூடும் என்பதனை விளக்க வல்லது.[45] இச்சொல் கம்பன் காவியத்தில் மிகுதியான பயிற்சி பெறுகின்றது. திரிபு அடைந்து உத்தரியம், உத்தராசங்கம் என்றும் இவை வழங்கப்படக் காணலாம் (சுந்தர. 41, பால. 832).

'உடையும் ஒலியலும் செய்யை' என்னும் பரிபாடல் (19:97-98) சுட்டும் ஒலியலை மேலாடை என்றுரைப்பர். உரையாசிரியர்கள் தானை (மது.435) துகில் (நெடு. 181) தூசு (சீவக. 1302) போன்ற பிற உடைகளுக்கும், ஒலியல் என்று மேலாடை என்னும் பொருளை உரைப்பர். மேலும் கோயில் ஒழுகில், ஒலியல் என்ற ஆடை சிறந்ததாகச் சொல்லப்படுகிறது என்ற கருத்தையும் காண்கின்றோம்.[46] பிற்கால இலக்கியங்களில் அதிகப் பயிற்சி பெறாமையான், இதனைப் பற்றிய விளக்கத்தை அறியக் கூடவில்லை.

பட்டம் என்ற சொல் ஐந்திணை எழுபதில் (மரு. 41) இடம் பெறுகின்றது. கடாஅக் களிற்றில் மேல் கட்படாம் மாதர் படாஅ முலை மேல் துகில் என (குறள். 1087) மாதர் துகிலுக்கு ஒப்புமையான படாத்தின் திரிந்த தன்மையும் அணியும் விதத்திலுள்ள ஒற்றுமையும் இச்சொல்லுக்குரிய காரணமாகலாம். யானையின் முகப் படாத்தினை நெற்றிப்பட்டம் என்று கூறும் வழக்கும் இதனோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

---

44. Indian Costume Coiffure and Ornament - Sachidanand Sahay, page-15.

45. uttariya - upper or outer garment - Uttariyam (KLT. 96; 13), reins of the horses.

(Uttara - upper, (higher) Phalaka - 'plank' uttara-p-palakai (CAM. 3:103) 'The cross beam placed on the pillars of the state'

—Indo-Aryan Loan words in Old Tamil - S. Vaidyanathan, page-56.

46. தமிழ் இலகியத்தில் ஆடை அணிகலன்கள் பி.எல். சாமி, செந்தமிழ்ச் செல்வி நவம். 1977,

பெருங்கதை மீக்கோள் என்றும் (2.15:126), வடகம் என்றும் (1:53:145) மேலாடையைக் குறிக்கின்றது. இன்று மேலாப்பு, மேலாக்கு, மேலாடை என்ற வழக்குகள் உள்ளன. மேலாடையின் பின் அமையும் பகுதி முன்னால் வரும் தன்மை முந்தானை, முந்தாணி என்ற பெயர்களையும் இதற்களித்துள்ளது.

சிந்தாமணியிலும் வடகம் சுட்டப்படுகின்றது (462).

வடகத்தொடு உடுத்த தூசும் மாசுஇல் நீர் நனைப்ப-

கம்ப. 945.

எனக் கம்பனும் காட்டுகின்றான். வடகத்தைத் துகில் வகையுள் ஒன்றாகக் காட்டுவார் அடியார்க்கு நல்லார் (சிலப். 14:108). எனவே துணியின் வகையாகிய வடகத்தின் சிறப்புக்கருதி இதனை மேலாடைக்குப் பயன்படுத்தியிருப்பர் என எண்ணத் தோன்றுகின்றது. இன்று இவ்வழக்கு இல்லை. நச்சினார்க்கினியர் தம் உரையில் வடகத்தினை, அத்தவாளம்; உடைவிசேடம் (சீவக. 462) என்பர்.

இப்பல சொற்களிலும் இன்றும் பயிற்சியில் நிலைத்திருத்தல் உத்தரியத்திற்கே உரியது. அந்தணர், சோமன் உத்தரீயம் என்று வேட்டியையும் மேலாடையையும் சுட்டுகின்றனர். தவிர நேரியல், உறுமால், அங்கவஸ்திரம், மேல் துண்டு என ஆடவரின் மேலாடையினையும், முந்தானை, முந்தாணி, மேல்ச்சீலை, போன்ற சொற்கள் பெண்டிர் மேலாடையினையும் குறித்து வழங்குகின்றன. அதிகப் பயன்பாடு காரணமாக ஆடவர் மகளிர் மேலாடை தனித்த பெயர்களால் இன்று சுட்டப்படுகின்றது.

இவை பொது நிலையில் மேலாடையைக் குறிக்க வழங்கின எனினும் இவற்றுள்ளும் வேறுபாடுகள் இருந்திருக்கவேண்டும். சான்றாக நேரியல், உறுமால் இரண்டையும் நோக்கலாம். இவை பொருளால் ஒன்றுபடினும் அளவு வேறுபட்டனவாக அமைவன நீளம் அகலம் வேறுபட்டு இருத்தல் நேரியல் எனப்படும். நீளம் அகலம் வேறுபட்டு இருத்தல் நேரியல் எனப்படும். நீளம் அகலம் ஒரே அளவாயிருத்தலை உறுமால் என்பர்.

## 23. போர்வை

போர்வை, படாம், கம்பலம் என்ற சொற்கள் தமிழரால் போர்வையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டன. சங்கத் தமிழர்

போர்வை எனும் பொருளில் பயன்படுத்தியது 'படாம்' எனினும் பின்னர் 'போர்வை'யே பெரும்செல்வாக்குப் பெறுகின்றது. இன்றும் இந்நிலையே நீடிக்கின்றது.

படர்ந்து இருத்தல் காரணமாகப் பெயர் பெற்றது படாம். உடாஅ, போராஅ என்பதறிந்தும் படாத்தினை மஞ்ஞைக்கு ஈயும் தன்மையில், சங்கப் புலவர் படாம் பற்றிய எண்ணத்தினை நல்குகின்றார். பின்னைய இலக்கியங்கள் போர்த்தல் என்ற பொருளில் இதனைச் சுட்டினாலும், யானையின் முகபடாம் (குறள்-1087, சீவக. 182) விரிப்பு (பெருங். 1.47:179) என்பன வற்றைச் சுட்டப் பயன்படுத்துகின்றனரே தவிர, மக்கள் போர்த்தியமையைக் குறிக்கப் பயன்படுத்தவில்லை.

படாம் என்ற சொல், பாவாடை என்று வழங்கிய நிலையும் பரவிய ஆடை என்ற இதன் பொருளையுணர்த்த வல்லது.

விலை வரம்பறிதலில்லாத வெண்டுகில் அடுத்து என சிந்தாமணி (617) படாம் விரித்தமையைப் பேசும். பெரிய புராணத்தில் பாவாடை என்றே இது சுட்டப்படுகின்றது. பரந்த பாவாடைமீது முன்னிழிந்து அருளி வந்தார் (திருஞான. 1226).

கலிங்கத்துப் பரணியிலும் பாவாடை பற்றிய எண்ணத்தைக் காண்கின்றோம் (561).

இன்றும் யானையின் முகபடாத்தில் இச்சொல் வழக்கு மிகுதியாக அமைய, கரும்படாம், கரும்படம் எனப் போர்வையைக் குறிக்கும் மரபும் ஒருசில இடங்களில் தென்படு கின்றது (கன்னியாகுமரி மாவட்டம்). பாவாடை நடைப் படாத் துடன் பெண்டிர் இடையாடையினையும் குறிக்கின்ற நிலை கண் கூடு.

மயிரினால் உருவாக்கப்பட்ட ஆடைகள அனைத்தையும் 'கம்பளா' என, பௌத்த இலக்கியங்கள் சுட்ட[47], தமிழர்

47. For woolen clothes of all varieties the term Kambala is used in Buddhist literature.
— Costume Textiles Cosmetics & Coiffure - Dr. Moti - chandra, page-24.

போர்வைகளுள் மயிரினால் ஆனவற்றை மட்டும் கம்பலம் என்று வழங்கியிருக்கின்றனர். மயிர் ஆடைபற்றிய எண்ணங்கள் பல இருப்பினும், அவை தனித்த பெயர்களால் சுட்டப்படவில்லை என்பதும், கம்பளம் என்று வடநாட்டார் சுட்டும் தன்மையும் இது வடசொல்லாக இருக்கக் கூடும் என்ற எண்ணத்தைத் தருவன. இன்று கம்பளம், கம்பளி என்று வழங்குகின்றது.

போர்த்தலால் பெயர் பெற்றது போர்வை. முதலில் தோற் போர்வையையும் (புறம். 387, 399), பின்னர் துணியினைக் குறிக் கவும் வழங்குகின்றது. சான்றாக, முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்-(பழமொழி. 74) 'அந்துகிற் போர்வை அணிபெற தைஇ' (கலித். குறிஞ். 65) போன்ற பல எண்ணங் களைக் காண்கின்றோம்.

பலவகைத் துணிகளினாலும் போர்வை உருப்பெற்றது எனினும் மயிர்ப்போர்வை மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. மயிர் ஆடை பற்றிய எண்ணத்தினைச் சிலம்பு சுட்ட (5:16) பெருங்கதை, சிந்தாமணி இரண்டும் இதன் பெருஞ்சிறப்புகளை இயம்புகின்றன.

எலிப்பூம் போர்வை எனவும் (பெருங். 1.47:179) எலிமயிர்க் கம்பலம் (சீவக. 2686) என்றும் சுட்டப்படும் இவை, மயிர்ப்படாத் தினை விடவும் சிறந்தது என்பதும் புலனாகின்றது.

ஒடுச் சொல் உயர்பின் வழித்தே என்னும் இலக்கண நிலை யில் நின்று இதனை உணர்த்துகின்றனர் புலவர்.

> எலிமயிர்ப் போர்வையொடு மயிர்ப்படாம் விரித்து
>
> பெருங். 1.47:179
>
> மயிரெலியின் போர்வையொடு எம்மன்னன் விடுத்தானே
>
> -சீவக. 1874.

மேலும்,

> எங்குமில்லன எலிமயிர்த் தொழில்
> பொங்கு பூம்புகைப் போர்வை-சீவக. 2680.
> பனிமயிர்க் குளிர்ப்பன பஞ்சின் மெல்லிய
> கனிமயிர்க் குளிர்ப்பன கண்கொளாதனவாம்-சீவக. 2471.

என்ற புலவர் விளக்கங்களும் இதன் தனித்துவத்தை எடுத்து இயம்புவன.

இன்று போர்வையுடன் புதைப்பு என்ற சொல் வழக்கும் தென்தமிழ் நாட்டில் உள்ளது (கன்னியாகுமரி மாவட்டம்). 'புதைத்தல் - போர்த்தல்; மலைநாட்டு வழக்கு' என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். 5:4). மலையாள நாட்டில் இன்று இவ்வழக்குண்மை,, சார்பு காரணமாகத் தமிழராலும் இது பயன் படுத்தப்படுகிறது என்பதை விளக்க வல்லது.

அடியார்க்கு நல்லார் துகில் வகையுள் உரைக்கும் செம்பொத்தி, வெம்பொத்தி, பணிப்பொத்தி என்ற ஆடைகள் பொத்திப் படுக்கும் போர்வைகள் என்பதும், வெண்மைநிறம், சென்னிறம், வேலைப்பாடுகள் அமைந்தமை காரணமாக இவை பெயர் பெற்றிருக்கலாம் என்பதும் அறிஞர் ஒருவரின் எண்ணமாகக் காண்கின்றோம்.[48] போர்த்தி என்ற சொல்லின் திரிபாகப் பொத்தி அமைந்திருக்கக் கூடும் என்னும் எண்ணம் இவ் அறிஞர் கருத்தை உறுதிப்படுத்துவதாகும்.

இச்சொற்களைத் தவிர, நீலகேசியில் அமையும் 'பெரிய பிரச்சையினாய்' (497) என்பதில் உள்ள பிரச்சை என்ற சொல்லுக்கு உரையாசிரியர் போர்வை என விளக்கம் அளிப்பார். ஆனால் பிற விளக்கங்கள் இதனைப்பற்றியின்மையால். தெளிவாக இச்சொல் பற்றி அறியக் கூடவில்லை.

## 24. கவசம்

காப்புக்காக அணியும் உடை கவசம். காலப்போக்கில் பலசொற்க்ள் கவசம் குறித்து முகிழ்த்தபோதும் தன் செல்வாக் கினின்றும் பெயர்ச்சியுறாதது இச் சொல். சங்கப் பாவில், புலி நிறக் கவசம், கச்சம், மெய்புதை அரணம் என்ற சொற்களும் சிந்தாமணியில் புலிநிறப் போர்வை, கருவி, கவசம், ஆசு, பூண், சாலிகை என்ற பெயர்களும், கம்பனில், கவசம், சாலிகையுடன் கோதை, புட்டில் என்பனவும் இதனைக் குறித்தமைகின்றன. உரையாசிரியர் உரை சந்நாகம் என்னுமொரு சொல்லினையும் நவிலும் (சீவக. 2236).

புலிந்றக் கவசததிற்குப் புலியின் தோலாலாகிய கவசம் என்ற பொருளைக் காண்கின்றபொழுது (புறம். 13) முதலில் தோல்

48. தமிழ் இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள் - பி. எல். சாமி, செந்தமிழ்ச்செல்வி, அக்டோபர் 1977.

கொண்டு கவசம் அமைந்திருக்கக் கூடும் என்ற உணர்வினைப் பெறுகின்றோம். பின்னர் சிந்தாமணி (266) புலிப்பொறிப் போர்வையைத் தரல் உலோகத்தால் ஆன கவசத்தின்மேல் புலித் தோலினை மரபு கருதி அல்லது பகைவர்க்கு அச்சம் தரும் இயல்புகருதி அணிவித்திருக்கக் கூடும் என்ற எண்ணத்திற்கு ஏதுவாகின்றது. இறுக்கமாகக் கட்டப்பட்ட கச்சு, கச்சை போன்று, காலின் பாதுகாப்பினைக் கருதி அணிந்த கவசத்தினைக் கச்சம் என்றனர் (மதுரைக். 436). மெய்புதை அரணம் (பதி. 52:6) என்னும் அரணம் குறிக்கும் சொல்லினைக் காண, அரணாகப் பயன்பட்டமையின் இப்பெயர் பெற்றமை விளங்குகின்றது. உட்கட்டு என வழங்கப்படும் கோவணமும் (திருமந்திரம் — 1635) அரணத்துடன் தொடர்புடையதாகும். இடையுடையாகப் பயன்படினும் பாதுகாப்பு உணர்வு காரணமாக இதுவும் அரணம் என்ற சொல்வழக்கினைப் பெறுகின்றது. 'தலையாய காப்பு' - கோ அரணம் என்றாகி, மக்கள் பேச்சு எளிமையில் கோவணமாகத் திரிந்துவிட்டது. பெரியபுராணம் இச் சொல்லினை மிகுதியாகக் கையாளுகின்றது.

கீள் எனும் உடையினையும் இதனோடு இணைத்துச் சுட்டுவர் (பெரிய. அமர்நீதி. 3). எனவே இதுவும் கோவணம் போன்றதொரு உடையாக இருக்கலாம். கீழ் உடை என்னும் சொல்லே கீள் உடை என மருவியிருக்கலாம் என்னும் நிலையில் இக்கருத்து உறுதி பெறும்.

மெய்ம்மறை என்ற சொல்லும் காப்பு, கவசம் என்ற பொருளில் சங்க இலக்கியப் பயிற்சி பெறுகின்றது (பதி. 14:12).

கருவியால் செய்யப்பட்டமை காரணமாக, கருவி, பூண் என்ற பெயர்களையும் கவசம் பெறுகின்றது (சீவக. 2214, 2265). சாலிகை (சீவக. 2217) என்ற சொல் விளக்கம் புலப்படவில்லை.

கால்கவசத்தைக் கச்சம் என்று சங்க இலக்கியம் சுட்ட, ஆசு எனச் சிந்தாமணி (2236) இதனைக் காட்டும்.

கம்பனில், கோதை (8558), புட்டில் (9791) என்பன கைக் கவசமாக, விரலுறையாகக் காட்டப்படுகின்றன.

சீவக சிந்தாமணியில், நச்சினார்க்கினியர் 'சந்நாகம்' (2235) என்று ஆசிற்குப் பொருள் உரைப்பர். இச்சொல் வடமொழிச் சொல் ஆகும்.[49]

---

49. வட சொற்றமிழ் அகரவரிசை - நீலாம்பிகை அம்மையார், பக்கம். 173.

புலிநிறக் கவசம் (புறம். 13), பொன்னணி கவசம் (சீவக 799), ஆடகக் கவசம் (கம்ப. ஆரணி. 480) கற்றை அம்சுடர்க் கவசம் (கம்ப. 7385), ஒளிகிளர் கவசம் (கம்ப. 9274) போன்ற கவசம் பற்றிய எண்ணங்கள் இதன் உருவாக்க நிலையை உரைத்து நிற்கின்றன.

போரைப் பொழுதுபோக்காகக் கொண்டு திகழ்ந்தவர் தமிழர். விளையாட்டு தங்கள் உயிருக்கு வினையாகிவிடக் கூடாது என்ற எண்ணமும் அவர்களிடம் இருந்தது. எனவேதான் தங்கள் உயிரைப் பாதுகாத்துக்கொள்ள, அதற்கு ஏற்றாற்போன்று உடை அணிந்து செல்கின்றனர். இவற்றுள் முதலிடம் பெறுவதே கவசம். மக்கள் சிந்தனையில் மிகுந்த இடம் பெறும் தன்மையால், காலந்தோறும் பெற்ற வளர்ச்சியினையும் இக்கவசம் பற்றிய வரலாறு தரும்.

## 25. அரத்தம்

சிவந்த நிறமானது எனத் தன் பெயரிலேயே சொல் விளக்கத்தினைக் கொண்ட ஆடையாகிய இது பதினெண்கீழ்க் கணக்கில் தோற்றம் பெறுகின்றது.

'அரத்தம் உடீஇ அணிபழுப்பப்பூசிப்' (திணை. மாலை. நூற். மரு. 144) பரத்தை மனை நோக்கிச் சேடியை அனுப்பும் நிலையில் நீதிநூல் இதனைக் காட்டும். குறிப்புமொழியாகப் பயன்படும் இவ்வாடை, கார்கால மகளிர் உடுத்தியதாகச் சிலப்பதிகாரத்தில் சுட்டப்படுகின்றது. ஆடவரின் ஆடையும் அரத்த ஆடையாக அமையும் (சிலப். 22:46). பெருங்கதையிலும் அரத்தம் பற்றிய எண்ணம் உண்டு (1.42:208). அடியார்க்கு நல்லார் உரைக்கும் துகில் வருக்கத்துள்ளும் இது இடம் பெறுகின்றது (14:108).

இவ்வாடை அரத்த நிறமுடைய ஆடை எனப் புலனாகின்றதே தவிரப் பட்டா பருத்தியா என்பது தெளிவுறவில்லை. அரத்தப்பட்டு என்னுமிடத்தில் பட்டு என்பது விளக்கம் பெறுகின்றது. அரத்தப் பட்டினையே அரத்தம் எனச் சுருக்கி அழைத்திருக்கவும் வாய்ப்புண்டு, இன்று அரத்தம் என்று சுட்டும் தன்மை ஆடைக்கில்லை. இதனைப் போன்று அடியார்க்கு நல்லார் உரைக்கும் கரியல் (14:108) என்ற ஆடையும் கறுத்த நிறத்தால் பெயர் பெற்றிருக்கலாம்.

## 26. ஈர்ங்கட்டு

கார் நாற்பது முதலில் உணர்த்தும் இவ்வுடை கார் காலத்தில் காவலர் உடுத்தியதாக அமைகின்றது.

இளையரும் ஈர்ங்கட்டு அயரவுளை யணிந்து
புல்லுண் கலிமாவும் பூட்டிய நல்லார்
இளநலம் போலக் கவினி வளமுடையார்
ஆக்கம் போற் பூத்தன காடு (22)

வேறு குறிப்புக்கள் இதனைக் குறித்துக் காணக் கூடவில்லை.

இச்சொல்லிற்கு ஈரத்திற்கு ஏற்ற கட்டு என்று பொருள் கூறுவர்.[50] குளிர் காலத்திற்குரிய உடை என்பது அகராதியியம்பும் பொருள்.[51] எனவே குளிருக்கு இறுக்கமாகக் கட்டுதல் காப்பானது என்ற உணர்வு கொண்டு, உடம்போடு நெருக்கமாகக் கட்டப்பட்ட உடையினை இது குறித்திருக்கலாம்.

## 27. கோடி

மடியினைப் போன்று, புத்தாடையைக் குறிக்கத் தமிழர் கொண்ட மற்றுமொரு சொல்லே கோடி ஆகும். நீதிநூற் காலம் முதல் பயிற்சி பெறும் தன்மையுடையது (ஆசாரக். 44).
சங்க காலத்தில் கோடி என்ற சொல் வழக்குக் காணப்படினும் ஆடை அல்லது புத்தாடை என்ற பொருள் இல்லை.

இன்று கோடியாடைக்கு இருக்கும் மதிப்பு அன்றே உருவான ஒன்று. இன்பச் சடங்கில் பங்கு கொள்ளும் கோடி இறப்புச் சடங்கு வரை தொட்ருகின்றது.

'மந்திரக் கோடியுடுத்தி' (நாச். திரு. 6:3) என மணத்தில் இடம் பெறும் கோடியின் தன்மை சிறந்த மேன்மை பொருந்திய உடையினைக் காட்டும். பஞ்சும் துகிலும் பூம்பட்டும் என (சூளா. 1438) மன்னன் மரணச் சடங்கில் இடம் பெறுகின்றதைக் காண, தகுதியைப் பொறுத்து, கோடி இச்சடங்கில் வேறுபடுகின்றதைக் காணலாம். திருமந்திரம் பொதுநிலையில் இறப்புச் சடங்கினைச் சொல்லும்போது, 'பருக்கோடி மூடிப் பலரழ' (189) என இயம்பும் தன்மை ஏற்புடைத்தாகும். ஈண்டு

---

50. சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள் - பி. எல். சாமி, செந்தமிழ்ச் செல்வி, ஜூன் 1978.
51. Tamil Lexicon, Vol. I, part-I.

பருக்கோடி-பருத்த இழைகளாலான ஆடை என்ற பொருளில் சாதாரண ஆடையாகிய கோடியே சுட்டப்படுகிறது.

இன்று மரணமடைந்தவர்க்கு எடுத்துப் போடும் ஆடையுடன், இறந்தவர்களின் நெருங்கிய உறவினர்க்கு எடுத்துக் கொடுக்கும் ஆடையினையும் கோடி எடுத்துப்போடல் என்றுரைப்பர்.

## 28. கூறை

கூறுபடுத்துதல் காரணமாகப் பெற்ற பெயர் கூறை. மலையாளத்திலும் உடையைக் குறிக்கும் சொல்லாகத் திகழ்கின்றது.[52]

இன்று கூறைச்சேலை, கூறைப்புடவை என்று மணமகள் தாலிகட்டும் சடங்கில் உடுத்தும் உடையினைக் குறித்து நிற்கின்றது இது. அதிகமான இலக்கியப் பயிற்சி பெறவில்லையாயினும், சமுதாயத்தில் இதனைப் பற்றிய உணர்வு இருந்து கொண்டே வந்துள்ளது என்பதும், மாந்தர் எண்ணத்தில் சிறந்ததொரு இடத்தினைப் பெற்றுள்ளது என்பதும் இதனால் தெளிவு படுகின்றது.

இம்மாற்றத்திற்குரிய காரணமாகச் சில எண்ணங்கள் எழுகின்றன. இன்றைய கொரநாடு, கூறைநாடு என்பதனின்றும் மருவியது என்பது அறிஞர் எண்ணம்.[53] இதற்கு ஏற்றாற் போன்று கூறைநாடு எனச் சோழர் காலத்திலேயே வழங்கி

---

52. Ta : Kurai - Cloth, Clothes.
Ma: Kura-a set of clothes, thick cloth.
- A Dravidian Etymological Dictionary, No. 1603.

53. கூறை நெய்யும் தொழில் மிகுதியாக நடைபெற்ற நாடு. இப்பொழுது ஒரு சிற்றூராகக் கொரநாடு என்னும் பெயர் கொண்டு மாயவரத்தின் ஒருசார் அமைந்துள்ளது.
- ஊரும் பேரும் - ந. சஞ்சீவி, பக். 60, தையற்கலை சுந்தரம் வெள்ளி விழா மலர்.
Koranad is a curruption of Kurai nadu (கூறைநாடு) a place where cloth is manufactured.
- Words and their Significance - Dr. R, P. Sethupillai, p. 14.

யிருக்கக் காண்கின்றோம்.[54] ஆகவே, அன்று கூறைநாடு உயர்ந்த ஆடைகளைத் தயாரிப்பதில் சிறந்திருக்கவேண்டும். அங்கிருந்து சிறப்பு நாட்களுக்கென்று, சிறப்பாக மணநாட்களுக்கு உடைகளைப் பெறல் பெருமையாகக் கருதப்பட்டிருக்கலாம். காலப் போக்கில் எப்புடைவையாயினும் மணப்பெண்ணின் உடையினைக் கூறைப்புடைவை என்னும் மரபு உருவாகியிருக்கலாம் என்ற எண்ணங்களே அவை. கொரநாடு என்னும் இடம் பற்றிய உணர்வும், கூறைச்சேலைக்கு இன்று இருக்கக் கூடிய செல்வாக்குமே இவ்வெண்ணங்கட்கு அடிப்படையே தவிர, தனிப்பட்ட ஆதாரங்கள் எதுவும் இல்லை.

## 29. புடைவை

அடுத்தலால் ஆடை பெயர் பெற்றது போன்று, பக்கத்தில் வைக்கப்படுதலால் (புடை+வை) புடைவை எனப் பெயர் பெற்றிருக்கக் கூடும். புடைவை பற்றிய குறிப்புகள் உரையாசிரியர்களின் உரையிலும், சாசனங்கள் வழியாகவுந்தான் தெரிய வருகின்றதே தவிர இலக்கியத்தில் அதிக இடம்பெற்றதாகத் தெரியவில்லை.

இன்னா நாற்பது 'பாத்தில் புடைவையுடை யின்னா (2) என்று பகுப்பில்லாத உடையுடுத்தல் துன்பத்தைத் தரும் என்று இயம்புகின்றது. இரண்டு ஆடை உடுத்தல் வேண்டும். ஓர் ஆடை கூடாது என்னும் நிலையில் ஈண்டுப் புடைவை, ஆடை என்ற பொதுப்பொருளைத் தருகின்றது.

திருநாவுக்கரசர்,

மெய்தருவான் நெறியடைவார் வெண்புடைவை மெய்
சூழ்ந்து சென்றடைந்தார் (61)

எனப் பெரிய புராணம் காட்டும். இவண் போர்வை என்னும் பொருள் அமைகின்றது.

உரையாசிரியர்கள் உடை (புறம். 136) கலிங்கம் (மது. 513) கோடி (சிலப் 11:45) போன்றவற்றிற்குப் புடைவை எனப் பொருள் உரைப்பர்.

---

54. "சோழநாட்டின் ஒரு பகுதியாக இருந்த கூறைநாடு கீர்த்தி மிகு பருத்தி யாடைகளைத் தயாரித்தது. அதனால் கூறை நாட்டுச் சேலைகள் சோழப் பேரரசு முழுவதும் பெரிதும் தேவைப்பட்டன.
- முதலாம் இராசராசச் சோழன், க. த. திருநாவுக்கரசு, பக். 241.

தந்தி வர்மன் சாசனம், 'காணவிலையின் புடவை'[55] என்றும், பராந்தகன் கல்வெட்டு, 'சமைப்பானுக்கு நாடோறும் நெல் ஐநாழியும் ஆறுமாதங்கட்கு ஒருமுறை புடவையும் கொடுக்குமாறு திட்டம் செய்து இருந்தான்'[56] என்றும் குறிப்பிடுகின்றன.

இவற்றை நோக்கின் புடவை என்பது இதன் பொருளுக்கிணங்க, ஆண்பெண் இருவராலும் உடுத்தப்பட்ட உடையினைக் குறிக்கும் பொதுச்சொல்லாகும் என்பது தெளிவுறுகின்றது. இன்று, பெண்டிர் உடுத்தும் சேலையைக் குறித்து நின்று பொதுப் பெயர் நிலையினின்றும் சிறப்புப் பெயர் நிலைக்கு மாறிவிட்டதெனினும், மரபுத் தொடர்ச்சியும் உண்டு[57] என அறிகின்றோம். மேலும் புடைவை என்ற சொல் மக்கள் பேச்சு எளிமையில் புடவை என்றாகி விட்டதனை, கல்வெட்டுக்களிலேயே காண்கின்றோம்.

## 30. வட்டுடை

மணிமேகலையில் தோற்றம் பெறும் வட்டுடை, பெருங்கதை, சிந்தாமணியில் தொடர்ந்து காணப்படும் ஒன்று. இது முழந்தாள் அளவாக உடுக்கும் உடை விசேடம் என்பது உரையாசிரியர் தரும் விளக்கம்.

மணிமேகலை பேடியின் உடையாக இதனைக் காட்டுகின்றது (3:122). பெருங்கதையில்,

வட்டுடைப் பொலிந்த வண்ணக் கலாபமொடு
பட்டுச் சுமந்தசைந்த பரவை அல்குலாள்' (2:4:122-23)

---

55. தென்னிந்தியத் தமிழ் சாசனங்கள் - வ. தங்கையா நாடார், பக்கம். 29.

56. முப்பது கல்வெட்டுக்கள் - வை. சுந்தரேச வாண்டையார், பக்கம். 11.

57. புடவை என்பது ஆண்பாலாருடைக்கும் பெயராய்ப் பண்டு வழங்கிற்று. இவ்வழக்கு இக்காலத்தில் செட்டி நாட்டில் உள்ளதென்பர்.

- தமிழர் ஆடை, டாக்டர் திருமதி. தே. தியாகராசன், தாமரைச் செல்வர் வ. சுப்பையாபிள்ளை பவள விழா மலர், பக்கம். 100.

என வாசவதத்தை காட்டப்படுகின்றாள். வட்டுடை என்ற சிறு துணியினை உள்ளே உடுத்தி அதன் மேலே பட்டினை உடுத்தி யிருக்கும் காட்சியினை இது காட்டுகின்றது.

சிந்தாமணியில் வட்டுடை மருங்குல் சேர்த்தியும், வட்டுடைப் பொலியப் பெற்றும் சீவகன் போருக்குப் புறப்படும் நிலை (468), போர்வீரர் வட்டு உடுத்தியிருத்தல் (2263) ஆகிய தொழில் வசதி கருதி, வட்டுடையினைச் சமருக்கும் உடுத்திச் சென்றனர் என்ற எண்ணத்தைத் தருவன. இதனால் வட்டுடை 'வட்டு' என்று சுட்டப்படும் நிலையும் தெளிவாகும்.

இன்று 'வட்டு' என்பது சிறுதுணியினைக் குறிக்கும் சொல் லாகத் திகழ்கின்றது (தென் ஆற்காடு மாவட்ட வழக்கு). எனவே சிறிய துணியாகிய உடையினை அளவில் குறுகிய தன்மையினால் வட்டுடை என்று அன்று வழங்கியிருக்கின்றனர் என்பது புலப்படு கின்றது.

இன்று மலையாள நாட்டில் நாயர் மகளிர் இடையில் உடுத் தும் உடையுடன் இதனைத் தொடர்புபடுத்தலாம்.[58]

## 31. வங்கச் சாதர்

பெருங்கதை சுட்டும் இவ்வாடையினை இதன் பெயர் கொண்டு, வங்க தேசத்திலிருந்து வந்த ஆடை எனக் கருது கின்றார் உ.வே. சாமிநாதையர் அவர்கள் (1.42:205). நிறங்கிளர் பூந்துகில் நீர்மையினுடீஇ (6.88) என்னும் சிலப்பதிகார அடிக்கு அடியார்க்கு நல்லார் நீலச் சாதருடை என்னும் பொருள் எழுது வார். இவர் பின்னர் துகில் வகையுள் ஒன்றாகக் கருதும் (சிலப். 14:108) சாதர் என்பதும் இதனையே குறித்ததாகக் கருதலாம்.

58. Malabar women have made some advance in the matter of dress. At present a Nair Women ties around the loins tightly a long piece of cloth with one end passing between the legs and tucked back to the waist behind. This reaches below the knees. Another finer cloth is worn over this and it goes down almost below the ankle.
- Social History of Kerala - Vol. II, L A. Krishna Iyer - page-39.

வேறு விளக்கம் இதனைப் பற்றியில்லை. இன்று இப்பெயர் காணக்கூடவில்லை. அடியார்க்கு நல்லார் உரைக்கும் தேவகிரி என்னும் ஆடையும் இதனைப் போன்று இடப்பெயரால் பெயர் பெற்றிருக்கக் கூடும் எனத் தோன்றுகின்றது.

## 32. வட்டம்

'வாலிழை வட்டம்' என்று பெருங்கதை சுட்டும் (1.42:208) இவ்வுடை பற்றிய பிற சான்றுகள் இல்லை. வெள்ளிய நூலிழையால் செய்யப்பட்ட ஆடை என்பது மட்டுமே புலனாகின்றது.

## 33. கோசிகம்

தமிழருக்கு, வடநாட்டாரின் அன்பளிப்பே கோசிகம் என்னும் பட்டாடை. வடமொழியில் கோசிய (Kauseya) என்று அழைக்கப்படும் இவ்வாடை தோன்றிய இடம் குறித்துப் பல எண்ணங்கள் உள.[59]

கோசிக ஆடையைப் பெருங்கதைதான் முதன் முதலில் காட்டுகின்றது.

பைங்கூற் பாதிரிபோது பிரித்தன்ன
அங்கோசிகமும் (1.42:204-5).

அடியார்க்கு நல்லார் துகில் தொகுதியுள் ஒன்றாக இதனைக் குறிப்பிடுவார்.

கோசிக ஆடைபூத்தன பாதிரி (சீவக. 1650)
முறைவிரித்தன்ன முறுக்கிய கோசிக மருங்கு (கம்ப, 9788)

---

59. Kauseya seems to be the true silk obtained from the cocoons spun by the silk-worm feeding on mulbery leaves.
- Costumes Textiles Cosmetics and Coiffure - Dr. Moti - chandra, page-30.

"McGrindle in an interesting note tells us that the first ancient author in Greecian literature who refers to the use of silk in Aristotle. According to him raw silk was brought from the intereior of Asia and manufactured at Kes, is the work Kauseya used for silk in Sanskrit derived from the town of Kes where it was manufactured; perhaps panini who gives special sutra for the formation of Kauseya referes to the town of Kosa and not the cocoons. - Ibid, - page-17.

என வரும் கோசிகத்தின் பயிற்சி, புத்தம் புதுமையாக விளங்கக் கூடிய நிலையில் சிறப்பான தொன்றாக இதனை இயம்புகிறது.

இதனுடன், களிசெய் கோசிகம் என்னும் தொடரும் (சீவக. 1673) கோசிகத்தைப் பேழையில் வைத்துப் பாதுகாத்தனர் (சூளா. 870) என்பதும் இதன் மேன்மையைச் சுட்ட வல்லன. 'கோசிகமொடு' (சூளா. 870) என்றும் இயம்புவதும் இவ்வாடையின் மதிப்பினை உயர்விக்க வல்லது. மேலும் தொல்காப்பிய சொல்லதிகார உரையில் தெய்வச்சிலையார் 'கொல்லவன் பட்டு உளவோ என்றால், கோசிகம் அல்லது இல்லை' (33) என்று காட்டியுள்ளார். எனவே பட்டாடையான கோசிகம், தமிழரால் விரும்பப் பெற்றதொரு ஆடைவகை என்பது தெளிவாகின்றது.

## 34. காம்பு

பெரியாழ்வார் திருமொழி சுட்டும் 'காம்பு' (1.1:8) என்ற ஆடையினைப் பிற இலக்கியங்களில் காணமுடியவில்லை. ஆயின், காம்பு சொலித்தன்ன அறுவை எனச் சங்க இலக்கியத்தில் கண்டோம். எனவே காம்பு போன்ற மிகவும் மென்மையான தொரு உடையினைக் காம்பு என வழங்கியிருக்கலாம். அகராதி இதனை ஆடைக் கரையாக இயம்பும்.[60] பட்டு என்ற எண்ணமும் உண்டு.[61]

## 35. நேத்திரம்

ஆழ்வார் பாசுரம் தலைமுடியைச் சுட்டும் அழகிய ஆடையாக இதனைச் சுட்டுகின்றது.

நன்னெறி பங்கியை அழகிய நேத்திரத்தால் அணிந்து
(பெரி. திரு. 3:4:8)

வடநூலான நளசம்பு, 'நேத்திரம் அழகிய பட்டாடை; நீலநேத்திரமும் காணப்பட்டது; கஞ்சுகத்தை நேத்திராவில் செய்தனர்.

---

60. காம்பு - ஆடைக்கரை - Tamil Lexicon, Vol. II, part-I.
61. 'காம்பு சிறந்த பட்டுத்துணி' – சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள், பி.எல். சாமி, செந்தமிழ்ச் செல்வி, சனவரி, 1978.

மென்மையானதொரு ஆடை என உரைக்கின்றது.[62] திலக மஞ்சரியும் நேத்திராவைப் பற்றி சில எண்ணங்களைத் தரு கின்றது.[63] இக்கருத்துகள் நேத்திரம் என்பது பட்டாடை வகை என்பதை உணர்த்துகின்றன. எனவே வடமொழிச்சொல் என் பதும் தெளிவு பெறுகின்றது.

## 36. நீவி

கம்பராமாயணம் ஆடையைக் குறிக்க வழங்குமொரு சொல் நீவி என்பதாகும் (சுந்தர. 413). வேதகால மக்களின் உள்ளா டையும் 'நீவி' எனப் பெயர் பெற்றதே.[64] எனவே இவ்விரண்டு சொற்களையும் தொடர்பு கொண்டு நோக்குவர் அறிஞர்.

'நெவ்' என்ற தமிழ்ச் சொல்லில் இருந்து கிளைத்ததே 'நீவி' என்ற சொல் என்பதும் ஆடையின் அகன்ற கரையினைக் குறிப் பது இது என்பதும் இதனைப் பற்றிய கருத்துகள்.[65]

---

62. Netra - It is said to have been woven of very fine silk yarn. It was at times blue (Nilanetra). The Nalacampu (Early 10th Century) gives some interesting information about Netra. At one place it is said that Netra for making Kancuka was cut according to the measurements of the body. At another place netrapatta described as a transparent (accha) and white stuff which looked like the waves of the milk ocean (Ksivoda) gathered at the sari knot desirous of the pleasure of touching the thighs and the buttocks are mentioned, Costumes Textiles Cosmetics and Coiffures - Dr. Motichandra, page.122.

63. The Tilakamanjari also refers to different kinds of stuffs. Netra was a kind of silk; a canopy made of spangled netra (Dhantanetra) is mentioned. At a third place it is mentioned that the front border of the tunic made of netra flutte - red revealing the navel and the end of her sari was firmly tucked behind. - page. 117.

64. The Vedic Indian seems to have worn three garments, an under garment (Nivi) ... - Costumes Textiles Cosmetics & Coiffure, Dr. Motichandra, page. 8.

65. The Nivi has been explained by Sarkar as wider border of the cloth. He also gives the origin of the Nivi from the Tamil word 'Nev' to weave.

- Costumes Textiles Cosmetics and Coiffure, Dr. Motichandra, page. 8.

இன்று வடநாட்டு மொழியில் பெண்களின் தோள்மேல் சென்று கீழே விழும் சேலையின் முன்னைப்பகுதியை 'நீவி' என்று வழங்குவர் என்னும் கருத்தும் உண்டு.[66]

சங்க இலக்கியத்தில் 'நீவி' என்ற சொல் காணப்படினும் ஆடை என்ற பொருள் இல்லை. 'அருங்கடி அன்ன காவல் நீவி' (நற். 365) என்னும் இடத்தில் காவலைக் கடந்து என்னும் பொருளில் கடந்து என்ற பொருளைக் காண்கின்றோம். சிந்தாமணியில் 'நீவியிருந்தான்' (1302) எனும்போது வருடியிருந்தான் என்பதைக் குறிக்கின்றது. இப்பொருண்மையே இன்றும் தொடர்கின்றது.

கம்பனில் 'நீவி' ஆடை என்ற பொருளைத் தருகிறது. தோலாடையினைக் குறித்து நிற்கும் தன்மையில் (ஆரணிய. 15) ஆடையின் பெயராக அமைகிறது. 'நீவியின் தழைபட உடுத்த' (சுந்தர. 413) என்ற நிலையில் கொய்சகம் வைத்து உடுத்திய ஆடையைக் காணலாம்.

இவற்றை நோக்க, 'நீவி' என்ற சொல் 'கடந்தது' என்ற பொருளில் ஆடைக்குரிய சொல்லாகியிருக்கலாம் எனத் தோன்று கிறது. வடமொழியில் உள்ளாடையை முதலில் குறித்தும் (மேலாடையைக் கடந்து நிற்றல்) பின்னர் தோளினைக் கடந்து நிற்கும் முந்தானையைக் குறித்தும் அமையும் நிலை இதனை உறுதிப்படுத்தும். வடநாட்டுத் தொடர்பு காரணமாக,[67] கம்பர் 'நீவியின் தழை பட உடுத்தலை எண்ணி', தமிழர் உடுத்திய ஆடையையும் நீவி என்று வழங்கியிருக்கக் கூடும். இன்று இப் பெயர் ஆடையைச் சுட்டல் இல்லை.

## 37. கலை

ஆடையைக் குறிக்கும் இச்சொல்லின் பயிற்சி, பிற்கால இலக்கியங்களில் அமைகிறது. கலை என்ற சொல் பற்றிய உணர்வு ஆதியிலேயே இருப்பினும் (சிலப். 17:25) ஆடை என்னும் பொருள் கம்பனில்தான் விளக்கமுறுகின்றது.

---

66. சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள் - பி. எல். சாமி' செந்தமிழ்ச் செல்வி, ஜூன், 1978.

67. From the nivi having the praghata, the loose and long. unwoven fringe with tassels the other end was plain and decorated with the tusa chaff .........

- Costume Textiles Cosmetics & Coiffure, Dr. Motichandra, page-8.

சூளாமணியும் இதனைக் 'காலுமொரொன்றுடையர் கலையிலர்' (1975) எனத் தெளிவாகக் காட்டும். அணிகலனையும் குறித்து இச்சொல்லைப் பயன்படுத்தியதே இதன் பொருளைத் தெளிவாக அறிய இயலாமைக்குரிய இடர்ப்பாடாகும்.

அடியார்க்கு நல்லார் உரைக்கும் துகில் வகையுள் பல விளக்கம் இல்லாதன. சிலவற்றினை முன்னைய ஆடை வகைகளுள் கண்டோம். ஒருசிலவற்றை இவண் நோக்கலாம்.

## 1. இரட்டு

அடியார்க்கு நல்லார் உரைக்கும் துகிற் தொகுதியுள் ஒன்று இரட்டு (14:108). இலக்கியச் சான்றுகள் கிடைக்காவிடினும் இன்றையநிலை கொண்டு ஓரளவுக்கு இதனைப் புரிய முடிகின்றது.

இரட்டை இழைப் பாவு ஊடையில் ஆடை நெய்தல் ஆடை நெசவில் ஒரு வகை. பட்டு, பருத்தி இரண்டும் இரட்டை இழையில் நெய்யப்படினும் பட்டே இதில் சிறப்புறுகின்றது. பருத்தியாடையின் மென்மை அதன் ஓரிழையில்தான் அமைகின்றது. ஆயின் பட்டாடை, கனம் மிகுதியாக மிகுதியாக செல்வாக்கிலும் உயரும். இன்று காஞ்சிபுரம் பட்டுக்கு இருக்கும் மதிப்பு அதன் இரட்டை இழைப்பாவு ஊடையினாலாம். இரட்டையிழைப் பருத்தியாடைகள், ஈரிழைத்துவர்த்து என்றும், இரட்டை இழைத் துவர்த்து என்றும் பெயர் பெறுகின்றன. ஈரிழையின் சிறப்பின்மை, மென்மையின்மை கருதியே, இவற்றைத் தமிழர் உடுத்தாது, துவட்டுதல் போன்ற பிற பயன்பாடுகளுக்குக் கொள்கின்றனர். மேலும் பருத்தி ஆடையின் கரைமட்டும் ஈரிழை காரணமாக இரட்டு என்று சொல்லப்படுதலும் உண்டு.

ஈண்டு அடியார்க்கு நல்லார் கூறுவது கரை அன்று; துகிலே. மேலும் சிறந்த ஆடைகளுள் ஒன்றாகக் குறிப்பிடப்படுவதால் 'இரட்டு' என்பது பட்டினைக் குறித்திருக்கக் கூடும் எனல் பொருந்தும்.

## 2. பீதகம்

அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் துகில் வகையுள் மற்றொன்று பீதகம். நாலாயிரத் திவ்விய பிரபந்தம் சுட்டும்

பீதக உடை, பீதகச் சிற்றாடையே, பீதகம் அம்பரம்கைப்பட்டு, பீதாம்பரம் எனப்படும் மரபு அமைகின்றது. பீதாம்பரம் சிறந்த பட்டாடையினைக் குறிக்கும் நிலையில் பீதகமும் பட்டாடை எனத் தெரிகின்றது. பரிபாடல், சிலம்பு, மணிமேகலை காட்டும் பொலம் புரி ஆடை (3:58, 11:50, 5:61) பீதக ஆடையின் பழமை உருவாகலாம். தெய்வத்திற்குச் சுட்டும் தன்மையில் இதன் பயிற்சி அமைவது, மிகச் சிறந்ததொரு ஆடை என்பதைப் புலனாக்கவல்லது.

3. கோபம்

இந்திரகோபப் பூச்சியின் நிறத்தையுடைய ஆடை கோபமாகும். கோபத்தன்ன தோயாப் பூந்துகிலைத் திருமுருகாற்றுப் படை இயம்ப, பின்னர் அதுவே கோபம் என்று பெயர் பெற்றிருக்கக் கூடும். எனவே கோபம் என்ற பெயர்தான் புதிதாக அமைகின்றதே தவிர, இவ்வாடை சங்க காலத்திலேயே இருந்திருக்கின்றது என்பது தெளிவாகின்றது. கோபம் இயற்கையிலேயே சிவந்த நூலைக் கொண்டு நெய்யப் பெறுவதே, இதனை அரத்தத்தினின்றும் வேறுபடுத்துவது என்பது அறிஞர் எண்ணம்.[68]

நமக்குக் கிடைக்கும் சான்றுகள் நெய்த துணியில் நிறம் தோய்க்கும் இயல்பினைச் சொல்கின்றதே தவிர இயற்கையிலேயே நிறம் கொண்ட நூல்களுக்குச் சான்றுகள் இல்லை. நூலுக்குச் சாயம் தோய்த்தலையும் இலக்கியம் வழி நாம் அறியக் கூடவில்லை. கோபத்தன்ன தோயாப் பூந்துகிலை ஈண்டு துணையாக்குவர் இவ்வறிஞர், ஆயின் இத்தொடர் சூரர மகளிரின் நிலையைச் சொல்லக் கூடியது என்னும் நிலையில் இயற்கை இறந்த நிகழ்ச்சியாகிறது. எனவே இயற்கைக்கு மாறுபாடான ஒன்றைக் கூறும் தன்மையில் தோயாப் பூந்துகிலைப் புலவர் நவின்றிருக்கக் கூடும். இந்நிலையில் நிறம் காரணமாக, கோபம் என்னும் பெயர் அமைந்தது என்பதைத் தவிர, பிற எண்ணம் மேலும் ஆய்வுக்குரியது.

---

68. அரத்தம் சிவந்த ஆடை, ஆனால் சாயம் தோய்க்கப் பெற்றது. இயற்கையிலேயே சிவந்த நூலைக் கொண்டு நெய்யப்பெறுவது கோபம். இந்திரகோபப் பூச்சி போலச் சிவந்தது. கோபத்தன்ன தோயாப் பூந்துகில் ஆடையின் இயல்பு விளக்கும்.

— எங்கள் நாட்டு ஆடை, தண்டபாணி தேசிகர், கலைமகள் தொகுதி-6, 1934.

4. பரியட்டக்காசு

அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் இத்துகில் பற்றிய எண்ணம் எதுவும் விளக்கமுறவில்லை. பொற்காசுகளை ஓரத்திலே வைத்துத் தைத்த துகிலாடை என்பர். பரிவட்டம் என்றதொரு ஆடையினைப் பற்றிய எண்ணமும் உண்டு.[69]

இன்று, கடவுளுக்குச் சாத்தும் ஆடையை 'பரிவட்டம் சாத்துதல்' என்று குறித்தல் உண்டு. பரிவட்டம் எல்லாத் தெய்வங்கட்கும் சாத்துதல் இல்லை. மாடன், இசக்கி போன்ற சிறு தெய்வங்களின் ஆடையினைப் பரிவட்டம் என்று சொல்ல மாட்டார்கள். உருவற்ற பீடத்திற்குப் போடும் துணியினைப் பரிவட்டம் என்பர் (கன்னியாகுமரி மாவட்டம்). அபிஷேகத்திற்குக் கொடுக்கும் குடும்பத்தினரில் மூத்தோருக்குக் கோயிலில் பரிவட்டம் என்னும் துணியினைத் தலையில் கட்டுவர் (மதுரை).

பரியட்டக்காசு, பரிவட்டம் இரண்டும் தொடர்புடையவையா என்பதும் ஆய்விற்குரியது. ஆயின் சிறப்புடைய ஆடையைச் சுட்டுவதில் இரண்டும் ஒன்றுபடக் காண்கின்றோம். பிற எண்ணங்கள் தெளிவுறவில்லை.

5. தேவாங்கு

அடியார்க்கு நல்லார் சுட்டும் துகில் வகையுள் ஒன்று. இன்று ஓர் இனத்தார் தேவாங்குச் செட்டியார் என வழங்கப்படுகின்றனர். தேவாங்கு என்ற ஆடையினை நெய்த காரணத்தால் இப்பெயர் பெற்றிருக்கலாம். வடநாட்டாரும் தேவாங்கு என்றதொரு உடை பற்றிய எண்ணத்தைத் தருகின்றனர்.[70]

## முடிவுரை

சங்கம் முதல் 12-ஆம் நூற்றாண்டு வரை வழங்கிய, தமிழர் ஆடை குறித்த சொற்கள் இவண் ஆராயப்பட்டன. முழுநிலையில் இவை தரும் எண்ணங்களாகச் சிலவற்றைக் கொள்ளலாம்.

---

69. Tamil Lexicon Vol.IV, part-I.

70. There are other words about fabrics Samaraiccakaha Which are equally of great interest. They are devanga and devadusa which perhaps signify the same kind of stuff. Devanga is said to have been made of silk..."

- Costumes Textiles Cosmetics & Coiffure - Dr. Moti-chandra, page.115.

தன்னையும், தன் பொருளையும், பொருளின் இயல்பினையும் ஓரளவுக்குத் தெளிவாக்கும் நிலையில் இச்சொற்களின் பயிற்சி அமைகின்றது. இவற்றால் ஆடையின் மேன்மை, இழிவு புலப்பட அவற்றை யுடுத்தி வந்த தமிழன் சமுதாய நிலையினையும் விளங்கிக்கொள்ள இயலுகின்றது.

2. ஆடையின் பெயராக்கத்திற்கு, அதனுடன் தொடர்புடைய அனைத்துக் கூறுகளையும் பயன்படுத்தி உள்ளான் தமிழன். அவை யாவன:-

| | | | |
|---|---|---|---|
| 1. மூலப்பொருள் | — | எ-டு. | தழை, பட்டு |
| 2. பயன்பாடு | — | ,, | அரணம், ஈர்ங்கட்டு |
| 3. நிறம் | — | ,, | அரத்தம், நீலம் |
| 4. தொழில் | — | ,, | மடிவை, அறுவை |
| 5. பண்பு | — | ,, | துகில், சிதார் |
| 6. இடம் | — | ,, | கலிங்கம், வங்கச்சாதர் |
| 7. உறுப்பு | — | ,, | மெய்ப்பை, மேலாக்கு |
| 8. பொருள் | — | ,, | வம்பு, படம். |
| 9. அளவு | — | ,, | வட்டுடை |
| 10. நெய்யும் தன்மை | — | ,, | இரட்டு. |

3. வடநாட்டுத் தொடர்பின் தோய்வினையும் சில சொற்கள் விளக்கி நிற்கின்றன. (எ-டு) கஞ்சுகம், உத்தரியம்-கம்பலம், வற்கலை.

4. தன் சொல்லையும் பொருளையும் விளக்கமுறத் தரும் சொற்களைத் தவிர, சில, பொருள் விளக்கமின்றி, என்ன ஆடை என்பதை மட்டுமே உணர்த்தி அமைகின்றன. (எ-டு) ஆசு-கவசம்.

மேலும் சில, ஒருவகை ஆடை என்பதை மட்டுமே புலப்படுத்துவன.

(எ-டு) கம்பல், சேலம், சுண்ணம், கோங்கலர், இறைஞ்சி, பாடகம், சில்லிகை, தூரியம், வேதங்கம், பங்கம், தத்தியம், வண்ணடை, நூல் யாப்பு, திருக்கு, குச்சரி, காத்தூலம் போன்றன.

எனவே சொற்பொருள் ஆய்வுக்கு, மிகுதியான இலக்கியப் பயிற்சி அல்லது வழக்குத் தேவை என்பது விளக்கமற்ற இச்சொற்களை நோக்கப் புலப்படுகிறது.

5. கால வளர்ச்சியில் மனித எண்ணங்கள் மாறல் இயற்கை. இத்துடன் அவர்கள் தொடர்பான அனைத்தும் மாறும் இயல்பின என்பதற்கொரு சான்றாகவும் இவ்வாடை வரலாறு அமைகின்றது.

ஆடைபற்றிய சொல், பொருள் இரண்டின் வரலாற்றையும் காண,

(1) சொல் திரிதல் (சீலை) (2) சொல் வழக்கறுதல் (சிதார்) (3) பல்பொருளினின்றும் ஒரு பொருளைக் குறித்தல் (புடவை) (4) ஒரு பொருளினின்றும் பல்பொருளைக் குறித்தல் (ஆடை) (5) இழிபொருட்பேறு (கலிங்கம்) (6) சிறப்புப் பொருட்பேறு (கூறை), (7) பொருள் மாறுபாடு (அறுவை) என்ற நிலைகளில் இவை அடைந்த மாற்றங்கள் தெரிய வருகின்றன.

கால வெள்ளத்தில் தாக்கம் எதுவும் அடையாமல் நிற்கும் சொற்களும் உள. சான்றாக உடை, கவசம் போன்றவற்றைக் கூறலாம். அதிகமான செல்வாக்கு, எளிமை, சிறப்புக் காரணமாக இவை மக்கள் மனதில் அன்றுமுதல் இன்றுவரை எவ்விதச் சொற் பொருள் மாற்றத்தையும் அடையாது நிற்கின்றன எனல் பொருந்தும்.

# வரலாற்று நிலையில் ஆடை பற்றிய சொற்கள்

## அட்டவணை

| இலக்கியம் | ஆடை பற்றிய சொற்கள் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | உடை | தழையுடை | துகில் | கலிங்கம் | அறுவை | சிதார் | ஆடை | உடுக்கை | கச்சு |
| தொல் | 1 | — | — | — | — | — | — | — | — |
| சங்கம் | 10 | 64 | 30 | 27 | 11 | 11 | 10 | 9 | 7 |
| பதினெண். | 4 | 4 | 4 | — | — | — | 7 | 5 | — |
| சிலம்பு | 2 | — | 4 | 2 | 3 | — | 6 | 1 | 1 |
| மணிமேகலை | 3 | — | 2 | — | 2 | — | 1 | — | — |
| பெருங்கதை | — | — | 34 | 15 | 1 | — | 5 | — | 13 |
| சிந்தாமணி | 3 | 2 | 99 | 6 | 2 | — | 13 | — | 16 |
| நாலாயிர. | 9 | — | 13 | 1 | — | — | 28 | 2 | 2 |
| கம்பன் | 2 | — | 41 | 1 | — | — | 11 | — | 8 |
| சூளாமணி | 3 | 4 | 27 | 2 | — | — | 2 | — | 4 |
| பெரியபுராணம் | 11 | 1 | 22 | — | 3 | — | 10 | — | 1 |

| இலக்கியம் | ஆடை பற்றிய சொற்கள் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஈரணி | தானை | காழகம் | போர்வை | கச்சை | வம்பு | மடி | பட்டு | சிரை |
| தொல் | — | — | — | — | — | — | — | — | — |
| சங்கம் | 6 | 5 | 5 | 4 | 4 | 4 | 4 | 3 | 1 |
| பதினெண். | — | 1 | — | 4 | — | — | 1 | 1 | — |
| சிலம்பு | — | 1 | 2 | — | 2 | — | 1 | 3 | — |
| மணிமேகலை | — | — | — | — | 1 | — | — | — | — |
| பெருங்கதை | 1 | 6 | — | 2 | 11 | 2 | — | 5 | 1 |
| சிந்தாமணி | 1 | 6 | 2 | 16 | 3 | 4 | — | 26 | — |
| நாலாயிர. | — | — | — | — | — | — | — | 11 | — |
| கம்பன் | — | 1 | — | — | 1 | 3 | — | 1 | 13 |
| சூளாமணி | — | — | — | 1 | 12 | 3 | 1 | 1 | — |
| பெரியபுராணம் | — | 1 | — | 1 | — | 2 | — | 6 | — |

அடை—6

### ஆடை பற்றிய சொற்கள்

| இலக்கியம் | படம் | படாம் | பூங்கரைநீலம் | உத்தரியம் | கம்பலம் | கம்பல் | கவசம் |
|---|---|---|---|---|---|---|---|
| தொல் | — | — | — | — | — | — | — |
| சங்கம் | 2 | 2 | 2 | 1 | 1 | 1 | 1 |
| பதினெண். | — | 1 | — | — | — | — | — |
| சிலம்பு | 1 | 1 | — | — | — | — | 1 |
| மணிமேகலை | — | 1 | — | — | — | — | — |
| பெருங்கதை | 2 | — | — | .1 | — | — | — |
| சிந்தாமணி | — | 4 | — | 4 | 4 | — | 5 |
| நாலாயிர. | — | — | — | — | — | — | — |
| கம்பன் | — | — | — | 12 | — | — | 55 |
| சூளாமணி | — | — | — | — | — | — | 1 |
| பெரியபுராணம் | — | — | — | 7 | — | — | — |

| இலக்கியம் | ஆடை பற்றிய சொற்கள் | | | | | | | | |
| --- | --- | --- | --- | --- | --- | --- | --- | --- | --- |
| | சிதர்வை | தோக்கை | வார் | மெய்ப்பை | மெய்யாப்பு | புட்டகம் | தூசு | ஒலியல் | அரணம் |
| தொல் | — | — | — | — | — | — | — | — | — |
| சங்கம் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| பதினெண். | — | — | — | — | — | — | — | — | — |
| சிலம்பு | — | — | — | 1 | — | — | 1 | — | — |
| மணிமேகலை | — | — | — | — | — | — | — | — | — |
| பெருங்கதை | — | — | — | — | — | — | 2 | — | — |
| சிந்தாமணி | — | 1 | 13 | — | — | — | 10 | — | 2 |
| நாலாயிர. | — | — | — | — | — | — | — | — | — |
| கம்பன் | — | — | 15 | — | — | — | 37 | — | — |
| சூளாமணி | — | — | 10 | — | — | — | 3 | — | — |
| பெரியபுராணம் | — | — | 7 | — | — | — | 5 | — | — |

| இலக்கியம் | சிதவல் | தூல் | வாலிது | வெளிது | கச்சம் | கூறை | அரத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ஆடை பற்றிய சொற்கள் | | | | |
| தொல். | — | — | — | — | — | — | — |
| சங்கம் | 1 | 1 | 1 | 1 | 1 | — | — |
| பதினென். | — | — | — | — | — | 3 | 1 |
| சிலம்பு | — | — | — | — | — | 1 | — |
| மணிமேகலை | — | — | — | — | — | 1 | — |
| பெருங்கதை | — | — | — | — | — | 1 | 2 |
| சிந்தாமணி | — | — | — | — | — | 2 | — |
| நாலாயிர. | — | — | — | — | — | 2 | — |
| கம்பன் | — | — | — | — | — | 2 | — |
| சூளாமணி | — | — | — | — | — | — | — |
| பெரியபுராணம் | — | — | — | — | — | — | — |

| | ஆடை பற்றிய சொற்கள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இலக்கியம் | ஈர்ங்கட்டு | புடைவை | பட்டம் | உடுப்பு | கோடி | கஞ்சுகம் | சிதர் |
| தொல் | — | — | — | — | — | — | — |
| சங்கம் | — | — | — | — | — | — | — |
| பதினெண். | 1 | 1 | 1 | 1 | 1 | — | — |
| சிலம்பு | — | — | — | — | 2 | 4 | — |
| மணிமேகலை | — | — | — | — | — | 2 | 1 |
| பெருங்கதை | — | — | — | — | — | 6 | — |
| சிந்தாமணி | — | — | — | — | — | — | — |
| நாலாயிர. | — | — | — | — | 2 | — | — |
| கம்பன் | — | — | — | — | — | 7 | — |
| சூளாமணி | — | — | — | — | — | 5 | — |
| பெரியபுராணம் | — | 1 | — | — | 1 | 2 | — |

| | ஆடை பற்றிய சொற்கள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இலக்கியம் | சிதவற்றுணி | வட்டுடை | வட்கம் | மீக்கோள் | வட்டம் | வங்கச்சாதர் | நீலம் |
| தொல் | — | — | — | — | — | — | — |
| சங்கம் | — | — | — | — | — | — | — |
| பதினெண். | — | — | — | — | — | — | — |
| சிலம்பு | — | — | — | — | — | — | — |
| மணிமேகலை | 1 | 1 | — | — | — | — | — |
| பெருங்கதை | — | 2 | 2 | 2 | 1 | 1 | 1 |
| சிந்தாமணி | — | 2 | 2 | — | — | — | — |
| நாலாயிர. | — | — | — | — | — | — | — |
| கம்பன் | — | — | 1 | — | — | — | — |
| சூளாமணி | — | — | 2 | — | — | — | — |
| பெரியபுராணம் | — | — | — | — | — | — | — |

ஆடை பற்றிய சொற்கள்

| இலக்கியம் | சேலம் | குப்பாயம் | கோசிகம் | பஞ்சி | தோகை | கருவி | சாலிகை | பூண் | ஆசு | வட்டு | காம்பு | நேத்திரம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தொல் | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| சங்கம் | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| பதினெண். | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| சிலம்பு | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| மணிமேகலை | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| பெருங்கதை | 1 | 1 | 1 | — | — | — | — | — | — | — | — | — |
| சிந்தாமணி | — | 2 | 2 | 3 | 2 | 1 | 1 | 1 | 1 | 1 | — | — |
| நாலாயிர. | — | 2 | — | — | — | — | — | — | — | — | 2 | 1 |
| கம்பன் | — | — | 2 | — | — | — | 3 | — | — | — | — | — |
| சூளாமணி | — | — | 1 | 7 | — | — | — | — | — | — | — | — |
| பெரியபுராணம் | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |

| | ஆடை பற்றிய சொற்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| இலக்கியம் | வற்கலை | கலை | கோதை | நீலி | புட்டில் | சேலை | சீரம் | கொய்சகம் |
| தொல் | — | — | — | — | — | — | — | — |
| சங்கம் | — | — | — | — | — | — | — | — |
| பதினெண். | — | — | — | — | — | — | — | — |
| சிலம்பு | — | — | — | — | — | — | — | — |
| மணிமேகலை | — | — | — | — | — | — | — | — |
| பெருங்கதை | — | — | — | — | — | — | — | — |
| சிந்தாமணி | — | — | — | — | — | — | — | — |
| நாலாயிர. | — | — | — | — | — | — | — | — |
| கம்பன் | 7 | 3 | 5 | 2 | — | 1 | 1 | 1 |
| சூளாமணி | — | 1 | — | — | — | — | — | 1 |
| பெரியபுராணம் | 1 | — | — | — | — | — | — | — |

| | ஆடை பற்றிய சொற்கள் | | | |
|---|---|---|---|---|
| இலக்கியம் | காழம் | தோ | பாவாடை | கோவணம் |
| தொல் | — | — | — | — |
| சங்கம் | — | — | — | — |
| பதினெண். | — | — | — | — |
| சிலம்பு | — | — | — | — |
| மணிமேகலை | — | — | — | — |
| பெருங்கதை | — | — | — | — |
| சிந்தாமணி | — | — | — | — |
| நாலாயிர. | — | — | — | — |
| கம்பன் | 1 | — | — | — |
| சூளாமணி | — | 1 | — | — |
| பெரியபுராணம் | — | — | 4 | 26 |

# தமிழர் உடைகள்-உடுத்தும் முறைகள்

உண்ணுதல் தன் விருப்பில் அமையலாம். ஆயின் உடுத்தல் பிறர் விருப்பிற்கு ஏற்ப அமையவேண்டும்[1] என்பது உடைபற்றி மாந்தரின் பொதுவானதொரு எண்ணமாகும். விரைந்து செயல் படும் நட்புக்கு, உடுக்கை இழந்தவன் கையினை உவமையாக்கும் நிலையில் வள்ளுவர், மானவுணர்வுக்குரிய உடையின் முக்கியத் துவத்தைப் புலப்படுத்துவார். பல்வேறு சூழல்களால் பல பிரிவினர்களாகப் பிரிந்துள்ள மாந்தர் சமுதாயம், உடையிலும் தங்களின் பல்வேறு நிலைகளுக்கிணங்க மாறுபட்டு இருப்பது பண்டு தொட்டு இன்றுவரை தொடர்ந்து வரும் ஒரு கூறாகும். இவர்களின் வேறுபட்ட மன உணர்வுகள் உடையுடுத்தும் நிலை யிலும் பிரதிபலிக்கக் காணலாம்.

நீலகிரி வாழ் தோதவர்கள் கழுத்திலிருந்து கணுக்கால்வரை ஆடையைப் போர்த்திக் கொள்கின்றனர். அந்தமான் ஓங்கோன் மக்கள் இடுப்பில் ஒரு நார்ப்பட்டையை மட்டும் கட்டிக் கொண்டு பிறந்த மேனியாகத் திரிகின்றனர்.[2] இவண் இடமாற்றத்தில் உடை மாற்றம் அமைகிறது. உடல் முழுவதையும் மறைத்தல் தேவை என ஒரு பாலார் கருத, மற்று ஒரு சாரார் அதனைத்

---

1. Eat according to your own taste but dress according to others."

   - Select Papers, Sunit Kumar Chatterji, page-133.

2. தமிழியல், தொகுதி-5, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீராமுகைதீன், பக்கம்-94.

தேவை என்று எண்ணாத மனமாற்றத்தையும் இவண் காண்கின்றோம். குறிப்பிட்ட சமுதாயத்தினரிடையேயும் காலமாற்றத்திற்குத் தக உடையிலும் உடுத்துமுறையிலும் வேறுபாடு நிகழக் கூடும் என்பதனை, அன்று மேலாடைக்கு முக்கியத்துவம் கொடுக்காத தமிழர் இன்று, இடையாடைக்குரிய தேவையினை, மேலாடைக்கும் கொடுக்கும் தன்மையால் உணர்த்தலாம்.

இத்தகைய மனவுணர்வுகளின் அடிப்படையில் தமிழ்ச் சமுதாயத்தினர் உடுத்திய உடைகள் என்னென்ன அவற்றை எவ்வாறு உடுத்தினர் என்பதைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

புலவர்களின் நாவன்மையால், என்னென்ன உடையினைத் தமிழர் உடுத்தியிருந்தனர் என்பதை நாம் ஓரளவிற்குப் புரிந்து கொள்ள முடிகின்றது. ஆயின் எவ்விதம் உடுத்தினர் என்பதை நாம் தெளிவாக அறியக் கூடவில்லை. ஏனெனில் இலக்கியம், சிற்பம், சித்திரம் போன்று காட்சிச் சான்று அன்று. இலக்கியத்தை விடக் காட்சிச் சான்றுகளே உடையின் முழு உருவத்தையும் படம் பிடித்துக் காட்டி, அதனை உடுத்திய முறையையும் வெளிப்படுத்த வல்லன. இலக்கியம் உணர்வுக்கருவி என்ற நிலையில், உணர்வு வழியாகவே சித்திரங்களை நம் கண்முன் கொணரத் தக்கன. எனவே, இலக்கியத்தைப் பொறுத்த வரையில் புலவரின் எழுத்து வன்மையும், வர்ணனைச் சிறப்பும் தான், மாந்தரின் உடையுடுத்தும் முறை பற்றிய விளக்கங்களை நல்குவன. இலக்கியம் வழியாக இவ்வறிவினைப் பெறப் புலவர் எப்படித் துணை நிற்கின்றனர் என்பதற்குச் சில சான்றுகளை இவண் நோக்கலாம்.

ஆடையுடன் அணிந்த இடத்தினையும் சுட்டிச் செல்லல் ஆடவர், மகளிர் மறைத்துக் கொண்ட இடத்தினை வெளிப்படுத்தும் கருவியாகின்றது. எந்தெந்த ஆடைகளை எவ்வெவற்றிற்குப் பயன்படுத்தினர் என்பதையும் பெறமுடிகிறது.

பல்பூம் பகைத் தழை நுடங்கு மல்குல் (நற். குறிஞ்.8)
அரத்தப் பூம்பட்டு அரைமிசை யுடீஇ (சிலப். 14:86)
நுரை புரை கலிங்கம் ஒருமுலைபுதைப்ப (பெருங். 2.5:86)

போன்ற பல குறிப்புகளால், தழையாடை அல்குலுக்கும், பட்டு அரைக்கும், கலிங்கம் நகிலுக்கும், மறைத்தல் தொழிலுக்கு உதவியது என்பது புலப்படுகின்றது.

புலவர் பெய்யும் வினைகளைக் கொண்டு உடையை உடுத்தினரா? போர்த்தினரா? எவ்வாறு உடுத்தினர் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

உடுத்தும் உடைகளைக் குறிக்க தைஇ, உடீஇ, அணிந்து, சேர்த்து, மருங்கிற் கட்டிய, அசைந்த, உலாக்கிடந்த, புனைந்த, நுடங்கு, ஏந்திய, சுற்றிய, சாத்திய போன்ற வினைகளைக் காண்கின்ற நாம் கச்சை, கச்சு போன்று இறுக்கிக் கட்டப்பட்ட உடைகளை வீக்கிய, விசித்த, கட்டிய போன்ற வினைகளால் குறிக்கும் தன்மையையும் பார்க்கின்றோம். போர்த்த, மறைத்த எனும் வினைகள் போர்வை போன்றவற்றிற்கும் சூழ்ந்த, திருத்திய, இட்ட, புதைத்த போன்ற வினைகள் மேலாடைக்கும் பயன்படுத்தப்படக் காணலாம். இத்தகைய வினைகளை இன்றும் பயன்படுத்தும் நிலை கொண்டு அன்று தமிழர் உடுத்திய நிலையினை ஓரளவிற்கு உணர்ந்து கொள்ள முடிகின்றது.

புலவரின் உவமை வழி ஒரு சில உடுத்தும் முறைகள் விளக்கமாகின்றன.

> தத்தி வீழும் அருவித் திரள் சாலும்
> உத்தரீகம் நெடுமார்பின் உலாவ (கம்ப. 6991)

மார்பில் அணியும் உத்தரீயத்தினை அருவிக்கு ஒப்புமையாக் குகிறான் கல்விக் கடலான கம்பன். மார்பு மலையாக, அதில் வடிந்து வீழ் அருவியைப் போன்று உத்தரீயம் காட்சி தருகின்றது. காட்சிப் படிவமான இது, சிறந்த முறையில் நம் கண்முன் மார்பில் உத்தரீயம் தவழும் காட்சியைப் புலப்படுத்துகிறது.

தாம் பெற்ற இன்பத்தை இவ்வுலகும் பெற விழையும் புலவரின் உள வெளிப்பாடே இத்தகைய கவி நயங்களாகும். இவை, புலவரின் விழைவினை நிறைவேற்றுவதுடன் ஆய்வாளரின் ஆய்விற்கும் விருந்தளிக்கின்றன என்பதற்கு இஃது ஓர் சான்று.

இத்தகைய இடம் சுட்டும் தன்மை மிகுதியாக இடையாடைக்கே அமைதல், தமிழர் இடையாடைக்குக் கொடுத்திருந்த முக்கியத்துவத்தை விளக்கவல்லது.

புலவர் விளக்கிச் செல்லும் தன்மையிலும் சில குறிப்புகள் புலப்படக் காணலாம். பூங்கரை நீலத்தைப் புடைதாழ உடுத்தல் என்னும்போது பூங்கரை நீலமாகிய உடையைப் (முல்லை

கலி.11) பக்கங்கள் தாழுமாறு உடுத்தல் மரபு எனப் புரிந்துகொள் கிறோம். இவ்வாறே ஏனைய குறிப்புகளும் உடைபற்றிய விளக் கங்களைத் தந்தமைகின்றன.

இலக்கியம் சுட்டிச் செல்லும் இவ்வுடைகளை, குழந்தைகள், ஆடவர், மகளிர் என்ற முந்நிலைகளில் பகுத்து இவண் தெளிவு படுத்தலாம்.

## குழந்தைகள்

தமிழ் இலக்கியம் தரும் உடைகளின் விளக்கங்களை முழுவது மாக நோக்க ஆடவர், மகளிர் உடைகளைப் பற்றிய எண்ணங் களை நாம் பெறுமளவிற்குக் குழந்தைகளின் உடைகளைப் பற்றி அறிய முடியவில்லை. கிடைக்கும் கருத்துகள் ஓரிரண்டே அமை கின்றன. எனினும், குழந்தைகளின் உடைகள் எவ்வாறு இருந்தி ருக்கக் கூடும் என்பதனை ஓரளவிற்கு ஊகிக்கும் தன்மையில் இவை உள்ளன. ஆடையுடுத்தத் தெரியாத மகனை, 'வெளிது விரித்துடீஇ' (புறம். 299) போருக்கு அனுப்பும் அன்னையைச் சங்க இலக்கியத்தில் காண்கின்றோம். இதனின்றும் சிறுவருக் குரிய உடையினை இடையில் அணிவித்த தன்மை புலப்படும்.

> கைவினைப் பொலிந்தக் காசமைப் பொலக்காழ்மேல்
> மையில் செந்துகிர்க் கோவை அவற்றின்மேல்
> தைஇயப் பூந்துகில் ஐது கழல் ஒருதிரை (மரு. 85)

என்னும் கலித்தொகை அடிகள் அணிகளின் மேல் ஐதாய்க் கழலு கின்ற, ஒன்றாகிய திரைத்த பூந்துகிலை யுடுத்திய சிறுவனின் நிலையை இயம்பும். மணிமேகலையில்,

> செவ்வாய்க் குதலை மெய்பெரு மழலை
> சிந்துபு சின்னீர் ஐம்படை நனைப்ப
> அற்றங் காவா சுற்றுடைப் பூந்துகில்
> தொடுத்த மணிக்கோவை யுடுப்பொடு துயல்வர
> தளர்நடைத் தாங்காக் கிளர்பூம் புதல்வனைக் (3:140)

காண்கின்றோம்.

குழந்தையின் அறியாமை உணர்வும், அற்றங்காலா அதன் வெள்ளை இயல்பும், அரை குறையாகத் துகில் உடுத்தியிருக்கும் அழகும் இப்பாடலில் சிறப்புற இயம்பப்படுகின்றன. அரையில் உடுத்தும் உடையே அற்றம் காக்கும் என்ற அன்றைய தமிழர் மனநிலையும் இவண் புலப்படுகின்றது.

இவ்வனைத்துக் காட்டுகளும் துகிலில் ஒரு சிறு துண்டினை எடுத்துப் புதல்வர்க்கு அணிந்து இருக்கின்றனர் என்பதனை யுணர்த்தும் வண்ணமே அமைகின்றன. தையலினை முழுமை யாகப் பயன்படுத்தாமையும், இவ்வாறு தனித்த உடையில்லா மைக்குரிய காரணமாகச் சுட்டலாம். பொதுவாக உலக முழுவ தும் சிறுவர்க்கெனத் தனித்த உடையில்லாமல் இருந்தமையும், அண்மைக் காலம் வரையில் இந்நிலை நீடித்தமையும் இவண் குறிப்பிடத் தக்கது.[3]

## ஆடவர்

ஆடவர் உடைகளை அரசர், வீரர், காவலர் துறவிகள், ஏழைகள் எனப் பல நிலைகளில் நோக்கலாம்.

## அரசர்

கலிங்கம், படாம், துகில், அறுவை, கச்சு சங்க இலக்கியத்தி லும், துகில், கச்சை, வடகம், மீக்கோள் பெருங்கதையிலும், துகில், வெண்பட்டு, வட்டுடை, பட்டு, உரோமப்பட்டு சிந்தா மணியிலும், கம்பனில் பட்டு, உத்தரீயம் ஆகியனவும் அரசர் களின் ஆடையாக அவ்வக் காலப் பகுதியில் சுட்டப்பட்டுள்ளன.

பதிற்றுப்பத்து 'இருநிலந் தேர்யும் விரிநூல் அறுவை' (34:3) அணிந்தவனாக அரசனைக் காட்டுகின்றது. நிலந்தோயுமள விற்கு அறுவையினை உடுத்திய இத்தன்மை, பெருமிதத்திற்குரிய அடையாளம் என்பர் உ.வே.சா. 'மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன். (திருமுருகு. 214) என்ற அடியும் நிலந்தொட இடை யில் துகில் உடுத்திய தன்மையையே யுணர்த்தி அமைகின்றது. இவற்றால் அரசர் எல்லா இடை உடையினையும் இம்முறை யிலேயே அணிந்திருக்கலாம் என்று எண்ணலாம்.

---

3. If children in Egypt wore any clothes at all they were just like those of their parents but more often than not they ran about naked.

   - The Story of Clothes, Agnes Allen, page-34.

   There are very few children's costumes in these illustrations because until about 1770 there were no cothes specially designed for children. They became little copies of their elders as soon as they emerged from babies swaddling clothes.

   - Discovering Costume, Audery. I. Barfoot, page-22.

துகிலினை மேலாடையாகவும் அணிந்தனர் என்பது 'புடை வீழ் அந்துகில் இடவயின் தழீஇ' (நெடு. 181) என்னும் பாடல் அடியால் பெறப்படும். இடவயின் தழீஇ என்பதனின்றும், வீழும் துகிலினை இடப்பக்கமாகத் தாங்கினான் என்பதனால் மேலாடையை இன்று போன்றே அன்றும் இடத்தோளில், அணிந்துள்ளனர் என்பது வெளிப்படுகின்றது. பிற அறிஞர்களின் எண்ணங்களும் இக்கருத்துக்கு அரணாகின்றன.[4]

கம்பன் பாடல்கள் பல, உத்தரியம் அணிந்தமையினைப் புலப்படுத்தவல்லன.

> அடுத்த நீர் ஒழிந்தன் அருவி தூங்கின
> எடுத்த நூல் உத்தரியத்தொடு எய்திநின்று
> உடுத்த லால் நிறத் துகில் ஒழிந்த போன்றவே (4359)

என்ற உவமை உத்தரியம் மார்பில் அணியும் தன்மையைப் புலப்படுத்தி நிற்கின்றது. இங்குத் தோளின் ஒரு பக்கத்தின் வழியாக விழும் உத்தரியம் என்னுமாற்றான், ஒருவழியாகப் போடப்பட்ட தன்மை தெளிவுறுகின்றதே தவிர எந்தப் பக்கம் என்பது விளக்கமுறவில்லை.

உதயணனின் மேலாடை பற்றிக் கூறும்போது கொங்கு வேளிர்,

> பாம்பு ரியன்ன மீக் கொடானை
> இருபுடை மருங்கினும் வகுவளிக் கொசிந்து (1.42:244-45)

என்பார். இவன் மீக்கொள்தானையாகிய மேலாடை, காற்றில் இருபக்கத்திலும் அசையும் வண்ணம் தோற்றம் தரக் காண்கின்றோம். இவண் இருபுடை என்பது மார்பின் இருபுறங்களிலுமா அன்றி முன்பக்கம் பின்பக்கம் என்ற நிலையிலா என்பது தெளிவுறவில்லை.

---

4. The Patra statue however shows that the upper part of the body is bare except for the uttariya which lies across the chest and comes down to the feet from behind the left shoulder.
—Indian Costume Coiffure and Ornament, Sachidanand Sahay, Page-4.

அரசர் வட்டுடை மருங்குல் சேர்த்தியும், தானை விக்கற விசித்தும் போருக்குச் செல்கின்றனர். எனினும், பிற போர் வீரர்களைப் போன்றே இவர்களின் உடையும் அமைகின்றதே தவிர, வேறுபாடு எதையும் இவர்களின் உடையிலோ உடுத்தும் முறையிலோ காணக் கூடவில்லை.

அரசர்கள் உடைகளைக் காண அவர்களின் உடைகள் சிறந்த உடைகளாக அமைந்தன என்பதும், இடையாடையினை நிலந்தோயும் அளவிற்கு உடுத்தியும், மேலாடையுடனும் காணப் பட்டனர் என்பதும் தெளிவுறுகின்றது.

மன்னன் புலவருக்கும் இரவலர்க்கும் கொடுக்கும் நிலையில் மடி, துகில், கலிங்கம், அறுவை, வேறுபட்ட உடை போன்றன அமைகின்றன. வேறுபட்ட உடை என்பதற்குத் தெளிந்த விளக்கம் இல்லை. பல்வேறு வகையான உடைகளைக் குறிக்கும் சொல்லாக இதனைக் கருதலாம்.

இவ்வுடைகள் பற்றி எண்ணுங்கால் இவை அனைத்தும் மன்னனது ஆடைகளாகவும் அவன் பிறருக்குக் கொடுப்பதற் காகத் தனித்து வைத்திருந்தனவாகவும் கருதலாம். தன்வரைப் பொங்கு துகிலினைக் கொடை செய்யும் தன்மையும் (புறம். 398) தனக்குத் தேவை இல்லாத வற்கலையைத் தன்னைக் காணவரும் முனிவர்க்குக் கொடுக்க அரண்மனையுள் வைத்திருப்பர் என்ற கம்பன் உரையாசிரியர் கூற்றும் (கம்ப. 1919) இவ்வெண்ணங் கட்கு அடிப்படையாகின்றன.

## போர் வீரர்கள்

கச்சை, கவசம் இரண்டும் போர்வீரர்களின் பொதுவான தொரு உடையாகும். இதனைச் சங்ககாலம் முதல் நாம் காணலாம்.

சங்க இலக்கியம் இவற்றுடன் சுற்று வீங்கு செறிவுடை (பெரும். 73) கொடுந்திரை ஆடை (புறம். 275) இவற்றைத் தர, சிந்தாமணி வட்டினையும் சூளாமணி கலிங்கத்தையும் இவர் களின் உடையாகக் காட்டுகின்றது.

சுற்று வீங்கு செறிவுடை என்னும்போது பக்கங்களில் இறுகக் கட்டப்பட்ட உடையாக இது அமைந்திருக்க வேண்டும் என்பது தெரிகின்றது. 'வளைந்து திரைந்த ஆடையும்' என்ற பொருள்

படும் கொடுந்திரை ஆடையினை உடுத்தும் முறை பற்றிய விளக்கம் தெளிவுறவில்லை.

சிந்தாமணியில், வட்டு அணிந்த போர்வீரனை (2263) காணவாம். இவண் வட்டு என்பது வட்டுடை என்ற பொருளில் அமைந்து அரசர்களின் போர்க்கோலத்தினை, வீரரும் கொண்ட காட்சியினைக் காட்டும்.

சூளாமணி, 'கலிங்கத்தைத் தரண் மேற் திரைத்துடுத்து, என இயம்பும் தன்மை, வட்டுடை போன்றதொரு நிலையில், கலிங்கத்தையும், தாளின் மேற் அமையும்படி அடுக்கியுடுத்துக் காணப்பட்டனர் என்ற எண்ணத்தைத் தரும்.

நுண்வினைக் கச்சை தயக்கறக் கட்டி (குறிஞ்சி. 125)

என்ற எண்ணம் கச்சையைக் கட்டிய முறையைச் சுட்டவல்லது.

கவசம் என்று நோக்கும்போது கவசத்தை முழுமெய்யும் மறையும்படியாகவும் சில பாகங்களுக்கு என்று தனித்தும் அணிந்துள்ளனர். 'மெய்புகு கவசம்' (சிலப். 14:169) மெய்யினை மறைக்கும் இதன் நிலையினையும், 'தோளின் மீளாக் கவசமிட்டு' (கம்ப. ஆரணிய. 421) தோளில் கவசம் அணிந்தமையினையும் 'காலாசொடு அறஎறிந்து' (சீவக. 2236) காற்கவசத்தையும் சுட்டும் தன்மையால் தெளிவாக்கலாம். விரல்களுக்கும் கவசம் அணிதலைக் கம்பன், அழகியதொரு உவமை மூலம் விளக்குகின்றான்.

புதையிருட் பொழுதினும் மலரும் பொங்கு ஒளி
சிதைவு அருநாள் அலர்ச் சிவந்த தாமரை
இதழ்தொறும் வண்டு வீற்றிருந்தது ஆம்என
ததைவுறு நிரைவிரல் புட்டில் தாங்கினான் (7256)

இராமனது போர்க்கோலம் இது. தாமரையின் இதழ்கள் தொறும் வண்டு வீற்றிருந்தது என்று சொல்லுமாறு நெருங்கியுள்ள வரிசையான கைவிரல்களில் விரற் செறியை அணிந்தான் என்னும் இவ்விளக்கம் மிகச்சிறப்பாக விரற்கவசம் பற்றிய எண்ணத்தைத் தருகின்றது.

புட்டில், கோதை முதலிய விரல், கைக்கவசங்களை விற்போரில் பயன்படுத்தியமையினைக் காண இவை விற்போருக்கு என எழுந்தவையாக இருக்குமோ என்ற எண்ணம் இங்கு எழுகின்றது.

**காவலர்**

மெய்க்காப்பாளர், வாயிற் காவலர், துறைகாக்கும் காவலர் எனப் பல்நிலைகளில் காவலர் அமைகின்றனர்.

இவர்களில் மெய்க்காப்பாளர்களின் ஆடை கஞ்சுகமாக அமைந்து கஞ்சுகமாக்கள் எனும் அளவிலேயே தங்கள் தொழிலையும் புலப்படுத்துகின்றது.

வாயிற் காவலரின் சட்டையினை, 'வெங்கண் நோக்கின் குப்பாய மிலேச்சனைச் செங்கண் தீவிழியா' (431) எனச் சிந்தாமணி காட்டும்.

துறைகாக்கும் காவலர் வரிக்குப்பாயத்து வார் பொற்கச்சையராகக் காட்சிதருகின்றனர் (பெருங். 1.40:378).

இங்குச் சட்டை அணிதல் அனைத்துக் காவலரின் பொது உடையாக அமையக் காணலாம். துகின்முடி அணிந்தும் இக் காவலர் காணப்பட்டனர் என்பதை 'துகின் முடிப் போர்த்த தூங்கல் ஓங்கு நடைப்பெரு மூதாளர்' (முல்லை. 5), 'பைந்துகின் முடி அணிந்து அவர்பின் உலவு கஞ்சுகியவர்போல' (சிந்தாமணி 1558) எனும் குறிப்புகள் உணர்த்துகின்றன.

சட்டை பற்றிய குறிப்பு அமையும் பகுதிகள் அனைத்தும், புகு, புக்கு என்ற வினைகளையே சொல்லிச் செல்கின்றன. 'துகிற் குப்பாயம் புகுகென' எனவும் படம்புக்கு (பெருங். 69) எனவும் இவை அமைகின்றன. புக்கு, புக என்ற சொற்கள் உடுத்தும் விதம் பற்றித் தரும் குறிப்பினைக் கம்பன் தெளிவாக உணர்த்துகின்றான்.

மின்னுடை வேத்திரக் கையர் மெய்புகத்
துன்னிடு கஞ்சுகத் துகிலர் (ஆரணிய. 569)

இவண், மெய்புகும் படியாகத் தைக்கப்பட்ட கஞ்சுகமாகிய ஆடை என்ற பொருளில் சட்டையணிந்த முறையை இயம்பக் காண்கின்றோம்.

இச்செய்திகளினின்றும், சட்டையினை இன்று போன்று அணியவில்லை; இன்று ஆடவர் அணியும் பனியன் போன்று அணிந்திருக்கக் கூடும் என்ற விளக்கத்தைப் பெறலாம். 'பொத்தானின் வரலாறும்' இவண் இணைத்து நோக்கற்பாலது[5].

5. பொத்தான்கள் நமக்குரியனவல்ல. பொத்தான் என்னும் சொல் பட்டன் என்னும் சொல்லின் திரிபு. இன்றுபோல் இணைப்பு நோக்கம் அன்று. அலங்காரத்துக்காகவே

## முனிவர்

சங்க இலக்கியம் முதற்கொண்டு தொடர்ந்து முனிவர் சீரை யுடனேயே காட்சி தருகின்றனர்.

மான் தோலினையும் இவர்கள் பொதுவாக அணிந்திருக்கக் கூடும் எனத் தோன்றுகிறது. இதனை, சங்க இலக்கியம் மானின் உரிவை தைஇய மார்பினராக இவர்களைக் காட்டும் நிலையும் (திருமுருகு. 125), கம்பன் மானின் உரிவையை உடுத்தும் போர்த் தும் காட்டும் நிலையும் (6346) கொண்டு உணர்த்தலாம்.

மணிமேகலையில் சங்க தருமன் என்ற பௌத்த முனிவன் பொலம்புரி யாடையுடன் காட்சி தருகின்றான் (5:61). பொன் னிற்றிகழும் பொலம்புரியாடை என்னும் பெயர்க் காரணத்தை உ.வே சா. அவர்கள், 'மருதந்துவரில் தோய்க்கப்பட்டு மஞ்சள் நிறமுள்ளதால் 'பொன்னிற்றிகழும் பொலம்பூவாடை' எனப் பட்டது. இதனைச் சீவரம் என்பர்' என்று விளக்குகின்றார்.

சைவ முனிவனை நாணமும் உடையும் நீத்து இருந்த நிலை யினனாக (3:88) மணிமேகலை காட்டும்.

பெருங்கதையில் யூகி, சைவமுனிவன் வேடத்தில் கல்லுண் கட்டிய அரையினனாகக் (4.7:158) காட்சி தருகின்றான். சிந்தாமணியில் சைவத் துறவியர் உடைமுழுவதையும் நீக்கும் தன்மை அமைகின்றது. இவ்வாறு சைவ முனிவர் உடையுடுத்தும், நீத்தும் காணப்படும் வேறுபட்ட நிலைகளுக்கு அடிப்படைக் காரணம் தெளிவுறவில்லை.

## துறவியர்

பௌத்தத் துறவிகளின் ஆடை காவியாடை எனத் தெரிகின்றது. இவர்களைக் கலிங்கத்துப் பரணி, உடுத்தும்,

---

பொத்தான்களைப் பயன்படுத்தினர். இப்பொத்தான்கள் அணிவது கூடாது என்று விடாப்பிடியாக இருக்கும் ஓர் இனத்தார் இன்றும் அமெரிக்காவில் இருக்கின்றனர். மேனாட்டில் முன்னால் பெண்கள் அணிவதில்லை. 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்துதான் பெண்களும் தம் ஆடையில் பொத்தான்களைத் தைத்துக் கொண்டனர். இப்பொத்தான்கள் முன்பு விலையுயர்ந்த சாமான்களால் செய்யப்பட்டன.

-பொத்தான் புகுந்த புதுமை, ரா. சுந்தரேசன்,
தையற்கலை சுந்தரம்,
வெள்ளிவிழா மலர், 1972.

யோர்த்தும் காணப்பட்டனர் எனக் குறிப்பிடும் தன்மை, இவ்வுடையினை இவர்கள் உடுத்திய தன்மையைப் புலப் படுத்தும்.

சமணர் ஆடையையும் துறந்த நிலையினைச் சீவகனின் துறவுவழி,

மணியுறை கழிப்பது போல் பல்கலப்
பணிவருப் பைந்துகினீக்கிப் பாற்கடல்
அணிபெற வரும்பிய வருக்கனாமெனத்
திணிநிலத் தியன்றதோர் திலகமாயினான் (3028)

எனச் சிந்தாமணி நவிலும்.

## பொதுமக்கள்

எஞ்சியோரைப் பொதுமக்கள் என்ற நிலையில் நோக் லாம். பொதுமக்களை உயர்நிலை மாந்தர் தாழ்நிலை மாந்தர் என அவர்களின் வாழ்க்கைத் தரத்திற்கேற்பக் கொண்டு அவர் களின் உடை பற்றிய விளக்கங்கள் இவண் நவிலப்படுகிறது.

உயர்நிலை மாந்தராக ஐந்நிலத் தலைவன், செல்வந்தர், அரசனைச் சார்ந்தோர், தாழ்நிலை மாந்தராக மறவர், வேடர் போன்றோர் அமைகின்றனர்.

### உயர்நிலை மாந்தர்

சங்க இலக்கியத்தில் தலைவனின் உடையாகத் தானை கலிங்கம் காட்டப்படுகின்றது.

இருபிறப்பாளராகிய அந்தணர் காழக உடையினராகக் காட்சி தருகின்றனர். பெருங்கதையில் அந்தணர் வெண்டுகிலுடன் காட்டப்படுகின்றனர்.

பெருநிதிக் கிழவர் கலிங்கம் புரளும் தானையுடன் தோற்றம் தருகின்றனர். சிலம்பில் பெருநிதிக் கிழானின் மகனான கோவலன் தன் உடையைக் கூறை எனச் சுட்டுகின்றான்.

பாண்டியனது பொற்கொல்லன் மெய்ப்பையுடன் காட்டப் படுகின்றான்.

பெருங்கதையில் கணக்கர், திணைத்தொழிலாளர் போர்வை யுடனும் நெடு நுண்ணாடையுடனும் காட்டப்படுகின்றனர்.

இலங்கையில் அரக்கன், அரக்கியரை உத்தரீயம் அணிந்த தன்மையில் கம்பன் காட்டுகின்றான். உயர்ந்த மாந்தரையே கம்பன் உத்தரீயம் அணிந்த நிலையில் காட்டிச் செல்வதும், இலங்கை வளம் மிக்க நாடாகக் காட்சியளிப்பதும், உயர்நிலை மாந்தர் அனைவரும் உத்தரீயம் அணிந்திருந்திருக்கலாமோ என்ற எண்ணத்தைத் தருகின்றது.

இக்குறிப்புகள் உயர்நிலை மாந்தரின் உடுத்தும் நிலை பற்றிய ஒரு சில தெளிவுகளையும் தருவன.

செக்கரன்ன சிவந்து நுணங்குருவிற் கண்பொரு
புகூமொண் பூங் கலிங்கம் புரளும் தானை (மதுரை, 431-33.)

பெருநிதிக் கிழாரின் இவ்வுடையின் தன்மைக்கு, 'செக்கர் வானம் போன்று சிவந்த நுண்ணிய வடிவாலே காண்பார் கண்களை வெறியோடச் செய்து சிந்திவிழுமாறு போன்று ஒள்ளிய பூத்தொழில்களையுடைய ஆடைகளைப் பொன்னிட்ட உடை வாளோடே பொலிவுறக் கட்டி தின்னிய தேர்த்தட்டின் கட்பிரம்பிடத்தே ஆடையின் முன்றானைப் புரளா நிற்ப' என்ற உரையாசிரியரின் உரை விளக்கம் கலிங்கமாகிய ஆடையுடன், மேலாடை அணிந்தமையினையும் தெளிவாக்க வல்லது.

பொதுவாகக் காவலர் போன்றோரே சட்டை அணியக் கண்டோம். இவன் சிலம்பு, பொற்கொல்லனை மெய்ப்பை அணிந்தவனாகச் சுட்டுவது புதுமையாக அமைகிறது. ஆயின் இந் நிலை புலப்படுமாறில்லை.

பெருங்கதையில் கணக்கர், திணைத் தொழிலாளரின் உடுத்தும் நிலையினை,

புறங்காற் றாழ்ந்து போர்வை முற்றி
நிலந் தோய்புடுத்த நெடு நுண்ணாடையர் (1.32:63-4)

எனக் காண்கின்றோம். இவண் போர்வை புறங்கால்வரை தாழ்ந்து காணப்படும் நிலையும், ஆடை நிலந்தோயும் அளவிற்கு உடுத்திய நிலையும் அமைகின்றது. அரசர்கள் நிலந்தோயும் அளவிற்கு உடுத்தியதற்குப் பெருமிதம் காரணம் எனக் கண்டோம். எனவே அரசர்க்குரிய இத்தனித்தன்மை பின்னர் அனைவராலும் பின்பற்றப் பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

**தாழ்நிலை மாந்தர்**

உயர்ந்த மாந்தர் நிலை இவ்வாறு அமையத் தாழ்நிலை மாந்தர் பற்றிய குறிப்புகளும் ஒருசில தென்படுகின்றன.

சங்க இலக்கியத்தில் குறவரின் உடையாக மரனாருடுக்கை அமைய, சிந்தாமணி, வேட்டுவன் உடையாக இதனை இயம்பும். வேடனாகிய குகனின் உடையினைச் சொல்லப்போந்த கம்பன்,

காழமிட்ட குறங்கினன் கங்கையின்
ஆழமிட்ட நெடுமையினான் அரை
தாழவிட்ட செந்தோலன் தயங்குறச்
சூழவிட்ட தொரு புலி வாலினான் (650)

என அவனின் உடையாகக் காழம், தோல், புலியின் வால் என மூன்றையும் சுட்டுகின்றான். இம்மூன்றையும் இடையில் அணிந்த நிலைதான் இவண் தெளிவுறுகின்றதே தவிர, பிற உடுத்திய நிலை தெளிவுபடவில்லை. முதலில் குறங்கினில் காழம் அணிந்து அதன்மேல் தோலாடையினை அரைவரை தாழும்படி பொருத்தி இரண்டினையும் வெம்புலியின் வாலால் சூழ இணைத்திருக்கவும் கூடும். மற்றொரு பாடலில் குகனை,

வெற்றி வேற்சேனை யோடும்
　　வெறி பொறிப் புலியின் வெவ்வால்
சுற்றுறத் தொடுத்து வீக்கும்
　　அரையினன் (10505)

என்று சுட்டும் தன்மை, புலியின் வெவ்வாலை மட்டும் தனித்து யுடுத்திய தன்மையைக் காட்டுகின்றது.

'அச்சம் தரும் புள்ளிகளையுடைய புலியின் கொடிய வாலைச் சுற்றத் தொடுத்துக் கட்டிய அரையுடையவன்' என்னும் இதன் பொருள், பல புலியின் வால்களை அழகுபடத் தொடுத்து இடையைச் சுற்றியும் கட்டிய தன்மையை விளக்கி நிற்கும். கம்பன், குகனின் உடையில் புலியின் வாலுக்கு மிகுந்த சிறப்பளிக்கும் தன்மை அவன் வேட்டுவத் தொழிலின் மேன்மையினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்திருப்பதாகக் கொள்வதில் தவறில்லை.

இடையரின் உடையாக மாசுணுடுக்கையினையும் கருந்து வராடையினையும் சங்கப்பா காட்டும். சிந்தாமணி அத் துண்ணாடை என இதனைப் பகரும். எயினரின் உடை செந்து வராடையாக இருந்தது எனச் சங்கச்சான்றோர் உரைக்கின்றனர். ஆறலைக் கள்வர் துவர் செந்துவரா டையைக் கொள்ள, கள்வர் நீலக் கச்சுடன் காணப்படுகின்றனர். சங்ககால நிலை இவ்வாறு அமைய, நீலத் தானையராகக் கள்வரை இளங்கோ காட்டுவார்.

வள்ளுவனை வெண்டுகிலுடையனாகப் பெருங்கதை சுட்டும் கணி மேயுடை அணிந்த நிலையில் சூளாமணியில் சுட்டப்படு கின்றான்.

ஏவலாளர் 'படம் புக்கு' இருந்த நிலையினராகக் காணப்படு கின்றனர்.

பாணனின் ஏழ்மை நிலையைச் சங்கப்பா பல இடங்களில் சுட்டும்.

சிதாருடுக்கை முதாரிப்பாண (புறம். 138) என இவர்களின் சிதாருடுக்கை பேசப்படுகின்றது. நந்திக் கலம்பகத்தில் துணியரைச் சுற்றி, பரடு திறப்பப் பல்கடைத் திரிந்த பாணன் காட்டப்படுகின்றான் (23). கால்கள் தெரியும்படி, துண்டினை உடுத்துச் செல்லும் பாணனின் நிலை இங்கு விளக்கமாகிறது.

இரவலரின் உடையாக மணிமேகலை, துணிச்சிதர் அணிந்த மையைக் காட்டும். சிந்தாமணியும் இதனையே உரைக்கும். ஏழைக் கிழவனின் உடையாக நொசிந்த அறுவை காட்டப்படு கின்றது.

இம்முறைகளில் தாழ்ந்த நிலை மாந்தரின் உடை சுட்டப்படு கின்றதே தவிர, உடுத்தும் முறை மிகுதியாக விளக்கப்படவில்லை.

## புலவர்

ஏழ்மை நிலையிலிருப்பினும் தன் கல்வித் தகுதியால் மதிப்புப் பெற்றநிலை காரணமாக இவரைத் தனித்து நோக்கலாம்.

பாணன்போன்றே புலவரும் வெள்ளிய அரையில் சிதைந்த சிதாருடன் காட்சி தரும் நிலை சங்கப் பாக்களில் பல இடங்களில் சுட்டப்படும் ஒன்று. மேலாடைபற்றிய எண்ணமின்மையும் அரையாடையும் இழிந்த தன்மையில் காட்டப்படும் தன்மையும் சிறியதொரு உடையினையே இவர்கள் அணிந்திருக்கக் கூடும் என்பதைப் புலப்படுத்த வல்லன.

நம் நாட்டு மக்களின் நிலை இவ்வாறு அமைய தொழிலின் பொருட்டு வந்த பிறநாட்டினரின் உடைபற்றியும் இலக்கியங்கள் சில எண்ணங்களைத் தந்து அமைகின்றன.

மெய்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர் (முல்லை. 60-61)
படம் புகு மிலேச்சர் உழையராக (முல்லை. 66)

என யவனர், மிலேச்சர் படம், மெய்ப்பை அணிந்த தன்மை இயம்பப்படுகின்றது. இவர்களைப் பற்றி, வேங்கடசாமி நாட்டார் தம் சிலப்பதிகார உரையில், 'எகிப்து கிரீசு முதலிய பிறநாடுகளில் இருந்துவந்த வணிகர் தொழிலாளர் முதலாயி னோர் யவனர் எனப்படுவர். இன்னோரைச் சோழகர் என்றும், மிலேச்சர் என்றும் கூறுவர் தொல்லுரையாளர்கள்' (பக்கம். 111) என உரைக்கின்றார். எனவே வெளிநாட்டினரின் பொதுப் பெயர் இவை என்பதும், இவர் அனைவரும் சட்டையுடன் தோற்ற மளித்தனர் என்பதும் இவண் உணரலாகும் நிலையாகும்.

ஆடவர் ஆடைகளை, பொதுநிலையில் இக் குறிப்புகள் வழி நோக்க,

(1) அரசர், உயர்ந்த நிலையில் உள்ள பிற ஆடவர் சிறந்த ஆடையுடனும், மேலாடையுடனும் காணப்பட்டனர்.

(2) ஏழை மக்கள் இடையாடை மட்டுமே அணிந்தனர். இவர்களில் பலர் துவராடையுடன் காட்டப்படுதலுக் குரிய காரணம் புலப்படுமாறில்லை.

(3) குறிப்பிட்ட தொழில் மாந்தர் சட்டையுடன் காணப் பட்டனர்.

(4) உயர்ந்தோர் நிலந்தோயவும், தாழ்ந்தோர் சிறு இடை யாடையினையும் உடுத்தினர்.

போன்ற செய்திகள் அறிய வருகின்றன.

### மகளிர்

மகளிரிலும் ஆடவர் போன்று பல பிரிவினரையும், பிரிவுக்கு ஏற்ப உடையினையும் காணலாம்.

### அரசியர்

சங்கப் பாக்கள், பூந்துகில், கலிங்கம், உடுத்திய தன்மையில் இவர்களை இயம்பும்.

பெருங்கதையில் துகில் பட்டுடன் வட்டுடையும் (2.4:122) அணிந்த நிலையில் அமைகின்றனர். பின்னைய இலக்கியங்களும், சிறந்த உடையினை இவர்களுக்குரியதாகச் சுட்டும். மேலாடையும், கச்சும் அணிந்தமையினையும் சில குறிப்புகள் தெரிவிக்கின்றன. இவர்கள் உடுத்தும் தன்மையினையும் சில நிலைகள் வழியே காணலாம்.

கோடி நுண்டுகிலை, கொய்து கொண்டுடீஇயதாகப் பெருங்கதை உரைக்கும் தன்மையில் (2.5:164-66) கொய்து, உடனே தைக்காத துணியினை அவ்வாறே உடுத்திய தன்மையைக் காண்கின்றோம்.

கதிர் நிழற் கவாப் பதும நிறங் கடுக்கும்
புதுநூற் பூந்துகி லிருமடியுடீஇ (1.42:144-45)

என, நீராடிய பின்னர் துகிலினையுடுக்கும் தன்மையில் வாசவதத்தையைக் காட்டும் பெருங்கதை, இந்நிலை, பூந்துகிலினை இருமடியாக உடுக்கும் தன்மையைத் தெளிவாக்குகின்றது.

படாஅத் தன்ன படிவத்தாகிய
வடகப் போர்வையை வனப்பொடு திருத்தி
(பெருங் 1.45:9-10)

காஞ்சனமாலை காணப்படும் நிலை, மேலாடை அணிந்த தன்மையை விளக்க வல்லது.

படாம் போன்று மார்பின் மேல் அணியப்பெற்ற மேலாடையின் தன்மை இங்குக் குறிக்கப்படுகிறது.

சிந்தாமணி, போர்வை போர்த்துக் காணப்படும் தன்மையை,

முழு மெய்யும் சிலம்பி வலந்தது
போற் போர்வை போர்த்துச் செல்லலுற்றான் (340)

எனச் சுட்டும்.

பவளக் கொம்பைச் சிலம்பி வலந்ததுபோல் எனப் போர்வை போர்த்தல் உவமிக்கப்படுகின்றது. சிலம்பி நூலால் பவளக் கொம்பு மறையாதது போன்று முழுமெய்யினையும் போர்க்கும் தன்மையிலும், ஆடையின் மென்மையால், மேனி மறையாத நிலை இவண் சுட்டப்படுகின்றது. இதனால் இம் மகளிர் சில நேரங்களில் உடல் முழுவதையும் மறைத்தலும் உண்டு எனத் தெரிகின்றது.

உயர்நிலை மகளிர்

உயர்நிலை மகளிர் அரசியர்போன்றே சிறந்த ஆடையுடுத்திக் காட்சி தருகின்றனர்,

பட்டும், துகிலும், கலிங்கமும், தூசும் எல்லாக் காலங்களிலும் இவர்கள் பயன்படுத்தும் சிறப்புப் பெற்றன. இவற்றுடன் பூங்கரை நீலத்தையும் இவர்தம் உடையாகச் சங்க இலக்கியம் காட்டும்.

சங்க இலக்கியத்தில் சிறப்புப் பெறும் தழையுடையினை ஐந்நில மகளிரும் உடுத்தித் தங்களை அழகுபடுத்தியுள்ளனர். பரத்தையும் இதனை அணிந்து காணப்படுகின்றாள்.

அய வெள்ளாம்பல் அல்லிஅம் பகை நெறித்தழை
தித்திக் குறங்கின் ஊழ் மாறலைப்ப

எனக் குறுந்தொகைப் பாடல் ஒன்று (293) இதனை நவிலும். துடையில் மாறி மாறி அசையும் தன்மையுடன் இது அமைதல், உடுத்திய தன்மையை இயம்ப வல்லது. விழவு, விற்பனைபோன்ற காலங்களில் இதனையணிந்தனர்; இடையில் மட்டுமே அணிந்தனர் என்பவற்றையும் இலக்கியங்கள் காட்டுகின்றன.

பூங்கரை நீலம் என்ற உடையினைப் புடைதாழ உடுத்தியிருந்தனர் எனச் சுட்டும் தன்மை, ஆடவர் போன்று மகளிரும் நிலம்தாழ உடுத்தியமையினைச் சிறப்பு எனக் கருதியிருந்திருக்கலாம் என்ற எண்ணத்தைத் தருகின்றது. ஏனெனில் சங்கப் பாடல்கள் சுட்டும் இவ்வாடையினை இரு இடத்தும் தலைவியின் ஆடையாகவே காண்கின்றோம். தாழ்நிலை மகளிர் உடுத்தாமையும் இவ்வெண்ணத்தினை உறுதிப்படுத்துவதாகும்.

சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகள் மாதரியிடம் கண்ணகிக்குத் தூமடிக் கொடுக்கச் சொல்லும் தன்மை (15:134) அவர்களின் தூமடி யுடுக்கும் இயல்பினை இயம்பும். மணிமேகலையில் ஆதிரையின் உடையாகக் கூறை (16:30) சுட்டப்படுகின்றது. பின்னரும் இம்மரபு தொடருகின்றது.

அரசியர் போன்று இவர்களும் மேலாடை அணிந்தனர். தலைவி அந்துகில் தலையினைக் கொண்டு, தலைவனின் வியரினைத் துடைக்கும் தன்மை (நற். மரு. 120), இவளது மேலாடை பற்றிய உணர்வினைத் தரும். காந்தர்வதத்தையின் தோழி தூத்துகிற் றோகை அணிந்து காட்சிதருகின்றாள் (சீவக. 762). சிந்தாமணி மகளிர் மேலாடையணிந்தமையினை வடகமெனச் சொல்லிச் செல்லும் (462).

மகளிரில் ஒருசிலர் கச்சணிந்த குறிப்புள்ளது. பெருங்கதையில், கச்சினர் கண்ணியர் கதிர் வெண் வளையினராக இவர்கள் சுட்டப்படுகின்றனர் (1.34:121).

உத்தராசங்கம் இட்டு ஒளிக்கும் கூற்றமே (822)

என்று கம்பனும் மகளிர் மேலாடையைக் காட்டுவான். கம்பன் பலவிடங்களில் மகளிர் கச்சு அணிந்தமையினைச் செப்புவான்.

வார்காத்த வனமுலையார் (பால 1736)

'வீக்கப்பட்டன'(144)எனச் சூளாமணி கச்சு பற்றிய எண்ணத்தை தெளிவாகப் பேசும்.

**தாழ்நிலை மகளிர்**

சங்க இலக்கியம் புலவன் மனைவியை மாசொடு குறைந்த உடையளாகக் (புறம். 159) காட்டுகின்றது. விறலியரின் உடையாகத் துகில் அமைகிறது (பதி. 6:4). கட்டுவிச்சி கலிங்கம் அணிந்துள்ளாள் (பெருங். 1.37-239).

பெருங்கதையில் வேலை செய்யும் மகளர் துகிலுடனும் கச்சையுடனும் காணப்படுகின்றனர் (பெருங். 1.43:124-26).

பெருங்கதையில் சவரர், புளிஞர் மகளிர் தழையுடையுடன் காணப்படுகின்றனர் (1.55:56-57). சிந்தாமணியிலும் வேட்டுவப் பெண்ணின் உடையாகத் தழை சுட்டப்படுகின்றது (1231). அம்பிகாபதிக் கோவை எயின மகளைக் குன்றிமணி கோத்தணிந்த மார்பினளாகக் காட்டும் (403).

சேடியர் வம்புடன் காணப்பட்டதை நெடுநல்வாடை இயம்பும்.

கவரிவீசும் மகளிர் கதிர் முலை, கச்சின் வீக்கியும் (சீவக. 541) வாயிற் காவல் மகளிர் கச்சு அணிந்தும் தோற்றம் தரலை (சீவக. 2015) நாம் காண்கின்றோம்.

'முலைமிசைக் கச்சொடு கலையும் மூட்டுஅற' கம்பன் (1070) விரைந்து செல்லும் பணிப்பெண்டிரைக் காட்டுவான்.

இந்நிலை கச்சுக் கட்டின தன்மையினை விளக்கி அமைகின்றது. வீக்குதல், யாத்தல் என்ற சொற்கள் கச்சினை இறுக்கிக் கட்டினர் என்பதையுணர்த்தும் நிலையில் அமைய இவண் பூட்டு அவிழ்ந்த என்று சொல்லும் தன்மை, கச்சின் முடிப்பு என்பதையுணர்த்தி, முடிச்சுப் போட்டுக் கச்சினை இறுக்கிக் கட்டியிருந்தனர் என்பதைத் தெளிவுறுத்துகின்றது.

சூளாமணி ஏவன் மகளிர் ஏகாய மிட்டனர் (1534) எனச் சுட்டும்.

துறவில் மகளிர்

சிலம்பில் கவுந்தியடிகள் சுவன் மேலறுவையளாகக் காட்டப் பட, இவளது துகில் பற்றிய எண்ணம் விளக்கமுறவில்லை. பின்னைய இலக்கியங்களில் துறவற மகளிர் உடைகள் மதத்திற்கு ஏற்றாற் போன்று மாறுபாடாக அமைவதைக் காணலாம்.

சமண மத மகளிர் துறவில் மார்பில் துகில் அணிகின்றனர். இதனை, சீவகன் துறவின்போது, மகளிரும் துற்வறம் பூண்ட ஞான்று,

பானிலாக் கதிரென அம்மென் பைந்துகில்
தானுலாத் தடமுலை முற்றம் சூழ்ந்தரோ (2635)

எனக் காட்டுகின்றார் தேவர். மேலாடை அணிந்தமை ஈண்டு தெளிவாக இயம்பப்படுகின்றது.

சுயம்பிரபை தவக் கோலத்தில்,

மருங்கு அலசு வற்கலை வரிந்து, வரிவாளம்
பொரும், கவசம் ஒக்கும், முலைமாசுபுடைபூசி
பெருங்கலை மதித் திருமுகத்த பிறழ் செங்கேழ்க்
கருங்கயல்களின் பிறழ் கண் மூக்கின் நுதிகாண (கம்ப. 4672)

காட்சியளிக்கும் தன்மையைக் கம்பன் காட்டுகின்றான்.

பக்கம் வருந்தும்படியாக வற்கலையை இறுகக் கட்டிச் சுயம் பிரபை காட்சி தரும் தன்மை இவண் அமைகின்றது. வற்கலை ஆடையை இடையில் கட்டிய இவள், மேலாடை அணியவில்லை என்பதை, 'முலைமாசு புடைபூசி' என்னும் எண்ணம் வெளிப் படுத்துகின்றது. சமணத் துறவியரின் நிலையினின்றும் மாறுபட்ட நிலையில் இவர்களின் வேடம் அமைவது ஈண்டு வெளிப்படை.

இவ்வாறு மகளிரின் உடைகள் அமைய, பொது நிலையில் காணப்படும் மேலாடை பற்றி முரண்பட்ட எண்ணங்கள் நிலவுவ தால் அதன் உண்மை நிலையினை இவண் நோக்கலாம்.

தமிழ் மகளிர் கச்சு, மேலாடையினைச் சில நேரங்களில் அணிவதும், பல நேரங்களில் அதனை அணியாமையும் இவற்றை முக்கிய மெனக் கருதாத அவர்களின் மனநிலையைத் தெளிவாக்கு கின்றது. குங்குமம் சந்தனம் முதலிய பூசி அழகுபடுத்தும்

தன்மைக்கே முதன்மை கொடுத்தனர் என்பது இலக்கியப் பயிற்சிகள் தெளிவாக்கும் ஒன்று.

இன்றைய நிலையில் மகளிர் மார்பாடைக்குத் தனி மதிப்பும், முக்கியத்துவமும் கொடுத்தலையும், மானம் காத்தலுக்கு இன்றியமையாதது என்று கருதுதலையும் நோக்கும் தமிழருக்குத் தமிழ் மகளிரின் மேலாடைபற்றிய ஐயம் உள்ளது. அணிந்தனர் என்பது ஒரு சாராரும், அணியவில்லை என்பது இன்னொரு சாராரும் கொள்ளும் எண்ணம். தமிழரின் உடுத்தும் நிலை விளக்கியதுபோன்ற மேலும் சில இலக்கிய எண்ணங்களின் வழி நின்று இக்கருத்தை ஆராயலாம்.

சங்க இலக்கியத்தில்,

அம்பணைத் தடைஇய மென்றோண் முகிழ்முலை
வம்பு விசித் தியாத்த வாங்கு சாய் நுசுப்பின்
மெல் வியர் மகளிர் நல்லடி வருட (நெடு. 149-51)

என,சேடியர் கச்சு அணிந்த குறிப்புத் தெளிவாதல் போன்று பிற மகளிர் அணிந்த குறிப்புத் தெளிவாகவில்லை. மேலாடை அணிந்தமையும் ஆங்காங்கே ஓரிரு இடங்களில் சுட்டப்படுகின்றதே யொழிய குறிப்பாக மகளிர் அனைவரும் அணிந்தமை பற்றிய சான்று இல்லை.

கடாஅக் களிற்றின் மேல் கட்படாம் மாதர்
படாஅ முலை மேல் துகில் (1087)

என்பது தெய்வப்புலவர் கருத்து.

இவண் மாதரின் மார்பாடை களிற்றின் முகபடாத்திற்கு உவமிக்கப்படுகிறது. மகளிர் மார்பை மறைக்கத் துகில் அணிந்தனர் என்பதே ஈண்டு தோன்றும் பொருள்.

இன்று யானைக்குப் பொதுவாகப் படாம் அணிதல் இல்லை. சிறப்பு நாட்களில் மட்டும் சில யானைகள் படாம் அணிதலைப் பெறுகின்றன. அதுபோன்று அன்று அரசர், செல்வர் போன்றோர் யானைக்கு அணிந்திருக்கக் கூடும். இதனையும் எல்லா நேரங்களிலும் அணிவித்திருக்க முடியாது. இதோடு ஒத்த நிலையில் மேல்நிலை மகளிர் எப்போதாவது சில பொழுதுகளில் மார்பில் துகில் அணியும் நிலையை உவமித்திருக்கலாம் குறளாசிரியர்.

அடுத்து, யானைக்குப் படாமிடுதல் அழகு கருதியே தவிர மறைத்தல் நோக்கமன்று. இதனைப் போன்றே மகளிரும் அழகு

கருதி மார்பில் துகில் இட்டனரே தவிர, மறைத்தல் நோக்க மாகப் புலப்படுமாறில்லை. இதற்குப் பின்வரும் இலக்கியக் கூறுகளும் துணை நிற்கின்றன.

சிலப்பதிகாரத்து மகளிர் இடையாடை பற்றிய பல எண்ணங் களைக் காண்கின்றோம். ஆயின் மார்பில் ஆடை அணிந்ததாக யாண்டும் குறிப்பில்லை. மார்பை மறைத்தல் வேண்டும் என்ற எண்ணமும் அங்குக் காண முடியவில்லை.

1. சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர் (1:56-7)

2. திருமுலைத் தடத்திடைத் தொய்யிலன்றியும்
ஒரு காழ் முத்த மொடுற்றதை என்கொல் (2:67-70)

3. அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
மென் துகில் அல்குல் மேகலை நீங்க
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள் (4:47-49)

4. பிறங்கிய முத்தரை முப்பத்திருகாழ்
நிறங்கினர் பூந்துகில் நீர்மை யினுடீஇ (6:87-8)

5. அரத்தப் பூம்பட்டு அரைமிசை யுடீஇ (14:86)

எனும் பகுதிகளை இங்கு சான்றாக நோக்கலாம். மாதவியின் பல அழகுக் கோலத்தினை நிரல்படக் கூறுங்கால் இடையாடை சுட்டப்படுகின்றதே தவிர மேலாடை சுட்டப்படவில்லை. இதற்கு, நடனமகளிரின் இயல்பே இது[6] எனக் காரணம் கொள்ள லாம் எனினும் மென் துகில் அல்குலில் மேகலை நீங்க, கொங்கை முன்றிலில் குங்குமம் எழுதாத நிலையுடைய கண்ணகியைக் காண் கின்ற பொழுது, துன்பச் சூழலிலும் இடைத்துகிலை விடாது, மார்பில் குங்குமம் பூசாத நிலைதான் சுட்டப்படுகின்றதே தவிர மார்பாடை சுட்டப்படவில்லை. எனவே குலமகளான கண்ணகி யின் நிலையே இவ்வாறு அமைய, இவ்வியல்பு அச்சமுதாய நிலையே என அறுதியிட்டுக் கூறலாம்.

---

6. It is further described that the girls while showing dance performance wore a thin dress in order to exhibit the grace of their body, Indian Costume Coiffure & Ornament — Sachidanand Sahay, page-43.

நுரை புரை கலிங்கம் ஒருமுலைப் புதைப்ப (பெருங்.2:5:86)
வடகப் போர்வையை வனப்பொடு திருத்தி
(பெருங். 1:45:8-11)

என்னும் எண்ணங்கள் பெருங்கதையில் அமைவன.

கலிங்கம் மார்பை மறைத்தல் தேவை என்றால் ஒரு பகுதியை மட்டும் மறைத்தல் என்பது ஒப்புக் கொள்ள முடியாதது. வடகப் போர்வையை வனப்பொடு திருத்தும் தன்மை அழகுபடுத்துதலின் நோக்கத்தையே நம்முன் தோற்றுவிக்கின்றது. எனவே ஈண்டும் மேலாடை அணியினும் அதன் நோக்கம் அழகுபடுத்தலே என்பது வெளிப்பட்டு நிற்கக் காணலாம்.

சீவக சிந்தாமணியில் பெண் துறவியர் மேலாடை அணிந்த நிலையைக் காட்டும்போது, 'உத்தரியம் இடைசுவல் வருந்த அணிந்த நிலை' (சீவக. 472) எனவும், 'அந்நுண்டுகிற் கல்லரத் தமல் குலது வருத்த' (சீவக. 1783) அணிந்ததாகவும் புலவர் விளக் குவார். சாதாரணமாக மகளிர் மேலாடை அணியும் வழக்கு இருந்திருப்பின் அது பழக்கமாகி இருக்கும். எனவே வருத்த என்ற வினையைப் புலவர் பெய்யத் தேவையிருந்திருக்காது. புதிய தாக அணியும் தன்மை தான் வருத்தத்தைக் கொடுப்பது என்ற நிலையில் துறவியர் புதுமையாக இதனை அணிந்தனர் என்பதை உணர முடிகின்றது.

இந்தியா முழுமையும் மகளிர் மேலாடை அணிதல்லை முக்கிய மெனக் கருதாத நிலையே இருந்திருக்கக்கூடும் என்ற எண்ணம் கஞ்சுகம் அணியாத துறவி தண்டனை பெற்றாள் என்ற கருத் தினை அறிய ஏற்படுகின்றது. பொதுவாக அணியும் வழக்கு இருந்திருப்பின் அணிந்திருப்பாள். வழக்கம் இல்லாத காரணத் தால்தான் அணியாமல் சென்று தண்டனை பெறுகின்றாள். கம்பனும் சீதையின் கோலம்கோடும் தன்மையினை அழகுற எடுத் தியம்பும்போது மேலாடையைப் பற்றிக் குறிப்பிடாது செல்லும் தன்மையைக் காண்கின்றோம்.

உருவிளை பவள வல்லி பால்நுரை உண்டதென்ன
மருவிளை கலவை ஊட்டி குங்குமம் முலையின் மாட்டி
கருவிளை மலரின் காட்சிக்காசு அறு துாசும் காமர்
திருவிளை அல்குற்கு ஏற்ப மேகலைத் தழுவச் சேர்ந்தார்
(கம்ப. 10140)

செந்நிறம் மிக்கு விளைந்த பவளக்கொடி பால் நுரையால் மூடப்பட்டது என்னும்படி மணம் நிறைந்த வெண்ணிறக் கலவைச் சாந்தினைப் பூசிக் குங்குமக் குழம்பினைக் கொங்கையில்

அப்பிக் கருவிளை மலர்போலும் தோற்றத்தினையுடைய குற்ற மற்ற நீலநிறப் பட்டினையும் அதன்மேல் காமனது செல்வம் விளைகின்ற இடைக்கு ஏற்ப மேகலையினையும் பிராட்டியின் மேனியில் பொருந்த அமைய அணிந்தனர் என இவண் அமையும் இவ்விளக்கம் மார்பில் குங்குமத்தால் அழகுசெய்யப்பட்ட தன்மையைக் காட்டி மேலாடையின்மையை எடுத்தியம்பும் கல்லாடமும் மணப் பெண்ணின் மேலாடை அணியாத கோலத் தினைச் சித்திரிக்கின்றது.

> மணங்கொள் பேரணி பெருங்கலின் மறைத்தது என்று
> எழுமதிக் குறைந்த முழுமதிக் கருங்கயல்
> வண்டு மருவியுண்டு களியாது
> மற்றது பூத்த பொற்றிதழ் தாமரை (18:16-19)

திருமணத்தின் பொருட்டு அணிந்து கொண்ட பேரணி கலன் களாகிய பாசடை பெரிய அழகென்னும் வெள்ளத்தை மறைத்த தென்று, முலைக் கண்களாகிய வண்டு பொருந்தி தேன் நுகர்ந்து மகிழாமல் அவ்வண்டு திகழாநின்ற முலைகளாகிய இரண்டு பொன் தாமரை அரும்பி மலர்ந்த நெஞ்சாகிய நீர் நிலையில்...... என்று இதன் விளக்கம் அமைகின்றது. இவண் அணிகளால் மறைத்தமை பற்றிய எண்ணம் வெளிப்படுகின்றதே தவிர மேலாடை பற்றிய குறிப்பில்லை.

மேலும் சங்க காலம் முதற்கொண்டு மார்பில் ஆடை பெறாத முக்கியத்துவத்தை, அனைத்து இடங்களிலும் வனப் பூட்டும் நிலையே பெறுவதைப் பல சான்றுகள் வழி உணரலாம்.

> பொரிப்பூம் புன்கின் எழில்தகை யொண்முறி
> சுணங்கணி வனமுலை அணங்கு கொளத் திமிரி (நற்.பாலை.9)

என நற்றிணை, மார்பில் தளிர் அப்பும் தன்மையை உரைக்கும்.

சூரரமகளிர்க்கு ஏற்றியுரைக்கும் தன்மையிலும் மகளிர் வழக் கமென இதனை உணர வைக்கின்றார் திருமுருகாற்றுப்படை ஆசிரியர்.

> திண்காழ் நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்
> தேய்வைத்; தேம் கமழ் மருதிணர்
> கடுப்பக் கோங்கின் குவிமுகிழ் இளமுலைக்கொட்டி
> விரிமலர், வேங்கை நுண் தாது அப்பி (திருமுருகு.32-36)

என அமையும் இவ்விளக்கம், சந்தனத்தை மார்பில் பூசி, அதன் மேல் வேங்கைப் பூவினது நுண்ணிய தாதை அப்பும் தன்மையை

இயம்புவது அம்மக்களின் அழகுணர்வுடன் அதற்குக் கொடுத்த சிறப்பிலேயும் காட்டவல்லது.

மணிமேகலையில் ஆதிரை ஒள்ளெரிபுகல் பற்றிக் கூறுமிடத்து,

படுத்துடன் வைத்த பாயற் பள்ளியும்
உடுத்த கூறையும் ஒள்ளெரியுறா அது
ஆடிய சாந்தமும் அசைந்த கூந்தலிற்
சூடிய மாலையும் தொன்னிறம் வழாஅது (16:29-32)

எனச் சுட்டுகின்றார் சாத்தனார். கூறையுடன், சாந்தம் தான் ஈண்டும் இடம் பெறல் காண்கின்றோம்.

சிந்தாமணியில் காந்தர்வதத்தையின் கோலத்தைக் காட்டுகின்ற பொழுது,

வெண்ணிற மழையின் மின்போல் வெண்டுகிற் கலாபம்வீக்கி
கண்ணிற முலையுந் தோளுஞ் சந்தனத் தேய்வை கொட்டித்
தொண்ணிறச் சிலம்பு செம்பொற் கிண்கிணிபாதம் சேர்த்திப்
பண்ணிறச் சுரும்பு சூழும் பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார் (624)

என இயம்புவார் திருத்தக்கதேவர்.

சந்தனக் கோலம் எழுதப்பெற்ற சீதையின் மார்பு சித்திர வனமுலை எனக் கம்பனால் சுட்டப்படுகின்றது. மேலும்,

பாசிழை மகளிர் பகட்டு வெம்முலை
பூசிய சந்தனம் புழுகு குங்குமம்
மூசின முயங்கு சேறு உலர, மொண்டு உற
வீசின நறும் பொடி விண்டு வாடையே (கம்ப. 4362)

என, குளிர்காற்று நறுமணப் பொருட்கள் காரணமாக நறுங் காற்றாகின்றது.

அகிற் சேறு அணிந்த முலைத் திருமங்கை (கம்ப. 13) என்ற பாடலடி, அகிற் குழம்பினையும் மார்பில் பூசிய தன்மையை விளக்க வல்லது.

அம்பொன் செய் கலாப அல்கு
 வந்தழை புனைந்து வஞ்சிக்
கொம்பஞ்சு மருங்கு னோவக்
 குவிமுலை முறி கொலக்டப்பி (1653)

என, சூளாமணியில் தேவியர் பொழில்விளையாட்டு ஒப்பனை யில் மார்பில் தளிரினை அப்பும் தன்மை நவிலப்படுகின்றதைக் காணலாம்.

இவற்றினின்றும் பல்வேறுபட்ட கோலங் காணும் நிலை யிலும் மேலாடையினை விட, பிற சந்தனம், குங்குமம், அகிற் குழம்பு, தாது போன்றவற்றிற்கே முக்கியத்துவம் கொடுத்தனர் மகளிர் என்பது வெளிப்படை.

தாரை விதவைக் கோலத்தில் குங்குமக் கலவையும் சந்தனக் குழம்பும் பூசாத மார்புடன் தோற்றம் தருவதைக் (4425) கண்ட இலக்குவன் தன் தாயரை நினைத்து இரங்கும் நிலை கம்பனில் அமைகின்றது. மங்கல மகளிர்க் குரியதொரு சிறப்புப் பொரு ளாக இவற்றைக் கொண்டு இருந்திருக்கலாம் என்னும் எண்ண மும் இதனால் எழுகின்றது.

பிற அறிஞர் எண்ணங்களும் மேலாடை முக்கியத்துவம் பெறவில்லை எனும் கருத்திற்குத் துணை நிற்கின்றன. சான்றாக, 'அக்காலப் பெண்டிர் இடுப்பிற்குமேல் எவ்வித ஆடையும் அணிந் ததாகச் சிற்பங்களைக் கொண்டு கூற முடியவில்லை' என்னும் மா. இராசமாணிக்கனார்[7] எண்ணத்தைச் சுட்டலாம். மகாபலி புரச் சிற்பங்கள் பற்றிக் கூறிச் செல்லும் அறிஞரின் பல் எண்ணங் களும் இக்கருத்திற்கு ஏற்பவே அமைகின்றது.[8] இந்தியாவில்

---

7. பத்துப்பாட்டாராய்ச்சி - மா. இராசமாணிக்கனார், பக்கம்-510.

8 Women are sometimes depicted with a breast-band (Kaccu). These breast bands are without any shoulder straps. Neither Parvathi not Lakshmi nor Budevi is depicted with the breastband. But female quardians the goddess Durga and celestial nymphs, The great penance panel, have it. The Queens of Mahendra and Narasimha are depicted bare about the waist. But their bodies would have been painted with Kunkum sandal paste and Chunnam.

It is difficult to believe formost Indians of today that Indian women of all classes went about bare from the waist upwards (as do the Balinese) for many hundreds of years. Neverthless this is a fact that shows from thousands and ten thousands of sculptures and paintings. The evidence is not only overwhelming it is obsolutely conclusive. Anyone with eyes can see that in the whole history

மகளிர் நிலை பற்றிய சார்லஸ் பேப்ரி கூற்றும் இதனை உறுதிப் படுத்துமாறு அமைகின்றது.

இன்றைய நிலை கொண்டும் இதனை நோக்கலாம். தமிழகம் பண்டு சேர, சோழ, பாண்டிய நாடு என்ற முப்பிரிவு களாக இணைந்திருந்த நிலையில், அனைவரும் தமிழரே. எனவே இன்று மலை நாட்டில் வாழும் மகளிரில் சிலர் மார்பாடைக்கு முக்கியத்துவம் கொடுக்காது இருக்கும் நிலையை, அன்றைய தமிழ் மரபின் எச்சமாகக் கொள்ளலாம். இன்று தமிழ் நாட்டி லும் சில இடங்களில் சேலையைக் கொண்டு மார்பை மறைத்தல் தவிர, ரவிக்கை போன்றவற்றைப் பயன்படுத்தாத நிலையையும் இவண் சுட்டலாம். இவற்றால் பண்டைத் தமிழக மகளிர் மேலாடைக்குச் சிறப்பளிக்கவில்லை என்பது தெளிவு.

## ஆடையும் அணியும்

மகளிரின் உடையுடன் அணிகலன்களும் பங்குபெறுவதனை இப்பகுதி பேசுகிறது. உடுத்துதலில் ஒரு முறைமையாகப் பொது நிலையில் காணப்படுவதால் இஃது இவண் விளக்கப்படுகிறது.

இன்று அரை ஞாணின் மேல் உடையுடுத்தும் இயல்பும், உடையின் மேல் ஒட்டியாணம் போன்ற அணிகள் அணிவதும்

---

of Indian art from the earliest times to approximately the 12th Century A.D. woman are invariably shown (with the sole exception of foreign fashions at one period) as wearing no garment to cover their breasts....

The Greaks like many other people, no doubt depicted the nude with relish, but they have thousands of other illustrations of every style of dress worn at various times by all classes of Greeks, Men and women.

But in ancient Indian art all women are always shown with a bare upper body. - Mahapalipuram studies. - Gift Siromoney, P. Dayanandan, Dress and Ornament Pallava Peroid, Page. 93

9. The first recorded examples of the Choli, the bodice, or blouse are found to my knowledge in the Pre-Mughal miniature paintings of Gujarat, mostly Jain religious manuscript illumination.

—A History of Indian Dress, Charles Fabri, General Introduction.

தமிழரின் ஒரு பழக்கமாகும். இவ்வியல்பு அன்றே தமிழரிடம் பொருந்தயிருந்த ஒன்று என்பதை இலக்கியங்கள் வழியே நாம் பெறுகின்றோம்.

பல்காழ் வீடுறு நுண்துகிலினூடு வந்து இமைக்கும் தன்மையில், நற்றிணை (பாலை. 366) நுண்துகிலின் வழியே இமைக்கும் மேகலையைச் சுட்டுகின்றது.

சிலம்பில்,

பிறங்கிய முத்தரை முப்பத்திரு காழ்
நிறங்கினர் பூந்துகில் நீர்மையின் உடீஇ (6:87-88)

என மாதவியின் அழகுக் கோலத்தில், மேகலையைத் துகிலின் உள் அணியும் தன்மை பேசப்படுகின்றது. இதனை, முப்பத்திரண்டு வடத்தினாற் செய்த விரிசிகை என்ற மேகலை என்பர் அடியார்க்கு நல்லார். இதற்கு, 'ஆடைகளில் முத்தினைக் கோவையாக இணைத்துத் தைத்து உடுத்தல் உண்டு; இது விரிசிகை எனப்படும்' என மற்றுமொரு எண்ணத்தையும் காண்கின்றோம்.[10]

ஆடையுள் கலாபம் இடம்பெறலை,
கலாபம் புதைத்த நிலாவெண்டுகில் (பெருங். 2.5:86)

நிலாவுறழ் பூந்துகின் நெகிழ்ந்திடைத் தோன்ற
கலாபப் பல்காழ் கச்சு விரிந்திலங்க (5.1:137-38)

எனப் பெருங்கதை இயம்புகின்றது.

'தமர் பொதிர்ந்தெனத் துகில் தரித்த காஞ்சியர்' எனச் சூளாமணியும் கலையினையும் காஞ்சியினையும் இடையில் ஆடைக்குள்ளே அணிந்த மகளிரைக் காட்டுகின்றது.

இப்பகுதிகள் துகிலின் உள்ளே அணிந்துள்ள அணியின் இயல்பினை விளக்கி, மகளிரின் பழக்கத்தைப் புலப்படுத்துகின்றன.

துகிலின் மேலும் அணிந்து தம்மை அழகுபடுத்திக் கொண்டமையும் சில குறிப்புகளால் விளக்கம் பெறுகின்றது.

---

10. சிலம்புச் செல்வம், மு. சுப்பிரமணியன், பக்கம்-22.

சோறமைவுற்ற நீருடைக் கலிங்கம்
உடையணி பொலியக் குறைவின்று வைகி (மதுரை. 721-2)

எனுங்கால், உடையணி பொலியும்படி கலிங்கம் உடுத்திய தன்மை இவண் விளக்க முறுகின்றது. பட்டுடை சூழ்ந்த காசு (468) என்ற சிந்தாமணிப் பாடலும் இத்தன்மையினை நவில்கின்றது.

அணிகலனுடன் இணைத்துப் பேசப்படும் இடங்கள் அனைத்தும் அரசியர், உயர்நிலை மகளிருடனேயே அமைவதால் பொருள்வளம் மிக்கோர் இயல்பாக இதனைச் சுட்டலாம். சிறப்பான துகில், கலிங்கம், பட்டு போன்ற அரையாடைகளுடனேயே இவ்வணிகள் இடம் பெறுவதும் குறிக்கற்பாலது.

மகளிரின் இவ்வாடை பற்றிய எண்ணங்கள் அனைத்தையும் ஒன்றினைத்து நோக்க:

(1) ஆடவர் போன்றே இவர்கள் உடைகளிலும் ஏற்றத் தாழ்வு காணப்பட்டது.

(2) மேலாடை முக்கியத்துவம் பெறவில்லை.

(3) உடுத்தும் முறையிலும் தங்களின் அழகுணர்வு வெளிப்படும் தன்மையிலேயே இவர்களின் உடைகள் அமைகின்றன.

போன்ற சில எண்ணங்கள் தெளிவுபடுகின்றன.

## பொது ஆடைகள்

ஆடவர் மகளிரின் அனைத்து ஆடைகளுள்ளும் பல இருபாலருக்கும் பொதுவானதாகவும் சில சிறப்பானதாகவும் அமைகின்றன. ஆடவர்க்குரியதாகக் கஞ்சுகம், குப்பாயம், படம், மெய்ப்பை போன்றவற்றையும் மகளிர்க்குரியதாகத் தழையுடை, பூங்கரைநீலம் போன்றவற்றையும் காண்கின்றோம். ஏனைய துணி என்ற நிலையில் இருபாலருக்கும் பொதுவானதாக அமைகின்றது. இவற்றுள் கச்சு,அணியும் விதத்தினால் மாறுபடக் காணலாம்.

மகளிர் மார்பில் அணிந்ததாகக் கச்சு பற்றிய மகளிர் தொடர்பான எண்ணங்கள் உணர்த்த, ஆடவரால் இடையில் கட்டப்பட்டது என இலக்கியங்கள் பகர்கின்றன.

சங்க இலக்கியம் அத்தி மன்னனின் கச்சு பற்றிக் கூறும் போது, 'கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று' (அகம். 376) எனச் சிறப்பிக்கும். ஈண்டு வயிற்றில் கட்டப்பட்ட தன்மை புலனாகின்றது.

சுரிகையினைக் கச்சில் கொள்ளும் தன்மையினையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதற்கு, 'சுரிகை அம்பூங்கச்சிடைக் கோந்துவாங்கி' (698) சீவகன் காணப்படும் தன்மையைச் சான்றாக்கலாம்.

மாந்தர் அழகுபட உடுத்தும் தன்மையிலும் சில பொதுக் கூறுகள் காணப்படுகின்றன.

இன்று பல்லவர், சோழர் காலச் சிற்பங்களைக் காண நம்மை மிகவும் கவருவன அவர்களின் உடையுடுத்தியுள்ள அழகேயாம். இடையாடையில் சிறப்புற அமைக்கப்பட்டு இருக்கும் சுருக்குகள் பற்றிய எண்ணங்களை இலக்கியம் வழியாகவும் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

'தூசுலா நெடுந்தோகை யினல்லார்' (சீவக. 1320) என அரசியைச் சார்ந்த ஆயத்தாரின் நிலையைத் தேவர் காட்டுகின்றார். இதற்கு, 'தூசிலே அசைகின்ற கொய்சகத்தையுடைய ஆயத்தார்' என நச்சினார்க்கினியர் பொருள் தருகின்றார். மற்றொரு பாடல்,

> தோகை மஞ்ஞைத் தொகுதி போற்றோகை செம்பொன் நிலந்திவளக்
> காலிற் சிலம்பும் கிண்கிணியும் கலையும் ஏங்கக் கதிர்வேலும்
> நீலக் குவளை நிரையும் போற் கண்ணார் காவலிருந்தாரே
> (2698)

என, காலிற் சிலம்பு முதலியன ஏங்கக் கொய்சகம் நிலத்தே பட்டுத் துவளச் சென்று சோலையிலே மஞ்ஞைத் தொகுதி போல அமைந்த தன்மையைக் காட்டும்.

தோகை என்ற சொல் மயிற்றோகை என்ற பொருளில் இன்று பயிலப்படக் காண்கின்றோம். எனவே இவர்களின் ஆடையும் இத்தன்மையில் அமைக்கப்பெற்றதால், இதனையும் தோகை என்று சுட்டியிருக்கலாம். தோகை கொய்சகம் எனக் கம்பனில் குறிக்கப்படுகின்றது.

மானமாக் கலுழன் சிறைவிரித்தென கொய்சகம்
மருங்குறச் சேர்த்தி (கம்ப. 9788)

என அமையும் கொய்சகம் சிறையுடன் உவமிக்கப்படும் தன்மையிலும் இதன் அமைப்பு வெளிப்படக் காணலாம்.

சூளாமணியில்,

கொந்தாடும் பூங்குழலும் கோதைகளுமாடக்
கொம்போலந் துகிலசைத்த கொய்சகம் தாழ்ந்தாட
(177)

சோதிமாலை பந்தாடும் காட்சி விளக்கப்படுகின்றது. விசய திவிட்டரைக் கண்ட மகளிர் நிலையினைக் குறிப்பிடுமிடத்தும் 'தோமறிந்த சூழ்துகின் நெகிழ்ந்துடுத்து' (487) உழலும் தன்மை அமைகின்றது. கொய்சகம் மறிந்து கிடந்த சுற்றப்பட்ட ஆடையைக் குலைத்து மீண்டும் உடுத்து என்னும் இதன் பொருளும் கொய்சகத்தின் அமைப்பினை இயம்புகின்றது.

கொய்சகம் என்பதற்குப் பேராசிரியர் உரைக்கும் 'பலகோடு பட அடுக்கியுடுக்கும் உடையைக் கொய்சகம் என்ப' (தொல். பேரா. 464) என்னும் கூற்றும் இதனைத் தெளிவுபடுத்த வல்லது. இன்று வழங்கும் கொசுவம் என்ற சொல்லும் கொய்சகத்தின் திரிபு ஆகத்தான் இருக்கவேண்டும் என்பதை அதன் தன்மை காட்டுகின்றது.

ஆடவரும் மகளிரும் உடுத்தும் நிலையில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையாக இதனைக் கொள்ளலாம்.

## முடிவுரை

எனவே மேலே கண்ட அனைத்துக் கருத்துகளினின்றும், தமிழர் தேவையெனக் கருதி அணிந்தது இடையாடை எனவும், தகுதி, நாகரிக வளர்ச்சி, பிற பண்பாடுகளின் தோய்வு ஆகியவற்றின் காரணமாக மேலாடை, சட்டை அணிதல் போன்றனவும் முக்கியமெனக் கருதும் நிலை தமிழரிடம் புகுந்தது எனவும் கருதலாம்.

# பழக்க வழக்கங்கள் - நம்பிக்கைகள்

மனிதன் இயற்கையிலேயே தன் உயிருக்கும், உடலுக்கும் ஊறு நேரா வண்ணம் காத்துக் கொள்ளும் உணர்வுடையவன். இன்னல்தரும் எதையுமே அஞ்ச எண்ணுபவன். அவனது நினைவுகளும் நடைமுறை வாழ்வும் இதனடிப்படையிலேயே அமைகின்றன. நன்மை நாடலும் தீமையினின்றும் விலகிச் செல்லலுமே அவனது எல்லாச் செயல்களுக்கும் அடித்தளமாகின்றன. இத்தகைய அவனது செயற்பாடுகளில் சில, பழக்க வழக்கங்கள் என்றும் எண்ணங்கள் சில, நம்பிக்கைகள் என்றும் அழைக்கப்படுகின்றன. இவை மாந்தரின் காலம், சூழல், எண்ணம் போன்ற பல நிலைகளுக்கேற்ப மாறுபடும்; மரபுகளாகத் தொடரும்; பழமைக் கூறுகளாக எஞ்சியும் நிற்கும். பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் தெளிவு பெற, சமுதாயத்தின் கலாச்சாரம் பண்பாடு இவையும் விளக்கமுறும். இவற்றை எடுத்தியம்புவதில் வரலாற்றின் ஒரு கூறான ஆடை வரலாறும் உதவுகின்றது. இவற்றைப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் என இரு பெரும் பிரிவுகளில் இவண் நோக்கலாம்.

## பழக்க வழக்கங்கள்

பழக்கம், வழக்கம் எனும் இருசொற்களின் இணைவு இச்சொல். பழக்கம் - பயிற்சி, வழக்கம் - ஒழுக்கம் எனவும்; வழக்கம் - பழக்கம், பொதுவானது எனவும் பொருள்படுகின்றன. இதனடிப்படையில் பழக்க வழக்கம் என்பதனை நோக்க, தனி மனிதனின் பயிற்சி அல்லது ஒழுகும் முறையினைப் பழக்கம் எனவும், இத்தனிமனிதச் செயற்பாடு பொதுமை நிலையில்

அதாவது ஒரு குழு அல்லது ஒரு இனம், அல்லது ஒரு மதம் அல்லது ஒரு நாடு என்ற முறையில் பயிலப்படும்பொழுது, வழக்கமெனவும் நின்று, இவை ஒருங்கிணைந்த நிலையில் பழக்க வழக்கமெனச் சுட்டப்படுகின்றன எனலாம். இவை பின்னர் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படும் பொழுது மரபாக மலர்கின்றன.

பழக்க வழக்கங்கள் மனிதன் வரலாற்றுக் காலம் தொடங்கி வேர்விட்டு வளர்ந்து வந்துள்ளன. மனித சமுதாயத்தினரின் வாழ்வோடு இயைந்து இணைந்து வரும் காரணத்தினால் மக்கள் வாழ்வியலில் பிரித்தெடுக்க இயலாத ஒரு நிலையை இவை அடைந்துள்ளன. மனிதனோடு தொடர்புடைய அனைத்து நிலைகளிலும் இவை தோய்ந்து கிடக்கக் காண்கின்றோம். மாந்தன் உடைக்கு முதன்மை கொடுத்த நிலையில், உடைபற்றிய கல்வியும் இவனது பல்வேறு நடைமுறைகளை எடுத்தியம்பு கின்றன.

பொழுதுக் கேற்ப உடுத்தல், சடங்குகளுக்குத் தனியுடை உடுத்தல், தொழிலுக்கு ஏற்ற வண்ணம் அமைத்துக் கொள்ளல், சமுதாய நிலைகளுக்கு ஏற்ப அணிதல் போன்ற பல அடிப்படை களில் உடுத்தும் நிலையிலும், சூழல்களுக்கேற்ப ஆடைகளைக் கையாளும் தன்மையிலும், இவற்றின் கூறுகள் பொருந்திக் கிடக் கின்றன. இக்கண்ணோட்டத்தில் தமிழர் ஆடை வரலாற்று விளக்கங்களில் நின்று, அவர்களின் பழக்க வழக்கங்களில் அமையும் ஆடையின் தாக்கத்தைக் காணலாம்.

## 1. காலமும் ஆடையும்

ஆடையின் பலவிதப் பயன்பாடுகளில் மனிதனை இயற்கைத் தாக்குதல்களாகிய குளிர், வெப்பம் ஆகியவற்றினின்று பாதுகாப்பதும் ஒன்றாகும்.

முதன்முதலில் மனிதன் தழை, மரவுரி, தோல் போன்ற வற்றை உடையாகப் பயன்படுத்தினான். பருத்தி, பட்டு போன்றன தொடர்ந்தன; இன்றும் தொடருகின்றன. இவற்றைப் பல நோக்கு அடிப்படையில் பயன்படுத்திய மனிதன், காலஞ் செல்லச்செல்லத் தான் உடுத்திய உடைகளின் பயன்பாடு, சிறப்பியல்பு, தனித்துவம் ஆகியவற்றையுணர்ந்து, அவற்றை

உடலுக்குப் பாதுகாப்பு அளிக்கும் நோக்கிலும் உருவாக்குகின்றான். இவ்வாறு உடல் பாதுகாப்பு எண்ணத்தில் தோன்றியதே காலத்திற்கேற்ப உடையுடுத்தும் பழக்கமாகும்.

எனினும், எல்லா மாந்தரும். இத்தகைய காலத்திற்கேற்ற உடை உடுத்துவதில்லை. உடையில் நாகரிக முதன்மை அடைந்தவர்களும் வாழ்க்கைத் தரத்தில் உயர்ந்தோரும் இதனைத் தங்களுக்கேற்றவாறு அமைத்தனர். சான்றாக இன்றும் ஒரு சில பகுதிகளில் உலகத்தோடு ஒட்ட ஒழுக இயலாது, நாகரிக முதிர்ச்சி பெறாது தனித்து வாழும் மக்கள் இயற்கையின் தாக்குதல்களைப் பொருட்படுத்தாமல் ஆதி மனிதர்களைப் போல இருப்பதைக் கேள்வியுறுகின்றோம்.[2] இந்நிலையில் தமிழர் ஆதியிலேயே நாகரிக முதன்மை பெற்றவர் என்பதை நிறுவும் வகையில், இவர்தம் காலத்திற்கேற்ப ஆடைகளும் அமைந்துள்ளன எனல் பொருத்தமாகும். வெளிப்படையாகவும், உய்த்துணரத்தக்க வகையிலும் இவ்வெண்ணங்கள் இலக்கியத்தில் பரந்து காணப்படுகின்றன.

**குளிர் காலம்**

தமிழர் போர்க்காலங்களில் மார்பில் கவசமும், கைகளில் உறையும் அணிந்து இருந்தனர். தங்களுடைய இசைக் கருவிகளையும், போர்க்கருவிகளையும் உறையிலிட்டுப் பாதுகாத்தனர் காக்கின்றனர். இவை யாவும் பிற தாக்குதல்களினின்று தாமும் தம் பொருட்களும் பாதுகாப்பாக இருக்கவேண்டும் என்னும் எண்ணம் காரணமாகவே. இதைப் போன்றே குளிரினின்றும் தம்மைக் காத்தனர். பட்டு, மயிர் போன்ற வேற்றிழைகளில் நெய்த ஆடைகள், அரத்தம் போன்ற நிற மூட்டப்பட்ட ஆடைகள், உடைகளை உடுத்திக் கொள்ளும் முறைகள் போன்றன காக்கும் முறைகளாகத் துணைபுரிந்தன.

சங்க மாந்தர் குளிர் காலத்திற்கெனத் தனித்த உடைகள் உடுத்தியதாக அறிய இயலாவிடினும் கார்காலத்தில் போர்த்தித்

---

2. We know primitive people who are living now or were until quite reeently in conditions similar to those in which men lived many thousands of years ago do not seem to fcel the cold as we do.

— The story of clothes, Agens Allen, Page-31.

தம்முடம்பைக் காத்திருப்பர் என்பதனை உய்த்து உணரமுடி கின்றது. பேகன் மயிலுக்குப் போர்வையீந்த செய்தியைப் புறப் பாடல் காட்டும்.

'மடத்தகை மாமயில் பனிக்கு மென்றருளிப் படாஅமீத்தக் கெடா நல்லிசை பேகன்' எனப்புறம் (145) சுட்டும்.

பனிக்கும் என்று எண்ணிப் படாத்தினைக் கொடுக்கின்றான் என்பதினின்றும் பனிப்பின் போர்த்த வேண்டும் என்ற மனநிலை யும், அதற்காகத்தான் பேகன் போர்த்தியிருத்தல் வேண்டும் என்பதும் தெளிவுறுகின்றன.

கார் நாற்பதில் அறியவரும் ஈர்ங்கட்டு (22) என்னும் உடை, கார் காலத்தில் இறுக்கமாக உடுத்தப் பட்டதொரு உடையாக அமைய, உடுத்தும் விதத்தினால் குளிர்ப்பாதுகாப்பு நாடிய தமிழர் மனநிலை வெளிப்படும்.

சிலப்பதிகாரம் நிற உடைகளை யுடுத்தியமையைக் காட்டு கின்றது. கார் காலத்தில் வீழ்பூஞ் சேக்கை மேலினிதிருக்கின்ற மதுரை மகளிரை அரத்தப் பூம்பட்டினை அரைமிசை யுடுத்திய வராகக் காட்டுவார் இளங்கோ (14:86). அரத்தப்பட்டு சிவப்பு நிறமுடைய பட்டு; சிவப்பு குளிருக்கு ஏற்ற பாதுகாப்பு அளிக்கக் கூடியது என்பதனை யுணர்ந்து[3] அதற்கேற்பச் செயல்பட்ட திறம் இதனால் விளக்கமுறுகின்றது.

குளிர்ப் பாதுகாப்பில் முதன்மையிடம் பெறுவது இன்றைய நிலையில், மயிராடைகளேயாகும். இச்சிறப்பு அன்றே தமிழரால் உணரப்பட்ட ஒன்று என்பதனை இலக்கியச் சான்றுகள் நிறுவு கின்றன.

சிலப்பதிகாரம், பெருங்கதை, சிந்தாமணி மூன்று இலக்கியங் களிலும் மயிராடை பற்றிய எண்ணங்களைக் காண்கின்றோம்.

சிலப்பதிகாரத்தில்,

பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கை (5:16-17)

யினையுடைய புகாரும்,

---

3. எங்கள் நாட்டு ஆடை —ச. தண்டபாணி தேசிகர், கலைமகள் தொகுதி—6, 1934, பக்கம்-203.

நூலினும் மயிரினும் நுழை நூற்பட்டினும்
பால்வகைத் தெரியாப் பன்னூறடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை வீதி (14-:205-207)

யினையுடைய மதுரையும் இளங்கோவால் சுட்டப்படுகிறது.

மயிராடை பற்றிய எண்ணங்களை இவற்றுள் காண்கின்றோம். பிற விளக்கங்கள் இங்கில்லை யாயினும், பிற்கால இலக்கியங்களை வைத்துநோக்க இம்மயிராடைகளைக் குளிர் காலத்திற்கென, தமிழர் உருவாக்கியிருக்கவேண்டும் எனும் எண்ணம் எழுகின்றது. இம்மயிராடையிலும் எலி மயிராடை மிகச் சிறந்ததாகப் போற்றப் பட்டது.

புலிக் காலமளிப் பொங்கு பட்டசைஇ
எலிப்பூம் போர்வையொடு மயிர்ப்படாம் விரித்து
(1:47:178-79)

என்று பிரச்சோதன மன்னனின் பள்ளியறையினை மயிர்ப் படாம், எலிப்பூம்போர்வை இரண்டையும் பயன்படுத்திய நிலையில் சிறப்பிப்பார் கொங்கு வேளிர். பிரச்சோதனனின்

கார் பனித் துளித்துக் கதிர் கண் புதைஇய
வார்பனி மாலை நம் வள நகர் புகுதல் (பெருங். 1,47:157-58)

எனும் கூற்று அது கார் காலம் என்பதை உறுதிப் படுத்தும். எனவே கார் காலத்தில் மயிராடைகள் முக்கியத்துவம் பெற்றமை வெளிப்படை.

சீவக சிந்தாமணி இம் மயிராடையின் சிறப்பாக, குளிர் போக்கும் தன்மையினையும், உடலைப் பாதுகாக்கும் இயல் பினையும் தெளிவாகக் காட்டுகிறது. முன்பனிக் காலத்தில், பூங்கோதை மாதர் பங்கயப் பகைப் பருவம் வந்தது என, எங்கு மலலாத எலிமயிர்த் தொழிலால் ஆன பொங்கு பூம்புகைப் போர்வையினை மேயினார் (2680) எனவும் பின்பனிக் காலத்தில்,

செந் நெருப்புணுஞ் செவ்வெலிம் மயிர்
அந் நெருப்பளவாய பொற்கம்பலம்
மன்னருய்ப்பன மகிழ்ந்து தாங்கினார்
என்னரொப்பு மில்லவர் கள்ளென்பவே (சீவக. 2686)

எனவும் மக்கள் நிலை சித்திரிக்கப்படுகின்றது. பனிக் காலத்தில் திரைச் சீலையாகவும் (சீவக. 2471) இதனை அமைத்தனர்.

போர்வையாக, எழினியாகப் பயன்படுத்தியதுடன் மருத்துவகுணமும் இதற்கமைந்திருந்ததனை நுதிமயிர்த் துகிற் குப்பாயத்தைப் பற்றிய விளக்கம் தெளிவு படுத்தும்.[4]

எலியினது கூர்மையுடைய மயிரினால் செய்த ஆடையாலா கிய சட்டை, எலிமயிராற் செய்த ஆடை மிகுந்த வெப்பம் உடையது; குளிர் நீக்கும் அதனுள் காற்று புகாது என்பதும் மிகவும் மேன்மையுடையது என்பதும் பனிக் காலத்தில் அதனை அணிவது உண்டென்றும் அது கிடைத்தற்கரியது என்றும் சிந்தாமணிப் பாடலுக்கு (819) உ.வே. சாமிநாதையர் அவர்கள் தரும் இவ்விளக்கம், இவ்வாடையினைக் குளிருக்கென்று பயன் படுத்தினர் என்பதை உறுதிப்படுத்தும். இக்கருத்துகள் காலத் திற்கேற்ப உடையின் இயல்பினை நுணுக்கமாகத் தெரிந்து வைத்திருந்த தமிழர் தன் நுண்ணறிவினையும் வெளிப்படுத்தும். இக்கருத்திற்கு அரணாக, காஞ்சி புராணம், எலிமயிர்ப் போர்வையைக் குளிர்காலத்தில் அரைக் கணமும் கழித்திராத மக்களைச் சுட்டும்.[5]

இன்று தமிழரில் சாதாரண நிலை மாந்தர் போர்வையையும் உயர்ந்தோர் போர்வையுடன், தனித்த கம்பளிச் சட்டை (ஸ்வெட்டர்) போன்றவற்றையும் பயன்படுத்துகின்றனர்.

### கோடைக் காலம்

கோடைக்கெனத் தமிழர் தனித்த உடை உடுத்தியதாக இலக்கியக் குறிப்புகள் சுட்டவில்லை. குளிருக்கென்று தனித்த உடைகளை உடுத்தியமை கொண்டு கோடையில் உடுத்தியன, நம் நாடு வெப்பநாடு ஆகையால் அதற்கு ஏற்ற வண்ணமே அமைந்திருத்தல் வேண்டும் என்பதை உணர்ந்து கொள்ள முடி கிறது. மேலும், தமிழர் உடைகளில் சிறப்பிடம் பெற்று அதிக மாகக் கையாளப்பட்ட, படும் பருத்தியாடைகள் கோடைக்கு ஏற்றன என்பது கண்கூடு. இப்பருத்தி ஆடைகள் நீரையுறிஞ்சி

---

4. பதுமுகன் பரவை மார்பன் நெய்க்கிழிப் பயிலச் சேர்த்தி
நுதி மயிர்த் துகிற் குப்பாயம் புகுகென நூக்கினானே
(சீவக. 819)

5. பழைய கைத்தொழில் வியாபாரங்கள்-மு.இராகவையங்கார், செந்தமிழ்-தொகுதி-5, பகுதி-8, 1906-1907.

வெப்பத்தை வெளிப்போக்கும் தன்மையன. இதனை அன்றே தமிழர் உணர்ந்து தன் உடைவகைகளுள் பருத்திக்கு முதலிடம் கொடுத்திருக்கின்றனர்.

அரவுரியன்ன அறுவையாகவும், நுண்ணூல் பூந்துகிலாகவும் இவற்றை மிகவும் மென்மையுடையனவாகத் தம் கை வண்ணத்தால் அமைத்து, உடுத்தினர். சாதாரணமாகப் பருத்தி ஆடைகளைப் பயன்படுத்திய இவர்கள், சிலநேரங்களில் பட்டாடையையும் அணிந்தமை வெப்பகாலத்திற்குப் பட்டாடையும் ஏற்றதே என்பதை யுணர்ந்திருந்த காரணத்தால் இருக்கலாம்.[6] ஆயின் பருத்தியாடை போன்று அதிகமான மக்கள் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை.

இவற்றை நோக்க, வெப்ப காலத்தில் மேனிலை மாந்தர் பருத்தி, பட்டு இரண்டினையும் உடுத்த, சாதாரணமானவர்கள் பருத்தியுடையினை உடுத்தியிருந்திருக்கின்றனர் என்பது தெரிகிறது. தமிழரே அன்றி இந்திய மக்கள் அனைவருமே இவ்வடிப் படையில் உடுத்தியிருக்கக் கூடும் என்ற எண்ணத்தை வால்டர் இம்பெர் அவர்களின் கருத்து நல்குகிறது.[7]

சிறுபொழுதுக்கேற்ப உடை

பெரும் பொழுதுக்கு மட்டுமல்லாது, சிறுபொழுதுகளுக்குச் சிறப்புஉடை உடுத்தும் வழக்கினையும் தமிழர் கொண்டிருந்தனர்.

இரவில், பட்டு நீக்கித் துகிலுடுத்தும் மங்கையரைப் பட்டினப்பாலை (106-7) பகரும். பல்வகைப்பட்ட கோலம்

---

6. பட்டாடையை இரண்டு பொழுதிற்கும் உடுத்தல் பட்டாடை வெளியில் உள்ள சீதோஷ்ணத்தை உடலுக்குள் விடாது. உடலில் உள்ள உஷ்ணத்தை வெளியில் விடாது. எனவே இரண்டு பொழுதிற்கும் ஏற்றது

—எங்கள் நாட்டு ஆடை-ச. தண்டபாணி தேசிகர், கலைமகள் 1934, தொகுதி-6, பக்கம். 203.

7. Like people in other tropical countries Indicans are accustomed to light clothing epccept in winter when woollen and cothton padded dresses are neecssary"-

—India-walter-Inber, page. 190.

கோடலை இலக்கியம் வழி காணும் நாம் இரவிற்கோர் கோலம் கொடியிடையார் கொள்ளும் தன்மையைச் சிலம்பும் (9:4) சுட்டக் காணலாம். இதற்கு அடியார்க்கு நல்லார் இரவுக்கு ஏற்ப நொய்யன அணிந்து எனப் பொருளுரைப்பர். இவற்றால் மென்மையான ஆடைகளாகவும், இரவுப்பொழுது உடைகள் அமைந்திருந்தன என்பது பெறப்படும். இன்று சிறுபொழுதுக்கு என்று தனித்த உடைகள் உடுத்துவதில் பல்வித வளர்ச்சி நிலைகளைக் காண்கின்றோம்.

இவ்வாறு பெரும்பொழுது, சிறுபொழுது எனக் காலங்கருதி உடை அணிந்த மக்கள் யார் எனப் பார்க்கும்போது செல்வர் பற்றிய எண்ணமே அதிகமாக அமைவதால் வாழ்வின் ஏற்றத் தாழ்வுகள் அன்றே தொடங்கிவிட்டன என்னும் உண்மையும் புலனாகும். ஏழைகளே அன்றி, துன்புற்ற மாந்தர், துறவிகள் இவர்களைப் பார்க்கும்போது இச்சிறப்பினைக் காண இயலவில்லை. எனவே வளமுள்ளோர் தங்கட்கு ஏற்ப உடுத்தினர்; ஏழைகள் துன்புற்றோர் துறவிகள் பொருளாதார நிலை, மன நிலை காரணமாகக் காலத்தைப் பொருட்படுத்தவில்லை எனக் கருதலாம். இன்றும் இந்நிலையே காணப்படுவது கண்கூடு.

### சடங்குச் சூழலும் ஆடையும்

திருப்பு முனைகள் நாவலில் மட்டுமல்ல; மனித வாழ்க்கையிலும் பல உள. அவை நாவலுக்கு எவ்வளவு சுவையூட்டுகிறதோ அதைப்போன்று மனித வாழ்க்கைக்கும் எண்சுவைகளையும் ஊட்ட வல்லன. மனித மனம் இத்தகைய திருப்பு முனைகளை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டும் சோர்வுடன் தாங்கிக் கொண்டும் தொடர்ந்து செயல்படுகின்றது. பிறப்பு, மணம், துறவு, இறப்பு என்பனவற்றை இதனுள் அடக்கலாம். இவற்றுள் இடம் பெறும் இன்றியமையா நிகழ்வுகளைச் 'சடங்குகள்' என்னும் பெயரால் அழைக்கின்றோம்.

இச்சடங்குகள் அன்று முதல் இன்றுவரை தொடர்ச்சியாக வழங்கிவருவன, இன, மத, தேச மாறுபாட்டிற்கு ஏற்ப இவை மாறுபடுமே தவிர இல்லாமற் போகாது. ஓரிடத்தில் உள்ள சடங்குகளே கால மாற்றம், நாகரிகமாற்றம், எண்ண வளர்ச்சி, பிற நாட்டார் தொடர்பு போன்ற பல கூறுகட்கு ஏற்ப மாற்று வடிவம் கொள்ளலும் இயல்பு.

சடங்குகளில் மனிதத் தோற்றத்திற்கு முதலிடம் அளிக்கிறோம். இதனுள்ளும் முதன்மை பெறுவது ஆடை எனில் மிகையில்லை. ஒவ்வொரு வகைச் சடங்கிற்கும் ஒவ்வொரு குறிப்பிட்ட ஆடையுடுத்துகின்றனர். சடங்குகளில் பங்குபெறுவோரின் ஆடையினைக் கண்டவுடனேயே அவர் இன்ன சடங்கில் ஈடுபட்டுள்ளார் என்று ஊகிக்கலாம். தமிழரின் சடங்குச் சூழல்களில் ஆடை பெற்ற இடத்தினை இங்குக் காணலாம்.

**பிறப்பு**

மழலையின் பிறப்பினை யாவரும் எதிர்நோக்கி அதனைக் கொண்டாடல் மரபு. பிறப்பு நாளே அன்றி, பின்னர் வரும் பிறந்த நாட்களையும் கொண்டாடுவர்.

சங்க இலக்கியத்தில் பிறந்த நாள் பற்றிக் குறிப்பேதும் இல்லை. ஆயின் தொல்காப்பியரின்,

சிறந்த நாளணி செற்றம் நீக்கிப்
பிறந்த நாள் வயிற் பெருமங்கலமும் (புறத். 36)

என்னும் அடிக்கு உரை எழுதப்போந்த நச்சினார்க்கினியர் அதனை, 'மங்கல வண்ணமாகிய வெள்ளணி அணிந்து எவ்வுயிர்க்கண்ணும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணி என்ப' என்று பிறந்த நாளில் வெள்ளணி அணிதலைக் குறிப்பிடுகின்றார்.

இவர்தம் சீவக சிந்தாமணி உரையிலும் இக்கருத்தையே உறுதிப்படுத்தும் வண்ணம் 'வெள்ளணி அணிந்த ஞான்றே' (614) என்னும் தொடருக்குப் பிறந்த நாள் ஒப்பனை வெள்ளணி என்கின்றார். இதற்கு உ.வே.சா. அவர்களின், பிறந்த நாளில் வெள்ளணி அணிதல் மரபாகலின் என்ற கருத்தும் நோக்கத்தக்கது. 'அடித்தளை நீக்கும் வெள்ளணி' என்ற சிலப்பதிகார (27:229) அடிக்கும் இதனையே சுட்டுவார்.

கலிங்கத்துப் பரணியிலும் இவ்வெண்ணத்தைக் காண்கின்றோம்.

எற்றைப் பகலினும் வெள்ளணி நாள்
இருநிலப் பாவை நிழலுற்றக்
கொற்றக் குடையினைப் பாடீரே (533)

என்னும் பாடலுக்கு உரையாசிரியர், 'அரசன் பிறந்த நாளை மக்கள் சிறக்கக் கொண்டாடுவர் அன்று அரசன் மகிழ்ச்சி மிகுமாறு பல செயல்களைச் செய்வான் அந்நாள் வெள்ளணி நாள் என்றும் நாண் மங்கலம் என்றும் பெயர் பெறும்' என்று விளக்கம் தருகின்றார்.

அம்பிகாபதிக் கோவை குழந்தை பிறந்தமையைத் தலைவனிடம் தெரிவிக்க, வெள்ளணி அணிந்து சேடியை அனுப்பியதாகக் காட்டும் (463).

இவ்வெண்ணங்கள் அனைத்தும் பிறந்த நாளுடன் வெள்ளணி அணிதல் தொடர்புடையதாக இருந்திருக்கின்றது என்பதனை உணர்த்த வல்லன. சில சிந்தனைகளையும் இங்கு இவை எழுப்புகின்றன.

தொல்காப்பியத்திற்கு உரையாசிரியரின் உரைதான் வெள்ளணி நாள் என்பதைக் குறிப்பிடுகின்றதே தவிர, வெள்ளணியுடுத்திய தன்மை நேரடியாக அதனுள் இல்லை. சங்கத் தமிழரிடமும் இவ்வெண்ணம் இருந்ததாகத் தெரியவில்லை. சிலப்பதிகாரத்தில் முதலில் சுட்டப்படக் காண்கின்றோம். பெருங்கதை, சிந்தாமணி இரண்டும் வெள்ளணியை மங்கலமெனக் கருதியிருந்திருக்கலாம் என்ற எண்ணத்தைத் தருவன. எனவே இவ்விலக்கியங்களை வைத்து நோக்க வெண்மையை மங்கலத்துக்குரியதாகச் சமணர்கள் கருதியிருக்கலாம் எனத் தோன்றுகிறது. பின்னர் பண்பாட்டுக் கலப்பு காரணமாகத் தமிழரும் பிறந்த நாளில் மங்கலமென்று வெண்மையுடுத்தத் தொடங்கி இருக்கலாம். எனவேதான் நச்சினார்க்கினியரின் உரையில் இவ்வெண்ணம் வெளிப்படவும், கலிங்கத்துப்பரணி, அம்பிகாபதிக் கோவை இரண்டும் இவை தொடர்பான செய்திகளைத் தரவும் முடிகின்றது.

வெள்ளணி பற்றிய எண்ணங்களை நோக்க, அம்பிகாபதிக் கோவையில் தவிர ஏனையவற்றில் மகளிர் பற்றிய குறிப்புகள் இல்லை. இலக்கிய உத்தி என்ற நிலையில் அம்பிகாபதிக் கோவை இதனை மகளிர் உடையாகக் காட்டியிருக்கலாம். எனவே ஆடவர் பிறந்த நாளில் வெள்ளணி அணிதலை மரபாகக் கொண்டு இருந்திருக்கலாம் எனத் தோன்றுகின்றது. மகளிர் இன்றும் வெண்மையை மங்கல காரியங்கட்குப் பயன்படுத்தாமையும், ஆடவர் இன்று வெண்ணிற ஆடையுடுத்தலையும் ஈண்டு இணைத்து நோக்கலாம்.

சங்க காலம் முதல் வெண்மையைத் தூய்மை என்ற எண்ணத்திலேயே தமிழர் பயன்படுத்தினர். இன்றும் தமிழர் வெண்மையைத் தூய்மை என்று எண்ணுகின்றனரே தவிர மங்கலம் என்று எண்ணுவது இல்லை என்றே சொல்லவேண்டும். எனவே வெண்மை மங்கலமென்பது பிற மதத்தார் எண்ணம் என்றும் அதன் தாக்கம் தமிழரிடமும் காணப்பட்டிருக்கலாம் என்றும் ஊகிக்கலாம்.

**மணம்**

மணத்தில் புத்தாடையுடுத்தும் வழக்கம் இன்று நேற்றல்ல; பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே இருந்து வரும் வழக்கமாகும். இக்கருத்தினை இலக்கியச் சான்றுகளும் உறுதிப்படுத்துகின்றன. சங்க காலத்து மணமகள்,

கோடிக் கலிங்கத்து ஒடுங்கிய நிலையிலும் (புறம். 86)
முருங்காக் கலிங்கத்தை முழுவதும் வளைஇயும் (136)

காணப்படுகிறாள். பெருங்கதையும், சிந்தாமணியும், புதுத் துகில்களையும், கலிங்கத்தையும், பட்டினையும் மணமக்களின் ஆடையாக நவில்கின்றன. சூளாமணியில் மணமகள் சயம்பவை கோடி மடியுடன் காட்டப்படுகின்றாள் (1093).

இராமன் மணப் பொழுதிற்கு,

நணுகவும் நிமிரவும் நடக்கும் ஞானத்தார்
உணர்வினின் ஒளிதிகழ் உத்தரீயம் தான்
தணிவு அரும் கருணை தன் கழுத்தில் சாத்திய
மணி உமிழ் கதிர் என மார்பில் தோன்றவே (1304)

என்னும் நிலையில் உத்தரீயம் அணிந்தமையினையும்,

மஞ்ச உறு சுடர் மணி வயங்கித் தோன்றிய
கஞ்ச உறு கருங்கடல் அதனைக் கைவளர்
தன்நிறப் பாற்கடல் தழீஇயது ஆம் என
வெண் நிறப்பட்டு ஒளி விளங்கச் சாத்தியே (பால.1307)

என்று வெண்ணிறப் பட்டு அணிந்தமையினையும் அழகுற எடுத்தி யம்புவர் கம்பர்.

மணமக்களே அன்றி, மணப் பொழுதில் பிறர் அணிந்தமை யினையும் சில பாடல்கள் விளக்குகின்றன.

பெருங்கதையில் அந்தணர், வள்ளுவன் வெண்டுகில் தானையயராகக் (2.4:147, 2:12:34.6) காட்சி தருகின்றனர். சீதை இராமன் மணத்தில் நகரமகளிர், சித்திரம் நிரை தோயும் செந்துகிலைப் புனைந்து (1280) தங்களை அழகுபடுத்திக்கொள்ளும் நிலையினைக் காண்கின்றோம்.

இவ்வாறு புத்தாடைகளைச் சொல்லிச் செல்லும் தன்மையுடன், தூஉடைப் பொலிந்து நிற்கும் தலைவியைக் காட்டும் (புறம். 136) காட்சியும், மேயுடை அணிந்து மணத்தில் பங்கு கொள்ளும் கலி பற்றிய எண்ணமும் (சூளா. 1098) மணத்தில் பங்கு கொள்வார் உடைகள் சிறப்பாக, தூய்மையாக இருத்தல் வேண்டும் என்று எண்ணிய தமிழர் மனநிலையின் பிரதிபலிப்பாக இருக்கலாம்.

இன்று மணத்திற்குரிய ஆடைகள் இடத்திற்கு இடம் வேறுபடுகின்றன. ஆயின் சிறந்த ஆடைகளாக இருக்கின்றன. தமிழர் வெண்ணிற ஆடையையும் கறுத்த ஆடையையும் மணத்தில் கொள்வது இல்லை. மேனாட்டார் தொடர்பு காரணமாக,[8] தமிழ் நாட்டில் கிறித்தவர்கள் வெண்மையை உடுத்துகின்ற பழக்கம் இன்று உண்டு.

இந்தியாவின் வடக்கே செல்லச் செல்லச் சிவப்பு நிறத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர்.[9] இதனைக் கொண்டு இந்தியரின் மண ஆடையே சிவப்பு என்பர் தாரா அலி பெய்க் அவர்கள்.[10]

இக்கருத்துடன், கம்பர் மங்கலக் கோலமெனச் சிவப்பினைச் சுட்டுவதும் சுட்டத் தக்கது (9571). தமிழர் இவ்வெண்ணத்தை

---

8. Brides wear white as a symbol of Chastity. The Costume worn at confirmation services is always white to denote purity and spirituality.
—Fundamentals of Dress, Marietta Kettunen, Page-89.

9. பெண்களின் உடை - பிரனாப் குமார் தாஸ் குப்தா, இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை-தமிழாக்கம் எஸ். இலட்சுமி, பக்கம். 111.

10. Red is the wedding colour in India.
—Galbraith Introduces India, Page-161.

அன்று கொண்டு இருந்திருக்கலாம் அல்லது வடநாட்டுத் தாக்கம் காரணமாக, தமிழருக்கும் கம்பர் ஏற்றிக் கூறியிருக்கலாம் என்பது இவண் தோன்றும் எண்ணமாகும்.

தூய்மையாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன், புத்தாடையுடுத்துதல் மணமக்களுக்கும் பிறருக்கும் புத்துணர்ச்சி, மகிழ்ச்சியினை அளிக்க வல்லன என்ற எண்ணமும் இம்மரபு இன்றும் தொடரக் காரணமாக இருக்கலாம்.

மண ஆடைகள் பற்றிய இக் கருத்துகள் மரபாகப் பயின்று வரும் புத்தாடை பற்றிய எண்ணத்துடன், ஒவ்வொரு காலத்திலும் சிறந்திருந்த ஆடைகள் என்ன என்பதையும் உணர்த்த வல்லன. காட்டாக, சங்க காலத்துக் கலிங்கமும், பின்னர் துகில், பட்டு இவற்றையும் நாம் காண்கின்றோம். இன்று பலவகையான பட்டுக்களே முதலிடம் பெறுகின்றன.

**மரணம்**

மரணத் துன்பத்தில் இறந்தவர்க்கு உடுப்பித்தல், மற்றவர் உடுத்தல் என்ற இரு நிலையுண்டு.

மரணமடைந்தவர்க்குக் கோடி எடுத்துப் போடல் மரபாகப் பயின்று வருமொரு பழக்கம். கோடி எடுத்துப் போடல் என்றாலே இப்பொருளை விளக்கும் தன்மை இன்றுநாம் உணரக் கூடிய ஒன்று.

காழ்கழிக் கட்டிலிற் கிடப்பித்துத்
தூவெள்ளறுவை போர்க்கும் நிலை (புறம். 286)

பற்றி சங்கப்பா பகரும்,

சூளாமணியில் அச்சுவக் கிரீவன் இறக்க,
பஞ்சும் துகிலும் பூம்பட்டும்
பாயப்பள்ளிப் படுத்ததன் மேல்
வழங்குச் செந்தீ வாய்ப் பெய்தார் (1483)

என அவனது இறுதிச் சடங்கு பேசப்படுகின்றது.

நாலாயிர திவ்விய பிரபந்தம் ஒப்பாரிப் பாடலுடன் கோடி மூடியமையை,

பாடிப்பாடி யோர் பாடையிலிட்டுக்
கோடி மூடி (பெரி. திரு. 4.5:8)

என்றியம்பும். கல்வெட்டுச் சான்றும் இதன் தொடர்பாகக் காணப்படுகின்றது.[11]

இன்று இறந்தவர் மேல் புத்தாடை அணியும் வழக்கு எல்லா மக்களிடமும் பரவலாகக் காணப்படுகிறது. பழங்குடிகளிடமும் காணும் இவ்வழக்கம் இம்மரபின் பழமையை உணர்த்துவதாகும்.[12]

எகிப்தியர்கள், இறந்தவர் மேல் சணல் தவிர வேறு ஆடை போர்த்தல் தூய்மை அற்றது. செடியினின்றும் கிடைக்கும் ஆடைகளே தூய்மையானது என்னும் நம்பிக்கையுடன் சணல் ஆடையைப் போர்த்தும் பழக்கத்தைக் கொண்டிருந்தமை தெரிய வருகின்றது.[13]

இதனை நோக்க தமிழரும், இறந்தோர் இறை நிலை அடைந்துவிட்டவர்கள். எனவே அவர்கள் மேல் தூய்மையான ஆடையே போர்த்தல் வேண்டும் என்ற எண்ணம் கொண்டு இப்பழக்கத்தினை யுருவாக்கியிருக்கலாம். அதுவே இன்று மரபாக வந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

மணிமேகலையில் பண்டங்கள் உள்ளீடு பெற்ற அறுவைகள் சுடுகாட்டில் சிந்திக் கிடத்தலைப் பற்றியதொரு எண்ணம் (6:93) அமைகின்றது. எனவே புத்தாடை போர்த்தல் மட்டுமல்லாது அவர்கள் விருப்பிய பண்டங்களையும் அவர்களுடன் சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்றனர் என்பது இதனால் தெரிய வருகின்றது. இன்று பழங்குடிகளில் சிலர் பிணத்துடன் இறந்தவர்

---

11. வலைச்சி முக்காடு இட்டுச் சவத்துக்கு முக்காடு இட்டுச் சவத்துக்கு முன்னே மயானத்துக்குக் கூட்டிச் சவம் அடுக்கினால்... வலையர்கள் செய்துவர வேண்டியவராக இருந்தனர்.

— தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், கே.கே.பிள்ளை பக்கம். 420.

12. பழங்குடிகள், சு. சக்திவேல், பக்கம்-80.

13. The Egyptions believed that a Fabric woven from fibres that came from an animal was not so clean as one made from fibres that came from a plant. That is why linen was only used for wrapping the bodies of the dead.

—The Story of Clothes, Agnes Allen, Page-37.

பயன்படுத்திய பொருட்களையும் வைக்கின்றனர் என்று காண்கின்றோம்.[14] எனவே இறந்தவருடன் சில பொருட்களையும் வைத்தல் என்பது பொது நிலையில் இங்கே வெளிப்படும் எண்ணம். ஆயின் பின்னைய எண்ணம் வெளிப்படையாக அமைய, மணிமேகலை, சிந்திக் கிடத்தலை இயம்பும் விதம் விளக்கமாகவில்லை.

நீலகேசியிலும் காட்டில் கூறை காணப்படும் நிலைமை பேசப்படுகின்றது.

வெள்ளின் மாலையும் விரிந்த வெண்டலை கரும் கரிந்த
கொள்ளி மாலையும் கொடிபடு கூறையுமகலும்
பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து
கள்ளியாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே (30)

கொடிபடு கூறை என்னும் இதன் பொருள் விளக்கமாகவில்லை.

இன்று, இறந்தவர் நினைவாக அவரது ஆடையைப் பாதுகாக்கும் பழக்கத்தினைத் தமிழர் சிலர் கொண்டுள்ளனர்.

இறப்பில் பிறர் உடுத்தும் உடையினை இரு பிரிவில் நோக்கலாம்.

1. மனைவியர் உடுத்திய ஆடை**
2. உறவினர் ஆடை.

## உறவினர் ஆடை

உணர்வுகளின் இணக்கமே அன்பின் திறவுகோல். அன்பானவர்கள் பிரியின் தோன்றுவது அவலமே.

மரணச் சடங்கில் உறவு நிலைக்கேற்ப உடுத்தும் பழக்கத்தினர் தமிழர். மனைவியின் நிலை இரங்கத் தக்கது என்னும் நிலையில் தனித்த உடையாகவே அமைய, பிற உறவினர் உடுந்தியனவும் சிறந்தவையாக இருந்திருக்க முடியாது என்பதை இன்றைய நிலையும் வலியுறுத்தும்.

---

14. தமிழகப் பழங்குடி மக்கள் - ச. அகத்தியலிங்கம் (பதிப்பு) பக்கம். 70.

** கைம்பெண்டிர் உடை என்னும் பகுதியில் மனைவியர் உடை விளக்கப்படுகிறது.

சிந்தாமணி மரணத் துன்பத்தில் கறுப்பு உடையினை உறவினர் உடுத்தும் வழக்கு இருந்திருக்கலாமோ என்ற எண்ணத்தைத் தருகின்றது. சுலூழவேகன் தன் மகனிறக்க இறுதிச்சடங்கு புரியச் சுடுகாட்டிற்கு வரும்போது காளக உடையினனாகக் (320) காட்சி அளிக்கின்றான். காளக உடை கரிய உடை எனும் நிலையில் கறுத்த ஆடையினைப் பற்றிய எண்ணம் ஈண்டு அமைகின்றது. மேலும் வெண்மையை மங்கலமெனக் கருதிய சமண மதத்தார் கறுப்பினை அமங்கலமாகக் கருதியிருந்திருக்கவும் வாய்ப்புண்டு. தமிழர் இத்தகைய முறையில் உடுத்தியதாக எண்ணங்கள் இல்லை. எனினும் சில பாடல்கள்வழி, பொது நிலையில் பிரிவில் ஆடை சிறப்பாக அமையவில்லை என்பதினின்றும் மரணத்திலும் உறவினர் சிறந்த ஆடையுடுத்தியிரார் என்றதொரு உணர்வினை நாம் கொள்ள முடிகின்றது.

தன் தந்தையின் பிரிவை எண்ணி வருந்தும் அன்னிமிஞிலியைப் பற்றிய எண்ணமும் (புறம்-262) தமிழர் வாலிது உடாமைதான் அதாவது தூய்மையான சிறந்த ஆடைகளையுடாமைதான் காணப்பட்டதே தவிர, கறுப்பு உடையையுடுத்தும் வழக்கம் இல்லை என்பதை யுறுதிப்படுத்துமாறு அமைகிறது.

தலைவன் வினைவயிற் பிரிய, வாடியிருக்கும் நெடுநல்வாடைத் தலைவியின் கோலமும், அதாவது,

பூந்துகில் மரீஇய ஏந்து கோட்டல்குல்
அம் மாசூர்ந்த அவிர் நூற் கலிங்கமொடு (நெடுநல்-145)

காணப்படும் தன்மையும் இதற்கு இணக்கமானதொரு எண்ணமாகும். ஈண்டும் பிரிவில் வாலிது உடாமல் தலைவனை எண்ணி இருக்கின்றாள் தலைவி.

இன்றைய நிலையில் பிறமதத் தாக்கத்தின் விளைவாகக் கிறித்தவர்கள் கறுத்த உடை உடுத்துகின்றனர். தமிழரில் ஒரு சிலர் ஒரு சிறு கறுப்புத்துணியைத் துக்கத்தின் அடையாளமாகத் தங்கள் உடையில் பிணைத்திருப்பதும் உண்டு. ரோமானியர்கள் மரண துக்கத்தில் கறுப்பு டோகா அணிந்தனர் என்பதைக் கலைக்களஞ்சியம் சுட்டும்.

எனவே அன்று முதல் இன்றுவரை துக்கத்தில் கறுப்பு உடையைப்பற்றிய உணர்வு பிறர் கருத்தாகத்தான் காண முடிகின்றதே தவிர தமிழர் எண்ணமாகக் கொள்ள இயலவில்லை.

இன்றும் இந்துக்களைப் பொறுத்தவரையில் சிறந்த புது ஆடைகளைத்தான் உடுத்தாரே தவிர கறுப்பு உடுத்தல் இல்லை. கறுப்பு ஆடையை அமங்கலம் என்று மங்கலக் காரியங்கட்கு பயன்படுத்தாமை தமிழரிடம் காணப்படுவதாகும். கறுப்பு அமங்கலம் என்பது இந்தியரிடம் காணப்படும் பொதுவானதொரு எண்ணமாகவும் சுட்டுவர்.[15]

## தகுதியும் ஆடையும்

தகுதிக்கேற்ப உடையுடுத்தல் பண்டு தொட்டே தமிழரிடம் காணப்படும் வழக்கம். உடையின் தரத்திலும், உடையுடுத்தும் முறையிலும் இம்மாறுபாடுகள் பலவற்றை இலக்கியச் சான்றுகள் விளக்குகின்றன. அறிஞர் எண்ணமும் இதற்கு ஒத்தமைகின்றது.[16]

தகுதி என நோக்கச் செல்வத் தகுதி, பதவித் தகுதி, இனத் தகுதி, என்னும் நிலையிலும், விதவைகள், துறவிகள் நிலை என்றும் தகுதிக்கேற்ற உடையினை நோக்கலாம்.

1. செல்வம்

மேனிலை மாந்தர் என்ற நிலையில் நோக்க எல்லா இலக்கியங்களிலுமே மிகச் சிறந்த உடையுடுத்திய நிலையில் காட்டப்படுகின்றனர். இலக்கியம் வாயிலாக அறியவரும் உடை வகைகளுள் உயர்ந்தன அனைத்துமே உயர்நிலை மாந்தரின் ஆடையாகவே வரலாற்று அடிப்படையில் பார்க்கும்போது தெரிய வருகின்றது. ஆயின் தாழ்ந்த மக்களின் உடையாகச் சாதாரண ஆடைகளே பேசப்படுகின்றன. புரவலன் கொடையும் பாடி நிற்கும் புலவரின் நிலையும் சங்க இலக்கியத்தில் காணப்படும் தன்மைகள் இதனை விளக்கச் சிறந்ததொரு எடுத்துக் காட்டாகும்.

---

15. Black was always considered very inauspicious 'Gal-braith Introduces India' Page-161.

16. The dress worn by the Tamil people varied according to their rank in society and the race to which they belonged. —The Tamils Eighteen hundred years ago - V. Kanakasabbai, Page-116.

'செக்கரன்ன சிவந்து நுணங்குருவிற் கண் பொருபுகூஉம் ஒண் பூங் கலிங்கத்தைச் செல்வரும்' (மது. 431-35), சில்பூங் கலிங்கத்தை யுடுத்திய செல்வ மகளும் (கலித். 55) காட்டப்பட, சுருந்துவரானடை உடுத்திய இடையனையும் (கலித். 108), மாசொடு குறைந்த உடுக்கையளாக ஏழைப்பெண்ணும் காட்டப் படல்போன்ற பல நிலைகள் அமைகின்றன. இந்நிலையே இன்று வரையிலும் தொடரும் ஒன்று. எனவே செல்வத்தில் உயர்ந்தோர் சிறப்பு ஆடைகளையும், இல்லாதார் இழிந்த ஆடைகளையும் உடுத்துதல் செல்வத் தகுதியின் விளைவே என்பது வெளிப்படை. செல்வத்தை அளவிடும் கருவிகளுள் ஆடையும் ஒன்று என்பது இதனால் புலனாகின்றது.

**2. பதவி**

புறங்காற் றாழ்ந்துபோர்வை முற்றி
நிலந்தோய்புடுத்த நெடு நுண்ணாடையர்
தானை மடக்கா மானமாந்தராக (1.32:63—65)

அரசன் முன் நிற்கும் கணக்கரையும், திணைத் தொழிலாளரையும் காட்டும் பெருங்கதை.

சிந்தாமணி உலக மன்னவன் திருநாளொளி முடி அணிந்து நின்றவர் போற் பூத்தன கோங்கம் என்றும் பைந்துகின் முடி அணிந்து அவர்பின் உலவு காஞ்சுகியவர்போற் பூத்தன மரவம் (1568) என்று உவமை வாயிலாகப் பதவிக்கேற்ற உடையினைச் சுட்டும். 'கோங்கம் பலவும், சக்கரவர்த்தி முடிசூடும் நாளிலே முடிசூடிச் சேவிக்கும் அரசரைப் போலே பூத்தன; மரவம் மயிர்க் கட்டு கட்டி அவ்வரசர் பின்னேதிரியும் சட்டையையுடைய மிலேச்சரைப்போலச் சேரப் பூத்தன என்ற உரை இதனை விளக்க வல்லது.

கம்பன் பல இடங்களில் தகுதிக்கேற்ற உடையின் தன்மையினை இயம்புவான். உடுத்தும் முறையில் ஈண்டு பெரும் பாலானவை அமைகின்றன.

இராவணன் முன்னால் நிற்கும் யமன் சேலையாற் வாய் புதைத்தான் போன்று (ஆரணிய. 570) அனுமனும் சில இடங் களில் காட்சி தருகின்றான்.

வணங்கி நாணி
வாய்புதைத்து, இலங்கு தானை
முன்தலை ஒதுக்கி நின்ற மொய்ம்பன் (10516)

என்றும்,

வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியான் (6576)

எனவும் வாயினை மறைத்துக்கொண்டும், ஆடையினை ஒதுக்கிக் கொண்டும் நிற்கும் நிலையினைக் காண்கின்றோம்.

இவ்வெண்ணம் கம்பன் காலத்தில் அல்ல; தொல்காப்பியர் காலத்திலேயே இருந்திருக்கக் கூடும் என்பதைப் பேராசிரியர் உரை உணர்த்தும். 'அடக்கம் என்பது உயர்ந்தோர் முன் அடங்கி ஒழுகும் ஒழுக்கம். அவை, பணிந்த மொழியும் தணிந்த நடையும் தானை மடக்கலும், வாய்புதைத்தலும் முதலாயின' (தொல். பேரா. 12) என்று அடக்கம் என்பதற்கு உரிய இயல்பு களுள் தானை மடக்கலும் வாய்புதைத்தலும் அடங்கும் என்று உரைப்பர்.

இக்காட்டுகளை நோக்கத் தன்னைவிடத் தகுதியுடை யோருக்கு மரியாதை கொடுக்கவேண்டும் என்ற பண்பு காரண மாகத் தமிழர் இவ்வழக்கினைக் கொண்டிருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. பெரியோர் அவையுள் ஆடை இகவார் என்ற நீதி நூற்கருத்தும் (ஏலாதி. 75) இதலோடு ஒத்ததே.

### இனம்

இனத்திற்கு ஏற்ப அதாவது சாதிப் பகுப்பிற்கு ஏற்ற உடை யும் இருந்திருக்கலாம் என்பதைச் சில எண்ணங்கள் தெளிவு படுத்துகின்றன. சிலப்பதிகாரத்தில் 'பொங்கொளி யரத்தப் பூம்பட்டுடையினனாக அரசபூதமும்' (22:46), உரைசால் பொன் னிறம் கொண்ட உடையினனாக வணிகபூதமும் (22:67), காழகம் செறிந்த வுடையினனாக வேளாண் பூதமும் (22:91) என இனத் திற்கேற்பப் பூதங்களின் உடை வேறுபாட்டைச் சுட்டுவார் இளங்கோ. வெளிப்படையாக இனங்களின் உடைமாறுபாடு விளங்காவிடினும் குறிப்பாகச் சுட்டுவதாக இதனைக் கொள்ளலாம்.

ஏனோர் பிறர்க்கும் இவையென வகுத்த
அணியுமாடையு மணியுநல்கி (5.4:93-94)

என்னும் பெருங்கதைக் குறிப்பும் இவ்வெண்ணத்திற்கு அரணா கின்றது.

சோழர் கல்வெட்டில் இடம்பெறும், 'சிறு விளக்குகளும் பானைகளுள் செய்து விற்கும் குயவர்கள் ஒரு மேலாடை அணிந்து கொள்ளலாம்; இடையர்கள் இறந்தவர்கள் மேல் பச்சைப் பட்டு புலியூர்ப்பட்டு போன்றவற்றைப் போர்த்திக் கொள்ளலாம். என்ற உரிமைகளும்[17], தோள்சீலைப் போராட்டம் நடத்தி நாடார் வென்ற பிற்காலச் சான்றும்[18] சாதிப்பகுப்பிற்கு ஏற்ற முறையில் உடை வகையில் சட்ட திட்டங்களையும் தமிழர் கொண்டிருந்தனர்.என்பதைத் தெளிவாக்குகின்றன. இச்சட்ட திட்டங்கள் பழங்காலத்திலேயே உலகம் முழுமையும் காணப் பட்டது.[19] ஆடைகளின் எண்ணிக்கையும் வரையறுக்கப் பட்டன.[20] இவற்றுடன் தமிழர் நிலையை ஒப்பிட, பிற்காலத் தில்தான் சட்டம் என்னும் நிலையில் இவ்வெண்ணங்களைக் காணினும் ஆதிமுதலே வரன்முறைகள் இருந்துள்ளன என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

இவற்றைத் தவிர வயதில் மூத்தோர்க்கு மதிப்பு அளிக்க வேண்டும் என்ற எண்ணமும் தமிழரிடையே இருந்தமையினைச் சில எண்ணங்கள் வெளிப்படுத்துகின்றன.

---

17. கல்வெட்டுக்களால் அறியப்படும் சோழர் காலத்திய சமுதாய அமைப்பு, க. த. திருநாவுக்கரசு, கல்வெட்டுக் கருத்தரங்கு, பதிப்பாசிரியர் ஆர். நாகசாமி, பக்கம்—228, 229.
18. The Nadars of Tamilnad — Robert L. Hardgrave, J. C. Page - 55.
19. From time to time Kings and Queens passed sumptuary laws, designed to curb this extravagance in dress and sharply signifying the quality of clothes and ornament which could be worn by people according to their social status.
—Discovering Costumes - Audery I barfoot, Page-27.
20. So in 594 B.C. a law, was passed ordaining that no women was to wear more than three garments. This is an early example of a kind of order which as we shall see has been issued again and again in country after country in an attempt to make people dress as the government of the time thought they should....
—The Story of Clothes - Agnes Allan, Page-57.

நீதி இலக்கியமாகிய ஆசாரக் கோவை,
மோட்டுடைப் போர்வையோ டேக்கழுத்துந் தாளிசைப்புங்
காட்டுளே யாயினும் பழித்தாரமாந்தம்மின்
மூத்த உளவாகலான். (91)

என்கின்றது.

காட்டில் நடந்து செல்லும்போது தம்மினும் மூத்த மரங்கள் உளவாகலான் போர்த்துச் செல்லல்கூடாது என்னும் இதன் கருத்து தம்மினும் வயதில் முதிர்ந்த மாந்தர்க்கு மதிப்பு கொடுக்கும் பொருட்டுப் போர்வை போர்த்தலில்லா தன்மையை இயம்புகின்றது.

நீலகேசியுரையின் கண்ணும் இத்தகையதொரு எண்ணத்தினைக் காண்கின்றோம்.

இனி, துவராடை போர்ப்பது நடுநாட்டினர் வழக்கமன்றோ? இந்நாட்டில் மூத்தார் முன்னிலையோர் போர்வை வாங்குதல் போல என்னை?

மூத்தார்முன் மத்தியத்தார்போற் போர்வை
போர்த்திட்டான்
வாய்த்திரா வகை வேண்டித்துவர் துன்னம் வகுத்திட்டான்

என்பதாகலின் (நீலகேசி உரை 190).

எனவே இவ்வுரையின்படி இத்தகையதொரு முறையில் வயதில் முதிர்ந்தோர்க்கு மதிப்புக்கொடுக்கும் இயல்பு காலங்காலமாகத் தமிழரிடம் காணப்பட்டதொரு பழக்க வழக்கமாகும் என்பதனை உரை முடிகின்றது.

கைம்பெண்டிர்

தெய்வந் தொழாள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை (குறள். 55)

என்ற நிலையில் பெண்ணெனும் நல்லாருக்கு இறையாற்றலைத் தரும் சக்தி, கொண்டவனால் அவள் அடையப்பெறும் ஒன்றாகும். இவ்வாழ்க்கையில் தலைவன் மனமகிழ அவள் வாழும் வாழ்க்கையைப் புலவர்கள் சிறப்பாக ஓவியமாக்கிக் காட்டுகின்றனர்.

இத்தகைய அவளது பெரும் சிறப்பு அவள் கணவனை இழந்த நாளிலேயே விடை பெற்றுவிடுகின்றது. கைம்பெண்டிரின் நிலை மிகவும் இரங்கத் தக்கதொன்று என்பது தமிழர் சமுதாயத்தின் அன்று முதல் இன்றைய வரலாறுவரையிலும் பார்க்கத் தெளிவுறும்.

அணில் வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்திட்ட
காழ் போனல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய்தட்ட
வேளை வெந்தை வல்சியாகப்
பரற் பெய் பாயின்று வதியும்
உயவர் பெண்டிர் (புறம். 246)

என்னும் பெருங்கோப்பெண்டின் உரை, கைம்மை மகளிரின் அவல வாழ்க்கையை படம்பிடித்துக் காட்டும் சிறப்பானதொரு சான்றாகும். சமுதாய மதிப்பினைப் பெறாத நிலையில் இவர்கள் தான் முன்பு உடுத்திய ஆம்பலின் அல்லியை உண்டும், நூல் நூற்றுப் பிழைத்ததாகவும் (புறம். 125) மேலும் சில எண்ணங் களைக் காண்கின்றோம்.

இதனுடன், தலைவனுடன் இணைந்து வாழும் மகளிர் சிறந்த உடைகளை யுடுத்தியும், பல்வகை அழகுக் கோலங்களால் அதாவது சந்தனம் பூசுதல், தொய்யில் எழுதுதல் போன்றவற் றால் தங்களை அழகு படுத்தியும் கொண்டனர். எதிராக விதவைகள் இவற்றையெல்லாம் இழந்து காட்சி தருகின்றனர். இக்கோலத்தில் அவர்களின் ஆடை, எத்தன்மையில் இருந்தது என்பதையும் சில காட்டுகள் உணர்த்துகின்றன.

ஆர்கொலோ உரை செய்தார் என்று
அருள் வர சீற்றம் அஃக
பார்குலாம் எழு வெண் திங்கள்
பகல் வந்த படிவம் போலும்
ஏர்குலாம் முகத்தினாளை
இறைமுகம் எடுத்து நோக்கி
தார்குலாம் அலங்கல் மார்பன்
தாயரை நினைத்து நைந்தான் (கம்ப. 4424)

இலக்குவன் காணும் தாரையின் கோலம் இது. தந்தையையிழந்த, தன் தாயரை இலக்குவனுக்கு நினைவூட்டும் வண்ணம் அமையும் இத்தோற்றம், நமக்குக் கைம்மைக்கோலம் என்று ஒன்று இருந்ததைத் தெரிவிக்கின்றது. இக்காட்சியை விளக்குகின்ற கம்பன்,

மங்கல அணியை நீக்கி, மணி அணி துறந்து வாசக்
கொங்கு அலர் கோதை மாற்றி குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்கு வெம் முலைகள் பூகக் கழுத்தொடு மறையப்
போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல் நயனங்கள் பனிப்ப நின்றான்
(கம்ப. 4425)

என்கின்றான். ஈண்டு, மங்கல அணியை யிழநது, அழகு செய்யப் படாத தனங்களைக் கழுத்தொடு மறையும்படியாகப் போர்த்திய நிலையில் தாரை அமைகின்றாள். பல மங்கலக் கோலங்களை எல்லாம் அவள் இழந்து காட்சி தருகின்றாள். மங்கல அணி இல்லை. மணி அணிவு இல்லை. கோதை இல்லை. மார்பில் குங்குமம் சாந்தம் பூசவில்லை. ஆயின் மார்பை மறைத்துப் போர்த் தியுள்ளாள் என்னும் காட்சி கைம்பெண்டிரின் கோலத்தினைத் தெள்ளத் தெளிவாக நம்முன் படம்பிடித்துக் காட்டுகின்றது.

எனவே கைம்பெண்டிர், தங்கள் மார்பை மறைத்துக் கொள்ளும் வழக்கினைக் கொண்டிருந்தனர் என்பது ஈண்டு தெளிவாகின்றது.

நறுந்தொகைப் பாடல் ஒன்றில் உடுத்த ஆடை கோடியாக இருக்க, முடித்த கூந்தலை விரிக்கும் நிலையைக் (56) காட்டுவார் கவிஞர்.

இங்கு, விதவைகள் உடுத்திய ஆடை கோடியாகக் காட்டப் படுகின்றது. கோடி என்பது புத்தாடையைக் குறிக்கும் சொல்லாகும். எனவே மனைவி புத்தாடை அணிந்து காணப்படு கின்றாள் என்னும் பொருள் அமைகின்றது. கணவனை இழந்த மனைவியின் நிலை துன்பிற்குரிய தொன்றாகும். இத்தகைய நாளில் புத்தாடை உடுத்தல் என்பது உறுதியாகச் சிறந்த ஆடை என்னும் பொருளில் இருந்திருக்க வாய்ப்பில்லை. எனவே வேறு பொருளே அமைந்திருக்க வேண்டும்.

இன்று 'கோடி' என்னும் சொல், வெளுக்காத, வெண்ணிற ஆடையைக் குறித்தும் வழங்குகின்றது. 'கோடி நிறம்' என்றும் இவ்வண்ணத்தைக் குறிப்பிடுகின்றோம். எனவே இப்பொருள், சூழல் கொண்டு பார்க்க, வெண்ணிற ஆடையையே ஈண்டு கோடி என்னும் சொல் குறித்திருக்க வேண்டும் எனவும், விதவைகள் வெள்ளையாடை யுடுத்தல் அன்றே தொடங்கிவிட்ட தொரு மரபு எனவும், கொள்ளல் பொருத்தமானதாகும்.

இன்று விதவைகள் வெண்ணிற ஆடையுடுத்தல் பற்றிய எண்ணம் தமிழரிடையே பரவலாக அமையினும், ஒரு சில இடங்களில்தான் இப்பழக்கம் செயல்பட்டுக் கொண்டிருக்கக் காண்கின்றோம். சில சமுதாயத்தினரிடையே, கணவனை இழந்த மனைவிக்கு, அவளது மருமகன் முறையுள்ளோர் வெள்ளையுடை எடுத்துக் கொடுக்கும் வழக்கு இன்றும் (கன்னியாகுமரி மாவட்டம்) நடைமுறையில் இருப்பது பழமரபினைப் புலப்படுத்து வதாகலாம்.

வெண்ணிறத்தைத் தூய்மை எனக் கருதிய தன்மை சங்கப் பாக்களிலேயே பரந்து காணப்படும் ஒன்று. கற்புக்கு முல்லையைச் சுட்டியதும் இவ்வடிப்படையிலேயே. எனவே விதவைகள் தங்கள் வாழ்வு முடிந்தது என்ற எண்ணத்தில் மனம் தூய்மையாக இருக்கவும், தன்னைப் பிறருக்கு உணர்த்தவும், பிறர் விரும்பாதிருக்கவும் வழி செய்யவல்லது என்னும் நம்பிக்கை யடிப்படையிலும் வெண்ணிற ஆடையினை உடுத்தியும், மார்பினை மறைத்தும் வந்து இருக்கலாம். அல்லது பிறமகளிரிடம் இருந்து பிரித்துக்காட்டச் சமுதாயம் அளித்த வரன்முறையாகவும் இது இருந்திருக்கலாம்.

இன்று பல இடங்களில் விதவைகள் வண்ண ஆடை உடுத்து கின்றனர். கணவன் இறந்தவுடன் அவனுடன் உயிர் துறத்தல் அல்லது அவனது நினைவாகத் துறவு வாழ்க்கை வாழல் அன்றைய மனைவிமார்களுடைய நிலை இதற்குச் சமுதாயக் கட்டுப்பாடும். காரணமாக இருக்கலாம். ஆயின் இன்று கணவன் இறப்பின் மறுமணம் செய்து கொள்ளலாம் என்ற சமுதாயச் சூழல் அவர்கள் மனநிலை மாற்றத்திற்குக் காரணமாகின்றது. எனவே இயற்கையாக உடையிலும் மாற்றம் அமைகின்றது. மேலும் இத்தகைய நம்பிக்கைகளை எல்லாம் எண்ணிக் கொண்டிராத

உழைக்கும் மக்களிடமும் இம் மாற்றத்தைக் காணும் நாம் சமுதாய வளர்ச்சிக்கு ஏற்ப எண்ணங்கள் மாறுபடும் தன்மையை யுணர்ந்து கொள்ள முடிகின்றது. விதவைகளின் வெண்ணிறவுடை பற்றிய நம்பிக்கை தமிழர் நம்பிக்கை மட்டுமன்று. இந்தியரின் பொது நம்பிக்கையுமாகும்.[21]

## துறவிகள்

ஆற்றின் இழுக்கி அறனிழுக்கா இல்வாழ்வானிடத்தினின்றும் வேறுபட்டோர் துறவிகள் என்பதனை ஆடைபற்றிய எண்ணங் களும் வெளிப்படுத்தும்.

இவ்வுலக இன்பத்தைத் துறந்து, மேலுலக இன்பம் அடைய விழைதலே துறவின் குறிக்கோள். எனவே தங்கள் இலக்கினை நோக்கி ஐம்பொறிகளையும் செலுத்தத் தங்களைச் சில கட்டுப் பாட்டிற்குள் வைத்துக் கொள்கின்றனர் துறவிகள். உலக இன்பங்களுள் ஒன்றாகிய ஆடையினையும் வெறுக்கின்றனர். சிறந்த உடைகளைத் தவிர்க்கின்றனர். பிற இல்வாழ் மாந்தரிடமிருந்து தனிப்பட்டவர் என்பதை உணர்த்தவும் இவர்கள் தங்களுக்கென்று தனித்த உடைகளை உடுத்தும் பழக்கத்தினைப் பின்பற்றியிருக்கலாம்.

துறவிகளின் குறிக்கோள் ஒன்று எனினும் அவர்கள் மதக் கோட்பாட்டிற்கு ஏற்ப ஆடைகளில் மாற்றம் அமைகின்றது.

## இந்துமதம்

கல்தோய்த்துடுத்த படிவப் பார்ப்பானையும் (முல்லை. 37)
சீரை தைஇய யுடுக்கையுடைய முனிவரையும் (திருமுருகு. 126)

---

21. The widow, who in India is expected to be a pattern of piety is enjoyed by her religion to drape herself only in white, this being the colour most expressive of the ideal virtue and renunciation which is the goal of her remaining life upon earth. A true 'suttee' is one whom love not fire consumes from the ambers of such a devotional sacrifice. There arises that ourest form of ascerticism which generates a spontaneous disguest for colour and embellishment and in content with white borderless and patternless garment.

—Costumes of India and Pakistan, S. N. Dar, Page-145.

சங்க இலக்கியத்தில் காண்கின்றோம். கம்பராமாயணத்தில் காடு செல்லும் இராமன் முதலிய மூவரும் சீரை அணிகின்றனர் (1843), அரண்மனைக்கு வந்த முனிவர்க்கு அளிக்க மரவுரி வைத்திருப்பர் என்ற உரையாசிரியரின் விளக்கமும் (1919), தன்னிடமிருப்பது மரவுரிமட்டுமே என்ற முனிவர் கூற்றும் (659) அக்காலத்தில் துறந்தோரும் முனிவரும் மரவுரியை ஏற்றுக் கொண்டிருந்தனர் என்பதனை உணர்த்த வல்லது. இன்றைய நிலையில் இந்துமதத் துறவிகள் காவியாடை புனைகின்றனர். மரவுரி, காவியாடை இவற்றை நோக்க யாவரும் வேண்டாத, விரும்பயியலாத ஆடைகளைத் துறவிகள் தங்களுக்குரியதாக ஏற்றுக் கொண்டிருக்கின்றனர் என்பது தெளிவாகின்றது.

## புத்த மதம்

புத்தமதத் துறவிகளின் ஆடை பெரும்பாலும் உடல் முழுவதும் போர்த்தியது போன்ற நிலையிலேயே இன்று காண்கின்றோம். அன்றும் இவ்வாறே இருந்திருக்கலாம் என்றதொரு உணர்வினை இலக்கியங்கள் தருகின்றன.

மணிமேகலையில் சங்க தருமன் என்ற புத்த முனிவன்,

> கதிர் சுடுமமயத்துப் பனிமதிமுகத்தோன்
> பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடையனாக (5:60-61)

காட்டப்படுகின்றான்.

நீலகேசி புத்தமதத் துறவியரின் உடையினைப் பற்றிய பல எண்ணங்களை விளக்கமாகத் தருகின்றது. செம்படம், துவராடை போன்ற இவர்களின் உடையின் நிறம் பற்றிய உணர்வையும், முழு மெய்யினையும் போர்க்கும் இவர்கள் இயல்பும் பல இடங்களில் சுட்டப்படுகின்றன.

> பூங்கமழ் காராடை போர்த்த வெம்புக்கர் — நீல. 259
> படம் புனைந்தவர் கடாம் தாம் — ,, 360
> இது செம்படர்கள் இறைவன் உறையும் — ,, 464

மேலும் நீலகேசி வாதம் புரியும் தன்மையில், இவ்வாறு முழு மெய்யும் போர்த்தலுக்குரிய காரணம் என்ன என்று வினவுகின்றாள். அற்கு, புத்த முனிவன் ஒருவன்,

வீடிற்கே யெனின் ஞானம் வேண்டாதே முடியுமாற்
பீடிற்கே யெனி னின்னிற் பெருஞ் செல்வர் திருந்தினார்
மூடிற்றின் பயனென்னையெனவினவ மொக்கலனு
மூடிற்றுஞ் சிறிதுள்தா லுரு வறிதற்கென மொழிந்தான் (272)

என்கின்றான்.

இதற்கு நீலகேசி,

படைப்பெளிதாற் கேடரிதாற் பலகள்வர் நவையாரா
லுடைக் கியைந்த வொலியற்றா லூன்றருவார்க் குணர்த்துமால்
விடக்கமர்ந்த வுள்ளத்தாய் வேடமு மறிவிக்குந்
தொடர்ப்பாடும் பெரிதன்றாற் றொட்டை நீபூணியோ (273)

எனப் பதிலிறுக்கின்றாள்.

துறவுக்கு இவ்வுடை தேவையில்லை. தோலே போது மானது என்றுணர்த்துகின்ற தன்மை இதனுள் அமைகின்றது. இவண், புத்தமதத்தாரின் உடையினையும், அவற்றை எள்ளும் பிறமதத்தார் இயல்பினையும் நாம் அறியக் கூடுகின்றது.

கலிங்கத்துப் பரணியில்,

குறியாகக் குருதிக் கொடி ஆடையாகக்
கொண்டுடுத்துப் போர்த்துத் தங்குஞ்சி முண்டித்து
அறியீரோ சாக்கியரை யுடை கண்டால் என்
அப்புற மென்றியம்பிடுவார் அநேகர் ஆங்கே (458)

என்று போர்வீரர்கள் பிழைத்துச் செல்லும் நிலையில் பௌத்தத் துறவுக் கோலம் பற்றிய எண்ணம் அமைகின்றது. இவ் வெண்ணங்கள் காவியுடையினை யுடுத்தியும், போர்த்தியும் காணப்பட்ட பௌத்தத் துறவியரின் நிலையைத் தெளிவாக்க வல்லன.

பெண் துறவிகளின் உடையினைப் பற்றிய எண்ணம் வெளிப் படையாகத் தெரியவில்லையாயினும் ஒருசில எண்ணங்கள் தனிக் கோலம் இருந்தமையினைத் தெளிவுபடுத்த உதவுகின்றன.

மாதவி, மணிமேகலையை,

கோதைத் தாமம் குழலொடு களைந்து
போதித்தானம் புரிந்தறம் கொள்ளத் (27:107-8)

துறவறப படுத்துகின்றாள், இவண் புத்த மதத்துறவியர் தங்கள் தலையை மழித்தல் என்ற உணர்வு மட்டுமே வெளிப்படு கின்றது. ஆடைபற்றிய குறிப்பில்லை.

சாத்தனார் இக்கோலத்தைப் பிக்குணிக் கோலம் என்று ரைப்பார்.

கைக் கொண்டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந் தெரு அடைதலும் (15:57-8)

என மணிமேகலை காட்டப்படுகின்றாள்.

மேலும் 'பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலம்' என்றும் (23:25) பிக்குணிக் கோலத்தின் தன்மை சுட்டப்படுமாற்றைக் காண, காணும்போதே பிறர் புரிந்து கொள்ளக்கூடிய துறவுக் கோலம் என்பது தெளிவாகின்றது. எனவே ஆடவர் போன்று இவரும் காவியுடை அணிந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

பிக்குணிக் கோலம் என்பதனை விளக்கும் உ.வே. சாமி நாதையர் அவர்கள், துறந்தோரில் ஆண்பாலாரைப் பிக்ஷுக்கள் என்றும், பெண்பாலாரைப் பிக்ஷுணிகளென்றும் கூறுதல் பௌத்த சமய மரபு (மணி. 15:58) என்று காட்டுவார். 'பிஷுணி ஒருத்தி கஞ்சுகம் அணியாது சென்று தண்டனை பெற்றாள் என்னும் எண்ணம் வடநாட்டறிஞர் கருத்தாகக் காணப்படு கின்றது.[22] எனவே அங்கு புத்தமதத் துறவி சட்டை போட்டி ருந்தாள் எனக் காண்கின்றோம். நம் இலக்கியங்களைப் பொறுத்தவரையில் சமணத் துறவிகளுக்குத் தான் இக்கட்டுப் பாடு இருந்ததாகத் தெரிகின்றதே தவிர, புத்தமதத் துறவியின் மேலாடை பற்றிய எண்ணம் ஏதுமில்லை. எனவே பிற பகுதித் துறவிகளுடன் இவர்களை ஒப்பிட்டுப் பிறர் பின் செல்லாத பிக் குணிக் கோலம் என்று சுட்டும் தன்மையில், ஆடவர் போன்று இவர்களும் உடுத்தியும் போர்த்தியும் ஆடை அணிந்திருக்கக் கூடும் என்பது உறுதிப்படுகின்றது.

---

22. The bhikkhunis also seem to have been allowed the use of Kancuka (bodice) because at one place it was mentioned that bhikkhuni who went to a village without bodice had to perform prayascitta.

—Costumes Textiles Cosmetics & Coiffure - Dr. Moti chandra, Page-13,

இந்துமதத் துறவிகளைப் போன்று இவர்களும் காவியாடை உடுத்தும் தன்மைக்குரிய காரணம் புலப்படவில்லை. அவர்கள் போன்று, அனைத்தையும் துறந்த மனப்பான்மை காரணமாகப் பிறர் விரும்பாத உடையினை இவர்களும் ஏற்றுக் கொண்டிருக் கலாம் அல்லது ஆசையை ஒழித்தல் வேண்டும் என்ற புத்தமதக் கொள்கையின்படி ஆடையின்மேல் உள்ள ஆசையையும் ஒழித்து இருக்கலாம்.

## சமணமதம்

சமணமதத் துறவிகளின் ஆடைபற்றிய எண்ணங்கள் பல காட்டுகள்வழிப் புலனாகும் ஒன்று.

நாணமும் உடையும் நீத்து - இருக்கும் துறவியரை மணிமேகலையும் (3:88) மணியுறை கழிப்பதுபோல் துகில் நீக்கிய சீவகன் நிலையைச் சிந்தாமணியும் (30:28) அரைக் கலிங்கம் உரிப் புண்ட கலிங்கர் எல்லாம் சமணரெனச் சொல்லிப் பிழைக்கும் தன்மையைக் கலிங்கத்துப் பரணியும் (466) காட்டும் தன்மையில் சைனத் துறவிகள் தங்கள் உடையினையும் துறந்து துறவறம் பூண்ட தன்மை விளக்கமுறும்.

சமணத் துறவிகள் ஆடையின்றி இருந்தனர் என்பதற்குத் திருச்செங்கோட்டில் கிடைக்கும் சமணமுனிவர் படுக்கையைப் பற்றிய எண்ணமும் அரணாகின்றது.[23]

நீலகேசியில், புத்தமதத்தினரைப் பழித்துரைக்கும் தன்மை யில், நீலகேசி தன் சமயமான சமண சமயத்தின் சிறப்பினை உரைக்கின்றாள். ஆங்கு,

புனைவு வேண்டலர் போக நுகர்விலர்
நினைவிற் கேயிடை கோளென நேர்தலா
வினையவும் மலமேறினு மமன்செய
அனையதான் மாக்கள் யாக்கையின் வண்ணமே (319)

என, தியானத்திற்கு இடையூறு என எண்ணி உடை முதலிய வற்றை வெறுக்கும் அவர்களின் மனநிலையைக் குறிப்பிடு கின்றாள். இதனையே, பொதுநிலையில் சமண இலக்கியங்கள் அனைத்தும் நவில்கின்றதை நாம் காண்கின்றோம்.

23. ஆய்வுக் களஞ்சியம்-திருச்செங்கோடு, கொடுமுடி சண்முகம் பிரகதம் தேனோலை, 1979, பக்கம்-3.

'மூடு கூறையின் மூடல் பிறவிக்கு வித்து' என்று சிந்தாமணி உரைக்கும் தன்மை, (1427) ஆடையை அகற்றலுக்கு உரிய அவர்களின் நம்பிக்கையை விளக்கவல்லது. கூறையின் மூடல் பிறவிக்கு வித்து; அதனை அகற்றின் தான் பிறவியை அறுக்கலாம் என்ற நம்பிக்கையைக் காண உடம்பை மூடல் பிறபற்றுகளுக்கும் வழி வகுக்கவல்லது என்ற எண்ணமே இதற்கு அடிப்படையாக இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

'பாயுடுத்தல்' என்றதொரு வழக்கினைச் சமணர்க்குரியதாகப் பெரிய புராணம் உரைக்கும் (திருஞான 724). எனவே சமணருள் பிரிவினர்க் கிணங்க நம்பிக்கைகள் மாறுபட்டன என்பதும் தெளிவு பெறும்.

சமணத் துறவிகளில் ஆடவரே அன்றி, பெண்டிரின் நிலையையும் இலக்கியக் காட்டுகள் தெளிவாக்குகின்றன.

காமன் கண் புடைத்திரங்கும் வண்ணம் எழின் முலை நெற்றி சூழ்ந்த தன்மையையும் (2993), இடை, கவல் வருந்தும்படி மார்பை மறைத்தும், போர்த்தும் காணப்படும் நிலையையும் (1783) சிந்தாமணி உரைக்கும். எனவே சமணத் துறவியருள் மகளிர் அரையாடையுடன் மார்பையும் மறைக்க வேண்டும் என்றதொரு எண்ணம் இருந்தது என்பது தெரிய வருகின்றது. இந்தியாவின் சில பகுதிகளில் துறவிகளுக்கென்று இக்கட்டுப்பாடு இருந்திருக்கலாம் என்பது தண்டனை பெற்ற புத்தமதத் துறவியுடன், பெண் துறவியர் பற்றிய டாக்டர் மோதிச்சந்திராவின் கருத்தாலும் விளக்கமுறும்.[24]

எனவே சமண மதத்தைப் பொறுத்த வரையில் ஆடவர் உடலை மூடாதும், மகளிர் மூடியும் காணப்படவேண்டும் என்ற எண்ணங்களின் அடிப்படையில் அவர்களின் ஆடையும் அமையக் காண்கின்றோம். இம்முரணுக்குக் காரணம் என்ன என்பது தெளிவாகப் புலனாகவில்லை.

---

24. Ordinarily the nuns did not cover their sides or chest but after adolescence when their breasts developed they could cover them.
—Costumes Textiles Cosmetics & Coiffure - Dr. Motichandra, Page-63.

எனினும் மூடுகூறையின் மூடல் பிறவிக்கு வித்து என்னும் நம்பிக்கை ஆடவர்க்கே உரியதாகக் கருதப்பட்டு இருத்தல் வேண்டும். விதவைகள், பிற மதத்துறவிகள், பிறமாந்தரிடமிருந்து தங்களை இனம்பிரித்துக் காட்ட, தனித்த உடை அணிந்தமை போன்று, சமண மதத்தில் துறவற மகளிர் உடல் முழுவதையும் மூடுவதைப் பழக்கமாகக் கொண்டனர் என நினைக்கலாம்.

அனைத்துத் துறவிகளின் உடைபற்றிய எண்ணங்களையும் நோக்கத் துறவுக்கு அழகுபடுத்தல் தேவையற்றது. அழகைக் குறைத்தல் நன்மை பயக்கவல்லது. அடிப்படைத் தேவைகளை மட்டுமே ஏற்கவேண்டும் எனும் கொள்கைகளே காரணமாக இருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

## தொழிலும் ஆடையும்

தொழிலுக்கேற்ப ஆடையுடுக்கும் வழக்கு இன்று இயல்பான ஒன்றாக விளங்குகிறது. அன்றும் தமிழர் தொழிலுக்கேற்ப உடை உடுத்தினர் என்பது இலக்கியம் வெளிப்படுத்தும் உண்மை. தமிழரின் தொழிலுக்கேற்ற ஆடைகள் எந்தெந்த முறையில் அவனுக்கும் அவனது தொழிலுக்கும் பயன் பட்டிருக்கக் கூடும் என்பதனை இவண் நோக்கலாம்.

### போர்

கோலங் கோடலில் ஆர்வம் உடைய தமிழர் போருக்கென்றும் தனித்த கோலத்தினைக் கொண்டு திகழ்ந்தனர்.

புறநானூற்றில் அமையும் அதியமானை ஔவையார் பாடிய பாடல் போர்க்கோலம் பற்றிய உணர்வினைத் தருகின்றது.

> கையது வேலே காலது புனைகழல்
> மெய்யது வியரே மிடற்றது பசும்புண் (புறம். 100)

என்ற நிலையில் அதியமான் தன் மகனைப் பார்க்க வரும் தன்மையை உரைக்கின்றது.

ஆடைபற்றிய உணர்வு இங்கில்லையாயினும் போர்க்கோலம் என்பது எத்தன்மையது என்பதை விளக்க வல்லது இப்பாடல். மேலும்,

போர்க்கோல நீக்கிப் புகழ் பொன்னி னெழுதப் பட்ட
வார்க்கோல மாலை முலையார் (சீவக. 2352)

போர்க்கோலம் செய்து விட்டாற்கு
உயிர் கொடாது அங்குப் போகேன் (கம்ப. 7553)

என்னும் எண்ணங்களும் போர்க்கோலம் கொண்டமையை வெளிப்படுத்துகின்றன.

இப்போர்க் கோலத்தினை எத்தன்மையில் அமைத்தனர் தமிழர் என்பதையும் சில பாடல்வழி நோக்கலாம்.

போர்வீரர்களுக்கு அடிப்படைத் தேவை போர் செய்யும் வசதியும், பாதுகாப்புத் தன்மையுமே ஆகும். எனவே போர் செய்யத் தடையாகாமல் இருக்கவும், எதிரியின் படைக் கலங்களில் இருந்து தங்களைப் பாதுகாக்கவும் அதற்கேற்ற உடைகளை அணிகின்றனர். இந்நிலையில் போர்வீரர்களுக்குரிய ஆடைகளுள் முதலிடம் வகிப்பது கவசம் எனல் பொருந்தும். பிற ஆடைகளுக்கும் இதற்குமுரிய வேறுபாடு பருத்தி, பட்டு போன்ற இழைகளினாற் செய்யப்படாமையே யாகும். சங்க இலக்கியம்;

புலிநிறக் கவசம் பூப்பொறிச் சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலியன்ன களிற்று மிசை யோனைக் (புறம். 13)

காட்டுகிறது. இதற்கு உரையாசிரியர், புலியினது தோலாற் செய்யப்பட்ட மெய்புகு கருவிப் பொலிந்த கொளுத்தற எய்த அம்புகள் போழப்பட்ட மார்பு என்று உரை எழுதிச் செல்கின்றார். இதனால் புலித்தோலால் கவசம் உருவாக்கப் பட்டமையை அறிய முடிகின்றது. பின்னைய இலக்கியங்களை நோக்க, உலோகக் கவசங்களே காலவளர்ச்சியில் செல்வாக்குப் பெற்றுவிடக் காணலாம்.

மார்பில் (புறம். 13) காலில் (மது. 436) கையில் (கம்ப. 8658) விரல்களில் (கம்ப. 9791) எனப் பல பாகங்களையும் கவசத்தால் மறைத்துச் செல்கின்றனர் போர்வீரர்கள்.

கவசம் அணிந்து போருக்குச் சென்றதுடன் கவசம் பற்றிய தொரு மரபினையும் பின்பற்றினர் என்பதைச் சிந்தாமணிப் பாடல்வழி அறியக்கூடுகின்றது.

புலிப் பொறிப் போர்வைநீக்கிப் பொன்னணிந்திலங்குகின்ற
ஒலிக் கழன் மன்னருட்கு முருச்சுடர் வாளை நோக்கி
கலிச் சிறையாய நெஞ்சிற் கட்டியங்காரனம் மேல்
வலித்தது காண்டு மென்று வாளெயிறிலங்க நக்கான்
(சீவக. 266)

இப்பாடலில் கட்டியங்காரனைக் கண்ட சச்சந்தன், தன், புலியினது வரியையுடைய கவசத்தைத் தவிர்த்து வாளை நோக்கிச் சிரிக்கின்ற தன்மை அமைகின்றது. போரில் கவசம் அணிதல் தேவை என்னும் நிலை இருக்க இங்கே கவசத்தை நீக்கும் தன்மையைப் புலவர் காட்டுகின்றார். இதற்கு, 'வாகனம் ஏறாதவர் கவசம் பூணுதல் மரபன்று' என்று காரணம் காட்டுகின்றார் உ.வே.சா. அவர்கள். எனவே வாகனத்தில் ஏறிப் போர் செய்வோர்தான் கவசம் அணிதல் வேண்டும் என்னும் பழக்கம் அவர்களிடம் இருந்திருக்கலாம் எனத் தெரிகின்றது.

போரில் உயிர்ப் பாதுகாப்புக் கருதியே கவசம் அணியும் பழக்கம் உருவாகியிருக்கலாம் எனினும் அதனைத் தவிர்த்துச் செல்லும் நிலையினைக் காண இதற்குரிய அடிப்படையாக எது இருக்கும் என்பது புலனாகவில்லை. எனினும் உயிரையும் விட, மரபினைப் பெரிதெனக் கருதினர் என்னும் உண்மை இங்கே வெளிப்படக் காண்கின்றோம்.

ஔவையார் அதியமானைப் பாடும் பாடல் வழி, அவன் கவசம் அணிந்ததாகத் தெரியவில்லை. கையில் வேலுடன் காலில் கழலும், மார்பில் வியர்வையும், பசும் புண்ணுமாகத் தான் காட்சி அளிக்கின்றான்.

அடுத்து,

மெய்புதை அரணம் எண்ணாதெஃகு சுமந்து
முன் சமத்தெழுதரும் வன்கண் ஆடவர் (பதி- 52:6)

எனப் பதிற்றுப்பத்து காலாட்படையினரைக் காட்டும். கவசத்தையும் வேண்டுமென்று எண்ணாது, வேலைத் தாங்கிப் போர்க் களம் நோக்கிப் புறப்பட்டுச் செல்லும் வீரராக இவர் அமைகின்றனர். கவசம் அணியாது போருக்குச் சென்றிருந்த அதியமானுடன் இவ்வீரர்களையும் காண, 'விரைவு' தான் இதற்குரிய காரணமாக அமைந்திருக்கும் என எண்ணத் தோன்றுகிறது

போரினை உயிரென எண்ணியிருந்த தமிழர் உள்ளத்தையும், வெளிப்படுத்தும் வண்ணம் கவசம் பூணாத நிலை இங்கு அமைகின்றது.

பாதுகாப்புடன், போர் செய்ய வசதியாக இருககும் என்ற எண்ணத்திலும் இவர்களின் ஆடை அமைந்திருந்தது.

நீலக் கச்சையுடன் போருக்குச் சென்ற வீரனைச் சங்கப் பாடல் (புறம். 274) காட்டுகின்றது. கச்சை அணிந்து உடையினை இறுக்கிக் கட்டிக்கொண்டு சென்றனர் என்பது இவண் தெரியவருகின்றது.

விடுகணைத் தெரிந்து தானைவீக்கற விசித்து (சீவக. 1086)

வட்டுடை மருங்குல் சேர்த்தி வாளிரு புடையும் வீக்கி (சீவக. 978)

போருக்குச் செல்லும் தன்மையைச் சிந்தாமணி இயம்பும். இவை இறுக்கமாய் அணியப் பெற்றதுடன், உடையினை முழங்கால் வரையுடுத்திய தன்மையையும் நவில்வன. வட்டுடை, முழங்கால் அளவாக உடுத்தும் உடை ஆகையால் போருக்கு ஏற்ற வண்ணம் பயனாகியிருக்கலாம். எனவே இதனை அணியத் தொடங்கியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

இன்று நிற ஆடைகள் போரில் பெறும் இடம் போன்று, அன்று நீலக் கச்சைப் பூவராடை மறவனைக் காண (புறம். 274) போரில் நீலநிற ஆடை இடம் பெற்றிருக்கலாமோ என்ற உணர்வு எழுகின்றது.

வேல் கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇ (புறம். 279)

தன் மகனைப் போருக்கு அனுப்பும் அன்னையைச் சங்க இலக்கியம் காட்டும். இங்கு, வெண்ணிற ஆடையின் பங்கு அமைகின்றது. எனவே போர் வீரர்களின் உடை நீலநிறமாக அமைய, போரின்போது ஈடுபடும் பொதுமக்களை இனஞ்சுட்ட, அவர்க்கு வெண்ணிற ஆடையை அளித்திருக்கலாம்.

சிலம்பு, சடையினர் உடையினர் என்று புறங்கொடுத்தோடும் வீரரைக் காட்டும். கரந்து செல்வதற்குரிய உடையைக் காண, போர் உடையினின்றும் மாறுபட்ட உடை என்பது தெளிவுறுவதுடன் முதலில் போர்க்குரிய உடையினை அவர்கள் அணிந்திருந்தமையும் ஈண்டு குறிப்பாகச் சுட்டப்படுகின்றது.

நிறம் அல்லது உடையில் மாறுபாடு அமைந்திருக்கலாம். கலிங் கத்துப் பரணியில் உயிர் பிழைக்க ஓடும் வீரர்களுடன் இவ்வெண் ணம் ஒப்புமையாகின்றது (466, 468).

குறிப்பிட்ட நிற ஆடைகளையுடுத்திப் போருக்குச் செல்வது இன்றைய நிலை. ஒருவிதமான பச்சை நிறம் காவி நிறம் உடைய ஆடைகளை, இன்று போர் வீரர்கள் அணிகின்றனர். தாமிருக் கும் இடத்தைப் பகைவர் அறியாது, கரந்து, காப்பாற்ற வல்ல தாய்த் திகழும் தன்மையில் இவ்வாடைகளின் நிறம் அவர்களுக் குத் துணையாகின்றது.

காவல்

காவல்த் தொழில் எப்போதுமே ஊறு விளைவிக்கத் தக்க தொரு தொழிலாகும். எனவே காவல்த் தொழில் புரிபவர்கள் அதற்கேற்ப,தங்களைக் காத்துக் கொள்வதிலும் கருத்துச்செலுத் தினர் என்பதனை விளக்குமாற்றான் அமைவதில் அவர்கள் உடையும் ஒன்று.

மெய்க்காப்பாளர்கள், வாயிற்காவலர் என்ற இருநிலையில் இவர்களைக் கொள்ளலாம். இவர்கள் இருவரும் தங்கள் தொழிலுக்கேற்பச் சட்டை அணிந்திருந்தமை சங்கச் சான்றுகளி னின்றே அறிய வரும் ஒன்று. மெய்க்காப்பாளர்கள் என்னும் நிலையில் நோக்கச் சட்டை அணிந்தவர்கள் என்னும் பொருளில் இவர்கள் கஞ்சுக மாக்கள் என்றே குறிப்பிடப்படுவதைக் காண் கின்றோம். கஞ்சுக மாக்களைத் திறை கொணர்ந்த தூதர் களாகச் சிலம்பு சுட்ட, பின்வந்த இலக்கியங்கள் மெய்க்காப் பாளர்களாகவே காட்டிச் செல்கின்றன. பதுமாவதி வையம் ஏறிச்செல்ல கஞ்சுகி மாக்கள் புடை காக்கும் தன்மையைப் பெருங்கதை இயம்பும் (3.5:108-10). குழந்தை பிறந்தமை கேட்டு வரும் விஞ்சைய மகளிரையும் (1726) சுயம்வர மண்டபம் சேரும் சோதிமாலையையும் (1795) செங்குன்றம் சேரும் தேவி யரையும் (1648) காத்து வரும் தன்மையில் சூளாமணி இவர்தம் செயல்முறையைச் சாற்றும். கஞ்சுகியவர் கண் மெய் காவல் ஓம்பினார் என்னும் பாடலடி (சூளா. 92) இவரின் தொழிற்றன் மையை விளக்க வல்லது. தாழ்ந்து விரிந்த கஞ்சுகத்து மெய்யார் என, கம்பன் (பால. 380) இவர்களைக் காட்டுவான்.

வாயிற் காவலரின் சட்டை எனப் பார்க்கும்போது படம், மெய்ப்பை, குப்பாயம், கஞ்சுகம் என்று அனைத்து சட்டை பற்றிய பெயர்களும் இங்கே சுட்டப்படக் காணலாம்.

படம் புகு மிலேச்சர் (முல்லை - 66).

மெய்ப்பைப் புக்க வெருவருந் தோற்றத்து
வலி புணர் யாக்கை வன்கண் யவனர் - (முல்லை. 60-61).

வரிக் குப்பாயத்து வார் பொற் கச்சையர் (பெருங்.1.40:378)

முற்றும் மூடிய கஞ்சுகன் மூட்டிய
வெற்று அனல் பொழி அண்ணினன் (கம்ப. 6926)

என்ற நிலையில் வாயிற்காவலர் சட்டை அணிந்தமையினைக் காண்கின்றோம்.

கஞ்சுகம் அணிந்த நிலையில் அனைத்து இடங்களிலும் மெய்க்காவலர் காட்டப்பட, வாயிற் காவலர் படம், மெய்ப்பை, குப்பாயம் அணிந்த நிலையில் காட்சி தருவது இங்கு நோக்கற்குரிய ஒன்று. கம்பனில் தான் கஞ்சுகம் அணிந்ததாக இருவரும் சுட்டப் படுகின்றனர். எனவே இருவர் அணிந்ததும் சட்டை எனினும் அமைப்பில் மாற்றங்கள் அமைந்து இருவரையும் வேறுபடுத்தி யிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

காவலரே சட்டையணியும் தன்மை, ஒரு வினாவினை எழுப்புகின்றது. காவலர்கள் தங்கள் தொழிலுக்கு ஏற்றபடி சட்டை உதவும் என்ற எண்ணத்தில் அணிந்தார்களா? அல்லது பிற நாட்டைச் சார்ந்த காவலர் சட்டை அணிந்து இருந்தமையினைக் (முல்லை. 61) கண்டு பின்னையோரும் சட்டை அணியத் தொடங்கினரா என்னும் வினாவே அது. பிற நாட்டினரைக் கண்டு சட்டையிடும் வழக்கம் புகுந்தது எனினும் தமக்கும் தம் தொழிலுக்கும் ஏற்றது என்ற எண்ணத்திலும் இதனை இவர்கள் அணியத் தொடங்கினர் என்று கூறுதல் பொருத்தமானதாகும்.

உடையினையும், இன்றைய சீருடை (uniform) போன்று அணிந்திருந்தனரோ என்னும் சிந்தனை பெருங்கதை நிகழ்வு ஒன்று எழுப்பும் ஒன்று. உருமண்ணுவாவின் தோழர்,

செழுமணிக் காரர் குழுவினுட்காட்டி
உறுவிலை கொண்டு பெறுவிலை பிழையா
வெண்பூந்துகிலும் செம்பூங்கச்சும்
சுரிகையும் வாளும் உருவொடு புணர்ந்த
அணியினராகிப் பணி செய்தற்குரிய
இளையரை ஏற்றித் தளை பிணியுறீஇக் (3.17:125-130)

கோலம் கொள்கின்றனர். வெண்பூந்துகிலும் செம்பூங்கச்சும், சுரிகைவாள் இவற்றைக் கொண்டு பணி செய்தற்குரிய இளையரை ஒத்து என்று கொங்குவேளிர் இயம்பும் நிலை, இவ்வுடைகளை அணிவதால் அல்லது உடுத்தும் முறைமையால் இவர்கள் வேலை செய்யும் வீரரை ஒத்து இருக்க வேண்டும். வாள் முதலியன வைத்து இருப்பதால் ஒருக்கால் இவர்கள் செழுமணிக் காரர்களின் காவல் வீரராக இருக்கலாம் உன்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது.

போர், காவல் போன்ற தொழில்களுக்கேற்ப உடை உடுத்தியது போன்று தங்கள் எண்ணங்களை நிறைவேற்றவும் உடையினை மாற்றிக் கொண்டனர் தமிழர்.

ஒற்று அரசியலுக்குத் தேவையான ஒன்று. திருவள்ளுவர்,

ஒற்றின் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன்
கொற்றங் கொளக் கிடந்தது இல் (583)

என அரசின் வெற்றியே ஒற்றுக்குள் அடங்கும் என்பார். ஒற்று பற்றிய எண்ணம் தொல்காப்பியர் காலத்திலேயே தமிழர் உணர்ந்த ஒன்று.

புடை கெட ஒற்றின் ஆகிய வேயே
வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்திறை (புறத். 3)

என வெட்சித் திணையின் துறைகளாக அமைவன இவை. இவண், ஒற்றர் உணராமற் சென்று ஒற்றி அவ்வொற்று வகையான் அவர் உணர்த்திய சொல் ஒற்றரின் தொழில்த் தன்மையைத் தெரிவிக்கின்றது. இலக்கியங்களில் பல நிலைகளில் பயிற்சி பெறும் இவ்வொற்றின் (சிலப். 28:105-6, சிந்தா, 1829, 1921, 2142) முதன்மையான தேவைகளுள் ஒன்று மாறுவேடமுமாகும்.

தெய்வப் புலவர் இதனை,

துறந்தார் படிவத்தாராகி இறந்தாராய்ந்து
என் செயினும் சோர் விலது ஒற்று (586)

என்றுரைப்பார். இவண், ஒற்றறியத் துறந்தார் படிவமே ஏற்றதாக அக்கால மக்கள் எண்ணி இருந்திருக்கலாமோ என்ற எண்ணம் எழுகின்றது. ஏனெனில்,

கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று (585)

என ஐயுற முடியாத உருவத்துடனும், அஞ்சாதும் மனத்தில் உள்ளதை வெளிப்படுத்தாமல் இருப்பவனே ஒற்றன் எனச் சொன்ன வள்ளுவர் அடுத்தாற்போன்று, வேறு எந்த மாறு வேடத்தையும் இயம்பாது துறவு வேடத்தைச் சொல்லுகின்றார்.

துறவியாடை, பிறரின் ஐயப்பாடுகளினின்றும் காக்கும். மக்கள் நம்பிக்கையையும் எளிதில் பெற வழி வகுக்கும் என்ற எண்ணமே இதற்குரிய அடிப்படை நோக்கமாக இருந்திருக் கலாம்.

ஒற்றுத் தொழில் அன்றி, சில செயல்களை நிறைவேற்ற வேடம் மாறிவரலும் இலக்கியம் வழிப் புலனாகும். வேற்றுருவம் எடுத்தல், பெரியவடிவம் எடுத்தல் போன்ற பல உருமாறல் கூறுகளுள் ஆடையை மாற்றிச் செல்லலும் உண்டு.

ஆற்றலும் விச்சையும் அறிவும் அமைந்தோர்
நூற்றுவர் முற்றி வேற்றுநர் ஆகென (3.1:92-3)

உதயணன் கூறுகின்றான். பிறர் தம்மை உணராமைக்குரிய உள்வரிக் கோலம் என இதனைக் கழக உரையாசிரியர் விளக்குவர். இக்கோலம்,

வெண்ணூற் பூந்துகில் வண்ணம் கொளீஇ
நீலக் கட்டியும் மரகதத் தகவையும்
பாசிலைக் கட்டியும் பீதகப் பிண்டமும்
கோலமாகக் கொண்டு கூட்டமைத்துப்
பிடித்துருக் கொளீஇக் கொடித் திரியோட்டிக்
கையமைத்தியற்றிய கலிங்கத் துணியினர் (3.1:95-100)

எனக் காட்டப்படுகின்றது. இவ்வேடம் நாட்டில் யாத்திரை செய்வார் கோலமாக அமைந்தது எனக் காணும்போது, பல்வகைப்பட்ட யாத்திரை மாந்தர் உடைபற்றிய உணர்வினைப் பெறுகின்றோம். பல்வண்ணங்களுடைய ஆடையால் உருவினைக் கரந்து சென்ற உதயணன் தோழர் வேடமும் வெளிப்படுகின்றது.

உருமண்ணுவாவின் தோழர் செழுமணிக் காரரின்
காவலர் வேடத்தில் மறைந்து செல்கின்றமையும்
(3.17:125-30)

சுட்டத்தக்க ஒன்று.

அறப்பேராண்மையின் அடக்கிய யாக்கையன்
கல்லுண் கலிங்கம் கட்டிய அரையினன்
அல்லூண் நீத்தலின் அஃகிய உடம்பினன் (பெருங். 4.7:157-9)

எனச் சைனமுனிவனாக, யூகி தன்னை மறைத்துக் கொள்கின்றான். இவண், சைன முனிவன் கல்லுண் கலிங்கம் கட்டியவனாகச் சுட்டப்பட, உடையினைத் துறந்து வாழும் சைனத் துறவிகளிடம் இருந்து வேறுபட்டவர்கள் இவர்கள் என்பது புலப்படுகின்றது.

இம்மாறுவேடங்களைக் காண, மாறுவேடம் கொள்ளல் பல நோக்கங்களின் அடிப்படையில் அமையும்போது அவற்றிற்கு ஏற்ற விதத்தில் தங்கள் தோற்றத்தினை மாற்றி வந்துள்ளனர் என்பது தெளிவுறுகின்றது.

உடுத்தும் முறையில், நிறம் மாற்றலில், பிறர் உடையை உடுத்துவதில் இம்மாறுபாடுகள் அமைந்திருக்கின்றன. காவலர், துறந்தோர் போன்ற வேடங்களில் காணப்படும் தன்மை, குறுகிய காலத்தேவை எனில் பிற உடையினை உடுத்தல், ஆடையில் வண்ணம் கொளுவியுடுத்தல் என்ற முறையிலும், அதிக நாட்கள் எனில் துறவியாடையையும் அணிந்து வந்திருக்கலாம் என்ற எண்ணத்தை நல்குகின்றது. இவ்வாறு வேடமிட்டுச் செல்லுபவர்களில் கள்வரையும் இணைத்து நோக்கலாம்.

களவுத் தொழில் பற்றிய பல எண்ணங்கள் சிலப்பதிகாரத்தில் அமைகின்றன.

மந்திரம் தெய்வம் மருந்தே நிமித்தம்
தந்திர மிடனே காலங் கருவி யென்
றெட்டுடன் அன்றே யிழுக்குடை மரபிற்
கட்டுண் மாக்கடுணை யெனத் திரிவது
மருந்திற் பட்டீராயின் யாவரும்
பெரும் பெயர் மன்னனிற் பெரு நவைப்பட்டீர் (16:166-71)

என்றின்ன பல கள்வனின் திறன்களைப் பொற்கொல்லன் வாயிலாக இளங்கோ காட்டுவார். பலவழிகளில் வெற்றிக்குரிய முறையில் செயல்படுபவன் கள்வன் என்பதற்கு அவனது ஆடை பற்றிய உணர்வும் சான்றாகிறது. இவனை, நிறங் கவர்பு புனைந்த நீலக்கச்சினராக மதுரைக் காஞ்சியும்(639) நீலத்தானையராகச் சிலம்பும் (16:204) காட்டும்.

இருளில் நீல ஆடை தன் நிறத்தை வெளிப்படுத்தாது. எனவே களவுத்தொழில் புரிபவர்க்கு அவர் இருக்கும் இடத்தைப் பிறர் உணராது மறைக்க உதவுகின்ற நிலையில் ஏற்புடைத்தாகின்றது.

பொது நிலையில் கள்வர் நிலை இவ்வாறு அமைய ஆறலைக் கள்வர் பற்றிய எண்ணத்தையும் சங்கப்பா இயம்புகின்றது. இவர்தம் ஆடையாகக் காட்டப்படுவது செந்துவராடை (நற். 33) செம்மை வீரத்தினைக் காட்டக் கூடியது. எனவே நேரடியாகவே ஆறலைத்தலைப் புரியும் இவர்தம் மனவுணர்வுக்கு ஏற்பச் செந்துவராடை அமைகின்றது எனக் கொள்ளல் பொருந்தும்.

## வழிபாடும் ஆடையும்

மனிதன் இவ்வுலக வாழ்வுக்கு வேண்டிய இன்பங்களை அடைய முயல்வதுடன் மேலுலக இன்பம் கருதியும் சில செயல்கள் புரிகின்றான். தன்னைப் படைத்த இறைவனே அவ்வின்பத்தை அளிக்க வல்லவன் எனும் கருத்தில் வழிபடுகின்றான். வழிபாட்டுக்குரிய சில நியதிகளில் தூய்மை யான ஆடையும் ஒன்றென்பதைக் காட்டுகள் உணர்த்துகின்றன.

'புலராக் காழகத்தைப் புலரவுடீஇ'க் கூப்பிய கையினராகத் திருவேரகத்து இருபிறப்பாளரைத் திருமுருகாற்றுப்படை (184) காட்டும். குறவர் வழிபாட்டினை 'முரண்கொள் உருவில் இரண்டுடன் உடீஇ' (திருமுருகு. 230) நடத்தினர் எனக் காண்கின்றோம்.

தீம்பானுரை போற்றிகழ் வெண்பட்டு உடுத்து சேணிகன் இறைவனை வணங்க எழும் நிலையினைச் சிந்தாமணி (3046) பேசுகின்றது. அருகக் கடவுளுக்கு எடுத்த விழாவில் அந்தணர் வெண்டுகிலையும், வேந்தர் அரத்தப் பட்டினையும் வணிகர் பீதக உடையினையும் உடுத்திக் காட்சி அளிக்கின்றனர் (சூளா. 1874, 77, 79). இவண், இன்று போன்றே வழிபாட்டிற்குத் தூய்மை அடிப்படையாக அமைய, தங்கள் செல்வ நிலை, தகுதிக்கு ஏற்ப உடுத்தினர் என்பது விளக்கமுறுகின்றது. காந்தர்வதத்தை, யவனச் செப்பின் மங்கலத் துகிலை வாங்கி, ஏற்ப உடுத்தபின் தியானம் புரியும் தன்மையும் (சீவக. 1146) இதனுடன் இணைத்து நோக்க தக்கது.

இன்றும் இந்துக்கள் நீராடி, ஈர ஆடையுடன் இறைவனை வணங்குகின்ற தன்மையினைக் காணலாம். முகம்மதியர் வெண்ணிற ஆடை உடுத்தி வணங்குகின்றனர். கோயிலுக்குப் போகும்போது தூய நூற்புடவை அல்லது பட்டுப் புடவை கட்டிக் கொண்டு போகவேண்டும் என்பது தமிழர் நம்பிக்கை என்பர்.[25] பிற நாட்டாரிடமும், வழிபடுவதில் சில முறைகள் இருந்ததாக அறிகின்றோம்.[26]

இறைவனைத் தொழும் நிலையில் மட்டுமன்றி, இறைத் தொடர்பான சடங்குகளிலும் தனித்தனியே தங்கள் எண்ணங் கட்கு ஏற்றவாறு உடையுடுத்தினர்.

வினைக்கு வேண்டி நீடூண்ட புலப்புல்வாய்க் கலைப்பச்சை (புறம். 166) என, சங்கப் பாடல் ஒன்று வேந்தன் வேள்விக்கெனக் கலைத் தோலினை மார்பில் அணிந்தமையினைச் சுட்டும். வினைக்கு வேண்டி என்னும் கூற்று, வேள்விக்கு மட்டுமே மன்னன் இதனை அணிந்திருந்தான் என்னும் எண்ணத்தைத் தருகின்றது.

இன்று காவடி எடுப்போர் காவி ஆடையுடன் எடுக்கின்றனர் (கன்னியாகுமரி மாவட்டம்). தீமிதித்தலுக்கு மஞ்சள் ஆடையைப் பயன்படுத்துகின்றனர் (திருச்சி மாவட்டம்). ஐயப்ப பக்தர்கள் நீலம் கருமை நிற ஆடையினை யுடுத்துகின்றனர். இத்தனி உடைகளுக்கு அடிப்படைப் பொருள் ஏதேனுமிருக்கலாம். ஆயின் விளக்கம் புலனாகவில்லை. ஆயின் அனைத்திலும் தூய்மை அடிப்படையாக இருக்கக் காணலாம். உலக நிலையிலும் இவ்வெண்ணம் பழமையான ஒன்று என்பது, எகிப்தியப் பாதிரி மார்கள் கோயிலினுள் அணியும் உடைபற்றிய எண்ணம் தெளி

---

25. நாட்டுப்புற நம்பிக்கைகள்-தமிழவன், பக்கம்-34.

26. Hebrew women like the women of Assiriya in the temple, they had to wear a transparent veil which covered the whole head and face.

—The story of Clothes - Agnes Allen, Page-46.

வுறுத்தும்.[27] உடுத்தும் முறையிலே அன்றி, மேலும் சில எண்ணங்களும் இது தொடர்பாக அமைகின்றன.

'யாவற் காயினும் இறைவற் கொருபச்சிலை' என்ற தமிழர் உணர்வு, இறைவனுக்கு உடை சாத்தி வணங்கும் வழக்கினையும் வழிபாட்டில் கொண்டுள்ளது.

தேம்படு மலர் குழை பூந்துகில் வடிமணி
ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ (17:1-2)

எனப் பரிபாடல் இயம்பும் தன்மை, அன்றே இவ்வியல்பு கால் கொண்டுவிட்டதை வெளிப்படுத்தும்.

## ஆடலும் ஆடையும்

ஆடற் கலையில் ஆடை அணிகலன்களின் இடம் போற்றத் தக்க ஒன்று. உள்ளத்து உணர்வுகளை முகம் பிரதிபலிப்பினும், அவ்வுணர்வுகளின் முழுமை ஆடைகளில் தான் மறைந்துள்ளது எனக் கூறலாம். அரசன் வேடம் போட்டு நடிப்பவன் முகத்தில் அரசக் களையைக் கொணரினும் மன்னனுக்குரிய உடை இல்லா விட்டால் அவனது நடிப்பு வெற்றி பெறா. அதைப் போன்றே நடனக் கலைக்கும் கோலங்கோடல் உயிர்த்துடிப்பினை ஊட்ட வல்லதாகும்.

---

27. Egyptian Priests wore clothes similar to those worn by other men but in the temple they were not allowed to wear anything but linen. In later times they seem to have been allowed to wear cotton garments outside the temple. The Rosetta Stone, which we can see in the British Museum has an inscription on it written in three different scripts one in Greek and the others in two different kinds of Egyptian writing. It was probably written about 196 B.C. and it mentions Cotton garments supplied for the use of the priests. They were allowed to wear an outer cloth made of wool, but they had to take it off before entering the temple and they must not at anytime wear a woollen garment they touched the skin. The Egyptians believed that a fabric woven from fibres that came from an animal was not so clean as one made from fibres that came that from a plant.

—The Story of Clothes - Agnes Allen. page. 31

இக்கோலங்களைப் பற்றிய விளக்கங்கள் இலக்கியங்களில் மிகுதியாக அமையவில்லை. எனினும் சில எண்ணங்கள் உண்டு என்பதை உறுதிப்படச் செய்கின்றன.

அவரவர் அணியுடன் அவரவர் கொள்கையின்
நிலையும் படிவமும் நீங்கா மரபிற்
பதினோராடலும் (சிலப். 6:64-66)

என்று இளங்கோ மாதவியின் பதினோராடலும் அவரவர் அணியுடன் நடந்தது என்கின்றார். ஈண்டு 'அணி' என்பது உடையையும் உள்ளடக்கியதேயாம்.

கோலம் பற்றிய உணர்வு இவண் அமையினும், இக் கோலங்கள் எவ்வாறு இருந்தன என்பது தெளிவுறவில்லை.

மணிமேகலை, பெண்மை திரிந்த ஆண்மைக் கோலமாகிய பேடிக் கோலத்திற்கு வட்டுடையினைப் பயன்படுத்தினர் (3:123) எனச் சுட்டும்.

இதனைப் போன்று பாவையாடல் பற்றியதொரு எண்ணமும் அமைகின்றது.

திருவின் செய்யோளாடிய பாவை (மணி. 5:4) என்னுமிடத்து உ. வே. சாமிநாதைய்யர், பாவை பதினோராடலுள் ஒன்று. அது போர்ச் செய்தற்குச் சமைந்த கோலத்தோடு அசுரர் நோக்கித்து விழும் கொல்லிப்பாவை வடிவாய்த் திருமகள் ஆடியது என்பர். எனவே போர்க் கோலத்திற்குரிய உடையினை, பாவைக் கோலத்திற்கு அணிந்திருக்கின்றனர் எனத் தெரிகின்றது.

எனவே இவ்வெண்ணச் சுவடு, பிற ஆடல்களுக்கும் அதற்கென்று தனித்த உடை கொண்டிருந்தனர் என்னும் எண்ணத்திற்கு வழி நடத்துகின்றது.

## நிலமும் ஆடையும்

ஆடையுடுத்தத் தொடங்கிய நிலையில் மாந்தர், தம் நிலத்தில் கிடைத்தவற்றை உடுத்தினர். வணிக, கலாச்சாரத் தொடர்கள் பெருகப் பெருக, பிற இடத்தினின்று பெற்றவற்றையும் பயன்படுத்தத் தொடங்கினர்.

தமிழகத்தைப் பொறுத்தவரையில், அங்கு விளைந்த பருத்தியின் செல்வாக்கு மிகுதியாக அமைந்தது; அமைகின்றது. பலவகை ஆடைகளையும் இதனுடன் இணைத்துப் பயன்படுத்தினர் தமிழர். ஐந்நில மகளிரும் தழையுடையினை மிகுதியாக ஏற்றனர் என்பது சங்க இலக்கியம் சுட்டும் நிலை. அவ்வவ் நிலத்திற் கிடைத்தன கொண்டே அவையும் அமைந்தன.

மரனாருடுக்கை அணிந்த குறவன் (நற். 64), அங்குழைச் செயலைத் தண்டழை யுடீஇய ஆறலைத்தல் தொழில் புரியும் சவரர், புளிஞர் மகளிர் (பெருங். 1.55:57) மரவுரியுடையவன் வேட்டுவன் (சீவக. 1231), புலித்தோலை யுடையாக உடைய குகன் (கம்ப. அயோத். 650) போன்றவர்களை நோக்க நாகரிக வளர்ச்சி யற்றோர் தமக்குரியதாக ஏற்றுக் கொண்டன அவர்களுக்கு அண்மையில் கிடைத்தவற்றையே என்பது தெளிவாகின்றது. பிற நாகரிகங்களைப் பற்றி அறியாமையும், விலை மதிப்பு அதிகமும் இந்நிலைக்குரிய காரணிகள் எனலாம்.

நிலத்திற் கேற்ற ஆடையணியும் பழக்கம் வாயிலாக மாந்தர் நடை-முறை வாழ்வுடன் ஒவ்வொரு காலத்திலும் மாந்தர் ஆடைகள், புதிய நாகரிகம் புகுத்திய புதுமைகள், சமுதாயத்தில் முன்னணி மாந்தர் நிலை, பின் தங்கிய மக்கள் நிலை என்பனவற்றையும் ஓரளவுக்குப் புரிந்து கொள்ளலாம்.

செல்வந்தர், ஏழைகள் உடைகளைக் காணப் பிற நிலைகளில் போன்று இதனுள்ளும் பின்தங்கிய நிலையே ஏழைகள் நிலையாக உள்ளது.[28]

## ஆடையினைக் கையாளும் முறைகள்

ஆடையினைக் கையாளும் முறையிலும் தமிழரிடம் சில பழக்க வழக்கங்கள் படிந்திருந்தன. விருந்தோம்பல், குறிப்பு உணர்த்தல், சூதுபோன்ற சில நிலைகளில் இவை எவ்வாறு அமைகின்றன என்பதைக் காணலாம்.

---

28. Remember that only Royalty and Court dandies would be dressed in the latest fashion of the period; the poorer folks dress could be well be ten years or more behind the time.
— Discovering Costume- Audery. I. Barfoot , page-9.

விருந்தோம்பல்

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று (குறள். 82)

என்பது தமிழர் விருந்தினர்க்குக் கொடுத்த பெருஞ்சிறப்பிற்குச் சிறியதொரு எடுத்துக்காட்டு.

செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருந்த இவ்விருந் தோம்பலில் தன்னை ஒத்த பிறருக்குக் கொடுக்கும் நிலையில் அன்பளிப்பாகவும், இரந்து நிற்கும் இரவலனுக்கு இரங்கிக் கொடுக்கும் நிலையில் கொடையாகவும் உடை பங்கு பெறுகின்றது.

தலைவிக்குத் தலைவன் கையுறையாகத் தழையுடையினைக் கொடுக்கும் நிலையிலேயே ஆடை அன்பளிக்கும் நிலை தொடக்கமுறக் காணலாம்.

மணிமேகலையில் ஆதிரையின் கணவன் சாதுவனை நாகர் வழியனுப்பும்போது பூந்துகிலையும் மற்றும் பல்பொருட்களையும் (16:123) கொடுத்து அனுப்புகின்றனர்.

பிறப்பில், ஆடை அளித்தலைப் பெருங்கதை பகரும்.

ஏனோர் பிறர்க்கு மிவையென வகுத்த
அணியு மாடையு மணியு நல்கி (5.4:93-94)

நரவாணதத்தன் பிறப்பு கொண்டாடப் படுகின்றது.

மணத்தில் ஆடை கொடை செய்தமையினைச் சிந்தாமணிப் பாடல் (2078) இயம்பும்.

அன்பளிப்புக் கொடுக்கும் தன்மையினைக் கம்பனில் பல விடங்களிலும், பல நிலைகளிலும் காணலாம். நற்செய்தி சொன்னவர்களுக்கு மகிழ்ந்து பரிசில் அளித்தனர்.

பரதன், இராமன் வரவினைச் சொன்ன அனுமனுக்குக் 'கோவொடு தூசு நல்மணிக் குலம்' (கம்ப. 10356) யாவும் நல்குகின்றான்.

இராமன் வில்லாற்றல் விளம்பிய வீரர்க்குத் தூசு அளித்தமையும் (கம்ப. 821) காணக் கூடுகின்றது.

கலைக்கோட்டு முனியை அழைத்து வருவதாகக் கூறிய விலைமகளிர்க்குத் தூசு ஆதி ஆய பாங்கு உள அளிக்கின்றான் தயரதன் (கம்ப. 218).

கேள்வி இன்பத்திஸ்போது அன்றி, காட்சி இன்பம் அடையும் போதும் உடையினை அளித்தனர்.

இராமனின் கடிமணம் கண்டு மகிழ்ந்த தாயர் சீதைக்குப் பல் பரிசில்களுடன் பட்டாடை நல்கி மகிழ்கின்றனர் (கம்ப. 1342).

மனம் மகிழ்ச்சியில் திளைக்கும்போது பரிசில்களுடன் உடையினையும் அளித்தனர் எனக் காண்கின்றோம். மகவு பிறக்கப் போகின்றது என்ற மகிழ்ச்சியில், வாய்ந்த நல்துகிலொடு பலவும் பிறருக்கு அளிக்கின்றான் தயரதன் (கம்ப. 276).

அன்பளிப்பில் வேற்றுமை பாராட்டல் இல்லை என்பது சீதையை முனிபத்தினி துன்னு தூசினொடு சந்திவைக் (ஆரணிய. 5) கொடுத்து வழியனுப்பும் இயல்பு இயம்பும்.

உதவிய வீரர்களுக்கும் அன்பளிப்பு அளித்துப் பாராட்டினர்.

கொம்புடை மலையும் தேரும் துரகதக் குழுவும் தூசும்
அம்பரம் தன்னை நீத்தான் அலரி காதலனுக்கு ஈந்தான்
(யுத்த. 10512)

என இராமன் சுக்கிரீவனுக்கு அளித்தமை, 'மன்னும் நுண் தூசும்' பிறவும் (யுத்த. 10514) அங்கதனுக்கு வழங்கியமை,

பொன்திணி வயிரப் பைம் பூண் ஆரமும்
புனைமென் தூசும் (யுத்த. 10516)

அனுமனுக்கு ஈந்தமை கம்பனால் விளக்கப்படுகின்றது.

குறிப்பிட்ட செயலை நிறைவேற்றினால் அதற்குப் பரிசிலாக ஆடை அணிகலன்கள் தருவேன் என்று சொல்லலும் உண்டு. இவண், இலக்குவனை அழைத்துவரின்,

மதியின் ஒளிர் தூசு வகுத்தனவும்
அதிகம் சகடு ஆயிரம் ஈகுவெனால்

என அதிகாயன் மயிடனுக்குக் கூறும் தன்மையைச் சான்றாக்கலாம்.

சூளாமணியில் விருந்து வரவேற்பில் ஆடையை எடுத்துச் செல்லலும் (467) ஆடையை விருந்தினரின் தவிசின்மேல் விரித்தலும் (932) சுட்டப்படுகின்றது.

இன்றுபோன்று மணமகளின் சீதனத்திலும் ஆடை பங்கு பெற்றது.

பொற்பமை செங்கோடிக மொடு ஆடை புதைவுற்ற
நற்புடைய பேழை (870)

போன்றவற்றை மணமகளான சுயம்பிரபையுடன் அனுப்பும் தன்மையினைச் சூளாமணியில் காணலாம்.

விருந்தினரை வரவேற்கும் பொழுதில் ஆடை கொண்டு செல்லல், அவர்கள் வரவில் தாங்கள் மகிழ்கின்றோம் என்பதை யுணர்த்தவாக இருக்கலாம். மகிழ்வில் பிறருக்குக் கொடுத்தல், தங்களின் மகிழ்ச்சியையும், அன்பையும் வெளிப்படுத்த வேண்டும் என்ற நோக்கம் காரணம் எனலாம்.

இவற்றை நோக்க ஆடைகளைப் பெறுவதில் அன்றைய மாந்தரும் இன்றைய மாந்தர் போன்று பெருமகிழ்வு கொண்டனர் என்பதும், பல்வகை அன்பளிப்பு நிலையில் ஆடை முதன்மையிடம் வகித்தது என்பதும் தெளிவு. மணமக்களுக்குப் புது உடை எடுத்துக் கொடுத்தல், சடங்குகளில் உறவினர்க்கு அளித்தல், அந்தணர்க்குக் கொடுத்தல் போன்ற சில கொடை நிலைகளில் இன்று இவை இடம் பெறுகின்றன.

இருப்போர்க்கு அன்பளிப்பாக உடை முதலியவற்றை அளிக்க, இல்லாதவனுக்குத் தானம் செய்தலும் சில எண்ணங்களால் தெரிய வருகின்றது.

சங்க இலக்கியப் புறப்பாடல்களுள் மன்னன் பண்பு நலன் வெளிப்படும் இடங்கள் பல. மன்னனின் கொடைச்சிறப்பு, ஆடைக் கொடையை மன்னன் வழக்கமாகக் கொண்டிருந்தமை, புலவன் வறுமை நீக்கி மன்னன் மனமகிழ்ந்தமை போன்றவற்றை இந்நிலைகள் சித்திரிக்கின்றன. தொன்றுபடு துளையொடு பருவிழை போகி நைந்து கரை பறைந்த உடையினையும் (புறம். 376) முதுநீர்ப் பாசியன்ன உடையினையும் (புறம். 390) பாசிவேரின் மாசொடு குறைந்த துன்னற் சிதாரினையும் (பொரு. 153-4) பாறிய சிதாரினையும் (புறம். 150) நீர்ப்படு பருந்தின் ஈர்ஞ் சிறகன்ன சிதாரினையும் (பதி. 2:2) உடுத்திய நிலையில் இரவலன் காட்டப்படுகின்றான். இவ்வேழ்மை நிலையினை மன்னன்,

திருமலரன்ன புதுமடியையும் புறம். 390
வேறுபட்ட உடையினையும் புறம். 377
கொட்டைக் கரைய பட்டுடையினையும் பொரு. 155

கழைபடு சொலியினிழையணி வார
ஒண் பூங்கலிங்கத்தையும் புறம்.383

அளித்துப் போக்குகின்றான். பெற்றவர் மனமகிழ்வில் தானும் பங்கு கொள்கின்றான்.

இக்கொடை பற்றிய உணர்வுகள் பிற்காலத்தில் குறைந்து விட்டமையை நீதி நூற்கள் கொடை கொடுத்தலை வற்புறுத்தும் நிலையும், அதனைப் பற்றிய நம்பிக்கைகளைக் கூறும் தன்மையும் உணர்த்தும். இருப்பினும், தமிழ்னிடம் இவ்வுணர்வு முழுமை யாக மறைந்து விடவில்லை என்பது ஒருசில எண்ணங்களால் புலப்படுகின்றது.

நந்திக் கலம்பகத்தில், 'துணியரைச் சுற்றிப் பரடு திறப்ப, பல்கடைத் திரிந்த பாணன் நந்தி மன்னனைப் பாடி புதுப் பூம்பொலன் கலன் அணிந்து, யானை எருத்தத்தில் இருக் கின்றான்' (27) எனப் பேசப்படுகின்றான். எனவே உடைக் கொடை தனித்துச் சுட்டப்படவில்லை எனினும் பொதுநிலையில் கொடையில் ஆடையும் இடம் பெற்றிருக்கலாம் எனத் தோன்று கின்றது.

இவற்றை இணைத்து நோக்க, சில கொள்கைகளின் அடிப் படையில் இப்பழக்க வழக்கங்களைத் தமிழர் கைக்கொண்டிருந் தனர் எனக் கருதலாம்.

1. பிறரைக் கண்டு எழும் இரக்க உணர்வுகளுக்கு உருவளித் தல்
2. தன் மகிழ்ச்சியில் பிறருக்கும் பங்களித்தல்
3. பிறருக்கு நன்மை செய்யின் தாமும் நன்மை பெறலாம் என்ற அறக்கோட்பாட்டில் உள்ள நம்பிக்கை.

அறக் கோட்பாடு என்னும்போது சங்ககாலத் தமிழர்க்கு இது பொருந்துமா என்னும் வினா எழக்கூடும். ஏனெனில், அறத்தான் வருவதே இன்பம், அறமெனப் பட்டதே இல் வாழ்க்கை என்று அறம் கருதியே அறஞ்செய்த நிலையே காணக் கூடியதொரு நிலை. இருப்பினும்,

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆஅய் அலன்

பிறரும் சான்றோர் சென்ற நெறி என
ஆங்குப்பட்டன்று அவன் கைவண்மையே (புறம். 134)

என்று ஆஅய் அண்டிரன் கொடையின் சிறப்பு சிறப்பிக்கப்படு கின்றதைக் காண்கின்றோம். அறம் கருதி அறம் செய்தலே அன்றைய தமிழர் நிலையென உரைக்கும் இப்பாடல், அறவிலை வணிகரில் ஒரு சிலரும் இருந்திருக்கக் கூடும் என்ற உணர்வைத் தரும் தன்மையில் அமைகின்றது. 'ஆஅய் அலன்' என்று சொல்லும்போதே பிறர் உண்டு என்பது தொக்கி நிற்பது வெளிப்படை. எனவே இக்கருத்துடன், பிற்கால, நம்பிக்கை யூட்டும் எண்ணங்களும் அதாவது அறம் செய்தால் சிறப்பாக வாழலாம் என்ற எண்ணங்களும், தாமும் நன்மையடையலாம் என்ற எண்ணத்துடன் அறம் செய்ததனை உறுதிப்படுத்த வல்லன.

தமிழர் இக்கொள்கையில் கொடையினையும், விருந்தோம்பு தலையும் செய்ய, மணத்தில் கொடை செய்தல் வீண் ஆடம்பரம் கருதியாகும் என்னும் டாக்டர் மோதிச் சந்திராவின் கருத்தும் இவண் கொள்ளத் தக்க ஒன்று.[29]

## குறிப்புக் காட்டல்

தங்கள் எண்ணங்களைப் புலப்படுத்தவும் சில வகைகளில் ஆடையைப் பயன்படுத்தினர் தமிழர்.

1. தலைவி பூப்படைந்தமையினை உரைக்க, சிவந்த உடையை உடுத்தி அனுப்புகின்றமை திணைமாலைநூற்றைம்பது (மருதம். 1:44) உணர்த்தும் ஒன்று.

2. மகிழ்ச்சிப் பெருக்கில், துகில் வீசிப் புலப்படுத்தல் பல இடங்களில் சுட்டப்படுகின்றது.

---

29. Pomp and show are a special feature of Hindu Marriages. At the time of the marriage both the bride and bride-grooms parties vie with one another to diaplay and offer as presente brocade saries and other rich germents.
— Costumes Textiles Cosmotics and Coiffure-
Dr. Moti Chandra, page-58

இராமன் மணத்தில் மிதிலை நகர மகளிர்,

விரிந்து ஒளிர் காசு பொன் தூசுவீசி (கம்ப. 1320)

மகிழும் தன்மை, அவர்கள் மகிழ்வு எல்லையைக் காட்டுகின்றது.

நண்பனை எதிர்கொள்வதிலும் இதனைக் காணலாம். சுக்கிரீவன் இலக்குவனை,

சுண்ணமும் தூசும் வீசி
சூடகத் தொடிக்கைம் மாதர்
கண் அகல் கவரிக்கற்றைக்
கால் உற (கம்ப. 4475)

வரவேற்கின்றான்.

மக்களின் இம்மகிழ்வுச் செயலைச் சில இடங்களில் தேவர்க்கும் ஏற்றியுரைப்பார் கம்பர்.

பகைவனின் வீழ்ச்சியில் மகிழும் தன்மையில் தேவர்கள் மன மகிழ்கின்றனர். இராவணன் வீழ்வில் வடகமும் துகிலும் வீசி (கம்ப. 9993) மகிழ்கின்றனர், இந்திரசித்து இலக்குவனால் வதையுண்டபின்,

எல்லாரும் தூசு வீசி ஏறிட ஆர்த்தபோது
கொல்லாத விரதத்தார் தங்கூட்டம் ஒத்தார் (கம்ப. 9307)

என் இவர்களின் நிலை இயம்பப் படுகின்றது.

இப்பழக்கம் தொடர்ந்து தமிழரிடம் காணப்பட்டது என்பது பெரியபுராணக் குறிப்புகளால் உறுதிப்படுகின்றது.

திருஞானசம்பந்தரைக் கண்டு காழி நகரில் மாமறையோர் சூழாத்தினுடன் மல்கு திருத்தொண்டர் குழாம் மருங்கு சூழ்ந்து 'தாமறுவை உத்தரியம் தனி விசும்பில் எறிந்து' (திருஞான. 95) ஆர்க்கின்றனர்.

தம்பிரான் தோழர் முதலை வாயினின்றும் மீட்ட மகவு கண்டு,

விண்ணிலுள்ளார் அதிசயித்தார்
மறையோ ரெல்லாம் உத்தரீயம்
விண்ணிலேற விட்டு (வெள். 13)

ஆர்த்தனர் எனக் காண்கின்றோம். சமாதானத்தைப் புலப்படுத்தவும் துகிலை வீசினர் (1863) என்பதனைச் சிந்தாமணி யியம்பும்.

## சூதும் ஆடையும்

மிதிலைக்காட்சிப் படலத்தில்,

கடகமும் குழையும் பூணும் ஆரமும் கலிங்க நுண்நூல்
வடகமும் மகரயாழும் வட்டினி கொடுத்து வாசத்
தொடையல் அம்கோதை சோர பளிங்கு நாய் சிவப்பத் தொட்டுப்
படைநெடுங் கண்ணார் வட்டாட்டு ஆகும் இடம் பலவும் கண்டார் (பால. 580)

எனக் கம்பர், உடையையும் வைத்துப் பெண்டிர் சூதாடும் இயல்பை விளக்குவார்.

திருக்குறளில்,

உடை செல்வம் ஊன் ஒளி கல்வி என்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின் (939)

என்ற கருத்தினைக் காண்கின்றோம்.

சூதாடின் அனைத்தும் இழப்பர் என்ற கருத்துப்பற்றிய உணர்விருந்தும், உடையையும் வைத்து விளையாடும் அளவிற்கு, சூதாட்ட ஆர்வம் பற்றிய தமிழர் மனநிலை இங்கே வெளிப்படுகின்றது.

## சில ஒழுக்க நியதிகள்

ஒழுக்கம் கருதிய மனவோட்டத்திலும் தமிழர் உடையினைப் பயன்படுத்தும் வழக்குண்மை இருந்ததை, அவர்களின் ஆடை வரலாறு இயம்பும். தூய்மை அடிப்படையில் உடுத்தல், உண்ணும்போது நீராடும்போது இவர்கள் உடைகள் எவ்வாறு அமைந்தன என்பதால் நோக்கலாம்.

### தூய்மை

சுத்தம் சுகம் தரும் என்பதைத் தமிழர் உணர்ந்து வாழ்ந்தனர். இந்நிலையில் தங்கள் வாழ்வில் முக்கியத்துவம் பெற்றிருந்த உடுத்தும் ஆடையும் தூய்மையுடன் அமையவேண்டும் என்று எண்ணினர். புலைத்தியின் தொழில் தன்மைகள், தமிழரின் சுத்தமான ஆடைபற்றிய உணர்வினைச் சாற்ற வல்லன.

பிறருடுத்த மாசுணி தீண்டார்- (ஆசாரக். 12)

இடரெனினும் மாசுணிதம் மேற்கொள்ளார் (ஆசாரக்.36)

என்ற நிலையிலும் அவர்களின் சுத்தம் பற்றிய மனநிலையைக் காணலாம். சுத்தமற்றோர்க்கு அறிவுரை போன்ற நிலையிலும் இக்கருத்துகள் அமைகின்றன.

மாசுணி காரணமாகத் தங்களுக்கும், பிறருக்கும் தீங்கு வர வாய்ப்புண்டு என்பதே இவ்வறிவுரைகளின் தோற்றம் எனல் பொருத்தமானது.

ஆடைகளுக்கு மணமூட்டல், புகையூட்டல் தமிழரிடம் இன்றும் காணப்படும் ஒரு வழக்கமாகும். நறுமணமூட்டவும், நச்சுக் கிருமிகளைக் கொல்லவும் இவற்றை இன்றைய நிலையில் பயன்படுத்துவது போன்றே அன்றும் புகையூட்டியும், சுண்ண மிட்டும் வந்துள்ளனர் எனக் கருத, அவர்கள் ஆடையைத் தூய்மைப்படுத்தக் கையாண்டதொரு வழிமுறையாக இதனை யும் கொண்டனர் எனக் கூறவும் வாய்ப்பு அமைகின்றது.

'ஆடை வெளியுறைப்பப் போகார் (ஆசாரக். 36) என்னும் ஒரு கருத்து அமைகின்றது. ஆடைவெளியுறைப்பப் போதல் ஆடையில் உள்ள கிருமிகள் பிறர் மேல்பட, பிறருக்குத் தீமை நேரிடலாம் என்ற எண்ணத்தில் எழுந்ததாகவும் இதனைக் கொள்ளும்போது இதுவும் தூய்மை பற்றியதொரு கருத்தாகவே அமைகின்றது.

அடுத்து உடுத்தாடை நீருட்பிழியார் (ஆசாரக். 11) என்றதொரு எண்ணத்தையும் காண்கின்றோம். உடுத்தாடை தூய்மைப்படுத்தலில், நீரினைத் தூய்மை கெடச் செய்யல் தவறு என்பதே ஈண்டு அமையும் பொருள். எனவே நீருக்கு வெளியே தரையில் பிழியவேண்டும்; அல்லது குடிக்கும் நீரில் பிழியக் கூடாது என்ற எண்ணத்தை இதற்கு அடிப்படையாகக் கொள்ள லாம்.

**நீராடல்**

தமிழர் நீராடும்போது உடுத்தியே நீராடி இருக்கின்றனர். ஈரணி, நீர்க்கோலம், நீராட்டணி என்ற சொற்கள் நீராட்டுக் குரிய கோலத்தை விளக்குவனவாகும். ஆயின் நீதிநூற்களில்,

உடுத்தலால் நீராடார் ஆசாரக். 11

உடுத்தாடை அல்லாதார் நீராட்டு காண அரியகண்
திரிகடு. 11

என உடுத்துத் தான் நீராட வேண்டும் என்று வலியுறுத்தும் எண்ணங்கள் அமையக் காணலாம். இது தொடர்பாகச் சில செய்திகள் இந்தியரின் பழக்க வழக்கமாகக் காணக் கிடக் கின்றன.[30] ஆயின் உடுத்தாது நீராடல் பற்றிய தமிழர் எண்ணங் கள் காணக் கூடவில்லை. எனவே பிற பகுதி மக்களின் தோய்வு காரணமாக, இவ்வெண்ணங்கள் நீதிநூற்களில் இடம்பெற் றனவோ என எண்ணத்தோன்றுகின்றது.

உண்ணல்

மனிதன் உயிர்வாழ இன்றியமையாதது உணவு. எனவே தான் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் எனப்பட்ட னர். உண்டியினை உண்ணும்போதும், உடுத்தலில் சில முறை கள் இருந்தன எனக் காண்கின்றோம்.

பதினெண்கீழ்க்கணக்கு, ஒன்றுடுத்து உண்ணலைக் குறை வுடையதாகச் சொல்லுகின்றது.

சீவகன் உணவு உண்ண,

வெண்டுகில் மாலை சாந்தம் விழுக்கலம் சேர்த்தி
நுண்டுகிற் றிரைகள் சேர்ந்த நூற்றுலா மண்டபத்து (2734)

ஏறினான் எனச் சிந்தாமணி இயம்புகின்றது.

இத்தகைய எண்ணங்களை நோக்க உடுத்தாது நீராடல் போன்று, இதுவும் தமிழருக்கேயுரியதா என்ற வினா எழுகின்றது. ஏனெனில் இதனைப்பற்றி பிற எண்ணங்கள் தெளிவுறவில்லை. இன்றும் தமிழரிடம் இவ்வழக்கு இல்லை (அந்தணர்களில் ஒரு சிலர் மடிப்புடவையுடன் உண்ணுகின்றனர்). இந்தியாவில் பிற பகுதிகளில் அன்று முதல் இன்றுவரை இவ்வழக்கு உண்டு

---

30. An unclothed bathing women not only provoked the gods by her impudence but ran the risk of accidental fertilisation by the sperm of supernatural beings while therefore nudity was casually sanctioned almost holy shrines in Northern India bathing naked was normally forbidden save in certain forms of solitary magic in which a particular class wantons was sought to be won or propitated by a sacrifice of one's modesty. Until recently devout women in many parts of the country seldom dared to enter a sacred river with more than a single garment on under pain of incursing the displeasure of the undine spirits.

— Costumes of India and Pakistan, S.N. Dar, page-142,

என்பர்.[31] எனவே நீராடல் போன்று பிற பகுதிமக்களின் தொடர்பாகத் தமிழரிலும் ஒருசிலர் இதனைப் பின்பற்றி வந்திருக்கக்கூடும் அல்லது சமணமதச் சார்புடையதாக இக்கருத்தினைக் கொள்ளலாம்.

## அரசகுல வழக்கு

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை என்று வைக்கப்படும் (குறள். 388)

என்று மன்னனைச் செங்கோல் தவறாத நிலையில் இறையென்று கருதிச் சிறப்பித்தனர் தமிழர். பிற மாந்தரினின்றும் உயர்ந்த நிலை காரணமாகச் சில தனிப்பட்ட வழக்கங்களும் இவர்களுக்கு அமைந்தன.

அரச குலத்தினரின் பின்னால் பொருள்கள் பல எடுத்துச் செல்லல் மரபு. அவற்றுள் துகிலும் இடம் பெற்றிருந்தது.

சிலப்பதிகாரத்தில் பாண்டியன் மனைவி,

கோடி யேந்தினர் பட்டேந்தினர்
கொழுந் திரையலின் செப்பேந்தினர்
..................
கூனும் குறளும் ஊமும் கூடிய
குறுந் தொழிலிளைஞர் செறிந்து சூழ்தரக்
(20:14-17)

காட்சி அளிக்கின்றாள்.

---

31. Further the king had a white silk garment to be used after the bath while at the lunch time he wore dukula.

— Indian Costumes Coiffure and Ornament, Sachidanand Sahay, page-26.

உத்தரப் பிரதேசத்தில் சிறப்பாக மேல் வகுப்பினர் உணவு உட்கொள்ளும்போது தைக்கப்பட்ட ஆடைகளை அணியாமல் இருக்கும் வழக்கம் இருக்கிறது. கிழக்கு நேப்பாளத்தைச் சேர்ந்த 'தவிரால்' பிராமணர்களிடையேயும் இவ்வகையான வழக்கம் காணப்படுகின்றது.

— ஆண்களின் உடை-பிரனாப் குமார் தாஸ்குப்தா,

இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை - தமிழாக்கம் - வெ. இலட்சுமி, பக்கம்-88.

இராவணன் சீதையைக் காண,

மாலையும் சாந்தும் கலவையும் பூணும்
வயங்கு நுண்டுகொடு காசும்
சோலையிற் றொகுதிக் கற்பகத் தருவு
நிதிகளும் கொண்டு பின் தொடரச் (கந்தர. 422)

செல்லலும் இம்மரபின் அடிப்படையிலேயாகும்.

பொருட்களுடன் பலரும் செல்கையில் பேடியர் ஆணுடைய ராகச் சென்றனர் என இயம்பும் சூளாமணி (361).

பிறர் பின் செல்லலை மரியாதை கருதிய பழக்கவழக்கமாகக் கொள்ளலாம். ஆயின் துகில் முதலியவற்றை ஏந்திச் செல்லலுக் குரிய அடிப்படை என்ன என்பது புரியவில்லை.

'பஞ்சியின் மெல்லிதேனும் பகை சிறிதென எண்ண வேண்டா' (சீவக. 1894) என்பது பொதுநிலையில் அரசர்க்குப் பொருத்தமானதொரு உரையாகும். இதனையுணர்ந்து செயல் பட்ட அவர் திறமும் சில பழக்கவழக்கங்கள் வழி புலனாகின்றது.

பகைவர்களால் எச்சமயத்தும் தமக்குத் தீங்கு நேரிடலாம் என்பதனை எண்ணி, ஒவ்வொரு செயலிலும் விழிப்புடன் இருந் தனர் என்பதை அவர்களின் உடை, உணவு பற்றிய எண்ணமும் உணர்த்தும். உடை உணவு அளித்தலைத் தமக்கு நம்பிக்கைக் குரியவர்களிடம் ஒப்படைத்து இருந்தனர் அரசர்.

உடையுமடிசிலும் உருமண்ணுவாவிற்குக்
கடனா வைத்தலிற் கைபுனைந்தியற்றி
அகன்முடி அவன்றாள் அமர்ந்து கொடுப்ப
(பெருங். 3.9:129-30)

எனப் பெருங்கதை, உதயணன் உருமண்ணுவாவிடம் இப்பொறுப் பினை ஒப்படைத்து இருந்ததை இயம்பும்.

சீவக சிந்தாமணியிலும்,

பூந்துகில் மாலைசாந்தம் புனைகலம் பஞ்சவாசம்
ஆய்ந்தளந் தியற்றப்பட்ட வடிசில்நீரின்ன வெல்லாம்
மாந்தரிற் மடங்கலாற்றற் பதுமுகன் காக்க வென்றாங்
கேந்து பூண் மார்பனேவ வின்னணமியற் றினானே (189ப)

எனச் சீவகனைக் காக்க, நந்தட்டன் பதுமுகனிடம் உரைக்கும் திறம் அமைகின்றது.

உடையினாலும் தீமை வரக்கூடும் என்பதனை யுணர்ந்து, அதனைக் கண்டறியும் வழிமுறையினையும் தெரிந்து வைத்திருந் தனர் என்பதை ஒரு பாடல் உணர்த்தி நிற்கின்றது.

சீவகனைக் காக்க, பதுமுகனிடம் நந்தட்டன் சொல்லும் போது,

வண்ணப் பூம்மாலை சாந்தம் வாலணிகலன் களாடை
கண் முகத் துறுத்தித் தூய்மை காண்டலாற் கொள்ள
வேண்டா (1893)

என்றுரைப்பதாகத் தேவர் அமைப்பார்.

ஈண்டு, அரசர்களின் உடையினைப் புள்ளின் கண்ணிலும், சேவலின் முகத்திலும் உறுத்தித் தூய்மை கண்ட பின்னரே பயன் படுத்தினர் என்பது தெளிவாவதுடன், நச்சுப் பொருட்களைக் கண்டுபிடித்து விடும் ஆற்றலுடையன என இவற்றை யுணர்ந்து வைத்திருந்த அவர் திறமும் வெளிப்படுகின்றது.

இவையே யன்றித் துணி என்ற நிலையில் மேலும் சில பயன் பாடுகளையும் காண்கின்றோம்.

1. துகிற்கொடி மிதிலை மாடத்துத் துவன்றி நின்ற நிலையில் கொடியாகவும் (கம்ப. பால. 567)

2. ஓவிய எழினி சூழவுடன் போக்கி என்ற தன்மையில் எழினியாகவும் (சிலப். 6:169)

3. தூமமார்ந்ததுகிலணைப் பள்ளியாகக் காட்டுமிடத்தில் சேக்கையாகவும் (சீவக. 1715)

4. விலைவரம்பறிதலில்லாத வெண்டுகிலை அடுத்த நிலையில் நடைப் படாமாகவும் (சீவக. 617)

5. தூமமார்ந்த துகிலுறை நல்யாழினைச் சுட்டும் தன்மையில் உறையாகவும் (சீவக. 719)

6. கச்சை யானையாகக் காட்டும் தன்மையில் விலங்குகளின் மேல்விரிக்கும் துணியாகவும் (சூளா. 139)

இலக்கியங்களில் இவை இடம் பெறுகின்றன. மேலும் சில, தமிழரின் பழக்க வழக்கங்களையும் இவை புலப்படுத்தக் காண லாம்.

## நம்பிக்கைகள்

'பொதுவாக நம்பிக்கைகளுக்கும், சிறப்பாகத் தெய்வ நம்பிக்கைகளுக்கும் காரணம் காணுதல் இலகுவன்று'[32] என்பார் டாக்டர் கைலாசபதி. நம்பிக்கைகளில் ஒரு சிலவற்றிற்குக் காரணம் புலப்பட, பெரும்பான்மையன, தெளிவுபடாதன வாகவே அமையும் நிலையில் இக்கருத்து உறுதிப்படுகின்றது. இன்றைய நிலையில்,காரணம் முற்பட்டு, காட்ட காரணத்துடன் கூடியன எனச் சுட்டப்படத் தக்கனவற்றை நம்பிக்கைகள் என்றும், காரணம் கற்பிக்க முடியாதவற்றை மூட நம்பிக்கைகள் என்றும் வழங்குகின்றனர். இவற்றுள்ளும் சிலர் சிலவற்றைப் பொருளுடையதாகக் கூறினும், பிறர் ஏற்றுக் கொள்வது இல்லை. எனவே காரணம் சுட்டப்பட்டனவும் மூடநம்பிக்கை யாக வழங்சப்படல் உண்டு. இந்நிலையில் நம்பிக்கை என்பது இன்னதென்று வரையறைப்படுத்தவோ, எடுத்தியம்புவதோ இயலாத ஒன்றாகின்றது. எனவே மாந்தர் மனத்தின் ஒருவித உணர்வே நம்பிக்கை எனலாம்.

மாந்தர் தம் மனம் எண்ணும் நிலையில் உள்ள அனைத்துப் பற்றியும் பலவித நம்பிக்கைகள் கொண்டுள்ளனர். அருவி நீருடன் இணைந்து ஓடிவரும் பொருட்கள் போன்று, காலந் தோறும் மனிதனின் பல்தரப்பட்ட நம்பிக்கைகளும் அவனது வாழ்க்கை வரலாற்றில் படிந்து கொண்டே வருகின்றன. ஓடி வரும் நீரில் சில பொருட்கள் ஆங்காங்கு தங்கி விடுதல் போன்று சில அவ்வக் காலத்திற்குரியனவாகத் தங்கி விடலும் உண்டு.

காலம், நாடு போன்ற பல சூழல்களுக்கேற்ப நம்பிக்கைகள் மாறுபடுவதையும் நாம் காண்கின்றோம். சான்றாக, சிலவற்றை நோக்கலாம். எகிப்தியப் பாதிரிமார்கள், செடியினின்றும் கிடைக் கும் ஆடை, பிற ஆடைகளை விடத் தூய்மையானது எனக் கருதி அதனையே கோயிலினுள் அணிந்தனர். ஆயின் இன்று தமிழரில் அந்தணர் கம்பளி ஆடை எப்போதுமே மடித்தன்மையுடையது என்று கருதுகின்றனர். இதைப்போன்று தூய்மையுடன் ஆடை இருக்க வேண்டும். கந்தையுடை (அழுக்குடை) யுடுப்பின்

32. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் - க. கைலாசபதி, பக்கம்-44.

மூதேவி வந்து அடைவாள் என்பதும் தமிழர் நம்பிக்கையாகும். ஆயின் மங்கோலிய மக்களிடம் காணப்பட்ட இதற்கு எதிரான தொரு நம்பிக்கையினை மார்கோபோலோ சுட்டுவார்.

'துணிகளை மங்கோலிய மக்கள் துவைக்க மாட்டார்கள். உண்மையிலேயே ஆற்று நீரில் துவைத்தால் அங்குள்ள தேவதை களுக்குக் கோபம் வரும் என்று எண்ணினர்'.[33] இந்நம்பிக்கை களின் மாறுதலுக்குரிய காரணம் புரியவில்லை. இத்தகைய முரண்பட்ட நம்பிக்கைகளுக்கு அவரவர்களின் மனஓட்டமே காரணம் எனலாம்.

இந்நம்பிக்கைகள் முழுவதையும் காண, இவை மனிதனின் எதிர்பார்ப்பின் அடிப்படையிலும், மீவியல்புக் கூறுகளுடன் தொடர்பு கொண்டும், இயற்கைச் சக்தியின் மேல் உள்ள அச்சம், காரணமாகவும், சமுதாயச் சூழலில் எழுந்தனவாகவும் பல்நிலை களில் தோற்றம் கொண்டிருக்கக் காண்கின்றோம்.

இந் நம்பிக்கைகளுள் சில சிந்தனை ஓட்டத்திலேயே நின்றுவிட, பல பழக்க வழக்கமாகவும் உருவெடுக்கின்றன.

இத்தகைய நம்பிக்கைக் கூறுகளுள் ஆடை தொடர்பாகவும், சிலவற்றை மாந்தர் கொண்டு திகழ்ந்தனர். இவையும், ஆடையைப் பற்றிய மக்களின் சிந்தனைகளுக்கேற்பமாறுபட்டன. ஆடையின் ஒவ்வொரு உறுப்பிற்கும் ஒவ்வோர் தேவதை இருந்த தாக நம்பினர் வடநாட்டார்.[34] தமிழரிடம் இந்நம்பிக்கை இல்லை.

---

33. மார்க்கோபோலோ - மாரிஸ் காலிஸ் - தமிழாக்கம் - பெ. திருஞான சம்பந்தன், பக்கம்-73.

34. வேத இலக்கியங்களில் ஆடையின் ஒவ்வோர் உறுப்பிற்கும் ஒவ்வோர் தேவதை இருந்ததாகச் சொல்லப்படுகிறது.
—கலைக் களஞ்சியம், தொகுதி-1, பக்கம்-352.
Since clothing was associatad with man only the Vedic Indian sensibly considered that clothes must be connected with divine mysteries. Different parts of the garment were therefore consecrated to different gods while the borders and middle portion were considered the preserve of ancestors.
—John Kenneth Galbraith Introduces India-
Ed. Frank Moracs and Edward Howe,
—Indian Costumes - Tara Ali Baig, Page-154.

இவண், நாகரிகம் எவ்வளவோ முன்னேறி இருந்தாலும் சில சந்தர்ப்பங்களில் சில நம்பிக்கைகளில் (மூடநம்பிக்கைகளில்) பிடிப்பு ஏற்படத்தான் செய்கிறது. அப்படி மூடநம்பிக்கைகள் என்று சொல்லப்படுபவைகள் எல்லாவற்றுக்கும் காரணம் இல்லாமல் இருந்ததில்லை. அத்தகைய நம்பிக்கைகளுக்கு விஞ்ஞான மருத்துவரீதியில் ஏதோ ஓர் காரணம் இருக்கத்தான் செய்கிறது என்ற உண்மையை 'All About Superstitions' என்ற புத்தகம் நல்ல தெளிவான முறையில் விளக்குகிறது அவற்றில் சில.

1. சேலையின் முந்தானையைக் குழந்தை தொட்டுவிட்டால் குழந்தைக்கு வியாதி வரும்.

2. புதுத்துணிகளை வெள்ளிக்கிழமை வெட்டவோ கிழிக்கவோ கூடாது.

என்ற எண்ணத்தையும் இணைத்து நோக்கலாம் (மங்கை-ஆகஸ்ட் 79, இதழ். பக்கம் 52).

இந்நிலையில், இலக்கியங்கள் உணர்த்தும், தமிழரின் ஆடையுடன் தொடர்புடைய நம்பிக்கைகள் என்னென்ன என்பதை தமிழர் ஆடை வரலாறு உணர்த்துமாற்றை இவண் காணலாம்.

1. வினை

செய்யும் வினைகளுக்கேற்ப, நன்மையினையும், தீமையினையும் மாந்தர் அடைவர் என்பது தமிழரிடம் அன்று முதல் இன்று வரை வழங்கிவரும் ஒரு நம்பிக்கையாகும்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்புடைத்து (126)

என்று ஒரு பிறப்பில் வாழும் நிலை, எழுபிறப்பிலும் சிறப்பினைத் தரவல்லது என்னும் தெய்வப்புலவர் குறள் இக்கருத்தில் எழுந்ததே. இதனைப்போன்று தீயோராயினும் அவர்களின் செல்வ வாழ்வுக்கு உரிய காரணம் முற்பிறவியில் செய்த பயனே என்ற எண்ணம் தமிழரிடம் இருந்தது. இதனை நாலடியார்,

புணர் கடல்சூழ் வையத்துப் புண்ணியமோவேறே
உணர்வதுடையா ரிருப்ப உணர்விலா
வட்டும் வழுதுணையும் போல் வாரும் வாழ்வாரே
பட்டும் துகிலும் உடுத்து (நாலடி. 264)

என்றியம்புகின்றது.

வினை பற்றிய நம்பிக்கை ஒருபுறமிருப்பினும் சிறப்பான வாழ்வு என்பது பட்டும் துகிலும் உடுத்து வாழ்தலே என்ற நம்பிக்கையும் அவர்களிடம் இருந்திருக்கலாம் எனத் தோன்று கின்றது.

நல்வினைகளுள் ஒன்று கொடை செய்தலாகும். தமிழரிடம் இவ்வியல்பு தொன்றுதொட்டே காணப்பட்டது என்பது விருந்தோம்பலிலும் இரவலர்க்கு ஈதலிலும் பெறப்படும். இவற்றுள் ஆடைக் கொடை செய்வார் நன்மையடைவர் செய்யா தார் தீமை அடைவர் என்னும் நம்பிக்கையும் காணப்பட்டது.

கற்றாரை கற்றது உணரார் என மதியார்
உற்றாரை யன்னண மோராமல்-அற்றார்கட்கு
உண்டி உறையுள் உடுக்கை யினை ஈந்தார்
பண்டிதராய் வாழ்வார் பயின்று (ஏலாதி.9)

எள்ளே பருத்தியே எண்ணெய் உடுத்தாடை
வள்ளே துணியே யிவற்றோடு-கொள்ளென
அன்புற்றசனம் கொடுத்தான் றுணையினோ-
டின்புற்று வாழ்வா னியைந்து (ஏலாதி.50)

ஐயமே பிச்சை யிருந்தவர்க் கூணாடை
ஐயமே இன்றி ஈந்தான்-வையமும்
வானும் வரிசையாற் றானாளு நாளுமே
யீனமே இன்றி இனிது (ஏலாதி.70)

என்று ஆடைக் கொடை செய்யின் சிறந்த வாழ்வு கிடைக்கும் என்னும் நம்பிக்கைகளை மாந்தர் மனத்தில் ஊட்டும் வண்ணம் இக்கருத்துகள் அமைகின்றன.

உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும்
கெடாத நல்லறமும் செய்யார் வைத்தீட்டினார் இழப்பர்
(நாலடி.10)

என்ற நிலையில் ஆடைக் கொடை செய்யாது தானும் உடாது இருப்போர் அடைவது தீமையே என்றதொரு நம்பிக்கையும் அமைகின்றது.

உடைகொடுப்பவன் நன்மையடைவதும், கொடாதவன் தீமை அடைவதும் உண்டு எனினும், எதையும் கொடுப்பதைத் தடுப்பவன் கொடாதவனைவிடத் தண்டனை பெறுவான் என்பதையும் தமிழர் நம்பினர். இதனடிப்படையில் எழுந்ததுவே,

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும் (166)

என்ற குறட்பாவாகும் இதனையே கம்பர்,

கொடுப்பது விலக்குக் கொடியோர்-தம்சுற்றம்
உடுப்பதூஉம் உண்பதுவும் இன்றி அழியும் காண் (கம்ப. 451)

என்று வலியுறுத்தக் காணலாம்.

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத்தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும் (1023)

என்ற குறள் கருத்தும், குடி உயர்ந்து விளங்கச் செய்வேன் என்று முயற்சி செய்யும் ஒருவனுக்குத் தெய்வம் விரைந்து வந்து உதவும் என்னும் நம்பிக்கையில் எழுந்ததே.

**கனவு**

கனவு பலிக்கும் என்பதும் அவை பின் வருவதுணர்த்தும் நன்னிமித்தமாக அல்லது தீநிமித்தமாக அமையக் கூடும் என்பதிலும் தமிழர் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆடை பற்றிய சில கனவுகளையும் இலக்கியங்கள் சுட்டி, அவை மூலம் தமிழரின் இந் நம்பிக்கையினை வெளிப்படுத்துகின்றது.

காழக நீப்பவும் களிறுமேற் கொள்ளவும் (புறம்.41)

என்னும் எண்ணத்தைச் சங்கப்பா நவிலும். களிறு, பன்றி என்ற பொருளில் அமைந்து, பன்றியின் மேல் ஊர்ந்து செல்லல் போன்றும், ஆடையை நீத்தல் போன்ற கனவும் கேட்டுக்கு அறிகுறி என்னும் தமிழர் எண்ணத்தைப் புலப்படுத்துகின்றது.

சிலம்பிலும் இக்கனவு பலித்தல் விளக்கப் படுகின்றது.

கூறை கோட்பட்டுக் கோட்டு மாவூரவும் (15:98.)

என்று தான் கண்ட கனவினைச் சொல்லுகின்றான் கோவலன். அதனால் வருவதொரு தீங்கு உண்டு என்ற தன் நம்பிக்கையையும் வெளியிடுகின்றான். அவனது கனவு பலித்து வாழ்வு முடிவுற்றதையும், பிறரின் துன்ப நிலையையும் இலக்கியம் இயம்புகின்றது. ஆடை நீத்தலுடன் காழகம் பறித்தல் போன்ற கனவும் கேட்டுக்கு அறிகுறி என்ற தமிழர் நம்பிக்கை இவண் வெளிப்படுகின்றது.

திரிசடை இராவணனை அரத்த ஆடையனாகக் கனவு கண்டு, அதனைச் சீதைக்குக் கூறுகின்றாள் (சுந்தர. 174). அவனுக்குக் கேடும், சீதையின் நல்வாழ்வுக்குரிய நிமித்தமாகவும் இதனைச் சுட்டுகின்றாள். அரத்த ஆடையைக் காணல், உடுத்தியவர்கட்குத் தீது தரும் நிமித்தம் என்ற உணர்வு இங்கே அமைகின்றது. கம்பன் செம்மையை மங்கலக்கோலம் என்று எண்ணிய தமிழர் உணர்வினையும் காட்டுவான். ஆயின் கனவில் அரத்த ஆடை தீங்கு தருவதாகச் சுட்டுகின்றான். எனவே இரத்தத் தொடர்பு காரணமாக இதனைக் கனவில் காணல் நன்றன்று என்று எண்ணியிருந்திருக்கலாம். அல்லது அரத்த ஆடையினை இரத்தம் தோய்ந்த ஆடை எனக் கொள்ளலும் இக்கருத்துக்குப் பொருத்தமாகின்றது.

ஆடையைப் பற்றிய இவ்வனைத்துக் கனவுகளும் தீநிமித்தங்களாகவே அமைவதை இங்கே சுட்டலாம். இன்றைய நாட்டுப்புற நம்பிக்கை பெண் உடையைக் காணல் தீது[35] என்று சொல்லலும் இத்துடன் இணைத்து நோக்கத் தக்கதாகும்.

**கற்பு**

மணிமேகலையில் ஆதிரை எரிபுக, கற்புத் தீயினால், தீ அவள்மேல் பற்றவில்லை. இதனை, 'கற்புடைய பெண்டிர் உடுத்த கூறை எரியுண்ணாது' (10:30) எனக் கற்புடைமை காரணமாக, உடல் அன்றி உடையும் எரியுண்ணாது என்ற நம்பிக்கையைச் சுட்டி விளக்குவர் சாத்தனார். கற்பின் சிறப்புக் காரணமாக உடையும் சிறப்புப் பெறுகின்றது. பிற பெண்டிரிடம் இருந்து கற்புடைய பெண்டிர் உயர்ந்தவர்கள் என்பதையும் கற்பின் திறத்தையும் மேம்படுத்தும் நிலையில் இந்நம்பிக்கை தமிழரிடம் காணப்பட்டது எனலாம்.

**மந்திரம்**

மாந்தர் மந்திரசக்தி யுடையவராக இருத்தல் கூடும் என்ற நம்பிக்கையும் தமிழரிடம் இருந்தது.

அந்தரத் தறுவை வைப்பார் அந்தணர் அங்கைக்கொட்டி (1279)

---

35. கனவில் பன்றி, பூ, பெண், ஆடு, பச்சைமரம், பெண்உடை, விறகு வண்டி, ஓடும் நீர் போன்றவற்றையும் காண்பது நல்லதல்ல.
—நாட்டுப்புற நம்பிக்கைகள்—தமிழவன், எண்.245.

என்ற சிந்தாமணிப் பாடல் அந்தணர் மந்திரத்தால் அறுவையினை அந்தரத்தில் நிறுத்துவர் என்ற நம்பிக்கையுணர்வினை வெளிப்படுத்தும்.

மந்திரத்துடன் மேலும் சில மீஇயல்புக் கூறுகள் இடம் பெறுகின்றதைக் காண்கின்றோம். இயக்கர் மீவியல்பு ஆற்றல் பொருந்தியவர்கள் என்ற எண்ணமும் இதனுள் அமைகின்றது. எனவே மனிதர்களிடம் இருந்தும் தனிப்பட்டவர்கள், மேம்பட்டவர்கள் என்னும் நம்பிக்கையில் இவர்கள் துகில் சோர்வுறாது என்றும் மாசுறாது என்றும் நம்பினர். இதனைச் சிந்தாமணிப் பாடல் ஒன்று விளக்குகின்றது.

இதுவென வுருவென இயக்கி என்றலும்
புதிது பூந்துகில் குழல்கள் சோர்தலால்
மதுவிரி கோதையம் மாலைநின் மணம்
அது முறை யியக்கலின் இயக்கி யாகுமே (1015)

எனக் காந்தர்வதத்தை கூறுவதாக அமைகின்றது. குணமாலையைக் கண்டு, பூந்துகிலும், குழலும் சோர எழுதுதலின் புதிய ஓர் இயக்கி என்கின்றாள். எனவே இயக்கிக்குத் துகில்கள் சோர்வுறாது என நம்பிய மக்கள் நம்பிக்கை தெளிவாகின்றது. இதற்குரிய விளக்கத்தில் உ. வே. சா. அவர்கள் 'ஆடையுடன் பிறத்தலும், மயிர் பிறந்த காலத்தில் இருந்தபடியே இருத்தலும் இயக்கர்க்கு இயல்பு என்பர்' என்னுமொரு எண்ணத்தையும் வெளிப்படுத்துகின்றார். தமிழரிடம் இந்நம்பிக்கை இன்று இருப்பதாகத் தெரியவில்லை.

கற்பகக் கானம் பற்றியதொரு நம்பிக்கையும் இலக்கியத்தில் இடம் பெறுகின்றது.

துறவின்போது அனைத்துப் பொருட்களையும் பரிசிலாக நல்கும் சீவகனை,

பூந்துகில் புனைகலமாலை பூசுசாந்
தாய்ந்நல குணவு வந்தருளி மாமணி
காந்திய கற்பகக் கானமாயினான்
ஏந்திய மணிமுடி யிறைவ னென்பவே (2997)

எனச் சுட்டுவார் திருத்தக்கதேவர். இவை ஸ்ரீறையே விசித்திர் வஸ்திரங்களைக் கொடுக்க வல்லது. ஸ்ரீபுராணத்தில் கண்டது என்று இதற்கு விளக்கம் அமைப்பார் உ. வே. சா. அவர்கள்,

இன்றும் கற்பகத்தரு கேட்டது எல்லாம் கொடுக்க வல்லது என்ற நம்பிக்கை தமிழரிடம் உண்டு. கற்பகத்தரு கொடுக்கும் நிதியும் பொருளும் பலப்பல என்ற எண்ணமும் தமிழரிடம் காணப்பட்டது என்பது கம்பன் பாடல் வழிப் (சுந்தர. 422) புலனாகின்றது. புராணக் கதைகளின் மேல் தமிழர் கொண்ட நம்பிக்கையின் விளைவே இந்நம்பிக்கையும் எனக் கருதலாம்.

## முடிவுரை

மனித வாழ்வில் முக்கியப் பங்கு கொள்ளும் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் தமிழர் ஆடை வரலாற்றில் பெற்றுள்ள சிறப்பினை நோக்க,

1. காலம், சமுதாய நிலை, நிலம், தொழில், சடங்கு போன்ற ஒவ்வொரு சூழலுக்கும் ஏற்ப, ஆடை வகைகளையும் அமைத்துக் கொண்ட தமிழரின் அறிவு மேம்பாடு.

2. வாழ்வியற்கூறுகள் ஒவ்வொன்றிலும் ஆடையின் தாக்கம் அமைய, தமிழர் ஆடைக்குக் கொடுத்திருந்த முக்கியத்துவம்.

3. மனித வாழ்வியல் ஆய்வுக்கு, ஆடை ஆய்வும் சிறந்த பயனைத் தரவல்லது.

போன்ற பல கருத்துக்கள் வெளியாகின்றன.

மேலும் உலக நிலையில், மாந்தர் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகளுடன் தமிழர் நிலையினை ஒப்பிட்டுக்காண, உடுத்தும் முறை, உடையமைப்பு இவற்றில்தான் வேறுபாடு அமைகின்றதே தவிர, அடிப்படைகளில் மிகுதியான வேற்றுமை இல்லை. எனவே மாந்தர் மனம், காலம், சூழல் இவற்றால் வேறு படினும் அடிப்படை உணர்வுகளில் ஒற்றுமையுடையது என்பது தெளிவுறுகின்றது. பகவத்கீதையின், வேற்றுமையில் ஒற்றுமை யுடையது எண்ணங்கள் என்ற கூற்று[36] இவண் பொருந்தக் காணலாம்.

---

36. Know that knowledge whereby are sees in all beings immutable entity.... a unity in diversity was written in the Bhagavath Gita......

—John Kenneth Galbraith Introduces India—Ed. Frank Moraes and Edward Howe, Indian Costume, Tara Ali Baig, Page-154.

# மீவியல்புக் கூறுகள்

தமிழர், ஆடையுடன் தொடர்பாகக் கொண்டிருந்த சில நம்பிக்கைகளைக் கண்டோம். இந்நம்பிக்கை யடிப்படையில், மீவியல்புக் கூறுகளுக்கு என்று தங்கள் உடையினை அளித்த தமிழர் மனநிலையையும் இலக்கியங்கள் சுட்டிச் செல்கின்றன. தாங்கள் வணங்கும் தெய்வம், அரக்கன், இயக்கன், பூதம் போன்ற பல இதனுள் அடங்குகின்றன. இவ்விளக்கங்கள், இக் கூறுகளின் இயற்கை இகந்த ஆற்றலுடன், பல புராணக் கதைகள் மக்களிடம் பயின்று வந்தமையையும் வெளிப்படுத்துகின்றன. இவற்றை இவண் நோக்கலாம்.

## 1. சிவபெருமான்

"மேவியந் தோலுடுக்கும் தில்லையான்" எனச் சிறப்பிக்கப் படுமளவிற்குத் தோலுடையுடன் பிணைக்கப்பட்டு, காட்சி தருபவனாகக் கூறப்படுபவன் சிவபெருமான். பெரும்பாலான இலக்கியப் பயிற்சிகளும் இவனுடைய ஆடையாகச் சுட்டுவது களிற்றுரிவை, புலியதளாடை இவையேயாகும். மானுரியும் சில இடங்களில் சுட்டப்படுகின்றது.

பல இடங்களில் இயல்பாக பயிற்சி பெறும் இவ்வெண்ணங்கள், சில இடங்களில் குறிப்பாக, இவற்றுடன் இணைந்த கருத்து களையும் நவில்கின்றன.

சங்க இலக்கியத்தில்,

கொலை யுழுவைத் தோலசை இயும் (கலித்-கடவுள் வாழ்த்து. 11)

வரிகிளர் வயமான் உரிவை தைஇயும் (அகநா. கடவுள் வாழ்த்து. 14)

என காட்டப்படுகின்றது இத்தெய்வம்.

பின்னைய பக்தி இலக்கியங்களில் இவற்றின் பயிற்சி, உச்ச நிலைச் செல்வாக்குடன் அமைகின்றது.

செம்பட்டு டுத்து சிறுமானுரியாடை
அம்பட்டசைத் தானை நான் கண்ட தாரூரே (திருநாவுக். தேவா. 19:6)

மதயானை யுரிபோர்த்து பேய்வாழ் காட்டகத்தாடும் (பிரான்-கந். தேவா. 9:5)

புலியின்னுரி தோல் உடுத்திருந்தாய் (பிரான்-கந்.தேவா. 87:10)

உடுத்த புலித்தானைக் களிற்றுரிவை போர்வையான் (கம்ப. 76?)

வேக வெங்களிற்றின் வன் தோல் மெய்யிறப்
போர்த்த தையல் பாகன் (கம்ப. 6982)

களிற்றுரி புனைந்த கண்ணுதல் கடுப்ப (சல். 72)

புலியினை யுரித்துடையுடுப்ப (கல். 87:28)

போன்ற, பல சான்றுகளை இவண் காட்டலாம்.

"தாருகா வனத்து முனிவர்கள் பிட்சாடனராக வந்த சிவபெருமான் மீது கோபம் கொண்டு அவரை அழிப்பதற்காக ஒரு கொடிய யாகத்தைச் செய்தனர். அந்த வேள்வித் தீயிலிருந்து புலி, பாம்பு, மான், பூதம் முதலியன எழுந்தன. அவற்றை அம்முனிவர்கள் சிவபெருமான் மேல் ஏவினர். சிவபெருமான் புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்தார்!

கெஜாசுரன் என்பவன் பிரமதேவனிடத்து வரம்பெற்று, தேவர்களையும், முனிவர்களையும் வருத்தினான். ஒரு நாள் அம்முனிவர்கள் கெஜாசுரன் வருதலைக் கண்டு பயந்து, காசியில் உள்ள விசுவேசனது சன்னிதியை அடைந்து, விசுவேசனை வேண்டினர். கெஜாசுரன் அவர்களைத் துரத்திக் கொண்டு வந்தான். அப்பொழுது சிவபெருமான் தோன்றி அந்த யானை அவுணனைக் கொன்று அதன் தோலையுரித்து மேலாடையாகப் போர்த்துக் கொண்டார்."

எனச் சிவனின் தோலுடுக்கும் இயல்பிற்குரிய காரணத்தை நந்திக் கலம்பக உரையாசிரியர்,

பாய் புலியினுரியசைத்த பல புள்ளிப் படிவமெல்லாம்
ஆயிரவாய்க் கருங்கச்சை யனலுமிழ வசைத்தனையே
சோர் மதத்த வார் குருதி சோனை நீரெனத்துளிப்ப
வேர் மதத்த கரியுரிவை யேகாச மிட்டனையே

என்ற பாடலுக்கு விளக்கம் அளிக்கும் வாயிலாக இயம்புகின்றார்.[1]

எயில் எரித்தவன் யானையுரித்த நாள்
பயில் உறுத்து உரிபோர்த்த நற்பண்பு (கம்ப. 694)

உடைய சிவனைக் காட்டுவான் கம்பன். எயில் எரித்து அதன் பின் யானையையும் உரித்துள்ள சிவன் பற்றிய எண்ணம் இவண் குறிப்பாகச் சுட்டப்படுமாற்றைக் காணலாம்.

இதைப் போன்றதொரு விளக்கத்தினை, கல்லாடத்தில் அமையும், 'காருடல் பெற்ற தீவிழிக் குறளினை உரி செய்துடுத்து' என்ற பாடலடிக்கும் காண்கின்றோம்.[2]

'நெரிந்து திரண்ட அறலுடைய சடையினையுடைய தாருக வனத்து இருடிகள் பகைமையாலே கண்சிவந்து உளம் வெகுண்டு தீக்குழி தோண்டி சருக்கம் என்னும் உறுப்பினையுடைய உணர்தற்குரிய வேத மந்திரத்தை ஓதி, நெய் முதலியன பெய்யப்பட்ட அவ்வேள்விக் குறிவயிறுளைந்து தன் வலிமையாலே ஈன்று விட்ட பெரிய வாயினையுடைய புலியையும் தாழையின் முட்களைச் செறித்து வைத்தாற் போன்ற கூர்த்த பற்களையுடைய பாம்பினையும் கரிய உடம்பினையுடைய தீக்காலும் விழிகளையும் படைத்துள்ள முயலகன் என்னும் பூதத்தினையும் உரித்துத் தோலைப் போர்த்திய, திருக்கூத்தியற்றிய சிவபெருமான்' என்பது இவண் அமையும் விளக்கம்.

பிற்காலத்தைச் சார்ந்த திரிகூடராசப்பக் கவிராயரும் இக்கருத்தமையவே,

1. நந்திக் கலம்பகம் - சோ. அருணாசல தேசிகர் விளக்க உரை, பக்கம். 34.
2. கல்லாடம் மூலமும் உரையும், பொ.வே. சோமசுந்தரனார், பாடல். 33:17-18.

எட்டா முடைதாரம் டன்னியருக் கீந்து கொண்ட
பட்டாமுடை தாரம் பாங்மைத்து (102)

என்றமைகின்றார்.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் இவ்வாறு தோலாடையுடன் பேசப்படுவதற்குரிய காரணம் என்னவாக இருக்கலாம் என்று ஆராயின் இரண்டு எண்ணங்களை நாம் நினைக்கத் தோன்றுகின்றன.

1. புலியின் தோல் வெயிலுக்குக் குளிர்ச்சியையும், குளிருக்கு வெப்பத்தையும் அளிக்கத்தக்கது என்பர். புலியின் தோல் மட்டுமல்லாது விலங்குகளின் தோலுக்கே இத்தகையதொரு சக்தி இருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது. தோலாடைகளின் சக்தியையுணர்ந்த அன்றைய ஒருசில மாந்தர், ஆடைகளில் பெரும் வளர்ச்சிபெறாத காரணத்தால், தோலாடைகளை அணிந்தனர். தாம் பயன்படுத்துவனவற்றை, தாங்கள் வணங்கும் தெய்வத்திற்குச் சாத்தி மகிழும் மனநிலையுள்ள மனிதன் அன்று, தங்களது தோலாடையினையும், தங்கள் தெய்வத்திற்கு வழங்கினர். எனவே இத்தெய்வம், தோலினையுடுத்துவதைப் பழக்கமாகக் கொண்டதொரு சமுதாயத்தினரால் படைக்கப் பட்டிருக்கக் கூடும்; இதன் தொடர்பாகத் தோலாடை பெற்றிருக்கவும் கூடும்.

2. புலி, யானை போன்ற வலிமைமிக்க விலங்குகளை வென்றவன் என்று கூறுமாற்றான், சிவன் முழுமுதற்கடவுள், தன்னிகரில்லா ஆற்றல் உடையவன் என்பதைப் புலப்படுத்த எண்ணி இருக்கலாம்.

என்பனவே அவ்வெண்ணங்கள்.

இவற்றைத்தவிர,

சூழு மரவத்துகிலும் துகில் கிழிக் கோவணக் கீழும்
(திரு. தேவா. 2:9)
பட்டுடுத்து தோலுடுத்து பாம்பொன்றார்த்து
(திரு. தேவா. 216-11)

எனச் சில இடங்களில் பட்டு, துகில் உடுத்தியதாகவும் சிவனைக் காட்டுவர்.

2. திருமால்

திருமாலின் ஆடையாக மிகுதியாகப் பயன்படுத்தப் படுவது பொன்னாடையே.

பொன்புனையுடுக்கையோன் (15:28) எனப் பரிபாடல் பகரும்.

பொலம் பூவாடையிற் பொலிந்து தோன்றிய செங்கண் நெடியோன் நின்ற கோலத்தை (11:50-51) சிலப்பதிகாரம் சாற்றும்.

திருமகள் செல்வத்திற்குரியவள் எனச் சொல்லப்படுபவள். எனவே திருமகளின் கணவன் என்ற முறையில் திருமாலும் மிகச் சிறப்பான பொன்னாடையுடன் காட்டப்படுகின்றான் போலும்.

திருமாலின் அவதாரமாகிய இராமன், கண்ணன், வாமனன் போன்றோர் ஆடைபற்றிய எண்ணங்களும் ஒரு சில காணக் கிடைக்கின்றன.

இராமன் காடு செல்லும்போது அணிவது மரவுரி. இதனைப் பிற்கால இலக்கியமான முக்கூடற்பள்ளு,

கற்றைச் சடை கட்டி மரவுரியுஞ் சோலை தான்பண்டு
கட்டிக் கொண்டான் உங்கள் சங்கு கையன் அல்லோடி (168)

என்றியம்பும்.

குறள் உருவமான வாமன உருவத்தில் தோலுடன் பேசப்படுகின்றான். பொங்கிலங்கு புரிநூலும் தோலும் தாழப் பொல்லாத குறருரு என (நாலா.திவ். பெரிய. திரு-4:4:7) இவண் அமைப்பர் ஆசிரியர்.

கண்ணன் அவதாரத்தில், கண்ணனது திருவிளையாடலில் ஒன்றான மகளிர் துகில் கவரும் திறனும் பல படப் பேசப்படுகின்றது.

அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல (அகம். பாலை 2:59)

பட்டைப் பணித் தருளாயே (நாச். திரு. 3:3)

மறி உடை ஆயர் மாதர் வளைதுகில் வாரும் நீரால்
பொறி வரி அரவின் ஆடுப புனிதனும் போலும் அன்றே
(கம்ப. 26)

கரியோன் உடுட்ப துகில் கலர்ந்தொளிர (கல. 87-5)

தோகையர் நற்றுகில் கொண்ட நறுந்
துழாய் மார்பா (மூலரு-2:434-6)

கருந்துகிலக் கோவியரைக் கொள்வாய் கமலை
தருந்துகி னோக்கத் தகாதோ (2:506-8)

எனவே இவண் சூழல் காரணமாக மாந்தர் தங்கள் உடையினை மாற்றிக் கொள்ளல் போன்று, திருமாலின் பல அவதாரங்கட்கும் ஏற்ப, ஆடையினை மாற்றி அமைத்துள்ளனர் என்பதும், துகில் கவரும் கண்ணன் கதை சங்ககால மக்களிடமே பயிற்சிபெற்று விட்டதொரு புராணக்கூறு என்பதும் தெளிவுறுகின்றன.

3. முருகன்

சிவப்பிற்கும், முருகனுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. சங்க இலக்கியத்தில் குன்றியேய்க்கும் உடுக்கையரைக் (குறுந். கடவுள் வாழ்த்து-3) செய்யனாகச் சிவந்த ஆடையனாக (திருமுருகு 206) மருங்கில் கட்டிய நிலனேர்பு துகிலினனாக (திருமுருகு. 214) உடையும் ஒலியலும் செய்யனாக(பரி 19:97)காட்டப்படுகின்றவன் இவன். வெண்மை ஆடை முருகனுக்கு அணியப்பட்டாலும், செந்துகில் தான் இவனுக்கு ஏற்புடையது என்று மக்கள் கருதினர் எனத் தோன்றுகிறது. ஏனெனில்,

வேல்வலானுடை தாழ்ந்த விளங்கு வெண்துகில் ஏய்ப்ப
வாலிது கிளந்த வெண்காற் சேயும் (மு.கலி. 105-18)

என்னும் பாடலுக்கு முருகன் தனக்குரித்தல்லாத வெண்டுகில் உடுத்தாற் போன்று என விளக்குவார் நச்சினார்க்கினியர்.

4. விநாயகன்

கம்பன் புலியதளாடையனாக விநாயகனையும் காட்டுகின்றான்.

பொக்கணத்தன் புலியதளாடையன் (கம்ப. 320)

5. உமை

சிவபெருமான் உடை அதிகமான பயிற்சிபெற்றமை போன்று அவன் தேவியும் பல நிலைகளில் சுட்டப்படுகின்றாள். காளியாக, கொற்றவையாக இவள் காட்சியளிக்கும் திறத்தில்,

ஆனைத் தோல் போர்த்துப் புலியினுரியுடுத்து (சிலப். 12:8)

கரியினுரிவை போர்த்தணங்காகிய
வரியினுரிவை மேகலையாட்டி (சிலப். 12:61-2)

துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி (சிலப். 12:59)

எனப் போற்றப்படுகின்றாள்.

இவ்வாறு உரிவையினை உடுத்திய நிலையில், சிவனின் குடும்பத்தினரைக் காண்கின்றோம். சிவனின் எல்லாப் பொருட்களையும் அவனைச் சார்ந்தோர்க்கும் சொல்லிச் செல்லும் வழக்குண்மையே இதற்கு அடிப்படை எனலாம்.

அடுத்து காளிக்கு, கச்சு சுட்டப்படுதலை இலக்கியப் பயிற்சிகளினின்றும் தெரிகின்றோம். இதற்குரிய காரணம் ஒன்றையும் அறிஞர் ஒருவர் சுட்டுகின்றார்.[3]

இவர்களைத் தவிர, சில தெய்வங்களின் உடை பற்றிய ஒரு சில எண்ணங்களே சுட்டப்படுகின்றன.

நாமகள் வெண்ணிற ஆடையுடுத்தியிருத்தலை, கலிங்கத்துப் பரணி காட்டும்.

மண்மடந்தை தன் சீர்த்தி வெள்ளை சாத்தி (கலிங். 14)

பலராமன் நீல ஆடை யுடுத்தியவனாகச் சங்க இலக்கியத்தில் சுட்டப்படுகின்றான்.

பாலன்ன மேனியான் அணிபெறத் தைஇய
நீல நீருடை போல (நெய். கலி. 7)

தீக்கடவுள் பால்புரை வெள்ளெயிற்றுப் பார்ப்பனக் கோலத்தினன் எனச் சிலப்பதிகாரம் (21:48) சிறப்பிக்கும்.

மென்தூதர் நிணச் சட்டை அணிந்திருந்தனர் எனப் பேசும் சீவக சிந்தாமணி (1080).

இயக்கன் இயக்கியர் ஆடை பற்றிய மக்கள் நம்பிக்கையினை நம்பிக்கைகள் என்ற தலைப்பில் கண்டோம்.

---

3 The late Mr. Longhurst has pointed out that the Mother Goddess Durga is the only goddess who is frequently shown with this ribbon like binder. As she is a sertility goddess, the implication is obvious, the breasts are heavy with mothers milk and must be supported.

—A History of Indian Dress-Charles Fabri-Introduction.

அரக்கன், அரக்கியர் உடையையும் சில பாடல்கள் இயம்பு கின்றன.

வயிற்றள் வயக்கொடு மாசுணம் வீசும்
கயிற்றளசைத்த முலைக் குழி கண்ணாள் (கம். 2072)

என அரக்கியின் உடையின் தன்மை பேசப்படுகின்றது.

பூதம் துகிலுடுத்து ஆடும் தன்மையை 'துணங்கையம் பூதம் துகிலுடுத்து' எனச் சங்க இலக்கியமும் (பெரும்பாண் 235.)மூன்று பூதங்களின் வேறுபட்ட ஆடை பற்றிய எண்ணத்தைச் சிலப்பதிகாரமும் (சிலப்· 22:46, 22:67, 22:90-91) சுட்டும்.

## முடிவுரை

மீவியல்புக் கூறுகளுடன் தொடர்புடைய ஆடைகளைப் பற்றிய இலக்கிய எண்ணங்களை, இக்கூறுகள் பற்றிய மாந்தர் தம் பல்வேறு மனநிலைகளையும் சித்திரிக்கும் வகையில் அமைந் துள்ளன எனலாம்.

# ஆடையும் தொழிலும்

இயற்கையோடு இயைந்தது மனித வாழ்வு. அறிவு முன்னேற்றம் அடையா நிலையில் உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இருப்பிடமும் அளித்து மனிதக் குழந்தையைத் தாலாட்டினாள் இயற்கையாகிய அன்னை. இயற்கையின் அடிச் சுவட்டில் மனித வளர்ச்சி அமைய, தன் வாழ்க்கையைப் பல நிலைகளிலும் உயர்த்தத் தொடங்குகின்றான் மனிதன். காடு களை வெட்டிக் கழனியாக்கிப் பயிர்செய்தலில் அவனது முதல் நோக்கம் நிறைவேறுகிறது. உணவுத் தேவை பூர்த்தியானவுடன், உடை உருவாக்கலில் அவனது எண்ணம் செல்கின்றது. படிப் படியாக ஆயகலைகள் அறுபத்தி நான்கிலும் தேர்ச்சி பெறு கின்றான்.

இத்தகைய நன்கு தேர்ச்சி பெற்றதொரு சமுதாயத்தை, நாம் அறியும் தமிழர் வரலாற்றின் தொடக்க நிலையாகக் காண் கின்றோம். தமிழரின் முதல்நூல்களாகக் கருதப்படும் தொல் காப்பியம், சங்க இலக்கியம் இரண்டும் பண்பட்டதொரு தமிழர் சமுதாயத்தை நம்முன் படம்பிடித்துக் காட்டுகின்றன. இதற்கு,

> யாதும் ஊரே யாவரும் கேளிர்
> தீதும் நன்றும் பிறர்தர வாரா
> நோதலுந் தணிதலு மவற்றோரன்ன
> சாதலும் புதுவதன்றே வாழ்தல்
> இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
> இன்னாதென்றலுமிலமே (புறம். 192)

என்னும் கணியன் பூங்குன்றனாரின் பாடலைப் பானைச் சோற் றுக்குப் பதமாகக் கூறலாம்.

இவ்வளவு பெருஞ்சிறப்புடன் வாழ்ந்த தமிழர், பல தொழில்கள் வாயிலாகவும் தம் வாழ்க்கையைச் செம்மைப் படுத்தினர். இவரது பல்தொழில்களிலும் சிறப்புடன் விளங்கியது ஆடைத் தொழிலாகும். மேம்பாடு அடைந்ததொரு நிலையில் இன்று காணப்படும் இத்தொழிலின் விதை அன்றே போடப்பட்டு விட்டது என்பதனை இவ்வரலாறு நமக்கு உணர்த்துகின்றது.

## ஆடைத் தொழில்

ஆடையுடன் தொடர்புடைய அனைத்துத் தொழில்களையும் ஆடைத்தொழில் எனலாம். அதாவது,

1. மூலப் பொருட்கள் சேகரித்தல்
2. மூலப் பொருட்களைத் தயார்ப்படுத்தல்
3. நூல் நூற்றல்
4. பாவு
5. நெய்தல்
6. மிளிரச் செய்தல்
7. மணமூட்டல்
8. தைத்தல்
9. வணிகம்
10. வெளுத்தல்

போன்ற அனைத்துக் கூறுகளையும் இதனுள் அடக்கலாம். ஆடை உருவாக்குதற்குரிய தொழில்கள், ஆடை பயன்பாட்டுடன் கூடிய தொழில்கள் என இரண்டு நிலையினும் ஆடையுடன் தொடர்புடைமை காரணமாக ஆடைத்தொழில் என்று இவண் சுட்டப்பட்டது. எல்லா ஆடை வகைகளுக்கும் இத்தகைய அனைத்துக் கூறுகளும் அமையா. பொருட்களுக்கு ஏற்ற வண்ணமே இத்தொழில்களும் அமைகின்றன. நாட்டுக்கு ஏற்றவாறு கச்சாப்பொருள் அமைய மூலப்பொருட்களுக்கு ஏற்றவாறு தொழில்தன்மை அமைதலையும் இவண் சுட்டவேண்டும்.

மாந்தரின் ஆடை வரலாற்றைப் பார்க்க, எல்லா ஆடைகளையும் எல்லா மாந்தரும் பயன்படுத்தியதாக எண்ணமில்லை. நிலத்தில் கிடைக்கும் பொருட்களுக்கு இணங்கவே மாந்தர்

முதலாடை அமைகின்றது. எகிப்தியர் சணலைக் கொள்ள[1] எஸ்கிமோக்கள் தோலையும்,[2] இந்தியர் பருத்தியையும் கொண்டவர். உறவுகள் விரியவிரிய எல்லாப் பொருட்களும் எல்லாவிடத்திலும் கிடைக்கத் தொடங்கவே, மாந்தர் எல்லாப் பொருட்களையும் தமது தொழில் திறனுக்கு ஏற்றவாறு கொண்டனர்; கொள்கின்றனர். சணல், பருத்தி, பட்டுபோன்றவற்றிலேயே இத்தகையதொரு தனித்தன்மையைக் காண முடியும். மாந்தரின் ஆதி ஆடைகளாகக் கருதக்கூடிய தழை, மரப்பட்டை போன்றன, மனித சமுதாயத்தினரின் பொதுச் சொத்து ஆகும். எனவே இவற்றை முதன்மை ஆடைகளாகவும், பின்னர் அந்தந்த நாட்டுப் பொருட்களான பருத்தி, சணல், பட்டுப் போன்றவற்றையும்,அடுத்த நிலையில் எல்லாப் பொருட்களையும் மனிதன் ஏற்றுக் கொண்டான் எனல் கொள்ளத் தக்கது.

## மூலப் பொருட்கள் (Raw Materials)

எந்த ஒரு பொருளின் உற்பத்திக்கும் முதனிலைத் தேவையாய் அமைவதனை மூலப்பொருள் எனலாம். இதனைக் கச்சாப் பொருள் என்றும் சுட்டுவர். ஆடை உருவாக்கத்திற்குரிய அடிப்படைப் பொருள்கள் முந்நிலைகளில் அமைகின்றன. அவற்றை,

1. தாவரத்தில் இருந்து பெறுவன (Vegetable Fibre)-தழை, மரப்பட்டை, பருத்தி, சணல்.
2. விலங்குகளிடம் இருந்து பெறுவன (Animal Fibre) - தோல், பட்டு, மயிர்.
3. செயற்கை யிழைகள் (Synthetic Fibre) உருவாக்கப் பயன்படுவன-கரி, பிராணவாயு, போன்ற பிற.

தாவரங்கள், விலங்குகளினின்றும் பெறுபவற்றை இயற்கைப் பொருள் என்று குறிப்பிடலாம். செயற்கை இழைகளைப் பெறுதல் அறிவியல் வளர்ச்சி தந்த முன்னேற்றமாகும். ஆய்வு

---

1. Ancient Egyptians wore garments made of wool, linen and laler cotton
—The Story of Clothes, Agens Allen, page-26.
2. கலைக் களஞ்சியம் - தொகுதி-1, பக்கம்-352.

எல்லைக்குள் இதுபற்றிய குறிப்பின்மையால் இயற்கைப்பொருள் பற்றிய விளக்கமே இவண் அமைகின்றது.

இயற்கைப் பொருளையும் நாம் இரு நிலைகளில் பகுத்து நோக்கலாம்.

1. தழையுடை, மரனாருடை, தோலாடை
2. மயிராடை, பருத்தியாடை, பட்டாடை,

முதல் பகுதியில் அமையும் மூன்றும் ஆடைத் தொழிலுக்குரிய படிநிலைகள் அனைத்தையும் பெறவில்லை. பெற இயலாது என்பதும் தெளிவு. இலை, தழைகளைக் கிடைத்தபடியே தொடுத்து அணிந்திருக்க வேண்டும். எனவே உடுத்தலுக்குரிய தன்மையில் அமைத்த அமைப்பு மட்டுமே இதன் தொழிலாகின்றது.

மரனாருடைகள், சில செப்பம் செய்து உடுத்தியதாகச் சுட்டப்படினும், அம்முறையின் விளக்கம் புலனாகவில்லை.

தோலாடை பற்றியும் ஒரு சில குறிப்புகள் தவிர விளக்கமாக ஏதும் அறியயியலவில்லை.

இவை பற்றிய விளக்கங்கள் மிகுதியாகக் கிடைத்திருப்பின், இவற்றைப் பற்றிய தெளிந்த அறிவு கிடைத்திருக்கும். ஆயின் பழந்தமிழ் இலக்கியங்களை நோக்க,அனைத்தும் நாகரிக வளர்ச்சியடைந்த செல்வாக்கும் தலைமையும் உடைய மாந்தரையே அதிகமாக விளக்குகின்றன. ஒரு சில குறிப்புகளே கீழ்நிலை மாந்தரைப் பற்றி அமைகின்றன. எனவே இலைதழைகள், மரவுரி, தோல் போன்றவற்றை உடுத்தும் மக்கள் இருந்திருப்பினும் பாடல்பெறும் அளவிற்கு அவர்கள் சமுதாயத்தில் இடம் பெற்றிருக்கவில்லை என்பதையும் இங்கு உணர முடிகிறது.

இந்நிலையில் மூலப் பொருட்கள் ஒவ்வொன்றையும் கிடைக்கும் சான்றுகள் வழி நோக்கலாம்.

1. இலை தழைகள்

விவிலிய நூல் ஆதாம் ஏவாள் உடையாக இலை தழைகளைச் சுட்டும். பின்னரே இறைவன் அவனுக்குத் தோலுடை தருகின்றான்.[3] இவை புராணச் செய்தியாக அமையினும்,

3. தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், பக்கம்-91.

இரண்டு உடைகளையும் பற்றிய எண்ணம் விவிலிய நூற்காலத்திலேயே இருந்தது என்ற உண்மை விளக்கமாகின்றது.

இலக்கியங்களில் தழையுடையின் சிறப்பான தொழில் முறைகளைக் காணல் அரிது. எத்தழையை, எதனுடன் எவ்வாறு இணைத்தால் அதன் அழகு மிளிரும் என்ற கண்ணோட்டம் சிறப்பிடம் பெற்றிருந்ததை மட்டுமே உணர முடிகிறது.

கானல் ஞாழல் கவின் பெறு தழையள் (ஐங். 191)

வண்ண வொண்டழை நுடங்க ( ஐங். 73)

அம்பகை மடிவைக் குறுந்தொடிமகளிர் (அகம். 201)

என்ற ஒரு சில சான்றுகளை இவண் சுட்டலாம். சங்க இலக்கியமே இதனைப் பற்றிய மிகுதியான செய்திகளைத் தரப் பின்னைய இலக்கியங்கள் ஒருசில இடங்களில் குறிப்பிடுகின்றனவே தவிர, விளக்க முற்படவில்லை.

இன்று பல்வேறு வளர்ச்சி நிலைகளின் காரணமாக, தழையுடுத்திய இன்றும் உடுத்திக் கொண்டிருக்கின்ற பழங்குடிகளைப் பற்றிய எண்ணத்தை நாம் அறிய முடிகின்றது. சென்னை அருங்காட்சி யகத்தில் காணப்படும் தழையுடை இதன் விளக்கத்திற்குச் சிறந்ததொரு சான்று ஆகின்றது. மலைவாழ் மக்கள் மிகச் செம்மையாக அமைத்துள்ள இதன் தொழில் தன்மையும் தெரியவருகின்றது.

நாகரிக வளர்ச்சி, தழை உடையின் நீண்ட உழைப்பின்மை, பிறவகை நீண்ட நாள் உழைக்கும் துணிகள், அவற்றில் அமைந்துள்ள வண்ணக் கோலங்கள் போன்ற பலவகையான வேலைப்பாடுகள் முதலானவற்றின் காரணமாக இவ்வுடை நாட்டு மக்களிடையே தன் மதிப்பினை இழந்துவிட்டது என அறுதியிட்டுக் கூறலாம்.

2. மரனார்

ஆதி மனிதன் உடைகளுள் ஒன்று மரனாருடை. தழையுடை அளவிற்குச் சங்க இலக்கியத்தில் நாருடைகள் பற்றிய செய்திகள் சிறப்பிடம் பெறவில்லை. எனினும் இன்றுவரை உடை மூலப் பொருள்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது இது. தழையுடை, மரனாருடை இரண்டையும் நோக்க, தழையுடையினைப் பெண்களும் மரனாருடையினை ஆடவரும் முதலில் அப்படியே ஏற்றுக்

கொண்டனர் என்பதும், பின்னர் மரனாருடையினைச் செப்பம் செய்து பெண்டிரும் உடுத்தினர் என்பதும் இலக்கியத்தின் வழி புலனாகவல்லது. இதற்கு நாரினும் இயன்றன நார்நூல் வெண்டு இல் எனப்பெருங்கதை இயம்பும் நிலையினைச் சான்றாகச் சுட்டலாம்.

இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்ட நார்ப் பட்டுகள் பெரு வாரியான அளவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டது எனும் பெரிப் புளூஸ் உரை இதனை உறுதிப்படுத்தக் காணலாம்.[4] இதனை எவ்வாறு செப்பம் செய்தனர் என்பதை இலக்கியத்திலின்றோ பிற வரலாற்று மூலங்களினின்றோ அறிய இயலவில்லை.

### 3. தோல்

விலங்குகளின் தோலினை ஆதிமனிதன் உடுத்தினான் என்பதை அறிஞர் பலர் ஏற்றுக் கொண்டுள்ளனர். குளிர்ப்பகுதி மக்களுக்கு இது அதிகமாகப் பயன்பட்டிருக்கலாம். நியாண்டர் தால் மனிதர்கள் கைக்கொண்ட கருவிகளைப் பார்க்கும்போது அவர்கள் தோல்ஆடையைத் தான் பயன்படுத்தி இருக்க வேண்டும் என்பர்.[5] தொடக்கத்திலேயே எஸ்கிமோ மக்களும், கனடாவின் காரிபோ மலைவாசிகளும் பதப்படுத்திய துண்டு களைத் தற்கால அமைப்பினைப் போன்று ஒன்றுடன் ஒன்றாக வேண்டிய வண்ணம் இணைத்துப் பயன்படுத்தினர் என்பர்.[6] இத்தகைய தோல் ஆடையின் செல்வாக்கு, தமிழ் இலக்கியங் களில் காணயியலாத ஒன்று. எனவே இதனை அமைத்த விதமும் புலனாகவில்லை.

### 4. மயிர்

மிருகங்களின் தோல்மீதுள்ள அடர்ந்த மயிற்றினைப் பக்கு வப்படுத்தி ஆடைக்குப் பயன்படுத்தும் நிலை உலகில் பரவலாகக் காணப்படும் ஒன்று. தோல் போன்று இதுவும் குளிரினின்றும்

---

4. பெரிப்புளூஸ் (கி.பி. 50-80) - வி. எஸ். வி. ராகவன், பக்கம்-20.
5. தமிழியல், தொகுதி-6, தமிழ்இலக்கியத்தில் ஆ டைவகைகள் அ. மீரா முகைதீன், பக்கம்-91.
6. தமிழியல், தொகுதி-6, தமிழ்இலக்கியத்தில் ஆடைவகைகள், அ. மீரா முகைதீன், பக்கம்-91.

பாதுகாத்துக்கொள்ளவே மக்களிடம் செல்வாக்குப் பெற்றது. தோலாடைகளின் வெறுக்கத்தக்க தோற்றம், சரியான அளவில் உடுத்த முடியாமை, அதிகக் கனம் இவற்றின் காரணமாகத் தன் விருப்பிற்கேற்ப மயிரினைக் கொண்டு ஆடை உருவாக்கலைக் கண்டுபிடித்தான்[7] என்னும் கூற்று ஏற்றுக்கொள்ளத் தக்கதே. தமிழரிடம் மயிராடை பற்றிய ஒரு சில எண்ணங்கள் மட்டுமே காணக் கிடக்கின்றன. மயிரினும் இயன்றன எனப் பொது நிலையிலேயே குறிக்கப்பட்டு இருப்பினும், ஒரிரு இடங்களில் எலிமயிர் என்று சிறப்பித்தும் சொல்லப்படக் காண்கின்றோம். பிறவகை மயிர்கள் பற்றியோ, மயிராடையின் ஆக்கமுறை பற்றியோ அறியக் கூடவில்லை. ஆட்டின் மயிரினால் இன்று செய்தல் போன்று, கி.மு. 4000-த்திலேயே ஐரோப்பாவின் ஏரிப்பகுதி மக்கள் கம்பளி ஆடைகளைச் செய்தனர் என அறிகின்றோம்.[8] வடநாட்டார், மான் மயிரினைப் பயன்படுத்தினர் என்ற எண்ணமும் உண்டு.[9] காட்டு மிருகங்களின் மயிரிலிருந்து துணி நெய்யப்பட்டது என்னும் கருத்து, கலைக் களஞ்சியத்தில் அமைகிறது. குசுமாலின் பட்டையிலிருந்து இழைகள் செய்து மயிர்களோடு கலந்து போர்வை செய்தனர்[10] என, பட்டையுடன் மயிர் சேர்த்து ஆடை செய்த தன்மையினையும் காண்கின்றோம்.

எனவே ஒவ்வொரு நாடும் அவரவர்க்கு ஏற்ற, கிடைத்த விலங்குகளின் மயிரினை ஆடைக்குப் பயன்படுத்திற்று எனக் கொள்ளலாம்.

5. பருத்தி

உலகில் மிகப்பரந்த நிலையில் பயன்படுத்தப்பட்ட, படும் சிறப்பு இதற்குண்டு. பருத்திக்கும் இந்தியாவிற்குமுரிய

---

7. Animal Pelts were too cumbersome, of ungainly proportions and often too heavy, so man resorted to weaving threads made from the hair of sheep and similar animals to obtain the necessary warm covering."

   - Fundamantals of Dress, Marietta Kettunen, page-148.

8. தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீரா முகைதீன், பக்கம்-92.

9. தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீராமுகைதீன், பக்கம்-98.

10. தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீரா முகைதீன், பக்கம்-97.

தொடர்பு தொன்மையானது; முதன்மையானது. சிந்துவெளி நாகரிகத்திலேயே பருத்தி பற்றிய எண்ணங்கள் காணக் கிடக்கின்றன. மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட எண்ணற்ற நூற்கதிர்த் திருகுகள் இம்மக்களில் ஏழையர் செல்வந்தர் என்ற வேறுபாடின்றி நூற்கும் தொழிலில் ஈடுபட்டிருந்ததைத் தெரிவிக்கின்றன[11] என்பர். பிறநாட்டார் எண்ணங்களும், தொல் பொருள் ஆய்வுகளும் பருத்தி இந்தியாவிற்குரியது என்பதை உறுதிப்படுத்துகின்றன.[12] உலகில் மற்ற நாடுகள் நாகரிகம் அடையும் முன்னரே இந்தியர் பருத்தியை விளைவித்து நூல்

11. தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீரா முகைதீன், பக்கம்-95.

12. India is the oldest known cotton-producing country. For 30 Centuries the natives cultivated the plant and its fibres were spun and manufactured into various cotton stuffs-from the filmiest gossamers to the coarsest and largest wearing varieties. As early as 1000 B.C., regulations appeared in the laws of Manu, restricting the amount of sizing to be used in the manufacture of cotton yarns, which is an indication that the industry was well developed by that time.

- Fundamentals of Dress, Marietta Kettunen, page-147.

India is generally recognised as the craddle of Cotton Industry.

It may be noted that from 1500 B. C., to about the beginning of the sixteenth century, India was the centre of Cotton Industry and the cloth which was woven in a rather crude, and primitive manner was of exceptional fineness and qualiy.

- Mathews Textile Fibers - Ed. Herbert R. Manersberger. Cotton: History Growth and statistics - R. F. Nickerson.

For cotton as far as we know an Indian invention and it occurs without doubt about 2300 B.C., at Mohenjo Daro in Sindh. It was also exported from there.

- A History of Indian Dress, Charles Fabri.

In India atleast 3000 years ago men and women helped by their children cultivated cotton plants and turned the flufty fibers into garments. Gradually the use of cotton spread throughout the ancient world of the Far East and Near East and eventually came Europe.

- Clothes and the Man - Sydney D. Barney, page-119.

In the matter of dress material India is believed to have given to the world cotton and cotton goods.

- Selected papers - Sunit Kumar Chatterji, Vol.I, page-133

நூற்று ஆடை நெய்யக் கற்றுக்கொண்டனர் எனப் பெரிப்புளூஸ் உணர்த்தும். பருத்தியைச் சீனர்கள் நீண்டகாலம் அதன் பயனுணராது அழகுச் செடியாகவே வளர்த்தனர் என்கின்றது கலைக் களஞ்சியம்.

இந்தியருடன் பழந்தொடர்பு கொண்டிருந்த பருத்தி அஞ்ஞான்றே தமிழராலும் பயன்படுத்தப் பட்டது. தமிழின் முதல் இலக்கியமான சங்க இலக்கியத்திலேயே இவ்வாடையின் சிறப்புப் பற்றிய பல எண்ணங்கள் நவிலப்பட்டுள்ளன. பருத்தியைக் குறிக்கப் பஞ்சு, நூல் என்ற பிற சொற்களையும் வழங்கினர். நூல் என்றாலே 'பருத்தியாடை'யைச் சுட்டுவதைக் கொண்டும் இதன் பெருமையை உணரலாம்.

6. பட்டு

சங்க இலக்கியத்தில் ஒரு சில இடங்களிலும் பின்னெழுந்த இலக்கியங்களில் அதிகமான பயிற்சியுடனும் உயரிய நிலையில் உணர்த்தப்பட்ட பட்டு சீனத்திற்குரியது என்பது அறிஞர் கருத்தாகும்.[13] பட்டின் தோற்றம் கி. மு. 2640 என்பதை வரலாறு உணர்த்துகின்றது. இப்பட்டின் இரகசியம் பல வருடங்களாகச் சீனர்களால் பாதுகாக்கப்பட்டு வந்தது. பிற நாடுகளுக்குப் பரவிய இதன் வரலாறு குறித்துப் பல கருத்துகள் நிலவுகின்றன. அவையாவன, சப்பானியர் இரண்டு சீன மகளிரைக் கடத்திச்

---

13. The manufacture of silk fabrics dates back to 2640 B.C., according to Chinese myths relative to the subject.

- Fundamentals of Dress, Marietta Kettunen, page-145.

Chinese myths date the culture of silk back to 2640 B.C., when the empress Si-Ling-Chi learned not only how to rear the caterpillars but what is more important how to unwind the filament that formed their cocoons.

- Mathews Textile Fibers - Ed: Herbert R. Mauersberger, The Silk Fibers and Yarns - Charles J. Brick, page-102.

Silk cloth though woven in Tamilagam during the Sangam age appears to have been originally introduced from China that accounts for the name (Sinam) to denote silk.

- A Social History of the Tamils - K. K. Pillai, part-I, page-203.

சீனா தான் உலகில் பட்டு உற்பத்தியில் முதலிடம் வகித்திருந்தது. உலகிலேயே பட்டு முதல்முதல் உற்பத்தி செய்யப்

சென்று இக்கலையைக் கற்றனர்.[14] இந்தியனை மணந்த பெண் தன் கூந்தலில் பட்டுப் பூச்சியைக் கடத்தி, இக்கலையைப் பரப்பினாள்.[15] இரண்டு துறவிகள் மூங்கிற் குழாய்களில் அடைத்து இதனைப் பரப்பினர்[16] போன்றன.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் சங்க காலத்திலேயே பட்டு பற்றிய எண்ணம் இருப்பினும் சீனப்பட்டுக்குத் தனிமதிப்பு இருந்து வந்துள்ளது என்பதைச் சான்றுகள் நிறுவுகின்றன.[17] இதனை 'இப்பட்டுச் சீனம்' என்று சிறப்பு கருதிக் கூறும் கூற்றால் அறியலாம் (நன். விருத். 290). எனினும் தமிழகத்திலும் சிறப்பாகப் பட்டுத்தொழில் நடைபெற்று வந்ததைத் தொல்பொருள் ஆய்வுகள் புலப்படுத்துகின்றன.[18] மூலப் பொருளான,

---

பட்டது சீனாவில் தான் பதனிடப்படாத பட்டு (Raw silk) அயல் நாடுகளுக்குக் கால்நடையாகவே கொண்டு வரப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டது.
- பெரிப்புளூஸ், பக்கம்-290.

14. ஏறக்குறைய கி.மு. 2700-இல் சீன அரசியான சிலிங்கி பட்டிழையைக் கண்டுபிடித்துத் தன் கணவனுக்குப் பட்டாடை நெய்து தந்தாள். தன் நாட்டு ஏழைகட்குச் சொல்லித் தந்த தன் பலன் பட்டின் தேவதையாக அவள் போற்றப்படுகிறாள். மிக ரகசியமாகப் போற்றப்பட்டு வந்த அக்கலையை, சப்பானியர் கி.மு. 289 அளவில் இரண்டு சீன மகளிரைக் கடத்திச் சென்று அதனைக் கற்றனர்.
- தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடைவகைகள், அ. மீரா முகைதீன், பக்கம்-92.

15. The Secret of silk culture was a mystery to them until a Chinese princess married an Indian prince of Khotam. Before leaving Chine to embark on her wedding journey the deftly tucked some silk worm eggs into her elaborately dressed hair and so was able to pass the vigilant customs officer undetected.
- Fundamentals of Dress, Marietta Kettunen, page-145.

16. It is said that the secret of silk manufacture did not become known in Byzantium until two persian monks approached the Emperor Justinian.... p. 146.

17. சீனப்பட்டுதான் பட்டில் உயர்ந்ததாகும்', 'பட்டுத் துணிகள் என்பவை சீனப் பட்டுக்களையே குறிப்பிடுகின்றன.'
- பெரிப்புளூஸ், பக்கம்-239, 243.

18. திருக்காம்பூரில் பட்டு நூல் கட்டு ஒன்றும் கண்டுபிடிக்கப் பட்டது. இது கி.பி. 4 அல்லது 5-ஆம் நூற்றாண்டினதாக இருக்கவேண்டும்.
- தொல்பொருளாய்வும் தமிழர் பண்பாடும், சா. குருமூர்த்தி, பக். 231.

பட்டினை எவ்வாறு பெற்றனர் என்பதற்றிய எவ்வகைச் சான்றும் இல்லை. மேலும் இலக்கியங்கள் பட்டினைப் பற்றிய பல கருத்துக்களைத் தரினும், பருத்தித் தொழில் போன்று விளக்கமாக இத்தொழில் பற்றிய அறிவைத் தரவில்லை.

இதனால் பட்டு நெசவு குறிப்பிட்ட ஒரு சில இடங்களிலேயே ஆரம்ப காலத்தில் நடைபெற்றிருந்திருக்க வேண்டும் என ஊகிக்கலாம். இன்றும் பட்டு நெசவு அருகியிருக்க, பருத்தி நெசவு அதிகமாகக் காணப்படல் பட்டு, பருத்தியை விடவும் கிடைத்தற்கு அரியது என்பதனால் இருக்கலாம்,

ஆடையின் மூலப் பொருட்கள் அனைத்தையும் நோக்க, அவை பற்றிய உணர்வுகள் இருப்பினும், ஆடையாக உருவாக்கப் பட்டமை பற்றிய தெளிவினை நாம் அறிய முடியவில்லை. தமிழர் உருவாக்கினர் என்ற உணர்வு சில இடங்களில் அமையினும், போதிய விளக்கம் கொண்டு, அவர்களின் தொழில் அறிவினை நாம்பெற இயலவில்லை. இந்தியருக்கே உரியது என்ற முறையில், பருத்தி பற்றிய எண்ணங்களே பரவலாகக் காணப் பட்டு, பருத்தியாடையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த தொழிலாளர் தமிழர் என்பதைப் புலப்படுத்துகின்றது.

ஆடைத் தொழிலின் முதல் நிலையாக மூலப்பொருளைத் தொகுத்தல் அமைய அடுத்த நிலையினை 1. உருவாக்கல் 2. மிளிரச்செய்தல் என இருபெரும் பிரிவுகளாகப் பகுத்து நோக்கலாம்.

## 1. உருவாக்கல்

பருத்தி போன்ற மூலப் பொருள்கள் முதலில் நூலாகி இறுதியில் துணி என்ற நிலையில் மாற்றம் பெறுவதனை உருவாக்கல் எனலாம். இம்மாற்றத்திற்கு உறு துணையாவது நெசவு.

செய்யும் தொழிலெல்லாம் சீர் தூக்கின்
நெய்யும் தொழிற்கு நிகராகா

---

மிகப் பழங்காலத்திலிருந்தே உறையூர் பருத்தி நெசவுக்கும் பட்டு நெசவுக்கும் முக்கியத்துவம் வாய்ந்த நகரமாகத் திகழ்ந்து வந்து இருக்கின்றது.

—தொல்லியல் ஆய்வுகள், டாக்டர் கோ. வி. இராமன், பக்கம். 43.

என்பது நெசவின் சீர்மையைப் பரப்பும் பாடல். தனிச் சிறப்புடையதொரு தொழில் எனினும், இதன் தோற்றம் இன்னதென்று வரையறுத்துச் சொல்ல இயலவில்லை. 'கூடை பின்னுதலில் இருந்து நெய்யும் தொழில் தெரிந்தது. அதோடு நூற்றலுக்கு வேண்டிய கச்சாப் பொருட்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இவை இரண்டும் தறியில் துணியை நெய்வதற்குரிய ஆதாரமாயின' என நெசவுத் தொழிலின் தோற்றம் பற்றிய எண்ணத்தைக் கலைக் களஞ்சியம் நவிலும். பறவைகள் கூடுகட்டும் தன்மையிலிருந்து மாந்தர் நெய்யும் உணர்வினைப் பெற்றனர் என்ற கருத்தும் உண்டு.[19] இத்துடன் தென்னை மரத்தின் பன்னாடை, சிலந்தியின் வலை, அல்லது ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து காட்சி தரும் பொருட்களும் இவ்வுணர்வினை மானிடருக்கு அளித்திருக்க வாய்ப்புண்டு.

இவ்வுணர்வு பெற்ற மனிதன் பின்னர் இவ்வுணர்வுக்கு வடிவம் கொடுக்க முற்பட்டதே நெசவுக் கருவிகளின் கண்டுபிடிப்பாகும். இழைகளைப் பிணைக்கக் கதிரைக் கண்டுபிடிக்கின்றான். சிறு நூலாக இருந்தபோது கை விரலையும் பின்னர் நீளமுள்ள நூலினைக் கம்பியிலும் இணைத்திருப்பர். இதுவே நூற்புக் கதிரின் தோற்றம் எனக் கருதலாம். அடுத்த நிலையில் நெசவுத்தறி உருவாக்கப்படுகின்றது. இதிலிருந்து படிப்படியாகப் பட்டறிவு கொண்டு முன்னேறுகின்றான். தன்னுடைய பணியினை எளிதாக்க, சிறப்பாக்கப் பல நெறி முறைகளைக் கையாளுகின்றான். இன்றைய பிரம்மாண்டமான ஆலைகள் இத்தகைய உணர்வின் படிப்படியான வளர்ச்சி நிலையேயாகும்.

மக்கள் கைத்தொழிலாக, குடிசைத் தொழிலாக இருந்த இத்தொழில் 19-ஆம் நூற்றாண்டில் அறிவியல் வளர்ச்சியினால் பெரும் ஆலைத்தொழிலாக மாறிற்று. இருப்பினும் கைத்தொழில் தன் சிறப்பினை இழக்கவில்லை என்பதனைக் கைத்தறியில் உருவாகும் காஞ்சிப் பட்டினைக் கொண்டு சுட்டலாம்.

---

19. Birds provided the inspiration to primitive man for wearing his clothing. By observing the intricate way in which birds interwinged twigs for nests, human beings may have seized upon the possibility of interwearing strands of grasses shreads of bark, dried animal intestines and the long hair of animals to make mats and garmants. Spinning grew out of the need to produce strand longer than the longest hair and grass fibers.

—Fundamantals of Dress, Marietta Kettunen, Paeg. 143.

அமெரிக்காவில் இன்று அணியப்படும் உடைகளில் 80, 90%, தொழிற்சாலைகளில் தயாரிக்கப்படுகின்றன. இந்திய நாட்டைப் பொறுத்தவரையில் மிகப்பெரிய குடிசைத்தொழில் கைத்தறியே. மொத்தப்பருத்தித் துணி உற்பத்தியில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்கைக் கைத்தறியே உற்பத்தி செய்கின்றது. இந்தியாவின் அனைத்துக் கிராமங்களிலும் தமிழ்நாடு உட்பட கைத்தறி உள்ளது. இதில் ஈடுபட்டுள்ளோரில் பெரும்பாலோர் பெண்கள். விவசாயத்திற்கு அடுத்தபடியாக மிகுதியான மக்களுக்குக் கைத்தறித் துணிதான் வேலைவாய்ப்பு அளிக்கின்றது என்பதும் குறிப்பிடத் தக்கது.

பட்டுடைகள் தமிழ்நாட்டில் காஞ்சி, ஆரணி, கும்பகோணம், தாராசுரம், சேலம், திருப்புவனம், பரமக்குடி ஆகிய இடங்களில் தயாராகின்றன. காஞ்சியில் காணப்படும் பட்டாடைகள் இரட்டை இழைப் பாவு ஊடையில் நெய்யப்படும் தனிச் சிறப்புப் பெறுகின்றன.

பருத்தியிழை 10, 20, 40, 60, 80, 100, 120 என எண் வரிசையில் அதன் மென்மை யியல்பிற்கு ஏற்ப நவிலப்படுகிறது. இவற்றுள் 120-ஆம் எண் நூல் மிகச் சிறப்பான மென்மையான ஆடையைத் தர்வல்லதாகும்.

நெசவுத் தொழிலுககு மூலப் பொருட்களை அதன் இயற்கை நிலையில் அவ்வாறே பயன்படுத்த இயலாது. தொழிலுக்கு வேண்டிய சில முன்னேற்பாடுகளைச் செய்தல் இவண் தேவைப் படுகின்றது. அவை பற்றிய விளக்கங்கள் வருமாறு.

தூய்மை செய்தல்

மூலப் பொருட்களில் காணப்படும் அழுக்கு, விதை இவற்றைப் போக்கி நூல் இழைக்கு ஏற்றவாறு அமைத்தலே பருத்தியினின்றும் நாம் பெறலாகும் தூய்மைப்படுத்தும் முறையாகும். சங்கப் பாக்களில் பஞ்சினைத் தூய்மை செய்யும் தன்மையைச் சிலபாடல்கள் சுட்டுகின்றன. வெள்ளிய முகிலினைக் காண்கின்ற கவிஞருக்குப் பஞ்சினை வில்லால் அடித்துத் தூய்மை செய்யுங்கால் மெல்லிய துகள்களாய்ப் பரந்து செல்லும் காட்சி தான் நினைவுக்கு வருகின்றது.

கார்தலை மணந்த பைம்புதற் புரவின்
வில்லெறி பஞ்சியின் வெண்கழை தவழும் (அகம். 133)

பெய்து புலம் திறந்த பொங்கல் வெண்மழை
எஃகுறு பஞ்சின் துய்ப்பட்டன்ன துவலை தூவல் கழியும்
(அகம். 217)

என்று அக்காட்சியைச் சித்திரிக்கின்றார். கடையப்படுகின்ற பஞ்சு, முகிலின் மென்மையான அசைவிற்குச் சிறப்பு ஒப்புமையாகின்றது. இன்றும் வெள்ளிய மேகத்தினைக் காணுங்கால், பஞ்சு பரந்து செல்லும் இயல்பு காட்சிக்கு வரல் இயற்கையே. நற்றிணையும் இதனை, 'வில்லெறி பஞ்சியின் மல்கு திரை' (299) என வில்லால் அடிபட்ட பஞ்சுக்கு, அலையை உவமிக்கக் காணலாம். அலையின் தோற்றம் ஈண்டு, அடிபட்டுப் பரவும் பஞ்சினுக்குச் சிறந்த ஒப்புமையாகின்றது.

இவ்வுவமைகள் பஞ்சு அடிக்கும் பாங்கினை அன்றி கருவிகளையும் பெயரளவில் நமக்கு உணர்த்துகின்றன. வில், எஃகு என்ற கருவிகளால் பஞ்சு அடித்தனர் என்று அறிகின்றோம். இன்றும் பஞ்சு அடிக்கும் கருவியை வில் என்று குறிப்பது வழக்கம். இக் கருவி இரும்பினால் செய்யப்பட்டமை காரணமாக எஃகு என்று அழைக்கப்பட்டிருத்தலும் கூடும். இரண்டும் ஒன்றையே குறிப்பனவா அன்றித் தனித்தனிக் கருவியா என்பதனை அறிய இயலவில்லை. இக்கருவியின் அமைப்பு முறையினை அறியவரின் இன்றைய நிலையோடு ஒப்பிட்டு நோக்க இயலும்.

**நூற்றல்**

தூய்மைப்படுத்தப்பட்ட பொருளை நூலாக நூற்பது நூற்றலாகும். இவ்விழை இழைத்தலும் சங்கச் சான்றோர் நாவிலேயே தோற்றம் பெறக் காணலாம்.

பருத்திப் பெண்டின் பனுவலை (நூல்) 'நெருப்புச் சினம் தனிந்த நிணத்திற்கு' உவமிப்பர் புலவர். இவ்வொப்புமையாக்கத்திற்கு அடிப்படை இதன் நிறமே. நெருப்பில்வெந்த ஊன், பருத்திப் பனுவலின் நிறத்தில் இருத்தல் கண்கூடு. மேலும் இப் பெண்டிரின் நுண்மையான நூற்கும் திறனை, நுணங்கு நுண் பனுவல் (நற். 353) என்ற பா அடியில் நுண்மையாக நவில்வார் மற்றொரு கவிஞர்.

இறையனார் களவியல் உரையில் இந்நூற்புத் தன்மை, சிறப்பாக இயம்பப்படுகிறது.

நுண்ணியப் பலவாயப்பஞ்சின் நுனிகளாற் கைவன்
மகடூஉத் தனது
செயற்கை நலம் தோன்ற ஓரிழைப் படுத்தலாம்
உலகத்து நூனூற்றல் என்பது (பக். 14)

என்பதினின்றும் மகளிர்க்கும், நூற்புத் தொழிலுக்குமுரிய நெருங்கிய தொடர்பும் தெளிவாகின்றது.

பல் நிலைகளிலும் பொருந்தும் இரண்டை ஒப்புவித்து விளக்கல் அறிஞர் உத்திகளில் ஒன்று. கவியெனக் கிடந்ததாகக் கோதாவரியைச் சுட்டிக் கவிக்கும் நதிக்கும் ஒப்புமை காட்டுவான் கவியிற் சிறந்த கம்பன். அறிவு தரும் நூலுக்கும் ஆடை தரும் நூலுக்கும் உள்ள நெருக்கத்தை தம் நூலில் நவில்கின்றார் நன்னூலார்.

பஞ்சிதன் நூலாப் பனுவலிழையாச்
செஞ்சொற் புலவனே சேயிழையா-எஞ்சாத
கையே வாயாகக் கதிரே மதியாக
மையிலா நூன் முடியுமாறு (நூற்பா-24)

எனக் காட்டுவார். சொல்-பஞ்சு; செய்யுள்-இழை; புலவன்-நூற்கும் பெண்; வாய்-கை; மதி-கதிர் என்ற நிலையில் இரண்டு நூற்களும் ஒன்றுபடுகின்றன. நூற்புத் தொழிலின் முழுநிலையும் ஓரளவு ஈண்டு வெளிப்படுகின்றது. மரபாகத் தொடர்ந்து வரும் நூற்புத் தொழிலில், நூற்புக் கருவியை இன்றும் கதிர் என்றே அழைக்கின்றனர்; குழல் எனலும் உண்டு.

இவ்வாறு அனைத்து இடங்களிலும் பருத்தி நூல் பற்றிய எண்ணத்தையே கண்ட நாம் கல்லாடம் காட்டும் ஓரே பாடல் மூலம் பட்டு நூல் பற்றிய உணர்வையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

பொறியுடலுழையே யெறிபுன மணியே
பாசிழைப் பட்டு நூற் கழிபரப்பிய
கிளைவாய்க் கிடைத்த வளைவாய்க் கிளியே (81:35-7)

'தினை அரிந்து விடப்பட்ட புனத்தில்' உள்ள மணிகளே பச்சை நிறமுடைய பட்டுநூலைக் கழியின்கண் பரப்பி வைத்தாற்போன்று மூங்கிலின்கண் இருக்கின்ற வளைந்த

வாயுடைய கிளிகளே, என்னும் இவ்வருணனையில் மூங்கிலில் இருக்கும் கிளிகளுக்குக் கழியில் பரப்பிய பச்சைப்பட்டு நூல் உவமையாக அமைகின்றது.

பட்டு நெசவு பற்றிய பிற எண்ணங்கள் தெளிவு படவில்லை யாயினும் கழியில் பட்டு நூலை நூற்கும் தொழில் தன்மை யினைத் தெளிவுபடுத்தும் இக்காட்சி பட்டு நூல் நெசவு பற்றிய அன்றைய மாந்தர் உணர்வை விளக்குகின்ற தன்மை ஈண்டு புலனாகின்றது.

**பா**

நூற்புக்கருவி பலவற்றில் நூற்ற நூலைப் பின்னர் பெரிய ராட்டினத்தில் தகுந்த முறையில் நூற்பர்; அதனை எடுத்து நீளமாக விரிப்பர்; பசையிட்டுத் தோய்த்து நூலுக்கு மெருகு ஏற்றுவர். இவ்வாறு நெசவுக்கு ஏற்றபடி அமைத்தலே பா ஆகும். இதனை 'பாவாற்றுதல்' என்றும் வழங்குவர்.

பா என்னும் சொல், பாவுதல் என்னும் பொருளில் பரந்து காணப்படும் தன்மையை விளக்கும். இலக்கியச் சான்றுகளில் இந்நிலையே உணர்த்தப்படுகின்றது. சங்கப் புலவர்கள் உவமையின் வழி, பா பரந்து கிடக்கும் தன்மையை விளக்குவர்.

துகிலாய்ச் செய்கைப் பாவிரித்தன்ன
வெயில்விர்பு நுடங்கும் வெவ்வெங்களரி (அகம்-293)

ஈண்டு, வெயிலின் விரிந்த பரப்பு, துகிலைச் செய்யும் தொழில் தன்மையுடைய பா விரிந்து கிடக்கும் தன்மையைப் புலப்படுத்தி அமைகின்றது.

**நெய்தல்**

துணி உருவாக்கலின் இறுதி நிலையே நெய்தலாகும். ஆற்றிய பாவினைத் தறியின் பல்வேறு பகுதிகளின் துணையினாலும் ஆடையாக உருவாக்குதலே நெய்தலாகும். இதனைத் தமிழர் சிலர் தறி நெய்தல் என்றும் வழங்குகின்றனர். இந்நெய்யும் தன்மையில், தறி நெசவு, விரல்நெசவு, மேல்நோக்கி நெசவு, கீழ்நோக்கி நெசவு எனப் பலவகையுள்ளன என்பர்.[20] தமிழகத்தில் இவ்வேறுபாடுகள் இருக்கின்றதா என்பது தெரியவில்லை. தறியின் பகுதிகளாக அச்சு மரம், படைமரம், விழுது கம்பு, குத்துக்கம்பி,

20. தமிழியல்-தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடைவகைகள். பக்கம்-93.

கால்பலகை,ஓடம், ஊடை குழல், பாவு போன்றன அமைகின்றன. இவற்றுள் ஊடை குழலும், ஓடமும் நெய்யும்போது இணைந்து பாவின் குறுக்காகச் செல்லும் தன்மையன. (பாவு குழல் என்ற ஒன்றுமுண்டு. பாவுக்குரிய நூல் நூற்கும் சூழல் இது).

இவற்றுள் குழலும், ஓடமும் இணைந்து செல்லும் நிலையே இலக்கியப் பயிற்சி பெறக் காண்கின்றோம். பெருங்கதை, யூகியும், உருமண்ணுவாவும் 'பாவிடு குழலின் ஆயிடைத்திரிதர' என அங்கு மிங்கும் திரிதருதலைச் சுட்டுகின்றது. சிந்தாமணியில்,

நின்னை அமராதார்
நெய்யு நுண்ணூனாழிகை யினிரம்பா நின்று
சுழல்வோரே (சீவக.3019)

என்ற பாடலடிக்கு, 'நெய்தற் றொழிலையுடைய தார் கிடக்கும் நாடாப்போல மறுகுவர்' என்ற உ.வே.சா.வின் கருத்து, குழலுடன் இணைந்த நூலைக் குறிப்பிட்டு, அதன் ஓரிடத்தும் நில்லாத் தன்மையைப் புலப்படுத்துகின்றது. நாடா என்ற இதன் இன்னொரு சொல்லாட்சியும் இதன் தெளிவாகின்றது.

கம்பன் சில இடங்களில் இக்காட்சியைச் சித்திரிக்கின்றான்.

ஐயனும் இளவலும் அணிநில மகள் தன்
செய் தவம் உடைமைகள் தெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார் (309)

என இராமனும் இலக்குவனும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமற் பூமியிலே சுற்றிவரும் தன்மை இயம்பப் படுகிறது அடுத்து,

அழலும் கண்களிறு அணியொடும் துளிபடும்; கவி
கழலும் பல்படைத் தொகுதியும்; அன்னதே சுடர்த்தேர்
சழலும் சோரி நீர் ஆற்றொடும் கட்கிடைக் கலக்கும்
குழலும் நூலும் போன்ம்; அனுமனும் தானும் அக்குமரன்
(7682)

அனுமனும், இலக்குவனும் போர்செய்யும் நிலை இது.

ஒன்றை ஒன்று நீங்காது இணைத்து செல்லும் தன்மையினையும், அங்கு மிங்கும் சென்று கொண்டிருக்கும் தன்மையினையும் சுட்டி, பாவு, ஓடம் இரண்டின் நெய்தல் தொழிலை விளக்கமுற அமைக்கின்றமையை இவண் காணலாம். நளவெண்பாவும் இவ்வினைபயினைப் பாவாடு குழல் என (76) உவமிக்கும்.

தமிழரின் நெய்யும் இயல்பினைக் காட்டும் கம்பன், கலிங்கக் கம்மியரின் நெய்தலின் வேகத்தையும் சிறப்பித்துப் பேசக் காணலாம். இலக்குவன் அரக்கர் சேனையை விரைந்து நூறும் நிலையினை,

கால் என கடு என கலிங்கக் கம்மியர் நூல்என (9120)

விரைந்தான் என்பர்.

இவ்வாறு படிப்படியாக உருவாகிய துணிகளை, துண்டு படுத்திப் பயன்படுத்தினர். அறுவை, கூறை, துண்டு போன்ற சொற்களின் தோற்றம் துண்டு படுத்தலால் அமைந்ததைச் சொல்லாய்வில் கண்டோம்.

இத்தகைய தன்மையில் தோற்றம்பெற்ற ஆடைகளின் மென்மையும் மேன்மையும் புலவர்தம் செஞ்சொற்களால் நயமுற எடுத்தியம்பப் படுகின்றன.

கொன்றை மென்சினை பனிதவழ்பவை போல்
பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க (பெரும். 328-29)

என இடையில் அணிந்த ஆடை அதன் மென்மை காரணமாக, கொன்றை மரத்தின் மென்மையான கொம்பில் தவழும் பனியினை ஒத்துக் காணப்படும் என்றுரைக்கின்றார் இக்கவிஞர்.

இழை மருங்கறியா நுழைநூற் கலிங்கம் (மலை.52)

என்னும் தன்மையில், இழைபோன விடத்தை ஊடுருவிப் பார்ப்பினும் புலனாகாத் தன்மையென உரைத்து, அதன் மென்மையியம்பப் படுதலையும் காணமுடிகிறது. காம்பு சொலித்தன்ன அறுவை (சிறு. 235) என்பதும் மென்மைக்குரிய சான்றேயாகும்.

ஆடையின் சிறப்பு, வினைஞர்களின் கைத்திறனுக்குரிய சான்றாகவும் விளங்குகிறது. சோணாடு நற்றுகிலினை உற்பத்தி செய்வதில் தலைசிறந்து விளங்கியது என்பதை இலக்கியச் சான்று தெளிவுபடுத்துகின்றது.

மூவருலாவில் அமையும்,

... ... ... நேரிய நின்
வெற்பில் வயிரமும் வேந்த நின் சோணாட்டுப்
பொற்பின் மலிவன பூந்துகிலும் (1.666-68)

என்னும் அடிகள் சோழ நாட்டில் மலிந்து காணப்பட்ட துகிலின் சிறப்பினை இயம்புகின்றது.

மேலும் 'உறையூர் நல்ல நேர்த்தியான பருத்தி ஆடை நெசவிற்கும் வியாபாரத்திற்கும் பெயர் பெற்றது. அங்கே தயாரான ஆடைகள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் பட்டன' என்னும் தொல்லியல் ஆய்வுகள் என்ற நூலில் கோ.வி. இராமன் (பக்கம். 24) எழுதிச் செல்லும் எண்ணமும் மேற்கண்ட கருத்துக்கு அரணாகின்றது. இத்துடன் இந்தியாவின் பிறபகுதி மாந்தராலும் வெளிநாட்டார் நவிலும் தன்மையாலும் நம் நாட்டு ஆடைகளின் உயர்வு வெளிப்படக் காணலாம்.

'ஆர்கரு துணிகள் - இது அக்காலத்திலேயே உறையூர்ச் சேலைகளுக்குப் புகழ்பெற்ற இடம் ஆகும். சேலை மிக மெல்லிய நூலால் நெய்யப்பட்டு இருக்கும். ஒரு புடவையை ஒரு தேங்காய் மூடியில் வைத்து அடக்கி, அயல் நாட்டு அரசிக்கு அனுப்பிய வரலாறும் உண்டு. ரோமப் பேரரசில் உறையூர் ஆடைகளை, ரோம அரசர்களும் பெண்களும் விரும்பி வாங்கினர் என்று வரலாறு கூறுகிறது' என்ற கூற்றினையும்,[21] 'சென்னேரா என்பவர் தாம் வரைந்த வழிச்செலவு வரலாற்றில் எழுபத் தெட்டு முழ நீளமுடையவையாயிருந்தும் உள்ளங்கைகளில் அடக்கிவிடும் அத்துணை மெல்லிய விலையேறிய ஆடைகள் நெய்தற்கும் அதற்குரியபருத்தியைச் செப்பம்செய்தற்கும் தமிழர் கையாண்ட முறையைப் பற்றிப் பரக்கக் கூறியுள்ளார்' என்ற கருத்தையும்[22] சான்றுகளாகப் போற்றலாம்.

## 2. மினிரவைத்தல்

ஆடை உருவாக்கத்திற்கு அடுத்த நிலை ஆடையை மினிர வைத்தலாகும். 'தங்கமுருக்கித் தழல் குறைத்துத் தேனாக்கி எங்கும் பரப்பிய தோரிங்கிதமோ? வான்வெளியைச் சோதி கவர்ந்து சுடர் மயமாம் விந்தையினை ஓதிப் புகழ்வார் உவமை யொன்று காண்பாரோ? கண்ணை யினிதென்றுரைப்பார்; கண்ணுக்குக் கண்ணாகி விண்ணை அளக்கு மொளி மேம்படு மோரின்பமன்றோ? நல்லொளிக்கு வேறு பொருள் ஞாலமிசை யொப்புளதோ? புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பபாக்கி

21. பெரிப்புளூஸ், பக்கம்-264.
22. மேனாட்டறிஞர் கண்ட தமிழகம் — வரதவீரப்பன், பக்கம்-59.

மண்ணைத் தெளிவாக்கி நீரில் மலர்ச்சி தந்து விண்ணை வெளியாக்கி விந்தை செயுஞ் சோதியினைக் காலைப் பொழுதினிலே கண் விழித்து நான் தொழுதேன்'. தமிழர் எதிலும் எவ்விடத்திலும் எக்காலையிலும் காணக்கிடைக்கும் அழகினைக் கண்டு களிப்பதில் இணையற்றவர் என்பதற்குச் சான்றாக அமைவது பாரதியின் இப்பாடல்.

இவ்வாறு எதிலும் அழகைக் காணும், காணவிழையும் மனித மனம் தன்னுடன் மிக நெருங்கிய ஆடையிலும் காண எண்ணியதே ஆடையினைப் பல்வகையிலும் வனப்பூட்டுதலுக்கு அடிப்படையாகும். இந்நிலையில் ஆடையின் ஒவ்வொரு பகுதியும் இவர்தம் கை வண்ணத்தில் அழகுபெறத் தொடங்கியது. இவற்றை வண்ணமூட்டல், பூவேலைப்பாடுகள் செய்தல், கரையழகு செய்தல், மணமூட்டல், பளபளப்பாக்கல் போன்ற பல வகைகளாகக் காணலாம்.

1. வண்ணமூட்டல்

இயற்கை மானுடனுக்கு அளித்த பல செல்வங்களுள் நிறம் பற்றிய உணர்வும் ஒன்றாகும். பச்சைநிறக் கம்பளத்தைப் போர்த்தியது போன்று வானளாவ உயர்ந்து நிற்கும் மலையும், அலைஅலையாகப் பரந்து செல்லும் நீனிற மேகமும், பலநிறக் கலவையால் மனதைக் கொள்ளை கொள்ளும் வானவில்லும், கொஞ்சும் எழில்படைத்த பறவைகளின் மென்மைமிகு நிறக் கூட்டங்களும் நிறம் பற்றிய உணர்வை மனிதனுக்கு ஊட்டியதில் முன்னிற்பன. இயற்கையின் எழிற் காட்சிகளில் இதயத்தைப் பறிகொடுத்த மனிதன் தன் படைப்பிலும் அவற்றைக் கண்டு களிக்க எண்ணிய விருப்பின் விளைவே வண்ண உருவாக்கத்தின் வெளிப்பாடு எனலாம். ஆடைகளுக்கும் நிறமூட்டி, கவர்ச்சியும் அழகும் மிகச் செய்கின்றான். சங்கப் பாக்களிலேயே இத்தகைய வண்ண ஆடைகளைக் கண்டு வியக்கின்றோம். இவண் குன்றியேய்க்கும் உடுக்கை, பொன்புனையுடுக்கை, நீலக்கச்சை, கல்தோய்த்த உடுக்கை, கருந்துவராடை என்ற நிலையில் சிவப்பு, மஞ்சள், நீலம், காவி, கறுப்பு போன்ற பல நிறங்களைக் காண்கின்றோம். கால்வளர்ச்சியில் கடுமையான நிறம் தவிர மென்மையான நிறங்களையும் ஊட்டினர்.

பெருங்கதையில் மகளிர் நீராட்டுப் பற்றிக் கூறுமிடத்துக் கொங்குவேளிர்,

அவிழ்ந்த கூந்தலர் நெகிழ்ந்த வாடையர்
... ... ... ...
இனையா விருப்பிற் றம் விளையாட்டு முனைஇ
கயம் பாடவிய புறங்கரை போந்த பின் (1.42:193-98)

அவர்கள் தங்களை அணிசெய்து கொள்கின்ற தன்மையை உரைக்கின்றார்.

பைங்கூற் பாதிரிப் போது பிரித்தன்ன
அங்கோசிகமும் வங்கச் சாதரும்
கொங்கார் கோங்கின் கொய்ம்மலரன்ன
பைங்கேழ்க் கலிங்கமும் பட்டுத் தூசும்
நீலமு மரத்தமும் வாலிழை வட்டமும்
கோலமொடு புணர்ந்த வேறு வேறியற்கை
நூலினு முலண்டினும் நாரினும் இயன்றன
யாவை யாவை யவையவை மற்றவை
மேவன மேவன காமுற அணிந்து (1:42:204-12)

என்று விளக்குகின்றார். பல்வண்ண ஆடைகள் இங்கே உணர்த்தப் படக் காண்கின்றோம்.

கம்பன், காடேகுவான் இராமன் என்பதறிந்த நகர மகளிர் செயலாக,

பல்நிறத் துகிலினைப் பறித்து நீக்கி (1885)

சாதாரண ஆடையினை அணிந்தனர் என்பதனைக் காட்டுகின்றான். நிறமுடைய ஆடைகள் பற்றிய வண்ணத்துடன், இவை உயர்வான ஒன்றாகவும், இன்பத்தின் புலப்பாடாகவும் விளங்கியது என்பதும் இவண் தெளிவுபடுகின்றது.

வண்ணம் தோய்க்கும் இயல்பு புலப்படும் நிலையினையும் பெருங்கதை பேசுகின்றது.

வெண்ணூல் பூந்துகில் வண்ணம் கொளீஇ
நீலக் கட்டியும் மரகதத் தகவையும்
பாசிலைக் கட்டியும் பீதகப் பிண்டமும்
பிடித்துருக் கொளீஇக் கொடித் திரியோட்டிக்
கையமைத் தியற்றிய கலிங்கத் துணியினர் (3.1:95-100)

இதற்குரை எழுதும் கழக உரையாசிரியர், 'வெள்ளிய நூலாலியன்ற' அழகிய துகிலின்கண் வண்ணமூட்டி நீனிறக் கரையும்

மரகத நிற உடலும் பச்சிலைக் கரையும் பொன்னிற உடலும் பல்வேறு கோலமாகக்கொண்டு கொய்து கூட்டிப் பிடித்து உருவமைத்து ஊடே ஊடே பூங்கொடி யுருவ முண்டாக வண்ண நூற்றிரிகளைப் போக்கி ஒப்பனை செய்தமைத்த கலிங்கமாகிய ஆடைகளை யுடுத்தோராய் செல்கின்றனர்' என்கின்றார். இவண் வண்ண மூட்டலுடன் பிற ஒப்பனை பற்றிய எண்ணமும் அமைகின்றது.

வண்ணங்கள் பல இருந்தும் ஆடைக்குரிய வண்ணங்களாக ஐந்தினைத் தான் கருதியிருந்தனரோ என்ற எண்ணம்,

அறுவைக் கோதிய ஐவகை வண்ணம் (பெருங். 2.5:128)
அஞ்சு வண்ணத்தின் ஆடையுடுத்தாள் (கம்ப. சுந்தர. 174)

போன்ற குறிப்புகளால் எழுகின்றது.

பின்தோன்றிய இலக்கியங்களும் இப்பஞ்ச வணத்தையே சிறப்புற இயம்புகின்றன.

சான்றாக,

பட்டும், பஞ்ச வணத்தழகு துலங்க (முக்கூடற். 8)

ஆக்கிய வண்ணங்கள் ஐந்தின் வேறுண்டோ நீ
நோக்கிய வண்ணங்கள் நூறுடையாய் (தமிழ்விடு. 74)

என்பனவற்றைக் காட்டலாம்.

பஞ்சவணம் என்பது வெள்ளை, கறுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை என்ற ஐவகை நிறங்கள் என, தமிழ் லெக்சிகன் இயம்புகிறது. இவண் நீல ஆடை சுட்டப்படவில்லை. பொது நிலையில் இலக்கியங்கள் கறுப்பினை விடவும் நீல ஆடையையே சிறப்பிக்கின்றன. எனவே நீல நிறம் விடப்பட்டதன் காரணம் மேலும் ஆய்வுக்குரிய ஒன்று. இவ்வனைத்து எண்ணங்களும் இத்தொழிலின் தொன்மையை உணர்த்துவன. உறுதுணையாக, தொல்லியல் ஆய்வுகளும் அமைகின்றன. சங்க காலத்தைச் சார்ந்ததாகக் கணிக்கப்படும் சாயத்தொட்டிகள், அரிக்கமேட்டிலும்[23],

---

23. அரிக்கமேட்டில் வெண்துகில்களுக்குச் சாயமிடுவதற்குப் பயன்படுத்தப்பட்ட செங்கற்களால் கட்டப்பட்ட இரண்டு சாயத் தொட்டிகள் அகழ்ந்து எடுக்கப்பட்டன.
—தொல்லியல் ஆய்வுகள்-டாக்டர் கே. வி. இராமன், பக்கம்-28

உறையூரிலும்[24] அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. தொல்பொருளாய்வும் தமிழர் பண்பாடும் என்னும் கட்டுரை ஒன்றும் அரிக்கமேடு சாயத்தொட்டி பற்றிய எண்ணத்தைத் தருகின்றது(தமிழ்ப் பொழில், 1971, நவம்பர்-டிசம்பர், பக்கம்-231).

இவ்வாறு வண்ணம் தோய்க்கும் தொழில் தன்மையைக் காண, அனைத்துச் செய்திகளும் நெய்த அறுவையில் வண்ணம் தோய்த்தலையே சுட்டுகின்றது. அறுவைக் கோதிய ஐவகை வண்ணம் என்னும்போது ஆடை என்ற பொருளே அமைகின்றது. அடுத்து,

வெண்ணூல் பூந்துகில் வண்ணம் கொளீஇ

என்பதும் வெண்ணூலால் ஆகிய பூந்துகிலுக்கு வண்ணம் ஏற்றப் பட்டது என்பதைத் தெரிவிக்கின்றது. நூலில் வண்ணம் தோய்த்துப் பின்னர் அதனை ஆடையாக நெய்தனர் என்பதற்குரிய சான்றுகள் எதையும் காணக் கூடவில்லை. எனவே ஆடையை நெய்தபின்னரே அதற்கேற்ற சாயம் தோய்த்தனர் என்பது உறுதிப்படுகின்றது. ஆயின் இன்று நூல்களே வண்ணம் தோய்க்கப்பட்டு ஆடையாக நெய்யப்படுகின்றன.

**பூவேலைப்பாடுகள் செய்தல்**

அழகுக்கு அழகு செய்வதில் தமிழர் மிகுந்த ஆர்வம் உடையவர் என்பதனை ஆடைகளிலும் பூக்கள்போன்ற சித்திரங்களை அமைத்து அதன் மதிப்பினை உணர்த்தினர் என்பதால் பெறலாம். சங்க காலத்திலேயே இக்கலையுணர்வில் தமிழர் தேர்ந்திருந்தனர். பூவிரிக்கச்சை, பூந்துகில், சில்பூங்கலிங்கம் என்று அடைகள் வழியாகப் புலப்படுத்தப்படும் சித்திரச் செயற்பாடுகள், விளக்கமாகவும் புலவரால் இயம்பப் படுகின்றன.

---

24. சங்க காலச் சோழர் தலைநகரான உறையூரில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியின் மூலம் நெசவுத் தொழிலுக்குப் பயன் படுத்தப்பட்ட சாயத்தொட்டியின் இடிபாடு ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. அதன் காலமும் சங்க காலத்தைச் சார்ந்த தாகக் கணிக்கப்பட்டுள்ளது. பண்டைத் தமிழ் மக்கள் பல் வண்ணங்களில் உடை அணிந்தார்கள் என்ற உண்மையை இந்த ஆதாரத்தினாலும் நாம் தெரிந்து கொள்கின்றோம்.
—பழந்தமிழகத்தில் நெசவுத் தொழில்-அரங்க பொன்னுசாமி, கொங்கு, 13-3-1976, பக்கம்-59.

வித்தகரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம் போர்த்ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனம் (மணி. 3:167-169)

படாத்திற்கு உவவனம் உவமையாகின்றது. படாம், வினையில்வல்ல வித்தகரின் கைவண்ணத்தால் பொலிவு பெற்று இருப்பதுபோல என்னும் நிலையில் சித்திரச் செய்கையைச் சிறப்பிக்கின்றார் சீத்தலைச் சாத்தனார்.

வண்ணங் கொளீஇய நுண்ணூற் பூம்படம்
எழுதுவினைக் கம்மமொடு முழுதுமுதல் அளைஇ
(பெருங். 1.42:34-5)

பொருந்து பூம்பொய்கைப் போர்வையைப் போர்த்துடன்
கருங்கட்பாவை கவின் பெறவைகினாள் (சீவக. 1033)

என்பனவும், ஆடையில் செய்த சித்திரக் கோலங்களைச் செப்புவனவே. கம்பன் சித்திர நுண்டுகிலைக் காட்டுவான். இத்தகைய வேலைப்பாடுகளைத் துகிலிகைத் தொழில் என, சூளாமணி சுட்டும். வடிவங்கள் எழுதப்பட்ட ஆடை 'சித்திரக் கம்பி' என்று வழங்கப்பட்டது என்ற எண்ணமும் ஈண்டு நினைத்தற்குரியது.[25]

பூவேலைப்பாடுகளே அன்றி ஆடையில் முத்துகளை வைத்து இணைத்து அழகூட்டும் கலையைப்பற்றி இயம்புகின்றது நந்திக் கலம்பகம்.

அடிவிளக்கும் துகிலாடைவிளக்கும் அரசர் பந்திப்
பிடி விளக்கும்
விடி விளக்கு மதுவே நாங்கள் பூண்பதும் வெண்முத்தமே
(4. அதிகமாகக் காணப்படும் செய்யுள்)

கரையழகு செய்தல்

தங்களுக்கெனச் சில மரபுகளையும், நம்பிக்கைகளையும் காலங்காலமாகத் தமிழரும் கொண்டுள்ளனர். கரையில்லாத ஆடையைக் கட்டுதல் கூடாது என்ற எண்ணமும்[26] அவற்றுள் ஒன்று.

---

25. எங்கள் நாட்டு ஆடை-ச. தண்டபாணி தேசிகர், கலைமகள் தொகுதி-6, 1934, பக்கம்-203.

26. எங்கள் நாட்டு ஆடை, ச. தண்டபாணி தேசிகர், கலைமகள் தொகுதி-6 1934, பக்கம்-203.

பண்டுதொட்டே தம் ஆடைகளில் கரையின் சிறப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர் என்பதைக் காண இவ்வெண்ணத்தின் தோற்றம் அன்றே கால்கொண்டிருக்குமோ என்ற சிந்தனை எழுகின்றது.

சங்க இலக்கியம் பட்டுடையில் அமைந்த கரையினை, 'கொட்டைக் கரைய பட்டுடை' (பொருநர். 155) என்று இயம்பும். பட்டுடையில் அமைந்த கரையும் வேலைப்பாட்டுடன் அமைந்தது என்பது இதனால் புலப்படும்.

கரையழகிற்கு மிக முக்கியத்துவம் இருந்தது என்பதனை,

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல-நெஞ்சத்து
நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையில்
கல்வி அழகே அழகு (நாலடி. 131)

என்ற பாடல் புலப்படுத்தி நிற்கின்றது.

'கரைகளில் எழுத்துருவங்கள் வர மேல்தூக்கி நெய்யப் பெற்ற ஆடைகளும், கரை வேறு உடல் வேறு நிறமாகப் பாவோடி உண்டை மறித்து வாங்கிய ஆடைகளும் இருந்தன என்பது பொன்னெழுத்து நூல் யாப்பு என்ற பெயரானே அறியப் பெறும்'[27] என்னும் கருத்து கரை அழகுக்கும் இயல்புக்கும் ஏற்ப ஆடைகளின் பெயரும் அமைந்திருந்தன என்பதை உணர்த்துவதாகும். கரையின் சிறப்புக்கு மக்களிடையே உள்ள செல்வாக்கு, 'அவளுக்கென்ன மகராசி முப்பாகம் புடவை கட்டுகிறாள், என்ற பழமொழியினாலும் விளக்கம் பெறும். முப்பாகம் புடவை என்பது மேலும், கீழும் கரையும் இடையில் உடலும் வரும் தன்மையுடைய சேலையாகும். இன்றும் கரையின் சிறப்புக்கிணங்கச் சேலையின் மதிப்புக் கூடல் கண்கூடு.

மணமூட்டல்

மணப் பொருட்கள் எனில் அவற்றின்பால் மால் கொள்வது மாந்தர் இயல்பு. தம்முடம்பைச் சந்தனக் கலவைகளால் மண மூட்டிய தமிழர் தம் உடைகளுக்கும் புகைகளால் நாற்றம் கொளுவினர்.

வங்க வீட்டத்துத் தொண்டியோரிட்ட
அகிலும் புகையு மாரமும் வாசமும்
தொகு கருப்பூரமும் சுமந்துடன் வந்த (14:106-7)

27. எங்கள் நாட்டு ஆடை, ச. தண்டபாணி தேசிகர், கலைமகள் தொகுதி-6 பக்கம்-203,

என்ற சிலப்பதிகார அடிகளுக்கு அரும்பதவுரையாசிரியர் 'துகில் - பட்டு வர்க்கம் நாற்றம் கொளுவுதலால் இவற்றுடன் எண்ணினார்' என்று உரை விளக்கம் தருவார். மணப் பொருட்களுடன் ஆடையையும் ஒருங்குவைத்து எண்ணப்படும் அளவிற்கு வாசமூட்டலுடன் நெருங்கிய தொடர்புடையது என்பது இவண் புலனாகும்.

இம்மணமூட்டுப் பொருளைப் புகை என்றும் தூமம் என்றும் இலக்கியங்கள் குறித்துச் செல்கின்றன. சங்க காலத்திலேயே,

மென்னூற் கலிங்கம் கமழ்புகை மடுப்ப (மது. 653)

என்று கால்கொண்ட இச்செயல்,

காடிக் கலந்த கோடிக் கலிங்கம்
கழும வூட்டும் காழகில் நறும்புகை
மூழுநிலா மாடத்து முடிமுதறடவக் (பெருங்.1.54:9-11)

எனவும்,

பூந்துகிற் கொடுத்த தீந்தேன் அகிற்புகை
பொன்னன்னார் தம் கூந்தலிற் வண்டு
கொப்புளித்திட்ட வாசம் (சீவக. 1855)

தூமஞ் சூடிய தூத்துகில் ஏந்தல்குல்
தாமஞ் சூடிய வேற்றடங் கண்ணினார் (சீவக. 875)

தூமத்தினார்ந்த துகிலேந்திய அல்குல் தாதை
(சீவக. 1966)

எனவும் தொடர்ந்து பயின்று வரக் காணலாம்.

அழகியதொரு உவமை வாயிலாகப் புகையூட்டும் தன்மையைச் சிந்தாமணி நயமுற எடுத்துக் காட்டுகிறது.

காடியுண்ட மகளிரும் கழுமவூட்டும் பூம்புகை
மாடமாலை மேனலார் மணிக் குழலின் மூழ்கலிற்
கோடுயர்ந்த குன்றின் மேற்குழீஇய மஞ்ஞைதஞ்சிற
காடு மஞ்சினுள் விரித்திருந்த வண்ணமன்னரே (சீவக.71)

என்பது அப்பகுதி. துகிலுக்கு ஊட்டிய புகையின் மிகுதியால் மகளிரின் குழல்கள் மறைய அவர்கள் மாடத்தின் மேலிருக்கும் தன்மை, மலை மேற்றிரண்ட மயில்கள் தஞ்சிறகை அவ்விடத்து உலாவு மஞ்சினுள்ளே விரித்திருந்த தன்மையை ஒத்தது என்று இவண் சிறப்பிக்கப் பட்டுள்ளது. இதனால் துகிலினை அணிந்த பின்னும் தூமம் சேர்த்தனர் என்பது பெறப்படும்.

துகிலுடன் பிற பொருட்களுக்கும் புகையூட்டிய நிலையினை,

> காடிக் கொண்ட கழுவுறு கலிங்கம்
> தோடமை தூமடி விரித்த் சேக்கை (நெடு. 133-35)

என்பது சுட்டும். சிந்தாமணியும் இதனை,

> தூமமே கமழுந் துகில் சேக்கை மேற்
> காமமே நுகர்வார் (சீவக. 135)

என்று விளக்கக் காணலாம்.

புகையூட்டும் முறையில் சில வழிமுறைகளைக் கையாண்டதையும் இலக்கியங்கள் தெளிவாக உணர்த்தியுள்ளன. பத்துப் பாட்டுள் ஒன்றான நெடுநல்வாடை,

> தண்ணறுந் தகரமுளரி யமைத்து
> இருங்காழ் அகிலொடு வெள்ளயிர் புகைப்ப (நெடு.55-6)

எனப் புகையூட்டலுக்கு அகிலையும், அயிரினையும் பயன்படுத்தியதை விளம்பும்.

> குணதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
> குணதிசை மருங்கின் காரகிற் துறந்து (4:35-6)

என்று சிலப்பதிகாரத்தும் இது பேசப்படுகின்றது.

சிலப்பதிகார உரையில், 'அயிர் - கண்டு சருக்கரை; கண்டு சருக்கரையுடன் அகிலைப் புகைத்தல் மரபு' என்ற விளக்கத்தை அரும்பத உரையாசிரியர் அளிக்கின்றார். எனவே அகிற் புகையுடன், கண்டு சருக்கரையையும் மணத்தை மிகுதிப்படுத்தப் பயன் படுத்தியிருக்க வேண்டும் என்ற எண்ணம் கொள்ளல் இங்குப் பொருத்தமாகின்றது.

புகையுறுப்புக்கள் ஆறு; அவையாவன நேர்கட்டி, செந்தேன், நிரியாசம், பச்சிலை, சந்தனம், அகில் என்று பகருவர்.[28]

இவற்றுள் அகிற்புகையே ஆடைகளுக்கு ஊட்டுவதில் முதன்மை பெற்றது என்பதனை, அனைத்து இடத்தினும் அதனையே சுட்டும் தன்மை உறுதிப்படுத்துகின்றது. தூமம் என்பதற்கும் அகிற்புகை என்றே பொருள் உரைப்பதும் இவண் இணைத்து நோக்கற்பாலது (சீவக. 719).

---

28. Tamil Lexicon, Vol. V, part-I.

சிந்தாமணியின் 71-ஆம் பாடலில் உ. வே. சா. அவர்கள் குறிப்புரை நவிலுங்கால் 'துகிலுக்கு ஊட்டிய புகையினை, பூம்புகை என்றாராயினும் அகிற்புகையே கொள்க' என்று உரைப்பதும் இதற்குத் துணையானதொரு கருத்தாகும்.

ஆடைகளுக்குப் புகை மட்டுமன்றிச் சுண்ணமும் தூவி, மணங் காட்டியதனைத் தேவர் காட்டுகின்றார்.

> கற்கணைஞ் செய்த தோண் மைந்தர் காதலால்.
> நற்சுணப்பட்டுடைப் பற்ற நாணினால்
> பொங்குணத்தால் விளக்கவிப்பப் பொங்கிய
> பொற்சுணம் புறம்பனை தவழும் பொற்பிற்றே
> (சீவக. 91)

என்ற பாடலில் சுண்ணப்பட்டு என்பதற்கு வாசனைப் பொடியை அளைந்த பட்டு என்று விளக்குவர் தமிழ்ப் பேராசிரியர் உ. வே. சா. அவர்கள்.

இன்ப உணர்வில் தமிழருக்கிருந்த ஆர்வத்தினையே இச் செயல்கள் புலப்படுத்தி நிற்கின்றன. கற்பூரத்தைத் துணியில் வைத்தால் பூச்சிகள் அரிக்காது என்ற எண்ணம் இன்று காணப் படும் ஒன்றாகும். புகையிடுதலை இதனுடன் இணைத்து நோக்க, துணிகள் பழுதுபடாது காக்கவும், ஆடைகளின்வழி உடம்பில் நோய்க் கிருமிகள் தாக்காமல் தடுக்கவும், நறுமணம் பெறவும் இப்பழக்கத்தினைத் தமிழர் கொண்டு இருந்திருக்கலாம் என்ற எண்ணம் எழுகின்றது. இஃது உறுதிப்படின் தமிழரின் அறிவியல் ஆய்விற்குச் சிறந்ததொரு சான்றாய் அமையும்.

இது தவிர அணிகலன்களை மெருகூட்டல் போன்று ஆடையினையும் மெருகூட்டவும் சில தொழில்முறைகளைக் கற்று வைத்திருந்தனர் தமிழர் என்பதை, 'கற்களினால் தோய்த்து ஆடையைப் பளபளப்பாக்கினர்' என்ற அறிஞரின்[29] எண்ணம் விளக்கக் காணலாம்.

---

29. உலக நாடுகளில் அகழ்ந்து எடுக்கப்பட்ட புதியகற்காலப் பொருட்களிலும் ஆடைகளைப் பதப்படுத்தும் கற்கருவிகள் கிடைத்துள்ளன.

—தமிழகத்தில் நெசவுத்தொழில், டாக்டர் மா. ராசமாணிக்கனார், தமிழ்ப்பொழில், தொகுதி-35, 1960.

தேய்ப்புக்கல் நெய்த துணிகளைத் தோய்த்துப் பளபளப்பாக்கப் பயன்படுவது.

—சேலம் மாவட்டக் கோயில்கள், ஆ. ராஜேந்திரன், பக். 12.

ஆடை உருவாக்கலிலும் பயன்பாட்டிலும் எண்ணம் செலுத்திய தமிழர் அதன் பாதுகாப்பிலும் பொறுப்புடன் செயல்பட்டதை இலக்கியங்கள் நவில்கின்றன. ஆடைகளைச் சிறப்புடைய வட்டிகளில் வைத்துப் பாதுகாத்தனர் என்பதற்குரிய சில சான்றுகளை இவண் சுட்டலாம்.

செப்பில் வைத்தனர் என்பதனை,

> மாலையும் சாந்தும் மடியும் பெய்த
> கையுறைச் செப்பொடு (பெருங். 1.35:27-8)
>
> தூமணித் துகில்களார்ந்த வலம்புரித் துலங்கு செப்பு (சீவக. 2475)

என்ற பகுதிகள் சுட்டுகின்றன. வட்டியில் வைத்திருந்தனர் என்பது,

> அணிகலப் பேழையும் ஆடைவட்டியும் (பெருங். 1.38:163)
>
> கலிங்க வட்டியும் கலம்பெய் பேழையும் (பெருங். 1.38:285)

என்பவற்றால் தெளிவாகின்றது. மேலும் பேழையிலும் இது வைத்துப் பாதுகாக்கப்பட்டது என்பதனை,

> செங்கோடிகமொடு ஆடைபுதைவுற்ற பேழை (சூளா. 870)

என்ற குறிப்பு உணர்த்தும்.

ஈண்டு செப்பு, வட்டி, பேழை என்பன வெவ்வேறு வகையான பெட்டி வகைகளாக அமைந்திருக்கக் கூடும் எனத் தோன்றுகிறது. ஆயின் இவற்றின் வேறுபாடு புலனாகவில்லை. அமைப்பு நிலையிலேயே இவ்வாறு அமைந்திருக்க வேண்டும் என்பது அணிகலன்களின் காப்பகமாக முதலில் விளங்கிய பேழை பின் ஆடைகளின் பாதுகாப்பிற்கும் பயன்பட்டமையால் உணரமுடிகிறது. அகராதி செப்பு என்பதைச் சிமிழ் என்றும்,[30] பேழை என்பதைப் பெட்டி என்றும்[31] உரைப்பதைக் காண, செப்பு சிறிய அளவு உடையதாகவும், பேழை பெரியதாகவும் இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. செப்பு வலம்புரி வடிவம் கொண்டிருந்ததனைச் சிந்தாமணி 'வலம்புரித் துலங்கு செப்பு' எனும் கூற்றால் அறிவுறுத்தும்.

இவற்றுடன் 'மணியியல் யவனச் செப்பின் மங்கலத் துகில்' (சீவக. 1146) என்னுமாற்றான் செப்புகளை அலங்கரிக்க மணிகளைப் பயன்படுத்தினர் என்பதும் செப்பில் வைத்துப் பாதுகாத்

30. Tamil Lexicon, Vol. III, part-I.
31. Tamil Lexicon, Vol. V, part-III,

சப்படலை மங்கலமாகக் கருதினர் என்பதும் புலப்படுகின்றது.

பெட்டியில் வைத்துப் போற்றும் தன்மை பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணியிலேயே காட்டப்பட, அதற்கு முன்னைய சங்க இலக்கியம், சிலம்பு போன்றவற்றில் காணக் கூடவில்லை. எனவே பின்னைய வளர்ச்சி நிலையாக இதனைக் கொள்வதில் தவறில்லை. பலநிலைகளில் மேம்பாடடைந்திருந்த நம் முன்னோர் ஏதேனும் ஒரு வகையில் சிறப்புற ஆடையினைப் பாதுகாத்திருப்பர். ஆயின் அவ்வழி புலனாகுமாறில்லை.

கலிங்க வட்டி, கலிங்க நாட்டினின்றும் பெறப்பட்டது என்பதும் இவண் உணர்ந்துகொள்ள முடிகின்றது. வெளியே கொண்டு செல்லவும் இவற்றைப் பயன்கொண்டனர் என்பதையும் சில சான்றுகள் உணர்த்துகின்றன.

மாலையும் சாந்து ஆடை போன்றன பெய்த செப்பினை வயந்தகன் உதயணனைக் காணச் செல்லும்போது எடுத்துச் செல்கின்றான் (பெருங். 1.35:27-29) எனும் கூற்றும், நீர் விழவிற்காக அணிகலப் பேழையையும் ஆடை வட்டியையும் எடுத்துச் செல்கின்ற வழக்கும் (பெருங். 1.38:163) இதனைத் தருகின்றன.

## தையற்கலை

தைத்தலைத் 'துன்னம்' என்ற சொல்லால் குறித்தனர் பண்டைத்தமிழர். துன்னுதல் என்றால் பொருந்துதல்[32] என்பது பொருளாதலால் இழைகளைப் பொருத்துதல் காரணமாகத் துன்னம் என்ற பெயரால் இதனைச் சுட்டினர் எனலாம். இன்று தைத்தல், தையல் என்ற சொற்களால் இதனைக் குறிக்கின்றனர். 'தைத்தல்' என்ற சொல் சங்கப் பாக்களிலேயே இடம்பெறினும், துன்னுதல் என்ற பொருளில் அது வழங்கப்படவில்லை. அணிதல், ஊடுருவுதல் என்ற பொருளில் காணப்பட்ட 'தைத்தல்' என்ற சொல், பின்னர் அணியும் முறையில் ஏற்பட்ட வளர்ச்சியாலும், துணியினை ஊடுருவி ஊசிகொண்டு தைக்கும் தன்மையாலும், தைத்தல் என்ற சொல்லாட்சி பயிற்சி பெறத் தொடங்கியிருக்கக் கூடும் எனக் கருதலாம். கிழிந்த துணியைத் தைக்கவேண்டிய தேவையும், உடுத்தும் முறையில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையும் தைத்தல் தொழிலுக்கு அடிப்படையாயிற்று. பல்கலை வல்லுநர்களாகிய தமிழர்கள் நெய்தல் தொழிலில்

32. Tamil Lexicon, Vol.IV, part-I.

பெற்றிருந்த தேர்ச்சியைத் தைத்தல் தொழிலிலும் சங்ககால முதற்கொண்டே பெற்றிருந்ததையும் இலக்கியங்கள் இயம்பு கின்றன. இதனைப் பதிற்றுப்பத்தின் ஓர் உவமை வழி நிறுவலாம்.

இரும்பனம் புடைய லீகை வான்கழல்
மீன்றேர் கொட்பிற் பனிக் கயமூழ்கிச்
சிரல் பெயர்ந்தன்ன நெடுவள்ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்பு சேருடம்பினர் சேர்ந்தோரல்லது
(பதி. 42:1-5)

என்னும் நிலையில், வீரனின் மார்பில் காட்சி அளிக்கும் ஊசியால் தைக்கப்பெற்ற வடுவானது கயத்தில் மீனினைக் கொத்தும் சிரலின் செயலுக்கு உவமிக்கப்படுகிறது. கயமாகிய புண்; இழையாகிய சிரல்; ஊசியாகிய வாயலகு; கயத்தில் மீனினைக் கொத்திக் கொண்டு சிரல் தன் வாயலகையும் வெளியே எடுக்கும் தோற்றம் போன்று, புண்ணிலிருந்து, அதனைத் தைக்கையில் ஊசியும் நூலும் வெளிவருகின்றன. இத்தகைய தையல் பெற்ற வடு என்று உரைக்கும் தன்மை, தமிழரின் தையல் அறிவுக்குச் சிறந்ததொரு எடுத்துக் காட்டாகும்.

தமிழரின் ஆடையைத் தைக்கும் தையல் தொழிலினை, 1. கிழிந்த துணியினைச் சீர்செய்தல் 2. உடையாக வடிவங் கொடுத்தல் என்ற இரு நிலைகளில் பகுத்து நோக்கலாம்.

சீர்செய்தல்

ஏழைப் புலவனின் இழிந்த உடையினைச் சித்திரிக்கும் சில பாடல்களைச் சங்க இலக்கியத்தில் காணலாம். பல நிலைகளில் சிதாரின் சிதைவு இயம்பப் படினும் வேற்றிழை நுழைந்த, தையல் இடம்பெற்ற இடத்தினையும் சில காட்டுகின்றன.

ஏழ்மை காரணமாகச் சிதைந்த பழைய சிதாரினைக் கிழிசல் தெரியாவண்ணம் தைத்துச் சீர்படுத்தி உடுத்தியுள்ளான் புலவன். இதனை, 'வேற்றிழை நுழைந்த வேர்நனைச் சிதார்' (புறம். 69) என்று கவிஞர் காட்டுவார். நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்த ஆடையைச் சங்கப்பாடல் சுட்ட, அதன் சிறப்பு எண்ணி வியந்தது போன்று ஈண்டு பயில்வோர் மனம் புலவனுக்

காக இரங்கும் வண்ணம் சிதார் காட்சி தருகின்றது. இதனைப் போன்றதொரு காட்சி, பொருநராற்றுப்படையிலும் இடம் பெறுகின்றது.

ஈரும் பேனும் இருந்திறை கூடி
வேரொடு நனைந்து வேற்றிழைநுழைந்த
துன்னற் சிதார் துவர நீக்கி (79-81)

மன்னன் அரவுரியன்ன அறுவையை அளிக்கின்றான்.

ஈரும் பேனும் மிக்கு, வியரினால் நனைந்து வேற்று நூலால் தைக்கப்பட்ட சிதாரினை ஈண்டு காண்கின்றோம். வேற்றிழை என்பதற்கு நிறம் வேறுபட்ட இழை என்பர் உரையாசிரியர். தைக்கப்பட்ட ஆடை என்ற நிலையில் துன்னம் என்ற சொல்லாட்சி அமைவதும் கருதற்பாலது.

வடிவங் கொடுத்தல்

உடுக்கும் நிலையில் அதாவது துணிக்கு ஒரு வடிவம் கொடுக்கும் நிலையிலும் தைத்தல் தொழில் அமைகின்றது. பொதுநிலையில் தமிழரின் உடைகள், துணியினை அவ்வாறே உடுத்த நிலையிலேயே காணப்படுகின்றன. எனினும், படம், மெய்ப்பை, குப்பாயம், கஞ்சுகம் போன்றவற்றைத் தைத்துத்தான் அணிந்திருக்க முடியும் என ஊகிக்கலாம். சொல்லாய்வு இதனை வலியுறுத்தும்.

தையல் தொழில பற்றிய அறிவிருந்தும் தைத்த ஆடைகளை இன்றியமையாததாகக் கருதாமையே அவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்காமைக்கும், சட்டை போன்றவற்றைத் தைத்தலின் விளக்கங்கள் அமையாமைக்குமுரிய காரணம் எனலாம்.

தையற் தொழிலாளர் இருந்தமையை,

துன்னகாரரும் தோலின் துன்னரும்
கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கி (5:33-4)

என்று சிலம்பும், 'தோலின் துன்னரும் துன்ன வினைஞரும்' என மணிமேகலையும் (28:38-9) காட்டும். இவண் துன்னகாரர் துன்ன வினைஞர் என்பன தையற்காரரையும், தோலின் துன்னர், தோலினால் படைக்கலங்களுக்கு உறை முதலியன தைப்போரை யும் விளக்கி நிற்கின்றது. தையல் தொழிலில் முக்கியத்துவம் வகிக்கும் ஊசி பற்றிய குறிப்புகள் இடம் பெறலையும் தையல் தொழில் அறிவுக்குரிய சான்றாக நினைக்கலாம்.

'கொற் சேரித் துன்னூசி விற்பாரில்' என்று பழமொழி (73) இயம்பும் குறிப்பினைத் திருக்கோவையாரும் கம்பனும் நல்கக் காணலாம். கம்பன் பாடல்,

இருப்புக் கம்மியற்கு இழை நுழை
ஊசி ஒன்று இயற்றி
விருப்பின் 'கோடியால் விலைக்கு' எனும்
பதடியின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ண! அக்
கருந்திசை களிற்றின்
மருப்புக் கவ்விய தோளவன்
மீளருமாயம் (9964)

என வரும்.

திசை யானையின் மருப்புக்களினால் தோண்டப்பட்ட தோளையுடைய இராவணன், நூல் நுழைதற்குரிய காதினை யுடைய ஊசி ஒன்றைச் செய்துகொண்டு இரும்புத் தொழில் செய்யும் கொல்லனிடத்தில் விருப்பத்தோடு சென்று 'விலைக்கு வாங்கிக் கொள்க' என்று விற்கும் அறிவிலிபோல் மாயவனாகிய நின் மேல் மீருதற்கு அரிய மாயக்கணையை விட்டான்' என்னும் பொருள் அமையும் இப்பாடலில், இன்றுபோன்றே அன்றும் கொல்லர் ஊசி போன்றவற்றைச் செய்தனர் என்பது பெறப்படு கின்றது. இழைநுழை ஊசியினை, நூல் நுழைதற்குரிய ஊசி என்று உரையாசிரியர் உரை குறிப்பிடுகின்றது. ஆடை இழையில் நுழையும் ஊசி என்ற பொருளையும் இதற்குக் கொள்ள, தையல் தொழில் பற்றிய உணர்வு மீண்டும் உறுதிப்பட வாய்ப் பாகின்றது.

**வணிகம்**

'வினையே ஆடவர்க் குயிரே' என்ற போற்றத்தகு மன உணர்வுடன் வாழ்ந்தவர் தமிழர். பலவினைகளுள் ஒன்றான வணிகம் மிகப் பழமையான தொழிலுமாகும். 'கொள்வதும் மிகை கொளாது கொடுப்பதும் குறைபடாது' வணிகம் செய்தல் தமிழர் வணிக நெறி. திரைகடல் ஓடியும் திரவியம் தேடி வாழ்க்கைத் தரத்தை உயர்த்திய தமிழர், பிறநாடுகளில் இருந்து சிறந்த பொருள்களைப் பெற்றும்' உயர்தரமான பொருட்களை உற்பத்தி செய்து வெளிநாடுகளுக்கு அனுப்பியும் சீரும் சிறப்புடனும் வாழ்ந்தனர். இந்தியரின் வணிபச் சிறப்பு அறிஞர்

எண்ணங்களில் தெளிவுறுவது போன்று,[33] தமிழரின் வணிகச் சிறப்பும் பல் சான்றுகளினால் புலப்படுகின்றது.

பட்டினப் பாலையில்,

வான் முகந்த நீர் மலைப் பொழியவும்
மலைப் பொழிந்த நீர் கடற்பரப்பவும்
மாரிபெய்யும் பருவம் போல
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியா பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி (125-132)

என்ற அடிகள் பொதுநிலையில், தமிழர் வணிகத்தின் தன்மையை நவில்கின்றன.

இத்தகைய வாணிபத்துள் சிறப்புடன் திகழ்ந்தது தமிழரின் உடை வணிகம் என்பதற்கும் அறிஞரின் விளக்கங்கள்[34] சில, சான்று பகர்கின்றன. சந்திர குப்த மௌரியனுக்கு அமைச்சனா கவும் ஆசானாகவும் திகழ்ந்த சாணக்கியர் தாம் அருளிய அர்த்த சாத்திரத்தில், பாண்டிய நாட்டு முத்துகளையும் பஞ்சாடை களையும் போற்றித் தென்னாட்டுடன் வாணிகம் செய்தலே

---

33. We have clear evidence that there was regular commercial intercourse between India and China before the beginning of the Christian Era.

    — Indian Inheritance, Vol. II-Art History and Culture Eds. K.M. Munshi & Divakar, Page-220.

    The Roman merchants were surprised at the indescribable fineness of the Indian Silk.

    — The Classical Age of the Tamils, M. Arokiasami, page-72.

34. மிகப் பழைய காலத்தே தமிழ்நாட்டு அரசுகள் தங்கட்கே யுரிய நாகரிகத்தில் திளைத் தொளிர்ந்தன. தென்னாட்டி லிருந்தே இந்தியத் தேக்குமரம், மஸ்லின் ஆடை இவற் றினைப் பாபிலோனியர் தங்கள் நாட்டிற்கு எடுத் தேகினர் என்பது தெளிவாகின்றது.

    —பர்னேட். மேனாட்டறிஞர் கண்ட தமிழகம், வரத வீரப்பன், பக்கம்-27,

சிறந்தது என்பார்[35] என்னும் கருத்து வெளிநாட்டுடன் அன்றி, நாட்டின் பிறபகுதியுடனும் தமிழர் செய்த உடை வணிகச் சிறப்பை விளக்க வல்லதாகும்.

இத்தகைய தமிழரின் உடை வணிகப் பெருமைக்கு, இலக்கியங்களும் ஒருசில கருத்துகளை நல்கி, தமிழரின் உடை வணிக அறிவினைத் தருகின்றன.

கலிங்கம், வங்கச்சாதர் போன்ற ஆடைப் பெயர்கள் பிறநாட்டினின்றும் வருவிக்கப்பட்ட ஆடைகளின் பெயர்களைக் குறித்து அமைவன. கலிங்கப் பெட்டி, யவனப்பேழை என்பனவும் வணிகத் தொடர்பினை விளக்குவனவே. இவை ஆடையுடன் வந்த பேழைகளாக அல்லது ஆடைகளை வைத்துக் கொள்ளப் பிற நாட்டினரிடம் இருந்து வருவித்துக் கொண்டன வாகவே இருக்கலாம்.

உள்நாட்டு வணிக முறையினையும் சில குறிப்புகள் உணர்த்துகின்றன.

தெண்டிரை அவிர் விறல் கடுப்ப
குறியவும் நெடியவும் மடிதருவிரித்து
சிறியரும் பெரியரும் கம்மியர் குழீஇ
நால்வேறு தெருவிலுங் காலுற நிற்றரக் (519-22)

காணப்படும் தன்மையை மதுரைக்காஞ்சி சுட்டும் தன்மையில் தெருவில் ஆடைகொணர்ந்து விற்கும் நிலையினை விளக்குகிறது.

தூசுந் துகிரும் ஆரமும் அகிலும்
மாசறு முத்தும் மணியும் பொன்னும்
அருங்கல வெறுக்கை யோடளந்து கடையறியா
வளந்தலை மயங்கிய மறுகும் (5:18-21)

எனச் சிலப்பதிகாரம், பல்வளங்களும் நிரம்பிய மறுகில் ஆடையும் காணப்பட்டதை உரைக்கும். மேலும்,

நூலினும் மயிரினும் நுழை நூற்பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறுமடி செறிந்தஅறுவை வீதியும் (சிலப். 14:205-7)

---

35. இந்தியப் பண்பாடும் தமிழரும், எஸ். இராமகிருஷ்ணன், பக்கம்-41.

என்ற எண்ணம் அறுவை விற்க தனித்த வீதிகளே இருந்தமை யினைப் புலப்படுத்தும்.

## ஆடை தூய்மை செய்தல்

தமிழரின் சுகாதார உணர்வின் எதிரொலிகளை, அவர்தம் ஆடையினைத் தூய்மை செய்யும் நிலையிலும் காணலாம். புலைத்தி, காழியர் பற்றிய செய்திகள் ஆடையினைத் தூய்மை படுத்துவோர் பற்றிக் குறிப்பிடுவதாகும்.

ஊரவர் ஆடை கொண்டொலிக்கும் புலைத்தி (கலித். 72)

என்றஎண்ணம் புலைத்தி ஊர்மாந்தரின் ஆடையினை வெளுத்துக் கொடுக்கும் தொழில் தன்மையை இயம்புகின்றது. ஊரொலிக்கும் பெருவண்ணார் என பெரிய புராணம் சுட்டுதலும், (திருக்குறிப்பு-113) ஒட்டக் கூத்தர் பாடல் ஒன்று வண்ணானின் தொழிலைப் 'பாப்புனைந்த நூலெய்து கறைத் தூய் தாக்கல்' என்றியம்புவதும் இவர்கள் தொழிலினை விளக்குவனவாகும்.

இலக்கியப் பகுதிகள் இத்தொழிலின் இயல்பினைச் சிறப்புறப் படம் பிடிக்கின்றன.

வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கம் (நற். 90)

எனப் புலைத்தி கலிங்கத்தை ஒளிபெறத் தோய்க்கும் தன்மையும்,

நலத்தகைப் புலைத்தி பசை தோய்த்தெடுத்து
தலைப்புடைப் போக்கித் தண்கயத்திட்ட
நீரிற் பிரியாப்பரூஉத் திரிகடுக்கும் (குறுந். 330)

என்னும் நிலையில் தோய்க்கும்போது பசையில் தோய்த்து எடுத்துத் தோய்க்கும் தன்மையையும் காண்கின்றோம்.

இவ்வாறு துணியினைத் துவைத்தலுக்குக் களர்ப்படு கூவல் நீரைப் பயன்படுத்தினர் என்பதை,

களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை (புறம். 311)

என்ற கருத்து காட்டும்.

களர்ப்படு கூவல் நீர் அன்றி உவர் மண்ணையும் துணி வெளுக்கப் பயன்படுத்தினர் என்பது,

காழியர் கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழிய
(அகம். 89)

என்ற சங்கப் பாடலில் இந்தியர் பிற பொருட்களையும் துணிவெளுக்கப் பயன்படுத்தினர் என்ற எண்ணத்தையும் நாம் காண்கின்றோம்.[36] இவ்வாறு வெளுத்த ஆடைக்குக் கஞ்சியூட்டும் மரபினையும் இலக்கியம் நவில்கின்றது. இதனை,

பசைவிரற் புலைத்தி நெடிது பிசைந்தூட்டிய
பூந்துகில் இமைக்கும் பொலன் காழ்அல்குல் (புறம்-387)

காடியுண்ட பூந்துகில் கழுமமூட்டும் நறும்புகை (சீவக. 91)

போன்ற சில பகுதிகளால் தெளிவுபடுத்தலாம்.

அன்று அழுக்கைப் போக்கலும் பின்னர் கஞ்சியூட்டலும் வண்ணான் தொழிலாகக் கண்ட நிலையே இன்றும் தொடரு கின்றது.

சாணி, உவர்மண் போன்ற அழுக்கை ஏற்றி, புது அழுக்கோடு பழைய அழுக்கையும் மாற்றும் தன்மை இன்று அமைகின்றது. துணி வெளுக்க மண்ணுமுண்டு என்று கூறும் புலவரும் உவர்மண்ணையே குறித்திருக்கலாம்.

இரட்டைப் புலவரின் பாடல் அப்பிலே தோய்த்திட்டு அடுத்தடுத்துத் தப்பும் தன்மையை இயம்ப, தோய்த்தல் என்னும் வினையுடன் தப்புதல் என்ற வினையையும் துவைத்தல் என்ற சொல்லைக் குறிக்கப் பயன்படுத்தினர் என்பது பெறப்படும். இன்றைய விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் ஆடையைச் சுத்தம் செய்யவும் புதிய கருவிகளைப் புகுத்தியுள்ளன.

## ஆடைத் தொழிலாளர் சமுதாயநிலை

ஆடைத் தொழிலாளர் என்னும்போது ஆடையுடன் தொடர்புடைய தொழிலைச் செய்யும் நூற்புத் தொழிலாளர், நெய்வோர், வணிகம் செய்வோர், 'தூய்மை செய்வோர் என்போரைச் சுட்டலாம். ஒரு தொழில் பற்றிப் பேசுங்கால் அவற்றுடன் தொடர்புடையோரையும் இணைத்துச் சமுதாயத் தில் அவர்களின் இடம் என்ன? எத்தன்மையில் அவர்கள் நிலை

---

36. அந்நாளில் ஆடையைத் துவைத்தலும் நடைபெற்றது. 'அகதா' என்ற ஒருவகைப் பொருள் இதற்குப் பயன்பட்டது. — தமிழியல், தொகுதி-6, தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், அ. மீராமுகைதீன், பக்கம்-97.

அமைந்தது என்பதனைக் காண்டல் வழக்காதலின் இவண் ஆடைத்தொழிலாளர் பற்றிய எண்ணங்களை நோக்கலாம்

## 1. நூற்புத் தொழிலாளர்

நூற்புத்தொழில் புரிந்தோராகப் பெண்களே காணப்படுகின்றனர். இழைக்கும் சேயிழையாருக்கு முரிய தொடர்பு பண்டைக்காலம் முதல் நிகழ்காலம் வரையில் தொடர்ந்து கொண்டிருக்கும் ஒன்று. கைம்பெண்டிர் இதனைப் பிழைப்பு வாய்ப்பாகக் கருதியிருந்தனர் என்பது இலக்கியம் வழங்கும் செய்தி. இம்மரபு இன்றும் தொடரும் ஒன்று.

பருத்திப் பெண்டின் பனுவல் (புறம்-125)

என்றும், 'ஆளிற் பெண்டிர் தாளிற் செய்த நுணங்கு நுண்பனுவல்' (நற். 353) என்றும் இவர்கள் நூல் நூற்றமை சங்கப் பாக்களில் நவிலப்படுகின்றது கைவண்மகடூஉத் தனது செயற்கை நலம் தோன்ற ஓரிழைப்படுத்தலைச் சிறப்பித்தலும் காணப்படுகின்றது.

தன் ஆதரவிற்குத் துணையில்லா காரணத்தால் தன் முயற்சியினால் நூற்கும் தன்மையும்; சிறு தீ விளக்கம் கொண்டு இரவுவரை அவள் உழைக்கும் தன்மையும் கைம்பெண்டிர் இதனைத் தங்கள் வாழ்வுத் தொழிலாகக் கொண்டிருந்தனர் என்பதனையே உறுதிப்படுத்துகின்றன.

கொங்கு நாட்டில் கணவன் இறந்தவுடன் விதவைகளுக்கு நூற்புக் கதிரும் பஞ்சும் கொடுக்கும் சடங்கு ஒன்றினைக் காட்டி, கைம்பெண்களின் தொழிலான இது, இன்றைய நிலையில் மரபெச்சமாக எஞ்சி நிற்கின்ற ஒன்று என்பர்.[37] ஸ்பின்ஸ்டர் என்ற ஆங்கிலச்சொல் பருத்தி நூற்போரையும் கைம்பெண்டிரையும் சுட்டுவதும் இத்துடன் இணைத்து நோக்கத் தக்கது.

தொன்று தாமுடுத்த அம்பகைத் தெரியல்
சிறு வெள்ளாம்பல் அல்லி யுண்ணும் கழிகல மகளிர் போல
(புறம். 280)

என்ற விளக்கமும் கைம்பெண்டிரின் ஏழ்மைநிலை, நூற்றல் தொழிலால் மாற்றம் பெறவில்லை என்பதை உறுதிப்படுத்த வல்லதாக அமைகின்றது.

---

37. ஆய்வுத் தொகை - தொகுதி-2, பருத்திப் பெண்டிர் கி. நாச்சிமுத்து, பக்கம்-282.

இன்று கைம்பெண்டிரும், பிற பெண்டிரும் வயது வேறுபாடின்றி இத்தொழிலைச் செய்கின்றனர். நூற்பார் வாழ்க்கைத்தரம் இன்றைய நிலையிலும் சிறப்பாக இல்லை என்பது கண்கூடு. 'கொட்டை நூற்று கப்பல் விற்ற கடன் தீர்க்க முடியுமா?' என்னும் பழமொழியும், பண்டுதொட்டே நூற்போரின் நிலை இதுவே என்பதைக் காட்டவல்லது.

## நெய்வோர்

நூற்றல் தொழிலை மகளிர் செய்ய, நெய்தல் தொழில் ஆடவர்க் குரியதாகக் காணப்படுகிறது.

மதுரைக்காஞ்சியில் நெசவாளர் 'கம்மியர்' (521) என்று அழைக்கப்படுகின்றனர். கம்மியர் என்பது தொழிற் செய்வோரின் பொதுப் பெயராக அமைந்து இருந்தது என்பதனை, மனைகளையும், நகரங்களையும் சிற்பநூல் முறைப்படி வகுத்துக் கொடுத்தோரைக் கைவல் கம்மியர் என நெடுநல்வாடையும் (76-9), செப்புப்பானை கடைவோரைக் கம்மியர் என நற்றிணையும் (153) குறிப்பிடுவதினின்றும் உணரலாம்.

கம்மியர் என்ற பொதுப்பெயருடன் 'காருகர்' என்ற சிறப்புப்பெயர் இவர்க்கு இருந்தது என்பதனைக் கட்டு நுண் வினைக் காருகர் என்ற சுட்டு உணர்த்தும் (சிலப். 5-19). காருகர்-பிட்டு வணிகரையும் குறித்தது எனினும் காருக வினைத்தொழில் எனத் திவாகர நிகண்டும் இவர்கலைளக் குறிப்பிடும் நிலையில், இப்பெயர் சிறப்பாக இவர்களுக்குரியதாக அமைந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. பெரிய புராணம் இவர்களை அறுவையர் குலமெனக் குறிப்பிடும் (பெரிய. நேச. 2).

சோழர் காலத்தில் நெசவாளர், ஆயோகவன்,[38] கைக்கோளர், சோழிய சாலியர், பட்டசாலியர், சேனியர் என்ற பல

---

38. அரசர்குலப் பெண்ணுக்கும், வணிகர் குடி ஆணுக்கும் பிறந்தவன் ஆயோகவன் எனப்பட்டான். இவர்கள் ஆடைகளை நெய்து அரசர்க்கும் அந்தணர்க்கும் கடவுளுக்கும் கொடுத்து வந்தனர். இவருட்சிலர் திரிபுவனம் போன்ற இடங்களில் இறையிலியாக நிலங்களைப் பெற்று கோவிலுக்கும் மறையவர்க்கும் வேண்டிய ஆடைகளை நெய்துவந்தனர். — கல்வெட்டுக்களால் அறியப்படும் சோழர் காலத்திய சமுதாய அமைப்பு, க.த. திருநாவுக்கரசு, பக்கம்-229.

பெயர் கொண்டிருந்தனர் எனக் காண்கின்றோம்.[39] நன்னூல் உரையாசிரியரான மயிலைநாதரும் தன்னுரையில் சோலிகன், சாலிகன், பட்டணவன், சேணியன் என்று குறிப்பிடுவார் (289). இன்றும் அடவியார், பட்டுச்சாலியர், பட்டாலியர், பட்டு நூல்காரர், சாலியர், தேவாங்கர், கைக்கோளர், செங்குந்தர், சணப்பர் போன்ற பல பிரிவினர் நெசவாளரில் காணப்படுவது குறிக்கற்பாலது.

பல்லவர், சோழர் காலத்தில் இவர்கள் வரி செலுத்தி இருந்திருக்கின்றனர். தறிகளில் நூல்நூற்போர், நெசவு நெய்வோர்மீது வரிகள் விதிக்கப்பட்டுள்ளன.[40] கைக்கோள நெசவாளர், சாலிய நெசவாளர், சரிகைத்தறி நெசவாளர் மீதும், பஞ்சு, பட்டுநூல், பட்டாடை தறி மேலும் வரி போடப்பட்டது.

தறிப்புடவை அல்லது தறிக்கூறை, பேர்கடமை, பஞ்சுபீலி. பட்டாடை, நூலாயம், தறிஇறை, பறைத்தறி, சாலிகத்தறி, தூரகத்தறி, வாசல் வரி போன்றன இவ்வரிகளின் பெயராகும்.[41] பட்டாடை மூலாயம் என்பது விசயநகர மன்னர்கள் தறிகளின் மேல் விதித்த வரியாகும்.[42]

கி. பி. 13-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் கைக்கோளர்கள் சமூகத்தில் உயர்ந்த மதிப்புப் பெற்றனர். முதலிகள் என்னும் குலப்பட்டப் பெயரையுடைய இவர்களின் சிறப்பு கருதி சில வரிசளில் இருந்து இவர்கட்கு விலக்கு அளிக்கப்பட்டது.,[43] எனவே இவர்கள் முன்னாளில் தாழ்நிலையில் மட்டுமன்றி மதிப்பின்றியும் இருந்துவந்த நிலை தெளிவுறுகின்றது.

---

39. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பதிப்பு, இரா. நாகசாமி, பக்கம்-68.

40. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், கே.கே. பிள்ளை, பக்கம்-306.

41. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பதிப்பு. இரா. நாகசாமி, பக்கம்-69.

42. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், கே.கே. பிள்ளை, பக். 414.

43. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், கே.கே. பிள்ளை, பக்கம்-415.

இன்று மகளிர் நூற்புத் தொழிலுடன் ஆடவர் போன்று நெசவுத் தொழிலையும் செய்துவருகின்றனர். இந்தியாவின் சில இடங்களில் இத்தொழிலைக் கண்டிப்பாக அறிந்திருக்க வேண்டும் என்ற எண்ணமும் இருக்கின்றது[44]. நெசவுக் கலை பற்றிய எண்ணங்களை அதன் அடிப்படை நிலையிலாவது புரிந்து கொள்ள வேண்டுவது பெண்கள் கடமை என்ற கருத்து உலக நிலையில் காணப்படுவதாகும்.[45]

நெசவாளர்களின் இருக்கையினைக் காருகர் இருக்கை என்று வழங்குவதினின்றும் அன்றே அவர்கள் தனித்த பகுதிகளில் வாழ்ந்திருக்கக் கூடும் என்பது தெளிவு. சோழர் காலத்தில் இவர் இருந்த பகுதிகள் 'பாடி' என்று அழைக்கப்பட்டது.[46] இன்றும் தனித் தெருக்களையும், பகுதிகளையும் இவர்க்குரியதாகக் காணலாம் (சாலியத் தெரு, பட்டாலியர் தெரு).

நெசவாளர்களின் நிலை இவ்வாறு அமைய, அறுவை வாணிகர் என ஆடைவணிகம் செய்வோர் அழைக்கப்பட்டதாகக் காண்கின்றோம். மறுகில் இவர் காணப்படும் நிலையினை, வண்ணறுவையர் வளந்திகழ் மறுகு எனக்காட்டும் மணிமேகலை (28:47). குறியவும் நெடியவும் மடியினை அங்காடிகளில் கம்மியர் விரித்துநிற்கும் நிலையினை மதுரைக்காஞ்சியில் காண, ஆடை நெய்வதும் ஆடை வணிகர் தொழிலாகவும் இருந்திருக்கக் கூடும் என்ற சிந்தனை தோன்றுகின்றது. இன்றும் நெசவுத்தொழிலுடன், வாணிபத்தையும் வைத்து நடத்தும் மேனிலை மாந்தரும் உண்டு. எனவே நெசவாளர்களைப் பற்றிய சோழர் கால எண்ணங்கள், வணிகரையும் உள்ளிட்டுக் குறிப்பதாக இருக்கலாம்.

---

44. அஸ்ஸாமில் ஒரு லட்சம் பெண்கள் நெசவுத் தொழிலில் ஈடுபட்டு இருக்கிறார்கள். இது அவர்கள் வாழ்க்கை மரபு ஆகும். அஸ்ஸாமிய பெண்கள் தங்கள் திருமணத்திற்கான புடவையைத் தாங்களே நெய்து கொள்ளவேண்டும் என்பது குடிமரபு. திருமண ஆடைகளை நெய்து கொள்ளாத பெண்ணுக்குத் திருமணம் நடப்பது கடினம்.
— பி. வி. கிரி, சுரதா கைத்தறி மலர், 1971.

45. Every woman should acquaint herself with principles involved in weaving, the raw materials out of which fabrics are made and the wearing of the finished products —Fundamentals of Dress, Marietta Kettunen, Page-142.

46. செங்கைமாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பதிப்பு. இரா. நாகசாமி, பக்கம்-69.

பருத்தி நூல் பட்டு நூல் அமைத்தாடை ஆக்கலும் பிறவும் காருகவினைத் தொழில் எனத் திவாகர நிகண்டு, காருகவினைத் தொழில் சுமத்தல் என்று கூறுவது, வணிகரைச் சுட்டியிருக்கலாம் என்ற எண்ணமும் மேற்கண்ட சிந்தனைகளுக்கு அரண் ஆகின்றது. இன்று நம்நாட்டைப் பொறுத்தவரையில் நெய்வோருக்கு அமையும் பெயரே வணிகருக்கும் அமைய, பிறநாடுகளில் வணிகர் தனிப்பெயர் பெற்று இருந்தனர். தையற்கலைஞர் தைத்த உடைகளின் தேவை அதிகமாக இல்லாத காரணத்தால் தையற் கலைஞர்களைப் பற்றிய குறிப்பினையும் விளக்கமாகப் பெறமுடியவில்லை. இவரைத் துன்னர் என்று பண்டைய இலக்கியங்கள் பகர, குயினர், பொல்லர் என்றும் வந்தோர் வழங்கியிருக்கின்றனர்.

### தூய்மை செய்வோர்

ஈரங்கொல்லியர், வண்ணார், ஏகாலியர், தூசர், காழியர் என்று நிகண்டுகள் வண்ணானின் பல்பெயர்களைத் தருகின்றன. சங்க காலத்தில் காழியர் என்றும் புலைத்தி என்றும் இவர்கள் சுட்டப்படுகின்றனர். அதிகமான குறிப்புகள் புலைத்தியின் தொழில் தன்மையைச் சுட்டி அமைகின்றன. எனவே, மகளிரே இத்தொழிலில் அதிகமாக ஈடுபட்டிருக்கலாம் எனத் தோன்று கிறது.

பெரிய புராணத்தில் வண்ணான் என்று இவர்கள் குறிக்கப் படுகின்றனர் (திருக்குறிப்பு - 113).

'மண்ணைப் பயன்படுத்தி ஆடையின் அழுக்கு நீக்கும் தன்மையில் மண்ணான் என்று ஆகி வண்ணான் என்று திரிந்தது' என்று வண்ணான் என்ற பெயர்க்காரணம் சுட்டுவர்.[47] மண்ணுதல், கழுவுதல் என்ற பொருள் உடையது. ஆடையை மண்ணுபவன் என்ற நிலையில் மண்ணான் என்று நின்று, பின்னர் வண்ணான் எனத் திரிந்திருக்கவும் வாய்ப்புண்டு. இன்றும் வண்ணானை மண்ணான் என்று அழைத்தல் உண்டு.

---

47. தமிழ்ப்பொழில். தொகுதி-2, 1926-27, நாட்டுப்பாடல், வ. பெருமாள், பக்கம்-240.

பல்லவர், சோழர் காலத்தில் துணிவெளுக்கும் வண்ணார்க்கும் வரி விதிக்கப்பட்டது. வண்ணாரப்பாறை என்பது இவர் பயன்படுத்திய கற்களின்மேல் விதிக்கப்பட்ட வரியாகும்.[48] எனவே வண்ணாருக்கும் வரிவிதித்தமையை நோக்க, பல ஆடைத் தொழிலாளர்கள் வரிவிதிப்பினால் பாதிக்கப்பட்டு இருக்க வேண்டும் என்பது உணரக் கூடியதொன்று.

இன்றைய ஆடைத் தொழிலாளருள் வணிகம் செய்வோர் தவிர, ஏனையோர் நிலை என நோக்க, பெரும்பாலும் தாழ்ந்த தொரு நிலையே இவர்க்குரியது. இதனைப் போன்றே அன்றைய தொழிலாளருள் வணிகர் தவிர, பிற மாந்தர் நிலை சிறப்பாகக் காட்டப்படவில்லை.

இன்று அரசாங்கத்தின் நோக்கால் தொழிலாளர் நலம் பெற்று வருகின்றனர். பல கூட்டுறவு சங்கங்களை நிறுவி இவ்வேழையர் நலம்காணச் செயல்பட்டு வருகின்றது அரசாங்கம். எனினும், பண்டுதொட்டு இன்றுவரை ஆடைத்தொழிலாளரின் நிலை, 'தங்களை நிர்வாணமாக்கி, பிறர் உடுத்தப் பாடுபடு கின்றனர்'(Weavers naked themselves and toiled to clothe others) என்ற உண்மைக்கு இலக்கணமாக அமைகின்றது எனில் மிகையாகா.

## முடிவுரை

ஆடையும் ஆடைத்தொழிலும் பற்றிய இக்கட்டுரையில், தமிழரின் பலவிதக் கைத்தொழில் தேர்ச்சியினையும், கலையுணர் வினையும் விளக்கும் வண்ணம் இலக்கியச் சான்றுகளின் இயல்பு அமைந்ததைக் கண்டோம். தமிழர் பெருமையினை வெளிப்படுத் தப் பல்லாற்றானும் துணைநிற்கும் தொழிலாளரின் சமுதாய நிலையினைப் புரிந்துகொள்ளவும் இவை வழிவகுக்கின்றன.

---

48. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், கே. கே. பிள்ளை, பக்கம்-306.

# முடிவுரை

தமிழர் ஆடைகள் என்னும் இவ்வாய்வின்கண் இலக்கியச் சான்றுகளினின்றும் கிடைத்த சில முடிபுகளைக் கூறியுள்ளேன்.

சான்றாக, உடையும் ஆடையும் வேறுபட்டது; துகில் தமிழர் ஆடையே; நேத்திரம் போன்றன பிற பகுதி மாந்தரிடம் இருந்து பெற்றவை போன்ற எண்ணங்களைக் குறிப்பிடலாம். சில பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் பிற மதத்தார்த் தொடர்பு காரணமாகத் தமிழ் இலக்கியத்தில் இடம்பெற்றனவே தவிர அவை தமிழருடையது அன்று என்பது சான்றுகளுடன் சுட்டப் பட்டுள்ளது.

இந்நூல் தரும் முடிபுகளில் சில, பிற சான்றுகள் வாயிலாக மாறுபடவும் வாய்ப்புண்டு. எனவே, ஆராய்ச்சியின் முதற்கட்ட நிலையில் புலனான எண்ணங்களாக இவற்றைக் கொள்ளலாம்.

கல்வெட்டுக் குறிப்புகள், சிற்பம் சித்திரங்கள் போன்ற பிற அனைத்துச் சான்றுகளையும் நோக்கி இவ்வாராய்ச்சி தொடரப்படின் மேலும் பல எண்ணங்களில் தெளிவும் மிகுதியான கருத்துகளும் கிடைக்கும்.

12-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் 'தமிழர் ஆடை' பற்றிய ஆய்வும் நிறைவேறும்போதுதான் தமிழரின் உடைகள் பற்றிய முழுமையான அறிவினைப் பெறமுடியும். இதனால் அவ்வாராய்ச்சியும் விரைந்து மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாம்.

# கலைச்சொல் அகராதி

| | |
|---|---|
| அக்கினிச்சேர்வை | காரச்சீலை |
| அகத்திக்கறுப்பு | சில கிராம தேவதைகளுக்குச் சாத்தும் ஆடை வகை |
| அகிற்புகை | ஆடைக்கு ஊட்டும் புகை |
| அங்க நாக்கு | கச்சு |
| அங்கரட்சிணி | போர்க்கவசம் |
| அங்கவஸ்திரம் | மேலாடை |
| அங்குசம் | தையற்காரரின் விறற்கூடு |
| அங்குஸ்தான் | தையற்காரரின் விறற்கூடு |
| அச்சடிச் சீலை | சித்திர வர்ணம் பதிக்கப்பட்ட சீலை |
| அச்சடியன் | அச்சடிச் சீலை |
| அச்சனம் | நெய்வார் கருவி வகை |
| அச்சு | தறியின்பகுதி |
| அச்சுக்கட்டு | அச்சடித்தற்காகச் சீலையை மடிக்கை |
| அச்சுப்பலகை | நெய்வார் கருவி வகை |
| அச்சுப்பூச்சி யிழுத்தல் | தறியூடு நூலைச் செலுத்துதல் |
| அச்சுமரம் | தறியின் பகுதி |
| அசைத்தல் | கட்டுதல் |
| அஞ்சுகம் | உத்தரீயம் |
| அஞ்சுவண்ணம் | ஐந்து வண்ணமுடைய ஆடை |
| அடித்தல் | துவைத்தல் |
| அடிமடி | ஆடையினுள் மடிப்பு |
| அடிமுன்றானை | சேலையின் உள் முகப்பு |
| அடியுடுப்பு முண்டு | இடுப்பு வேஷ்டி |

| | |
|---|---|
| அடுக்கு | நூலடுக்கு |
| அடுக்குச் சாத்துதல் | கொய்து ஆடையணிதல் |
| அடுக்குப் பருத்தி | பருத்தி வகை |
| அடுக்குப்பாளம் | கடவுளுக்குப் பின்புறத்தில் சாத்தும் கொய்த ஆடை |
| அடுக்கு வண்ணச் சேலை | சேலை வகை |
| அடைசீலை | பாளச்சீலை |
| அடைசுபொட்டணம் | அடைசீலை |
| அடையவளைந்தான் | தட்டுச் சுற்று வேஷ்டி |
| அணையாடை | பிள்ளைக்கு இடும் துகிற்படுக்கை; பிறந்த குழந்தைக்குத் தொப்புளிலிருக்கும் சீலை |
| அத்தவாளம் | மேலாடை; முன்றானை |
| அத்தாய் | ஆடை |
| அளாடை | தோலாடை |
| அந்தரம் | ஆடை |
| அந்தரீயம் | அரைவேஷ்டி |
| அந்தளகத்தாளர் | கவசம் தரித்த வீரர் |
| அந்தளகம் | கவசம் |
| அந்தளம் | அந்தளகம் |
| அம்சபப்பளி | சேலை வகை |
| அம்சாவதானம் | சேலை வகை |
| அம்பர்சா | சீலை வகை |
| அம்பரம் | ஆடை |
| அயர்தல் | கட்டுதல் |
| அரக்குச்சாயம் | சீலைகளுக்குக் கூட்டும் கருஞ்சிவப்புச் சாயம் |
| அரக்குச் சொக்கட்டான் | சேலை வகை |
| அரக்கு விசிறி | சேலை வகை |
| அரட்டு | 7 அரனை; 1280 கஜம் |
| அரட்டு 10 | கழி |
| அரண் | கவசம் |
| அரணம் | கவசம் |
| அரணம் வீசுதல் | கவசமணிதல் |
| அரத்தம் | ஒருவகைத்துகில் |
| அரனை | 240 முழ நூல்; 1 பிணி |

| | |
|---|---|
| அரியலூர்த்தாட்டு | இரவிக்கைத் துண்டு வகை |
| அரியாயோகம் | அரைப்பட்டிகை |
| அருகுதைத்தல் | மடித்துத்தைத்தல் |
| அரைக்கச்சு | இடைப்பட்டிகை; இடையிற்கட்டும் உடை விசேடம் |
| அருகுமணிச்சேலை | புடைவை வகை |
| அரைக்கச்சை | அரைக் கச்சு |
| அரைச்சட்டை | சல்லடம் |
| அரைப்பூட்டு | இடைக்கட்டு |
| அரையணிகை | விவாகத்தில் வதூவார் புது ஆடைகள் அணிகை |
| அரைவேஷ்டி | இடுப்பிற் கட்டும் ஆடை |
| அல்வான் | வர்ணத்துணி |
| அலகு போடுதல் | பிரித்தல் |
| அலசல் | இழை நெருக்கம் இல்லாத ஆடை |
| அலவல் | இழை விலக்கமாய் நெய்யப்பட்டது |
| அலிசா | பட்டு வகைகளுள் ஒன்று |
| அலைசுதல் | ஆடையை அலைத்துக் கழுவுதல் |
| அவணிகை | இடுதிரை |
| அவி | எலிமயிர்க் கம்பளம் |
| அவுசுக்காரன் | ஆடையிற் பிரியம் உடையவன் |
| அழுக்கு | வெளுத்தற்குரிய மாசுபடிந்த ஆடை |
| அழுக்ககற்றி | வண்ணான் காரநீர் |
| அள்ளு கட்டுதல் | கூட்டமாகப் பிரித்தல், மடிப்பு கட்டுதல் |
| அற்றம்காத்தல் | மானம்காத்தல் |
| அறுப்புக்கோடி | தாலியறுத்தவட்குச் சுற்றத்தார் இடும் புது வஸ்திரம் |
| அறுவை | ஆடை, துணி |
| அறுவைத் தூரியம் | அநாதர்க்கு அளிக்கும் உடை |
| அறுவையர் | ஆடை நெய்வோர் |
| அறுவையர் குலம் | நெசவாளர் குலம் |
| அறுவை வாணிகன் | ஆடை விற்பவன் |
| அறுவை வீதி | ஆடை விற்கும் கடைத்தெரு |
| அன்னவஸ்திரம் | உணவு உடைகள் |
| அன்ஸு | ஆடைக்கரை |
| அனாகதம் | புதிய சீரை |

| | |
|---|---|
| அஸ்த பாவாடை | கைக்குட்டை |
| ஆக்கர் | சஞ்சரித்துக் கொண்டே துணி முதலியவை வியாபாரம் செய்வோன் |
| ஆச்சர்தனபாலை | பருத்திச் செடி |
| ஆசிடை | ஆடை |
| ஆசு | கவசம் |
| ஆசுமணை | நெய்தற் கருவிகளுள் ஒன்று |
| ஆட்டுதல் | ஆடை முதலியவற்றை மாசு நீங்குமளவும் நீருள்ளிட்டு அலைத்தல் |
| ஆட்டுமயிர்ச் சரக்கு | கம்பளித் துணி |
| ஆடை | உடை, துணி |
| ஆடைக்குறி | வண்ணாரிடுந் துணிக் குறி |
| ஆடை புதைவுற்றபேழை | ஆடை வட்டி |
| ஆடையாபரணம் | ஆடையும் அணியும் |
| ஆடைவட்டி | ஆடைப் பெட்டி |
| ஆடை வீசுதல் | மகிழ்ச்சிக் கறிகுறியாக ஆடையை மேலே வீசுதல் |
| ஆயிரவருக்கம் | உடற்கவசம் |
| ஆயோகவர் | கைக்கோளர் வகையினர் |
| ஆலந்திச் சேலை | சேலை வகை |
| ஆவலம் | படைமரம் என்னும் நெசவுக் கருவி |
| ஆளெழுத்துச்சேலை | சித்திர மெழுதிய சேலை |
| ஆற்றுதல் | நூல் முறுக்காற்றுதல் |
| ஆறுகண்டி | மெல்லிய துணி வகை |
| இக்கு | சீலையை இறுக்கிக் கட்டும் முடிச்சு |
| இக்குமுடிச்சு | சீலையை இறுக்கிக் கட்டும் முடிச்சு |
| இடுதிரை | திரைச்சீலை |
| இடைக்கச்சு | அரைக் கச்சு |
| இடைக்கச்சை | இடைக் கச்சு |
| இடைக்கட்டு | அரைக் கச்சு |
| இடைச்சீலை | திரை |
| இடைப்பூட்டு | அரைக்கச்சு |
| இந்திரகாந்தச்சேலை | புடைவை வகை |
| இந்திரவர்ணப்பட்டு | பட்டுப் புடைவை வகை |
| இரசகன் | வண்ணான் |
| இரசகி | வண்ணாத்தி |
| இரட்டு | ஆடை |

| | |
|---|---|
| இரட்டு இழை | ஈரிழை |
| இரட்டைக் குலுக்கி | நெடுங்கோடுள்ள புடைவை வகை |
| இரட்டை வாழைப்பூ | நெடுங்கோடுள்ள புடைவை வகை |
| இரட்டை வேட்டி | 8 முழம் துணி |
| இரட்டை வேட்டி | மடி. துப்பட்டி |
| இரத்தின கண்டி | சேலை வகை |
| இரத்தின கம்பளம் | சித்திர கம்பளம் |
| இரத்தின கம்பளி | இரத்தின கம்பளம் |
| இரவிக்கை | தனக்கச்சு |
| இரவுக் கோலம் | இரவில் அணியும் ஆடை போன்றன |
| இரவைச் சல்லா | மெல்லிய துணி |
| இராசகோபம் | அரசன் கொலு உடை |
| இராட்டினம் | நூற்கும் எந்திரம் |
| இராட்டினம் சுற்றுதல் | நூல் நூற்றல் |
| இருப்புக் கச்சை | வீரரணியும் இருப்புடை |
| இருப்புச் சீரா | இடுப்புச் சட்டை |
| இலக்கர் | ஆடை |
| இலக்கை | ஆடை |
| இலவம்பஞ்சு | பஞ்சு |
| இலாஞ்சனை | உருத்தோன்ற அச்சுக் கட்டின படம் |
| இலாடன் பருத்தி | பருத்திச்செடி வகை |
| இழவுடுப்பு | துக்கக் குறியான உடை |
| இழை | நூலிழை; ஆடை |
| இழைக் குளிர்ச்சி | இழைக் குளிர்த்தி |
| இழைக் குளிர்த்தி | ஆடையின் மேன்மை |
| இழை கொள்ளுதல் | தைத்தல் |
| இழைதல் | நூற்கப்படுதல் |
| இழைத்தல் | நூற்றல் |
| இழை போடுதல் | இழையாடு |
| இழையாடுதல் | இழையிட்டுத் தைத்தல் |
| இழையிடுதல் | இழையாடு |
| இழையூசி | இழைவாங்கி |
| இழையெட்டு | இழையெடுத்து நெய்தல்; இழையீட்டு |
| இறஞ்சி | துகில் வகை |
| இறுக்குதல் | இறுக உடுத்தல் |
| இஸ்திரி | வண்ணார் கருவி வகை; இஸ்திரிப் பெட்டி; இஸ்திரி போடுதல் |

| | |
|---|---|
| ஈடுகட்டுதல் | வஸ்திரம் முதலான பொருட்கள் பல நாள் உபயோகிக்கப்பட்டும் கெடாது இருத்தல் |
| ஈர்க்குக் கம்பி | ஆடையின் சன்னக்கரை |
| ஈர்ங்கட்டு | குளிர் காலத்திற்குரிய உடை |
| ஈர்த்தல் | வரிந்து கட்டல் |
| ஈர்ந்தண் ஆடை | ஈர ஆடை |
| ஈரங்கொல்லி | வண்ணார் |
| ஈரணி | புனலாடும்போது மகளிர் அணிதற்குரியவை. |
| ஈரிழை | ஆடையின் இரட்டை நூல், ஈரிழைத் துண்டு |
| ஈரிழைத் துவர்த்து | ஈரிழைத்துண்டு |
| உக்கம் பருத்தி | வனப் பருத்தி |
| உட்கட்டு | அரையாடை |
| உடற்சாயம் | துணிகளின் நடுவிலன்றி ஓரங்களில் மட்டும் தோய்த்த சாயம் |
| உட்சட்டை | உள்ளுக்கிடும் அங்கி |
| உட்சாத்து | அரைக்கச்சை |
| உட்சீலை | உள்ளே கட்டும் சீலை; உள்ளே வைத்துத் தைக்கும் துணி |
| உடல் | ஆடையின் கரையொழிந்த பகுதி; ஆடையினிழை |
| உடல்வெள்ளை | நான்கு பக்கமும் சாயமூட்டிய வெள்ளையுடை |
| உடற்கருவி | கவசம் |
| உடுத்தல் | ஆடை முதலியன தரித்தல்; சூழ்தல் |
| உடுத்தாடை | சிற்றாடை |
| உடுக்கை | உடை |
| உடுக்கையுலறுதல் | உடுக்கை சிதைத்தல் |
| உடுத்துதல் | ஆடையணிவித்தல் |
| உடுப்பு | ஆடை, அங்கி, சட்டை |
| உடுபாவனை | உடை வகை |
| உடுபுடைவை | உடை |
| உடுமடி | ஆடை |
| உடுமாற்று | உடைமாற்றுகை |
| உடுமானம் | உடை |
| உடை | உடைநாண் |
| உடைஞாண் | உடைநாண் |

| | |
|---|---|
| உடைதோல் | தோற்பரிசை |
| உடைநாண் | உடைமேல் தரிக்கும் நாண் |
| உடைநீத்தல் | உடையினை அகற்றல் |
| உடைப்பட்டை | உடைக்கு மேற்கட்டும் கச்சை |
| உடைப் பெயர்த்துடுத்தல் | உடையை அவிழ்த்துக் கட்டுதல் |
| உடையிடுதல் | அச்சத்தால் உடையினை நழுவவிடுதல் |
| உடைவாள் | உடையிற் செருகும் சரிகை |
| உண்டைநூல் | நூலுண்டை, நெசவின் குறுக்கிழை |
| உத்தராசங்கம் | மேலாடை |
| உத்தரி | பருத்திச் செடி |
| உத்தரிகம் | மேலாடை |
| உத்தரித்தல் | புதிய சோமன் வேஷ்டியை இரண்டாக்குதல் |
| உத்தரியம் | மேலாடை, உத்தரீயம் |
| உதரபந்தம் | அரைப்பட்டிகை |
| உதிரப் பாவாடை | இரத்தத்தில் தோய்த்தெடுத்த துணி விரிப்பு |
| உரப்பு | உரப்பான புடைவை |
| உரிதல் | ஆடை களைதல் |
| உரிகூறை கொள்ளுதல் | வலிந்து ஆடை கொள்ளுதல் |
| உருட்டித் தைத்தல் | துணியைச் சுருட்டித் தைத்தல் |
| உருத்திர கண்டி | சீலை வகை |
| உருத்திராட்சக் கரை | வஸ்திரக் கரை வகை |
| உருமால் | தலைப்பாகை; அங்கவஸ்திரம் |
| உரோமப்பட்டு | எலிமயிர் முதலியவற்றாற் செய்த பட்டு |
| உலண்டு | பட்டு நூல் |
| உலந்து பழுத்த உடை | துவராடை |
| உலாவுதல் | சூழ்தல் |
| உள்ளாடை | மகளிர் உள்ளாடை |
| உள்ளிட்டறுவை | பண்டங்கள் இடப்பெற்ற அறுவை |
| உள்ளுடை | கோவணம், உட்சட்டை |
| உறிக்கா | உறிதொங்கிய காவடி |
| உறுப்புத் தோல் | மான்தோல் |
| உறுமால் | உருமால், மேலாடை |
| உறை | ஆடையுறை |
| உறைத்தல் | மோதுதல் |

| | |
|---|---|
| ஊக்கு | கொக்கி |
| ஊசி | தையலூசி |
| ஊசியோடுதல் | ஊசித் தையல் செல்லுதல் |
| ஊசிவன்னம் | ஒருவகைப் புடைவை |
| ஊடை | ஆடையின் குறுக்கிழை |
| ஊடை குழல் | குறுக்கிழை கொண்ட குழல் |
| ஊணி | பாவாற்றுதற்கு ஊன்றும் கவர்க்கால் |
| ஊத்தைச் சீலை | அழுக்குச் சீலை, சூதகச் சீலை |
| எஃகுதல் | பன்னுதல் |
| எஃகுகோல் | பஞ்சு கொட்டும் வில் |
| எண்ணெய்ச் சிக்கல் | ஆடையிற்பற்றிய எண்ணெய் அழுக்கு |
| எண்ணெய்ச் சீலை | எண்ணெயில் நனைந்த துணி, மெழுகுத் துணி |
| எண்ணெய்த் தோம்புச் சீலை | எண்ணெய் கலந்த செஞ்சாயமூட்டின சீலை வகை |
| எந்திர வெழினி | சூத்திரத்தாற் எழவும் விழவும் கூடிய திரை |
| எலிமயிர்க் கம்பலம் | எலிமயிராற் செய்யப்பட்ட போர்வை |
| எலிமயிர்ப் போர்வை | எலிமயிரினாற் செய்யப்பட்ட போர்வை |
| எழினி | திரை |
| எழுத்துச் சிற்றாடை | சிற்றாடை வகை |
| எழுத்துச் சீலை | சித்திரம் தீட்டிய சீலை |
| எழுத்துப் புடைவை | சித்திரமெழுதிய சீலை |
| எள்ளுவன்னம் | சீலை வகை |
| எழுதுபடம் | கிழிமேல் எழுதிய படம் |
| எழுதுவினைக் கம்மம் | ஆடையில் படம் எழுதுதல் |
| எறிபாவாடை | தெய்வங்களுக்கு முன்னும், பெரியோர் முன்னும் வீசும் பாவாடை விருது |
| ஏகாசம் | உத்தரீயம், மேலாடை |
| ஏகாந்தம் சமர்ப்பித்தல் | வாகனங்களிற் விக்கிரகங்களை வைத்துக் கச்சுச் சார்த்துதல் |
| ஏகாயம் | ஏகாசம் |
| ஏடகம் | துகில் |
| ஏணை | புடவைத் தொட்டில் |
| ஏப்பிரான் | ரிக்ஷா முதலியவற்றில் உள்ள மூடு துணி |
| ஏமம் | இடுதிரை |

| | |
|---|---|
| ஏமினி | எழினி |
| ஐந்துகில் போர்ப்போர் | ஐந்து துகில் கொண்டு போர்த்து கொள்பவராகிய பௌத்தர் |
| ஓட்டச்சி | பூவழலை துவைக்கப் பயன்படுத்தல் |
| ஒட்டுச் சல்லடம் | குறுங்காற் சட்டை |
| ஒட்டுத் துணி | துணித்துண்டு |
| ஒட்டுச் சல்லடம் | ஒட்டிவைத்து வைத்துத்தைக்கப்படும் துணித்துண்டு |
| ஒட்டுத் தையல் | ஒட்டுத் துணியிட்டுத்தைக்கும் தையல் |
| ஒட்டுப் போடுதல் | துண்டு வைத்து இணைத்தல் |
| ஒடுங்குதல் | போர்த்துக் கொள்ளல் |
| ஒத்தமுண்டு | 4 முழ வேட்டி |
| ஒத்த முண்டு 4 | மடி, துப்பட்டி |
| ஒருபடம் | இடுதிரை |
| ஒருமுகவெழினி | திரை |
| ஒலித்தல் | துவைத்தல் |
| ஒலியல் | ஆடை |
| ஒலியன் | ஆடை |
| ஒற்றுதல் | உடுத்தல் |
| ஒற்றை நூற்புடைவை | தனியிழையாற் செய்த சீலை |
| ஓட்டு | நூலிழையோட்டுகை |
| ஓடம் | ஒடம், தறியின் பகுதி |
| ஓதப் புரோதம் | நெசவின் நெட்டிழைக் குறுக்கிழைகள் |
| கக்கப் பொட்டணம் | கக்கத்தில் இடுக்கிய துணி மூட்டை |
| கங்கடம் | கவசம் |
| கச்சங்கட்டுதல் | கச்சை கட்டு |
| கச்சட்டம் | உடைமடிப்பு, கோவணம் |
| கச்சடம் | கச்சட்டம் |
| கச்சம் | தானைச் சொருக்கு, வார், கச்சை |
| தச்சவடம் | வியாபாரம் |
| கச்சற வீக்கல் | இறுக்கிக் கட்டல் |
| கச்சு | அரைப்பட்டிகை, முலைக் கச்சு |
| கச்சுப் பட்டை | கச்சைப் பட்டை |
| கச்சேரி வேஷ்டி | கச்சேரி செல்வதற்கென்று வைத்திருக்கும் நீண்ட தலையுருமால் |
| கச்சை | கவசம்,அரைக்கச்சு,மேலாடை, முழுப் புதுத் துணி |

| | |
|---|---|
| கச்சை கட்டுதல் | ஆடையை இறுகக் கட்டுதல் |
| கசட்டுடை | அழுக்கு உடை |
| கசவுப் பட்டை | சரிகைக் கரை |
| கசைவைத்த புடவை | சரிகைக் கரைச் சீலை |
| கஞ்சகம் | கச்சின் தலைப்பு |
| கஞ்சியிடல் | கஞ்சிப் பசை யூட்டுதல் |
| கஞ்சுகம் | சட்டை |
| கஞ்சுக மாக்கள் | கஞ்சுகம் அணிந்த காவலர் |
| கஞ்சுக முதல்வர் | கஞ்சுகம் அணிந்த காவலர் |
| கஞ்சுகன் | சட்டைதரித்தவன்,மெய்க்காப்பாளன் |
| கஞ்சுகி | மெய்க்காப்பாளன் |
| கஞ்சுனி | உடை வகை |
| கட்டாடி | வண்ணார் தலைவன் |
| கட்டாரிக்குத் துணி | பட்டுச் சீலை வகை |
| கட்டுதல் | அணிதல், உடுத்தல் |
| கட்டுவர்க்கம் | உடை |
| கட்படாம் | யானையின் முகத்தணியும் ஆடை |
| கடலைப் பட்டாணி | புடவை வகை |
| கடிகை | திரைச் சீலை |
| கண்டத் திரை | பல்வண்ணத் திரை |
| கண்டம் | கவசம் |
| கண்டாங்கி | சீலை வகை |
| கண்டிடுதல் | நூலைக் கதிரிற் சுற்றுதல் |
| கண்டுநூல் | உருண்டை நூல் |
| கண்டை | சிறு துகில், நெசவுத் தாறு |
| கண்டை வேஷ்டி | சரிகைத் துணி |
| கண்ணாடிப் புடவை | மெல்லிய ஆடை |
| கண்ணிக் கயிறு | நெய்வாரது விழுதுக் கயிறு |
| கணுக்காலுறை | காலுறை வகை |
| கணுவு | நூலில் காணப்படும் தடிப்பான பகுதி |
| கத்தணம் | கவசம் |
| கத்திகை | சிறுகொடி |
| கத்திரிகை | சிறுதுகிற் கொடி |
| கதர் | கையிராட்டின நூல்கொண்டு நெய்த வஸ்திரம் |
| கதிர் | நூல் நூற்கும் கருவி |
| கதிர்க்கோல் | நூல் நூற்கும் கருவி |

| | |
|---|---|
| கந்தளம் | கவசம் |
| கந்தித்தம் | சீலை |
| கந்தை | பீற்றலான ஆடை, சிறு துகில் |
| கந்தல் | கந்தை |
| கந்து | புடைவையின் சாயக் கப்பு |
| கந்து மங்கல் | புடைவையின் சாயம் ஓரிடத்தில் கப்பும் ஓரிடத்தில் மங்கலுமாயிருக்கை |
| கந்தை புரைதல் | கிழிந்த துணிகளைத் தைத்தல் |
| கப்படம் | ஆடை, கந்தற் சீலை |
| கப்பாசு | சுத்தம் பண்ணாத பருத்தி |
| கப்பி | நெய்தற் கருவியுளொன்று |
| கம்பல் | ஆடை |
| கம்பலம் | கம்பளிப்படாம், இரத்தின கம்பளம் |
| கம்பளம் | கம்பளிப்போர்வை, செம்படாம், மயிர்ப் பட்டாத்தாலாகிய ஆசனம் |
| கம்பாயம் | முகமதியர் உடுக்கும் உடை |
| கம்பி | ஆடையின் ஓரச் சிறு கரை |
| கம்பிக்கரை | ஆடையின் ஓரச் சிறு கரை |
| கம்பி கட்டுதல் | ஆடைக்குச் சாயக் கரையிடுதல் |
| கம்பிச் சேலை | கம்பிக் கரையிடப்பெற்ற சேலை |
| கம்பிச் சோமன் | மெல்லிய கரையுள்ள ஆடவர் உடை |
| கம்பி வேஷ்டி | கம்பிக் கரையுள்ள வேஷ்டி |
| கம்மியன் | நெய்பவன் |
| கமலம் | கம்பலம், செம்படாம் |
| கமலிப்பட்டு | பட்டாடை வகை |
| கமிசு | கமிஸ் |
| கமிஸ் | உட்சட்டை |
| கயிலி | பல வர்ணமுள்ள முகமதியர் உடை |
| கயிறுதடி | ஒரு நெசவுக் கருவி |
| கரித்துண்டு | கரித்துணி |
| கரித்துணி | அழுக்குச் சீலை |
| கரியல் | துகில் |
| கருந்துகிலோன் | பலராமன் |
| கரும சேவகன் | வண்ணான் |
| கருப்படம் | கந்தற்புடைவை |
| கருவி | கவசம், வஸ்திரம் |

| | |
|---|---|
| கருள் | நல்லாடை, கங்குப் புடவை |
| கரை | சீலைவிளிம்பு; ஜமுள் |
| கரைக்கட்டு | சீலை விளிம்பு |
| கரைக்கட்டுதல் | சீலை விளிம்பைக் கட்டுதல் |
| கல்தோய்த்துடுத்தல் | காவியாடையுடுத்தல் |
| கல்லாடை | காவி வஸ்திரம் |
| கல்லி | மேலங்கியுறுப்பு |
| கல்லியாண கூடம் | சேலை வகை |
| கலசம் கட்டுதல் | சீலை மண்ணால் சட்டியின் வாயைக் கட்டுதல் |
| கலாய் | கந்தை |
| கலிங்கம் | ஆடை, பட்டாடை |
| கலிங்கம் பகர்நர் | ஆடை வணிகர் |
| கலிங்க வட்டி | ஆடைப் பெட்டி |
| கலை | ஆடை |
| கவ்வா | நீண்ட அங்கி |
| கவசம் | மெய்புகு கருவி, சீலை மண், காயத்திற்கிடும் கட்டு |
| கவணி | ஒருவகை மெல்லிய சீலை |
| கவணிச் சால்வை | மெல்லிய சால்வை வகை |
| கவந்தி | கந்தைகளாலாகிய மெத்தைப் போர்வை |
| கவயம் | கவசம் |
| கவழிகை | திரைச்சீலை |
| கவற்றுமடி | பட்டாடை வகை, துகில் வகை |
| கவிசனை | உறை |
| கவுசனம் | கோவணம் |
| கவுசிகம் | வெண்பட்டு |
| கழற்றுதல் | ஆடையணி முதலியன நீக்குதல் |
| சழி | நூற்சுருள், 5 அரட்டு, சிப்பம், பொந்து |
| கழித்து வீழ்த்தல் | நீக்கல் |
| கழுத்துக்குட்டை | அங்கிக்கு மேலே கழுத்தைச் சுற்றிக் கட்டும் துணி |
| கழுத்துச் சட்டை | பெண்களின் அங்கி வகை |
| கழுத்துப்பட்டிகை | கழுத்துப் பட்டை |

| | |
|---|---|
| கழுத்துப் பட்டை | சட்டையின் கழுத்தைச் சுற்றித் தைத்திருக்கும் பட்டைத்துணி |
| களர்ப்படு கூவல் | புலைத்தி ஆடைகழுவ பயன்படுத்தும் கிணறு |
| களைதல் | ஆடையணி முதலியன கழற்றுதல் |
| கற்கலை | காவி வஸ்திரம் |
| கறைமுறித்தல் | ஆடையில் கறை எடுத்தல் |
| கன்னிக் கால் | புதுவீட்டின் மதிலில் தென்முகமாக முதலில் நாட்டும் சீலை சுற்றிய தம்பம் |
| கன்னைக் கோல் | நெய்வார் கருவிகளுள் ஒன்று |
| கஸ்தூரி | சேலை வகை, கஸ்தூரிமடி சேலை வகை |
| கஸ்தூரிக் கொடிச் சேலை | சேலை வகை |
| கஸ்தூரிச் சேலை | சேலை வகை |
| கஸ்தூரிமடி | சேலை வகை |
| கஸ்தூரி வங்கார கண்டி | சேலை வகை |
| காக்கி | பழுப்பு நிறத் துணி |
| காங்கு | கருநீலப் புடைவை வகை |
| காங்குப் புடைவை | புடைவை வகை |
| காகுளி | மெத்தை |
| காசா | துணி வகை |
| காசிப்பட்டு | பட்டாடை |
| காசையர்டை | காவி வஸ்திரம் |
| காஞ்சுகம் | சட்டை |
| காஞ்சுகன் | சட்டையிட்ட மெய்க்காப்பாளன் |
| காஞ்சுகி | காஞ்சுகன், சட்டை |
| காடகம் | காழகம், ஆடை |
| காடி | ஆடைக்குக் கஞ்சியூட்டல் |
| காடிகம் | சீலை |
| காண்டம் | திரைச்சீலை, ஆடை |
| காத்தூலம் | துகில் வகை |
| காதி | இரட்டுத் துணி |
| காம்பு | ஆடைக்கரை, ஆடை |
| கார்ப்பாசம் | பருத்தி |
| காராடை | சாயத்தின் உறைப்புள்ள ஆடை, நீலப்படாம் |

| | |
|---|---|
| காரிக்கன் | சலவை செய்யாத ஒருவகைத் துணி |
| காரிகம் | சலவை செய்யாத கோடி ஆடை |
| காருகத் தொழில் | நெய்தல் தொழில் |
| காருகம் | நெய்யும் தொழில் |
| காருகர் இருக்கை | ஆடைத் தொழிலாளர் இருப்பிடம் |
| காருகன் | நெய்வோன், வண்ணான் |
| காருவாகன் | வண்ணான் |
| காரை | ஆடை |
| கால் | அரட்டு, 7 முழம் |
| கால் பலகை | தறியின் பகுதி |
| கால் மேலுறை | கணுக்காலுறை |
| காலாசு | காற்கவசம் |
| காவல் | கவசம் |
| காவி வஸ்திரம் | காஷாய வஸ்திரம் |
| காழகம் | ஆடை, கைக்கவசம், நீலஆடை |
| காழம் | காழகம், உடை விசேடம் |
| காழியன் | வண்ணான் |
| காற்கவசம் | பாதரட்சை |
| காற்குப்பாயம் | காற்சட்டை |
| காற்சட்டை | கால்களுக்கு இடும் நிஜார் |
| காற்சராய் | காற்கட்டை |
| காற்பாசம் | பருத்தி |
| கிடையாடை | படுக்கை விரிப்பு |
| கிண்டன் | உரப்பான பஞ்சுத் துணி |
| கித்தான் | ஒருவகை உரப்புத் துணி |
| கிருங்கார விசிறி | சேலை வகை |
| கில்லத்து | சம்மான ஆடை |
| கிழி | கிழிபட்ட துகில், சீலையில் எழுதிய சித்திரப் படம் |
| கிழிக்கட்டு | துணியிற் கட்டிய நிதி முதலியன |
| கிழிகட்டுதல் | கிழியிற் முடித்த பந்தயப் பொருளைப் பலரும் காணும்படித் தூக்கிக் காட்டுதல் |
| கிழிச்சீரை | பணம் பொதிந்த சீலை |
| கிழிசல் | கிழியல் |
| கிழிதம் | நிதிக்கிழி |

| | |
|---|---|
| கிழிதீட்டுதல் | படம் வரைதல் |
| கித்து வர்ணம் | சேலை வகை |
| கிரைநார்ப்பட்டு | பட்டுச்சீலை வகை |
| கிழ் | ஆடை வகை |
| கிழ்ப்பாய்ச்சி | மூலைக்கச்சம் |
| கிற்றன் | குறுக்கே கோடுள்ள புடைவை |
| கிற்றுவண்ணம் | புடைவை வகை |
| குச்சு | சீலையின் முன்மடி, பாவாற்றி |
| குச்சுப் பிடித்தல் | ஆடையைக் கொய்து வைத்தல் |
| குச்சை | கொய்சகம் |
| குசவம் | கொய்சகம் |
| குசும்பா | வெண்மைகலந்த சிவப்பு குசும்பா வேஷ்டி |
| குசும்பாச் சேலை | குசும்பாச் சாயம் ஏற்றிய சேலை |
| குஞ்சம் | புடைவையகலத்தில் அரைக்காற் பாகம், கொய்சகம், நூற்கூட்டம் |
| குஞ்சுத் தலைப்பா | நெய்வார் கருவி, தலைப்பா வகை |
| குட்டை | தலைப்பாகை |
| குடிசீலை | கோவணம் |
| குடுக்கி | காற்சட்டை |
| குடுக்கா | குடுத்துணி |
| குடுத்துணி | அரைக்கைச் சட்டை |
| குண்டு சொக்காய் | ஒருவகைச் சட்டை |
| குண்டஞ்சு வேட்டி | கரைக்கோடு அமைந்த ஆடவர் உடுக்கும் ஆடைவகை |
| குத்தி ஒன்று | இழை 80 |
| குத்திணி | ஒருவகைப் பட்டுச் சீலை |
| குத்துணி | குத்தினி, ஆடைவகை |
| குத்துக்கம்பு | தறியின் பகுதி |
| குத்துக்கால் | நெசவுத் தறியின் ஓர் உறுப்பு |
| குதிரைக் கௌசனை | குதிரைக்கு மேலிடும் அலங்காலப் போர்வை |
| குதைச்சு | சொக்காயில் பொத்தாணிடும் துளை |
| குப்பாசம் | மெய்ச்சட்டை |
| குப்பாயம் | சட்டை |
| கும்பைப் பருத்தி | பருத்தி வகை |

| | |
|---|---|
| கும்ப வஸ்திரம் | மந்திர கும்பத்திற் கட்டும் புதியஆடை |
| கும்மல் | ஆடையை நனைத்து நெம்புகை |
| குயில்தல் | நெய்தல் |
| குயிற்கண்பப்பள் | சேலை வகை |
| குயினர் | தையற்காரர் |
| குருட்டுப் பக்கம் | அச்சடிச் சீலையின் மங்கலான பக்கம் |
| குருட்டுவளம் | புடைவையின் உட்புறம் |
| குருடு | ஆடை முதலியவற்றின் குருட்டுப்பக்கம் |
| குருதி | துகில் |
| குழிசீலை | கோவணம் |
| குளகு | குறிஞ்சி நிலமகளிர் உடையாகக் கொள்ளும் தழை |
| குறிஞ்சிப் பூ சல்லடம் | ஆடை வகை |
| குறுக்குக் கட்டு | மகளிர் நீராடும்போது மார்புக்குமேல் கட்டும் சீலைக் கட்டு |
| குறும்பர் | இடைச் சாதியில் முரட்டுக் கம்பளி நெய்யும் ஒரு பிரிவினர் |
| கூட்டு | அரையிற் கட்டும் துகிலாலாகிய அரைஞாண் |
| கூரை சூரத்துப் பப்பளி | சேலை வகை |
| கூவிரம் | தேரிற்கட்டும் கொடி |
| கூழாமணம் | சமையற்காரர் உபயோகிக்கும் பிடி துணி |
| கூறை | ஆடை, கூறைப் புடைவை |
| கூறைக் கோட்படுதல் | கூறை பறிக்கப்படல் |
| கூறைப்புடைவை | தாலிகட்டும் சமயத்திற்கு முன் மணமக்களுக்கு மணமகன் வீட்டார் கொடுக்கும் சேலை |
| கூறைப்பை | துணியாற் செய்த பணப்பை |
| கூறையுடுத்தல் | கூறைப்புடவை யுடுத்தல் |
| கேதனம் | பெருங்கொடி |
| கேது | பெருங்கொடி |
| கைக்கட்டி | கைக்கவசம் |
| கைக்கவசம் | கையுறை |
| கைக்குட்டை | சிறுதுண்டு |
| கைக்கோளர் | நெசவாளரில் ஒரு இனத்தார் |
| கைச்சட்டை | அரைச்சட்டை, கைக்கவசம் |

| | |
|---|---|
| கைச்சாடு | கைக்கவசம் |
| கைச்செறி | கையுறை |
| கைத்தறி | கையால் நெய்யும் தறி, கையால் நெய்யும் ஆடை |
| கைத்துண்டு | கைக்குட்டை |
| கையுடை | கைக் கவசம் |
| கைலேசு | கைக்குட்டை |
| கைவாளை | புடைவை வகை |
| கொங்காடை | கொங்கரது தலைக்கட்டு வகை |
| கொங்குமந்தாரைஜின்னடி | சேலை வகை. |
| கொசகம் | கொய்சகம் |
| கொசவம் | கொய்சகம் |
| கொசாம் | கொய்சகம் |
| கொசான் | கொய்சகம் |
| கொசிகம் | கோசிகம், ஆடை |
| கொசுகம் | கொய்சகம் |
| கொட்டம் | நூற்கும் கொட்டை |
| கொட்டாங்கச்சித்தாட்டுப் | சேலைவகை, கொட்டாஞ்சித் தாட்டுப் |
| பத்திரி | பத்திரி |
| கொட்டான் | நூற்பதற்குத் தயாரித்த பஞ்சு |
| கொட்டுமரம் | ஆடையைச் சாயத்தில் தோய்த்து அடிக்கும் கட்டை |
| கொட்டுவேலை | துணியில் அச்சடிக்கை |
| கொட்டை | அலங்காரம் முதலியவற்றிற்காக ஆடைத் தும்பினைத் திரளமுடிந்த முடிச்சு |
| கொட்டை நூற்றல் | பஞ்சு நூற்றல் |
| கொட்டைப்பாக்குத் தலைப்பா | குஞ்சுத் தலைப்பா |
| கொடிப்புடைவை | விதவையானவளுக்கு முதல் வருஷ உபயோகத்திற்காகச் சுற்றத்தார் கொடியிலிடும் புதுச்சீலை |
| கொடியர்டை | கொடிச்சீலை |
| கொடுக்கு | ஆடை முதலியவற்றிற் கட்டிவிடும் தொங்கல் |
| கொடுமடி | பண்டம் இடுதற்காக வளைத்துக் கட்டிய மடி |

| | |
|---|---|
| கொண்டைக்கோல் | மகிழ்ச்சிக் குறிகுறியாக உயர்த்தி அசைக்கும் ஆடை கட்டிய கோல் |
| கொத்தல் | கணுவு |
| கொத்தை | நூல் முதலியவற்றின் சிம்பு |
| கொந்துதல் | கொடியிலிருக்கும் ஆடையைக் கோல் கொண்டு எடுத்தல் |
| கொப்புவர்ணம் | சேலை வகை |
| கொம்மை | அழுக்குத் துணியிடும் பெட்டி |
| கொய்தல் | சீலை கொய்தல் |
| கொய்சகம் | ஓரங்கொய்து சுருக்கப்பட்ட பட்டாடை |
| கொய்யகம் | மண்டபத்தில் அலங்காரமாகக் கொன்று மேலே தொங்கவிடப்பட்ட ஆடை |
| கொய்யா | நெய்வார் கருவி வகை |
| கொளீஇ | அணிந்து |
| கோங்கலர் | துகில் வகை |
| கோசாலை | கொய்சகம் |
| கோசிகம் | பட்டாடை |
| கோசிகை | கோசிகம் |
| கோட்டைப் பப்பளி | சேலை வகை |
| கோடாங்கி | கண்டாங்கி |
| கோடம் | துகில் வகை |
| கோடி | புதிய ஆடை |
| கோடிகம் | ஆடை |
| கோடிகர் | ஆடை நெய்வோர் |
| கோடி மூடல் | இறந்தவர்க்குக் கோடி போர்த்தல் |
| கோடி வெள்ளை | புதிய ஆடையின் முதல் வெள்ளை |
| கோடு | ஆடைக் கரை |
| கோணங்கிக் கூத்து | ஒழுங்கற்ற நடையுடைகள் |
| கோணிப்பட்டு | துணி வகை |
| கோத்தல் | உடுத்துதல் |
| கோதை | வில்லாளர் கையிற் பூணும் தோலுறை |
| கோடம் | துகில் வகை |
| கோம்ணம் | கோவணம் |
| கோரா | சலவை செய்யப்படாத ஆடை, சாய மிடாத நூல் |

| | |
|---|---|
| கோலம் கோடல் | ஆடை அணிகளால் வனப்பூட்டுதல் |
| கோலிகப் பறையன் | மட்டமான ஆடை நெய்யும் பறைச் சாதியன் |
| கோலிகன் | நெய்யும் தொழில் செய்யும் கீழ்ச்சாதி கோலிகரால் நெய்யப்பட்ட ஆடை |
| கோவணம் | கௌபீனம் |
| கோவணவன் | கோவணன் |
| கோவணாண்டி | கோவணம் மட்டுமுடைய பிச்சைக் காரன் |
| கௌபீனம் | கோவணம் |
| சகநாதம் | துணி வகை |
| சகம் | சட்டை |
| சகலாத்து | ஒருவகை கம்பளித் துணி |
| சங்கரன் வெண்பட்டு | சேலை வகை |
| சச்சை | சட்டை |
| சசேல ஸ்நானம் | உடுத்த உடையோடு முழுகுகை |
| சட்டை | அங்கி |
| சட்டைக்காரன் | ஐரோப்பியர்க்கும் இந்தியர்க்கும் பிறந்த கலப்புச் சாதியன் |
| சட்டைக்காரி | சட்டைக்காரச் சாதிப்பெண் |
| சட்டைக் காம்பு | சீமைத் துணி வகை |
| சட்டைப்புரை | சட்டைப்பை |
| சடாரி | கவசம் |
| சத்தி | பெருங்கொடி |
| சந்திரகாந்தச் சேலை | சேலை வகை |
| சந்திரகாவிச் சேலை | ஒரு வகை புடைவை |
| சந்திரகாவி யுறுமாலை | சிவப்புச் சாயமேற்றிய குட்டை வகை |
| சந்திரவாளி | சேலை வகை |
| சப்பளஞ்சி | காஞ்சீபுரத்தை அடுத்துள்ள சப்பளம் என்னும் ஊரில் நெய்யும் ஆடை |
| சப்பைத்துணி | மட்டமான துணி |
| சப்ஜா கொட்டடி | சேலை வகை |
| சப்ஜா சேலை | ஒருவகை பட்டுச் சேலை |
| சம்பங்கி விசிறி | புடைவை வகை |
| சம்படம் | கூறை |
| சம்புகானா | விரிப்பாக உபயோகப்படும் இரத்தின கம்பளம் |

| | |
|---|---|
| சம்பைக் கொங்காணி | சம்பங்கோரையாற் பின்னிய மழை தாங்கும் போர்வை |
| சமக்காளம் | விரிப்பு வகை |
| சமகலை | புடைவையின் உள் தலைப்பு |
| சமதலைப்பு | இருதலைப் பக்கங்களிலும் ஒத்த கரையுள்ள புடைவை |
| சமுத்திராந்தம் | பருத்தி |
| சர்க்கா | ராட்டினம் |
| சரடு | முறுக்கு நூல் |
| சராய் | காற்சட்டை |
| சரிகை | ஆடைக்கரை முதலியவற்றில் சேர்க்கப் படும் பொன் வெள்ளி இழைகள் |
| சரிகைக் கம்பி | ஆடையின் விளிம்புச் சரிகைக் கரை |
| சரிகைக் கெண்டை | ஆடைக் கரைகளில் இடும் சரிகைப் பட்டை |
| சரிகைச் சோமன் பாகை | தலைப்பாகை |
| சரிகைத்தறி நெசவாளர் | நெசவாளர் வகையினர் |
| சரியுடை | காலுறை |
| சரும ஆடை | தோலாடை |
| சரும சன்னாயம் | இலேசான இருப்புக் கவசம் |
| சருவந்து | தலைக் கவசம் |
| சல்லடம் | இடுப்பினின்று அடித்தொடைவரைத் தரிக்கும் காற்சட்டை, மடி |
| சல்லா | மெல்லிய துணிவகை |
| சல்லாச் சேலை | சேலை வகை |
| சல்லாரி | அலசற் சீலை |
| சலவை | ஆடை வெளுக்கை, வெளுத்த துணி, சல்லா, சால்வை |
| சலாத்தி | திரைச்சீலை |
| சலங்கட்டுதல் | சவத்தை ஆடையால் மூடி மூன்று சிறு துண்டுகளாற் கட்டுதல் |
| சவரிமெத்தை | தென்னை நாரை அடைத்துச்செய்த மெத்தை வகை |
| சவளி | வேட்டி சீலை முதலிய துணிச் சரக்கு· |
| சவளைக்காரர் | திருநெல்வேலி ஜில்லாவில் நெசவுத் தொழில் செய்யும் ஒரு சாதியார் |
| சவுக்கம் | உறுமால் |

| | |
|---|---|
| சவுக்களி | எட்டுப் புடைவை கொண்ட நீண்ட துணி, ஒருவகைப் புடைவை |
| சன்னக்கம்பி | ஆடையின் சிறு கரைக்கோடு |
| சன்னச் சவுக்களி | நல்லாடைவகை |
| சன்ன சிலம்புரி | புடைவை வகை |
| சன்னத்தன் | கவசம் பூண்டவன் |
| சன்ன நூல் | மெல்லிதான நூல் |
| சன்னப் புட்டாணி | மகளிர் புடைவை வகை |
| சன்ன வாழைப்பூ | மகளிர் புடைவை வகை |
| சன்ன விசிறி | மகளிர் புடைவை வகை |
| சாக்கு | சட்டைப்பை |
| சாடி | சீலை |
| சாண்சீலை | சிறுசீலை |
| சாணிச்சுருளை | சாணமிட்டு மெழுகுதற்கு உரிய துணிக்கற்றை |
| சாணை | சாணச் சீலை |
| சாணைக் கூறை | குழந்தைக்ளுக்கு மணம் பேசிச் செய்யும் நிச்சயதார்த்தத்தில் பெண்ணுக்குக் கொடுக்கும் புதிய சிற்றாடை |
| சாணைச்சீலை | கைக் குழந்தைகளை மூடிப் பொதியும் சீலை |
| சாத்துக் கூறை | திருப்பரிவட்டம் |
| சாத்துதல் | அணிதல், தரித்தல் |
| சாத்துப்படி | கோயில் விக்கிரகங்கட்குச் செய்யும் அலங்காரம் |
| சாத்து வகை | தெய்வத்திற்குச் சாத்தும் ஆடை முதலியவை |
| சாதரா | உயர்ந்த சால்வை |
| சாம்பு | 18 முழம் கொண்ட புடைவை |
| சாயக்கொண்டை | உற்சவமூர்த்திக்குச் சிவப்பு அல்லது நீலநிறப் பட்டாடையால் சிரசில் முடிபோல் அமைக்கப்படும் கொண்டை |
| சாயம் | நூல் முதலியவற்றிற்கு ஊட்டும் வர்ணம் |
| சாயம் பிடித்தல் | சாயம் தோய்த்தல் |

| | |
|---|---|
| சாயவேட்டி | சாயமேற்றிய ஆடை |
| சார்வாரம் | கச்சின் தலைப்பு, கச்சின் கடைக்கயிறு |
| சாரி | மாதர் சீலை வகை |
| சாரிகை | கவசம் |
| சால்வை | மயிர்க்கம்பளம் |
| சால்வையெடுத்தல் | மரியாதையாக மேல்வேட்டியை எடுத்தல் |
| சாலர் | அலங்காரத் தொங்கல் |
| சாலிகத்தறி | வரி வகை |
| சாலிகன் | சாலியன், சாலியன் நெய்த ஆடை |
| சாலிகை | கவசம் |
| சாலியன் | நெசவுச் சாதி வகையான், ஆடை |
| சாலியான் கூறை | விவாகத்தில் மணமகள் உடுத்தும் கூறைப் புடைவை வகை, சேலை வகை |
| சாலேயம் | கம்பளித்துண்டு |
| சிக்கு | நூல் முதலியவற்றின் சிக்கு |
| சிங்கார கண்டி | நெடுங்கோடு கொண்ட புடைவை வகை |
| சிங்காரக் காரன் | அலங்கார உடையுள்ளவன் |
| சிங்காரத் தாட்டுப்பத்தரி | சேலை வகை |
| சிட்டை | ஆடைக் கரை வகை |
| சித்தகம் | தலைச்சீரா |
| சித்தல் | சீலை |
| சித்திரக் கம்பி | துகில் வகை |
| சித்திர தண்டகம் | பருத்தி |
| சித்திரப்படம் | பூந்துகில், படம் போட்ட உறை |
| சித்திரப்படாம் | சித்திரப்புடைவை |
| சித்திரப் புடைவை | அச்சடித்த சீலை, சித்திரவேலைப் பாடுடைய புடைவை |
| சித்திர வர்ணச் சேலை | புடைவை வகை |
| சித்திராசனம் | ஆசனமாக உபயோகிக்கும் சிறிய இரத்தினக் கம்பளம் |
| சித்திரிகை | நல்லாடை வகை |
| சித்திலிகை | அச்சடிச் சீலை |
| சிதர்தல் | நைதல் |
| சிதர் | கந்தை |

| | |
|---|---|
| சிதர்வை | நைந்து அற்றுப்போன சீரை |
| சிதலை | துணி |
| சிதவல் | கந்தைத் துணி |
| சிதவலர் | கிழிந்த் துண்டு, தலைப்பாகை அணிந்தவர் |
| சிதவற்றுணி | சிதார் |
| சிதார் | சீலை |
| சிப்பியன் | தையற்காரன் |
| சிம்பல் | துணியில் சிம்பு |
| சிம்பல் சிலும்பல் | சிம்பல், கந்தை |
| சிம்புவி | சிம்பு, செவ்வாடை, செம்படாம் |
| சிரகம் | தலைச்சீரா |
| சிராய் | காற்சட்டை |
| சிரோவேட்டம் | தலைப்பாகை |
| சில் | ஓட்டுச் சீலை |
| சில்லத்து | சிறுசட்டை |
| சில்லிகை | நல்லாடைவகை, துகில் வகை |
| சிலம்புரி | ஒருவகைச் சீமைத் துணி |
| சிலும்பல் | சீலை முதலியவற்றின் கரடு, துணி முதலியவற்றின் பீறல் |
| சிலுவல் | கந்தை |
| சிவராயன் | துணிவகை |
| சிவளிகைக் கச்சு | உடைமேற்கட்டும் கச்சு |
| சிற்றில் | சிறுதுகில் |
| சிற்றாடை | சிறிய ஆடை, பெண்ணின் ஆடை |
| சிற்றாடைத் தொட்டில் | தொட்டில் |
| சிற்றுள்ளங்கி | உட்சட்டையின்மேல்இடும்சிறுசட்டை |
| சிற்றுள்ளாடை | ஒருவகை உள்ளாடை |
| சிறப்பாகு | தலைப்பாகை |
| சிறுகடலை புட்டாணி | சேலைவகை |
| சிறுகாம்பன்சேலை | எழுத்து சிற்றாடை |
| சிறுதுகில் | கந்தை |
| சிறுதையல் | நுண்ணிய தையற்றொழில் |
| சினேக பொட்டணம் | மருந்துகளை அடக்கி எண்ணெயிற் தோய்த்து உடலில் வலிக்கு ஒத்தடம் கொடுக்கும் துணி முடிப்பு |

| | |
|---|---|
| சீட்டி | அச்சடித் துணி, துணிவகை |
| சீத்தை | சீட்டி |
| சீப்பு | நெய்தற் கருவியுள் ஓர் உறுப்பு |
| சீமைத்துணி | பிறதேசத்திலிருந்து இறக்குமதி செய்யப்படும் துணி |
| சீம்புநூல் | பட்டைநூல் |
| சீர்தாட்டுப் பத்திரி | சேலை வகை |
| சீர்மரம் | படமரம் என்னும் நெசவுக் கருவி |
| சீர்வண்டு | நெய்வார் கருவியுள் ஒன்று |
| சீரணி | பந்தத்தில் எரிதற்குச் சுற்றும் துணி |
| சீரம் | மரவுரி |
| சீரமோடா | சீரம், நார்ச்சீலை |
| சீரா | கவசம், தலைச்சீரா |
| சீரி | முக்காடு, சீரை |
| சீருடை | நேரிய உடை (uniform) |
| சீரை | மரவுரி |
| சீரைக் குடில் | கூடாரம் |
| சீரையுடுக்கை | மரனாருடுக்கை |
| சீலை | துணி,புடைவை,இரண்டேகால் முழத் துணி, கோவணம் |
| சீலை கொடுத்தல் | விதவைக்குப் புடவை கொடுத்து அவளை மணம் புரிதல் |
| சீலைத் துணி | சிறு துண்டு, ஆடை, அலங்காரத்துணி |
| சீலை நாட்டுதல் | குட்டிபால்முடியாதிருக்கும்பொருட்டு ஆட்டு மடியில் துணி கட்டுதல் |
| சீலைப் பிள்ளை | சீலையினாற் செய்த பொம்மை |
| சீலைப்பேன் | சீலையிற் பற்றும் பேன் |
| சீலை மண் | மருந்து சட்டி வாயினிற் சுற்றுந் துணி மேலிடும் மண்பூச்சு |
| சீலை வாங்கியுடுத்தல் | விதவை ஒருவனிடமிருந்து புடைவை பெற்று அவனை மணம் புரிதல் |
| சீவ | நூல்நூற்கும் றாட்டின் பகுதி |
| சீவரம் | துவராடை |
| சீவாரம் | பௌத்த பிட்சுக்கள் அணியும் துவருட்டின ஆடை |
| சீனத்துப் பட்டு | சீனத்து சரக்கு, பட்டு |

| | |
|---|---|
| சீனாச் சுருள் | சீனப்பட்டு |
| சுக்கடித்தம் | அழுத்தமான புடைவை |
| சுங்கடி | சாயமிடப் பெற்ற ஒருவகைச் சீலை |
| சுங்கு | ஆடையில் தொங்கவிட்டுக் கட்டும் மூலை ஆடையின் கொய்சகம் |
| சுடுவு | சும்மாடு |
| சுண்டப் பிடித்தல் | ஆடையை அளக்கஇழுத்துப்பிடித்தல் |
| சுண்டு கட்டை | நெசவுக் கருவி |
| சுண்ணம் | துகில் வகை |
| சுண்ணமிடல் | சுண்ணமூட்டல் |
| சுந்தரவாழைப்பூ | சேலை வகை |
| சும்மாடு | சுமையடை |
| சுமடு | சும்மாடு |
| சுரிகை | கவசம் |
| சுருக்குக் கஞ்சிகை | திரை |
| சுருக்குப்பை | வாயைச் சுருக்கக் கூடிய தையற்பை |
| சுருட்டுப் பட்டு | உயர்ந்த பட்டு வகை |
| சுவேதாம்பரர் | வெள்ளாடை தரித்த சைன முனிவர் |
| சுளைப்பிடாம் | கம்பளி |
| சுற்றல் | உடுத்தல் |
| சுற்றுதல் | உடுத்துதல் |
| சூசி | மெல்லிய கரையுள்ள துணி வகை |
| சூசிகன் | தையற்காரன் |
| சூசு | பாதரட்சை |
| சூடி | சீலை |
| சூதிமம் | தைக்கை |
| சூரணவர்ணம் | புடைவை வகை |
| சூரத்துத் தாட்டுப்பத்தரி | சேலை வகை |
| சூரத்து விசிறி | சேலைவகை |
| சூரியகாந்தி | சூரியகாந்திப்பட்டு, ஒருவகைக்கெட்டியானபட்டு |
| சூரியபடம் | சூரியகாந்திப்பட்டு |
| சூல் | யானை, குதிரை முதலியவற்றுக்கு இடும் அலங்காரப் போர்வை |
| சூழி | முகபடாம் |
| செக்குத்துணி | சீலைவகை |

| | |
|---|---|
| செங்கற்சீரை | காவித்துணி |
| செங்குந்தர் | நெசவாளர்வகை |
| செப்பு | ஆடைவட்டி |
| செப்புமலை | கஷாய உடை |
| செம்பிஞ்சு | பருத்திவகை |
| செம்படம் | செப்புமலை |
| செம்படர் | செம்படாம் போர்த்த பௌத்தர் |
| செம்படாம் | சிவந்த ஆடை |
| செம்பாளி | செய்படவர் தரிக்கும் செருப்பு வகை |
| செம்முதல் | சீலை மண் கட்டுதல் |
| செயற்கையிழைத்துணி | கரி முதலியவற்றால் இன்று உருவாக்கப்படும் செயற்கையிழைத் துணி |
| செல்லப்பிள்ளை வேட்டி | சிறுவர் அணியும் சிற்றுடை |
| சேங்குட்டைக்குறி | சேங்கொட்டைப் பாலால் இடும் அடைக்குறி |
| சேடன் | நெசவு நெய்யும் சேணியன் என்னும் வகையான் |
| சேப்பு | சட்டைப்பை |
| சேர்வை | சீலையிற் பூசியிடும் மருந்து |
| சேர்வைச்சீலை | காரச்சீலை |
| சேலம் | ஆடை |
| சேலை | மகளிர் சீலை, முழுத்துணியின் பாதி |
| சேலைபோடுதல் | கைம்பெண்ணானவட்குக் கோடி போடுதல் |
| சேவணம் | தைக்கை |
| சேணியர் | ஆடைத் தொழிலாளரில் ஒருவகையினர் |
| சேணையங்காடிகள் | அறுவை வாணிகருள் ஒருவகையினர் |
| சைலா | நீண்ட அங்கி, பட்டுத் தலைப்பாகை வகை |
| சைலாஸ் துணி | முகமதியருடுத்தும் கைலித் துணி |
| சொக்கட்டான் | சொக்கட்டான் சீலை |
| சொக்கட்டான் கண்டாங்கி | சேலை வகை |
| சொக்கட்டான் சீலை | விளையாடுதற்கென்றுசொக்கட்டான் கட்டங்கள் வரையப்பட்டகிழிச்சீலை, ஒருவகைப் புடைவை |

| | |
|---|---|
| சொக்கா | சொக்காய் |
| சொக்காய் | சட்டை |
| சொருகு தலைப்பு | சீலையின் உள்ளிடமான தலைப்பு |
| சொருகு முந்தானை | புடைவையின் சொருகு தலைப்பு |
| சோட்டுப் பப்பளி | சேலைவகை |
| சோடம் | முலைக் கச்சு வகை |
| சோடல் | புடைவை |
| சோடினைக்காரன் | நாடகம் நடிப்போர்க்கு உடைகளை ஆயத்தம் செய்பவன் |
| சோடினைக் கட்டுதல் | நாடகம் நடித்தற்கு வேண்டிய உடை உடுத்தல் |
| சோடு | காற்கவசம், கவசம் |
| சோமன் | வஸ்திரம், வேட்டிக்கு மேலும் துப்பட்டிக்குக் கீழுமாக உடுத்தும் ஆடை, பரவர் அணியும் அலங்கார ஆடை, அங்கி, முத்தங்கி, சட்டை |
| சோமன் உத்தரீயம் | உடுவேட்டி, தோள்வேட்டி |
| சோமன் சாம்பு | பலதுணிகள் கொண்ட தறி வஸ்திரம் |
| சோமன் சோடி | பத்தாறு என வழங்கும் இரட்டை ஆடை |
| சோமன் சோடு | சோமன் சோடி |
| சோமன் மடி | சோமன் சாம்பு |
| சோலி | ரவிக்கை வகை |
| சோலிகன் | நெசவாளர் இனத்தார் |
| சோளி | சோளிகை |
| சோளிகை | பிச்சைக்காரனது பை |
| சௌராஷ்டிரர் | பட்டு நூற்காரச் சாதியார் |
| ஞான ஸ்நான குல்லா | கிறிஸ்தவர் குழந்தைக்குப் பேரிடும் போது போடும் சட்டை |
| டக்குத் தையல் | ஒட்டுத் தையல் |
| டக்குப் பிடித்தல் | சட்டை முதலியவற்றில் மடிப்பு வைத்துத் தைத்தல் |
| டப்பஞ்சு | பகட்டுக் கரையுள்ள வேஷ்டி |
| டப்பாக் கரை | ஆடையின் அகன்ற பகட்டுக் கரை |
| டோரியாசூரத்துமுக்கி | சேலைவகை |
| தகடி | பீதாம்பரம் |

| | |
|---|---|
| தகை | கவசம் |
| தங்கவாழைப்பூ | புடைவை வகை |
| தசதானம் | ஆடையுடன் கூடிய பத்து வகைத் தானங்கள் |
| தசனம் | கவசம் |
| தட்டுடை | தட்டாடை |
| தட்டுப் போடுதல் | இருவர்பற்றிய விளிம்பு கொண்ட சீலையால் மீன் பிடித்தல் |
| தட்டுப் பாடல் | தட்டி மினுக்கின புடைவை |
| தடவு பருத்தி | பருத்தி வகை |
| தடுக்கு வேஷ்டி | நடக்கும் போது காலில் தடுக்கும் உடை |
| தடைமரம் | நெய்த துணியைச் சுருட்டுதற்குத் தறியில் அமைக்கப்பட்ட குறுக்குச் சட்டம் |
| தத்தியம் | துகில்வகை |
| தந்திக் கம்பி | புடைவை வகை |
| தந்தியூசி வண்ணச் சேலை | கம்பியூசி போலும் மெல்லிய கோடுகள் அமைக்கப்பெற்ற புடைவை வகை |
| தந்திரவாயன் | நெசவுக்காரன் |
| தந்திவண்ணம் | தந்தியூசி வணணச் சேலை |
| தந்துவாயர் | நூலால் செய்யும் தொழிலை உடையோர் |
| தப்புதல் | துவைத்தல் |
| தம்பம் | கவசம் |
| தமயந்திவிசிறி | சீலைவகை |
| தமான் | காற்சட்டை, மூர் என்னும் சாதியார் அணியும் அங்கி வகை |
| தமிழ வண்ணான் | உயர்சாதியார்க்கு வெளுக்கும் வண்ணான் |
| தய்யான் | தையற்காரன் |
| தரம் | பருத்திப் பொதி |
| தரித்தல் | அணிதல் |
| தருசு | நெருங்கின இழை |
| தலைக்கட்டு | தலைப்பாகை, கருமாதியிறுதியில் தலைப்பாகை கட்டும் சடங்கு |

| | |
|---|---|
| தலைக்கருவி | தலைச்சீரா |
| தலைக்கீடு | தலைப்பாகை |
| தலைக்குட்டை | தலைப்பாகை |
| தலைக்கோடி | மணமகனுக்குத் தலையோணத்தன்று கொடுக்கும் புது வேஷ்டி |
| தலைச்சாத்து | தலைப்பாகை |
| தலைச்சீரா | தலைக்கவசம் |
| தலைச்சீலை | தலைச் சாத்து, மேலாடை |
| தலைச்சோடு | தலைச்சீரா |
| தலைச்சீராணம் | தலைச்சீரா |
| தலைப்பா | தலைப்பாகை |
| தலைப்பாக் கட்டுதல் | கருமாதி முடிவில் நடத்தும் சுப சுவீகாரச் சடங்கில் தலைப்பாகையைக் கட்டுதல் |
| தலைப்பாகு | தலைப்பாகை |
| தலைப்பாகை | தலையிற் கட்டும் துணி |
| தலைப்பு | முன்றானை, சீலை விளிம்பு |
| தலைமுண்டு | மேலாடை |
| தலையாணை | தலையணை |
| தவச்சட்டை | முரட்டுத் துணியாலான போர்வை |
| தவிசு | அணை |
| தவிட்டுப் பொட்டு | ஆடைகளின் பூச்சயரிப்பு |
| தவுதயம் | வெண்டுகில் |
| தழை | தழையுடை |
| தழைத்தானை | தழையுடை |
| தழைத்துகில் | தழையுடை |
| தழையணி | தழையுடை |
| தழையுடை | தழையாலான மகளிருடை |
| தற்றுதல் | இறுக உடுத்தல் |
| தறி | நெய்வதற்குரிய எந்திரம் |
| தறிக் கூறை | நெசவுவரி வகை |
| தறிப்புடவை | ஒரு பழைய நெசவு வரி |
| தறியிறை | நெசவு வரிவகை |
| தளிமம் | மெத்தை |
| தறுதல் | இறுக உடுத்தல |
| தறுசு | இழைக்குளிர்ச்சி |

| | |
|---|---|
| தனிப்பட்டு | சுத்தப்பட்டு |
| தனியா | அரைக்சச்டை |
| தனுத்திரம் | கவசம் |
| தனுவாரம் | போகக் கவசம் |
| தாங்குதல் | போர்த்தல், உடுத்தல் |
| தாச்சீலை | தாய்ச்சீலை |
| தாட்டு | ஆடைவகை |
| தாட்டுப் பத்திரி | சேலைவகை |
| தாந்துவிகன் | தையற்காரன் |
| தாபிகா | பட்டாடை |
| தாய்ச்சீலை | கோவணம் |
| தார் | முளைக் கம்பில் தார்சுற்றல் |
| தார்க்கம்பு | தார்க்குச்சி |
| தார்க்குச்சி | நெய்தற்கு உண்டை நூல் சுற்றிய சிறு நாணல், கொறுக்கை முதலியவற்றின் கொற்றி |
| தார்சுற்றல் | தார்நூற்றல்; தார் திரித்தல் |
| தார்ப்பாய்ச்சல் | மூலைக் கச்சம் |
| தார்ப்பாய்ச்சுதல் | மூலைக்கச்சம் கட்டுதல் |
| தாரி ராட்டினம் | தார் நூல் சுற்றும் இயந்திரம் |
| தாரின் வாழ்வான் | நெய்தற் றொழிலாளன் |
| தாரை | ஆடையின் விலக்கிழை |
| தாரைகவணி | கோடுள்ள துகில் வகை |
| தாரைப்பட்டு | கோடுகள் அமைந்த பட்டுவகை |
| தாவணி | சிறு பெண்கள் சட்டைமேல் அணியும் மேலாடை, பிரேதத்தின் மேல் இடும் துணியிலிருந்து சுற்றத்தார் ஞாபகார்த்தமாகக் கொள்ளும் சிறுதுண்டு, குதிரையின் மேலாடை |
| தாவர இழை | பருத்தி, நார் போன்ற இழைகள், தாய்ச்சீலை, கோவணம், லங்கோடு |
| தாழம்பூச் சேலை | புடைவை வகை |
| தாள் | சட்டைக் கயிறு |
| தாறு | உண்டை நூல் சுற்றும் கருவி, தாறு கண்டு, தாறு சுற்றுதல் |
| தாறு பாய்ச்சிக் கட்டுதல் | மூலைக் கச்சம் கட்டுதல் |
| தான் | முழத் துணிக் கச்சை |

| | |
|---|---|
| தானை | ஆடை |
| திகம்பரன் | நிர்வாண சந்நியாசி, ஆடையணியாதவன் |
| திட்டிச் சீலை | அரசர் முன்பு இட்டு வணங்க உதவும் சிறு பட்டுச் சீலை |
| திரியேற்றுதல் | புண் முதலியவற்றில் காரச்சீலையிடுதல் |
| திருக்கு | ஒருவகைத் துயில் |
| திருக்குகம் | புடைவை |
| திருக்கொசகம் | கொய்சகம் |
| திருகுவட்டம் | நூல் சுற்றும் கருவி வகை |
| திருத்துதல் | ஆடை செவ்விதாக்குதல், செம்மை பெற அணிதல் |
| திருப்பரிசட்டம் | கோயில் மூர்த்திக்குச் சாத்தும் ஆடை |
| திருப்பரிவட்டம் | தெய்வத்திற்குச் சாத்தும்ஆடை, கோயில் மரியாதையாகப் பெரியோர் தலையில் சுற்றப்படும் ஆடை |
| திருப்பவித்திரமாலை | கோயில்கட்குச் சாத்தப்பெற்று வைஷ்ணவர் அணியும் பட்டு முடிச்சு மாலை |
| திருப்பாவாடை | நிவேதனம் படைக்கும் வஸ்திரம், ஆடைமேல் கோயில் மூர்த்திக்குப் படைக்கும் பெரிய நிவேதனம். |
| திருப்போர்வை | கிறிஸ்துவ மதபோதகரின் உடை வகை |
| திருமந்திரக்கொடி | கொடிச் சீலை |
| திருமுடிச் சாத்து | தலைப்பாகை |
| திரை | திரைச்சீலை |
| திரைச்சீலை | இடுதிரை |
| திரைசல் | குயவன் மட்பாண்டத்தை மழமழப்புச் செய்ய உபயோகிக்கும் சிறுசீலை |
| தீற்றுதல் | ஆடையைச் சுருக்கெடுத்து மெதுவாக்குதல் |
| துக்கச் சல்லா | துக்க அடையாளமாகக் கட்டிக் கொள்ளும் கறுப்புத் துணி |

| | |
|---|---|
| துகில் | நல்லாடை |
| துகில்விரி | துகில் ஆடை |
| துகிலிகை | துகிற்கொடி |
| துகிற்கிழி | துகில் |
| துகிற்கொடி | ஆடையாலியன்ற கொடி |
| துகிற்பதாகை | துகிற்கொடி |
| துகிற்போர்வை | போர்வை வகை |
| துகின்மனை | கூடாரம் |
| துகின் முடித்தல் | தலைப்பாகை கட்டுதல் |
| துகின் முடி | தலைப்பாகை |
| துகினூல் | வெண்ணூல் |
| துகூலம் | வெண்பட்டு, நொய்ய புடைவை |
| துண்டசேரி | பருத்தி |
| துண்டம் | சிறு துணி |
| துண்டு | சிறு துணி |
| துணி | சிறு துணி |
| துணி | துணிச்சிதர், தொங்கல், மரவுரி |
| துணி தாண்டுதல் | ஆடையைத் தாண்டுதல், சத்தியம் பண்ணுதல் |
| துணிப்பந்தம் | கிழிச்சீலையாலாகிய தீவட்டி |
| துத்தாரி | ஆடைவகை |
| துத்திப்பட்டு | துகில்வகை |
| துத்துக் கம்பளி | கம்பளிப் போர்வை |
| துத்துக் கல் | நெசவுக்கருவியுள் ஒன்று |
| துப்பட்டா | மேலுக்கு அணியும் விலையயர்ந்த நல்லாடை |
| துப்பட்டி | குளிருக்காகப் போர்த்திக் கொள்ளும் துணிப்போர்வை, விழாக் காலங்களில் பரவமகளிர் போர்த்துக் கொள்ளும் போர்வை, மேல் விரிப்பு, மேசைத் துப்பட்டி, 16 முழம் உடைய துணி |
| தும்பு | துணி |
| தும்பு வெட்டு | ஆடையின் ஓரத்தைக் கத்தரிக்கை |
| துய் | பஞ்சின் மெல்லிய பகுதி |
| துய்யா | திரைகளின் ஓரத்தில் அமைக்கப்படும் அலங்காரப் பின்னல் வகை |

| | |
|---|---|
| துய்யாப் பட்டை | போலிச் சரிகை |
| துயில் | துகில், ஆடை |
| துயிலி | தஞ்சாவூர் ஜில்லாவில் துயிலி என்ற ஊரில் நெய்யப்படும் நல்லாடை வகை |
| துரீ | பாவாற்றி |
| துரும்பன் | கீழ்ச் சாதிகளுக்கு வெளுக்கும் வண்ணரன் |
| துல்லியம் | துல்லியமான ஆடை |
| துவக்கூசி | தோல் தைக்கும் ஊசி |
| துவசம் | பெருங்கொடி |
| துவண்டை | காஷாயம் தோய்த்த புடைவை |
| துவர்த்து | துவர்த்து முண்டு, 20 நம்பர் நூலில் செய்தல் |
| துவர்த்துதல் | ஈரம் துவட்டுதல் |
| துவர்ப்பிடித்தல் | தடுத்திடுமாறு ஆடையைப் பிடித்தல் |
| துவராடை | காவியூட்டிய ஆடை, கடுக்காய் சாயம் போட்டு வரும் ஆடை, துவைத்த ஆடை |
| துவறாதல் | புதிய ஆடை கசங்குதல் |
| துவாலை | துணித்துண்டு |
| துவைத்தல் | ஆடையைத் தோய்தல் |
| துறை | வண்ணான் ஒலிக்கும் இடம் |
| துறைப் பொங்கல் | வண்ணார் தங்கள் துறையில் நடத்தும் பொங்கற் பண்டிகை |
| துன்னகாரா | தையற்காரர் |
| துன்னநாயகர் | துன்னகாரர் |
| துன்னம் | தையல் |
| துன்னம் பெய்தல் | கைத்தலைக் கொள்ளுதல் |
| துன்னர் | தையற்காரர் |
| துன்னல் | தையல் |
| துன்னவினைஞர் | தையற்காரர் |
| துன்னாரம் | தைத்தற்றொழில் |
| துன்னுதல் | தைத்தல் |
| துன்னூசி | தையலூசி |
| தூசர் | வண்ணார் |

| | |
|---|---|
| தூசி | புழுதிபடியாதபடி தடுக்கும் மேல் மறைப்பு, அழுக்கினைத் தாங்க உடையின் மேல்கட்டும் துண்டுப் புடைவை |
| தூசு | ஆடை, பஞ்சு |
| தூட்டி | வஸ்திரம் |
| தூதைகூலம் | பஞ்சுபின்னும் வில் |
| தூமம் | ஆடைக்கிடும் புகை |
| தூரியம் | துகில்வகை |
| தூவகம் | பருத்தி |
| தூரகத் தறி | நெசவு வரி வகை |
| தூலபிசு | பருத்தி |
| தூலை | பருத்தி |
| தெத்தபடம் | எரிபட்ட துணி |
| தெலுங்குக் கட்டு | மாம்பழக் கட்டு |
| தெலுங்குச் சிற்றாடை | தெலுங்குக் கட்டு |
| தேசூரஞ்சு | வேஷ்டியின் ஓரத்தில் அமைக்கும் கார வகை, தேசூரான் வேஷ்டி |
| தேசூரான் வேஷ்டி | காஞ்சிபுரம் பட்டுக்கரை வேஷ்டி |
| தேர்ச்சீலை | தேரை அலங்கரிக்கக் கட்டும் சீலை |
| தேர்ப்பாவு | நெய்யும் போது தேர் நெய்யும் நசை வரல் |
| தேவ்கிரி | துகில் வகை |
| தேவரங்கம் | தேவராங்கம், பனிப்புடைவை |
| தேவாங்கம் | தூசு |
| தேவாங்கு | துகில்வகை |
| தை | தைத்தல் |
| தைஇ | உடை அணிதல் |
| தைச்சுப் போடல் | தைத்தலின் வழக்குச்சொல் |
| தைத்தல் | தைத்தல், உடுத்துதல் |
| தைப்பான் | தையற்காரன் |
| தையல் | தைப்பு, தையல் வேலை அலங்காரத், துணி |
| தையலூசி | தைத்தற்குரிய ஊசி |
| தையான் | தையற்காரன் |
| தொங்கட்டான் | உடையைத் தளர்வாகக் கட்டுகை |
| தொங்கல் | தொங்கவிட்டுள்ள ஆடை முந்தி, பிணத்தை நீராட்டக் கொண்டுவரும் நீர்க் குடங்களின் மீது பிடிக்கப்படும் துணி, பெண்களின் மேலாக்குச்சீலை |

| | |
|---|---|
| தொங்கல் போடுதல் | மேலாக்கிடுதல் |
| தொட்டில் முண்டு | தொட்டில் சீலை |
| தொட்டில் சீலை | குழந்தைத் தொட்டிலுக்கு உபயோகப் படுத்தும் துணி வகை |
| தொட்டுக்கொண்டு போதல் | பிரேதச் சடங்கில் துணி மூலைப் பிடித்தல் |
| தொடை | பின்னுகை |
| தொப்பாரம் | முகமூடிவகை |
| தொம்பைமாலை | தேர் முதலியவற்றின் ஆடைத் தொங்கல்வகை |
| தோ | கொய்சகம் |
| தோக்குளம் | பருத்தி |
| தோக்கை | முன்றானை, சீலை, மேற்போர்வை, கொய்சகம் |
| தோகை | முன்றானை, கொய்சகம் |
| தோட்பட்டி | அங்கியின் தோட்பாகம் |
| தோ்தவத்தி | சுத்தவஸ்திரம் |
| தோம்தரா | கொசுகுவலை |
| தோம்புச் சீலை | சிவப்புச் சீலை |
| தோரணம் | நூல்நூற்கும் ராட்டின் பகுதி |
| தோலாடை | தோலினால் செய்யப்பட்ட ஆடை |
| தோவத்தி | ஆண்மக்களின் அரையாடை |
| தோற்கவசம் | தோலால் அமைந்த கவசம் |
| தோற்கைத் தாளம் | முன்கையில் அணியும் தோற்கவசம் |
| தோற்றம் கரத்தல் | வேறுஆடை யுடுத்திச் செல்லல் |
| தௌதம் | துவைத்த ஆடை |
| நக்கி | ஆடைதிரைமுதலியவற்றின்ஓரங்களில் அலங்காரமாக அமைக்கப்படும் பின்னல் |
| நகம் | வெற்றிலை கிள்ளும்போது அணியும் விரலுறை |
| நசிதல் | திரைதல், நசிந்த புடவை |
| நட்சத்திரப் பப்பளி | புடைவை வகை |
| நடுக்கட்டு | அரைக்கச்சை |
| நடபாவாடை | நடைபாவாடை |
| நடைப்படம் | நடைப்படாம் |

| | |
|---|---|
| நடைப்படாம் | நடைபாவாடை |
| நடைபடம் | நடைபாவாடை |
| நடைபாவாடை | நடத்தற்பொருட்டு வழியில் விரிக்கும் ஆடை |
| நடைமாற்று | நடைபாவாடை |
| நடையுடைபாவனை | மக்களின் பழக்க வொழுக்கம் முதலியன |
| நமுடு | முடிச்சு |
| நல்லாடை | சிறந்த துகில் |
| நவரங்கப்பப்பளி | புடைவை வகை |
| நற்புறம் | சீட்டித் துணிகளிலும், கடிதங்களிலும் அச்சிட்ட வடிவம் செம்மையாகத் தோன்றும் படிவம் |
| நன்னிநூல் | துணியின் நூற்குறை |
| நாகம் | நற்றூசு |
| நாகமடிபட்டு | பட்டாடைவகை |
| நாக மோடிச் சேலை | நாகக் கோடு இட்ட சேலை வகை |
| நாகமோடி வேஷ்டி | நாகக் கோடு இட்ட வேஷ்டி |
| நாட்கொடி | நாளையறிவித்தற்கு, அரசன் வாகை செய்த வெற்றிக்கு அறிகுறியாகக் கட்டும் துவசம் |
| நாடன்பருத்தி | பருத்தி வகை |
| நாடா | நெசவுக் கருவி வகை |
| நாணயப் புடைவை | உயர்ந்த சீலை |
| நார்ச்சீலை | மரவுரி, நார்மடி |
| நார்ப்பட்டு | நார்மடி, வலைக்கோணி |
| நார்மடி | பட்டாடை போல்வதும் நாராற் செய்வதுமான ஆடைவகை |
| நாவி | கந்தைத் துணி |
| நிசார் | நீண்ட காற்சட்டை |
| நிசுலகம் | மார்புக் கவசம் |
| நிரடு | இரண்டு இழைகளைச் சேர்த்து முடிந்தால் அது நிரடு |
| நிர்வாணி | உடையில்லாதவன் |
| நிருவாணி | உடையற்றவன் |
| நிலப்பாவாடை | நடைபாவாடை |

| | |
|---|---|
| நிலையங்கி | முகம்மதியர் அணியும் நீண்டசட்டை, விக்கிரகத்திற்குச் சாத்தும் கவசம் |
| நிவசனம் | ஆடை |
| நிவேதனப் பாவாடை | கடவுளுக்கு இடும் பெரும்படைப்பு |
| நிழற்பாவை | திரைச்சீலையில் சாயை விழும்படி வைத்து ஆட்டும் பாவை |
| நிஜார் | காற்சட்டை |
| நீசல் | நீர்ச்சீலை, கௌபீனம் |
| நீட்டுப்பை | சுருக்கி விரிக்கக் கூடிய தையற்பை |
| நீர்க்காவி | அடிக்கடி துவைத்து ஈரந்தங்க வைத்தலால் ஆடையிற் பற்றும் செந்நிறம் |
| நீர்க்கோலம் | மகளிர் விளையாட்டிற்குக் கொள்ளும் கோலவகை |
| நீர்ச்சலவை | துணிகளை வெள்ளாவி வையாது வெளுக்கை |
| நீர்ச்சீலை | கோவணம் |
| நீலப்புடவை | காங்குச் சீலை |
| நீலங்கட்டுதல் | நீலச் சாயம் தோய்த்தல் |
| நீலச்சால் | நீலச்சாயம் ஊறவைக்கும் சால் |
| நீலந் தீர்தல் | நீலச்சாயம் தோய்தல் |
| நீலம் | ஆடைவகை |
| நீலமிடல் | நீலமூட்டல், நீலம் பற்றவைத்தல் |
| நீலவண்ணான் | சாயக்காரன் |
| நீஷி | ஆடைவகை, கொய்சகம், உடுத்தும் போது முடியும் முடிச்சு |
| நீவியம் | நீவி |
| நீவுதல் | பூசுதல் |
| நுண்டுகில் | துகிலீ, பட்டாடைவகை |
| நுதித்தல் | நுதி, அடைசுதலீ |
| நூல் | பஞ்சிநூல்; பூணூல் |
| நூல் சுற்றல் | நூல்நூற்றல், நூல் திரித்தல் |
| நூல்தல் | நூலிழை யுண்டாக்குகை, நூல் பதனிடுதல், நூல் நிமிண்டுதல், நூல் பிடித்தல், நூல் புடைத்தல், நூல் போடுதல், நூல் விலக்கு, நூலிழைத்தல் |
| நூல்நாழிகை | ஊடைகுழல் |
| நூலச்சு | நெசவுக் கருவியின் உறுப்புவகை |
| நூலாக் கலிங்கம் | பட்டாடை |

| | |
|---|---|
| நூலாயம் | வரிவகை |
| நூற்கண்டு | நூற்பந்து, நூற்கழி, நூற்குச்சு, நூற்குஞ்சம், நூற்சரடு, நூற்சுருள், நூற்றார், நூனாழி, நூனாழிகை |
| நூற்கலிங்கம் | துகில் |
| நூற்கழி | நூல் சுற்றிய கழி |
| நெசவு | நெய்தற் றொழில், நெசவின் இழையமைப்பு |
| நெசவுக்காரன் | நெய்வோன் |
| நெஞ்சுப்படி | சட்டை |
| நெடுஞ்சட்டை | நீண்ட அங்கி |
| நெடுமுழக் கச்சை | ஒரு கஜம் அல்லது அதற்கு மேற்பட்ட கச்சைத் துணி |
| நெடுமுழம் | புடைவை வகை |
| நெய்தல் | நூலை ஆடையாகச் செய்தல் |
| நெய்க்கிழி | எண்ணெய்தோய்த்த சீலைத்துண்டு |
| நெய்வு | நெசவு |
| நெரடு துப்பட்டி | இரண்டு பாவுகள் இணைய, இடையே அமையும் துணி, நிரடு துப்பட்டி |
| நெரி | சீலையின் கொய்சகம் |
| நெரிபிடித்தல் | கொய்சகம் வைத்தல் |
| நெருடு | ஆடையிற் பிதிர்த்தெழும் நூல் முடிச்சு |
| நெளிவர்ணச் சேலை | நெளிவர்ணம், புடைவை வகை |
| நென்புடைவை | மெல்லிய ஆடை |
| நேசகன் | வண்ணான் |
| நேத்திரம் | பட்டு |
| நேயவை | இடுதிரை |
| நேரியல் | நேர்த்தியான மேலாடை, நேரிய இழையினால் ஆகிய மேலாடை |
| நேரியது | ஒருவகை நல்லாடை, நேரியல் |
| பக்கு | துணிப்பை |
| பக்குடுக்கை | உடைவகை |
| பகைத்தழை | தழையுடை |
| பங்கம் | துகில்வகை |

| | |
|---|---|
| பங்கானா | சிறுபட்டுக் கரை வேஷ்டி |
| பங்கு | தலைப்பாகை |
| பங்குசம் | தலைக்கோலம் |
| பசுமை | சால்வை வகை |
| பசும்பட்டு | நேர்த்தியான பட்டு |
| பசுக்காணி | ஒருவகை வேஷ்டி |
| பச்சகானா | சிறு துணி |
| பச்சவடம் | மேறபோர்வை விரிப்பு |
| பச்சிலை | ஒருவகைத் துகில் |
| பச்சிலைப்பட்டு | பசிய இலைத் தொழிலை யுடைய பட்டு |
| பச்சைப்படாம் | விரிப்பு |
| பசைபடம் | எழுதத் தயாரித்த துணி |
| பசைதோய்த்தல் | பாவில் பசை தோய்க்கும் தன்மை |
| பசையடி | கஞ்சியிடாமல் முதலில் ஆடையை வெளுக்கை |
| பசையரிசிபோடல் | கஞ்சி போடல் |
| பஞ்சகச்சம் | ஆடவர் ஆடையை சொருகியுடுக்கும் வகை |
| பஞ்ச கஞ்சுகம் | ஐந்து தத்துவ உடைகள் |
| பஞ்சட்டைக்கம்பு | பஞ்சு வெட்டும் ஒரு கருவி |
| பஞ்சவடம் | பூணூல் |
| பஞ்சவடி | பூணூல் |
| பஞ்சாரம் | ஆடையிற் பஞ்செழும்பியுள்ள நிலை |
| பஞ்சாரி | பஞ்சு சுத்தி செய்யும் முகம்மதியன் |
| பஞ்சி | பஞ்சு, ஆடை |
| பஞ்சிநாண் | பூணூல் |
| பஞ்சியடர் | கொட்டிய பஞ்சு |
| பஞ்சு | பருத்தி |
| பஞ்சுக்காரச் செட்டி | பஞ்சுக்காரன் |
| பஞ்சுக்கொட்டை | பஞ்சித்திரள் |
| பஞ்சுகடைதல் | பஞ்சைப் பானையிலிட்டுக் கடைதல் |
| பஞ்சுகொட்டி | புஞ்சு சுத்திசெய்பவன் |
| பஞ்சுகொட்டுதல் | பஞ்சுகடைதல் |
| பஞ்சு கொட்டும் வில் | பஞ்சடிக்கும் கருவி |
| பஞ்சுத்துயி | பன்னிய பஞ்சுத் துணி |
| பஞ்சுப்பீலி | பஞ்சுசம்பந்தமான ஒரு பழைய வரி |

| | |
|---|---|
| பஞ்சுப்பொதி | பஞ்சடைத்த மூட்டை |
| பஞ்சு பலித்தல் | மென்மையாதல் |
| பஞ்சைக் கோலம் | தரித்திர வேஷம் |
| பட்டகம் | துணி |
| பட்டங்கட்டி | ஒருவகைச் சாதியாரின் தலைவருக்குரிய பட்டம் |
| பட்டச்சீலை | மெருகிடும் காகிதம், பட்டுச்சீலை |
| பட்டசாலியன் | நெசவுத் தொழிலாளரில் ஒரு இனத்தார் |
| பட்டணவன் | பட்டணவனால் செய்யப்பட்ட ஆடை, நெசவாளர் இனத்தார் வகை |
| பட்டணை | பட்டுப் படுக்கை |
| பட்டம் | சீலை |
| பட்டவஸ்திரம் | அரசர்க்குரிய உடை |
| பட்டறைச் சீலை | பட்டைச் சீலை |
| பட்டாடை | பட்டு |
| பட்டாலியர் | நெசவாளரில் ஒரு இனத்தார், அடவியார் |
| பட்டாலியர் தெரு | பட்டாலியர் வசிக்குமிடம் |
| பட்டாவளப்பட்டு | பட்டுவகை |
| பட்டாவளி | பட்டுத் தினுசு |
| பட்டி | கால்களில் சுற்றிக் கட்டிக் கொள்ளும் கிழிப் பட்டை, ஆடை |
| பட்டிகை | முலைக்கச்சு |
| பட்டு | பட்டாடை |
| பட்டுக்கயிலி | முகமதியன் அணியும் பட்டாடை |
| பட்டுக்கரை | ஆடையின் பட்டாலியன்ற கரை |
| பட்டுக்குட்டை | பட்டு அங்கவஸ்திரம் |
| பட்டுச் சாலியர் | நெசவாளர் வகையினர் |
| பட்டுச் சோளங்குறிச்சி | பட்டுப்புடவை வகை |
| பட்டுத் துத்து | கழிவுபட்டு |
| பட்டுநூல் | பட்டாலாகிய மெல்லிய நூல் |
| பட்டுநூலி | சௌராஷ்டிரர் பேசும் பாஷை |
| பட்டுநூற்காரரர் | பட்டு நெய்வோர் |
| பட்டுப்பட்டாவளி | பட்டு முதலிய விலையுயர்ந்த ஆடைகள் |

| | |
|---|---|
| பட்டுப்புடவை | பட்டுச் சீலை |
| பட்டைக்கம்பி | சாயக்கோடு |
| பட்டைத் தையல் | பட்டையாகத் தைக்கும் தையல் |
| படகம் | திரைச்சீலை |
| படகாரன் | நெய்வோன் |
| படச்சரம் | முழம்புடைவை |
| படங்கு | ஆடை, மேற்கட்டி |
| படம் | படம் போட்டதுணி, உறை, சட்டை, சீலை, சித்திரச் சீலை |
| படமரம் | நெசவுக் கருவி வகை |
| படாகை | பெருங்கொடி |
| படாங்கு | சிவப்பு நிறமுள்ள ஆடை |
| படாம் | சீலை, போர்வை, பரிவட்டம் |
| படுதா | திரைச்சீலை |
| படைக்கோலம் | போர்க்கோலம் |
| படைமரம் | நெசவுக் கருவி வகை |
| பணி | பட்டாடை |
| பணித்துக் கட்டுதல் | ஆடையைத் தொங்க உடுத்தல் |
| பணித்தூசு | அலங்காரச் சீலைவகை |
| பணிப்பொத்தி | துகில்வகை |
| பத்தாறு | அரையாடை, மேலாடைகள் |
| பதாகை | பெருங்கொடி |
| பந்தர்ச் சேலை | புடைவை வகை |
| பந்திப் பாவாடை | விருந்தினர் உட்கார விரிக்கும் ஆடை |
| பரணம் | உடுத்துகை |
| பரமாஸ்கர வேஷ்டி | பட்டைக் கரையுள்ள சீமை வேஷ்டி |
| பரம் | கவசம் |
| பரிசட்டம் | பரியட்டம், பரிவட்டம் |
| பரியட்டக்காசு | துகில் வகை |
| பரிச்சதாம் | போர்வை |
| பரிவட்டச் சீலை | நேர்த்தியான ஆடை |
| பரிவட்டம் | தலையில் கட்டும் கடவுளாடை |
| பருக்கன் | பருத்த இழையாலானது |
| பருத்திப் பெண்டு | நூல் நூற்கும் பெண்டிர், கைம்மை மகளிர் |
| பருமபுடவை | ஆடை வகையுள் ஒன்று |

| | |
|---|---|
| பலகைக் கயிறு | நெசவுக் கருவியுள் ஒன்று |
| பலகை மரம் | நெசவுக் கருவியுள் ஒன்று |
| பவித்திரம் | பூணூல் |
| பவித்திர முடிச்சு | தலைமயிரின் முடிப்பு வகை |
| பழுக்காய்க் கரை | சாயநூலால் அமைந்த ஆடைக்கரை |
| பறைக்காளி | மெல்லிய துணி வகை |
| பறைக்கோலம் | இழிவானகோலம் |
| பறைத்துணி | முரட்டுத் துணி |
| பன்னத்தண்டு | நெய்வார் கருவி வகை |
| பன்னல் | நூற்கும் நூல் |
| பன்னாடை | இழை நெருக்கமில்லாத துணிவகை |
| பன்னை | தறி |
| பனாத்து | துணி வகை |
| பனாவல் | கதிர்ந்த பஞ்சு |
| பா | நெசவுப் பா |
| பாகை | தலைப்பாகை |
| பாக்கட்டுதல் | பாவில் அற்ற இழையை இணைத்தல் |
| பாக்கழி | நெசவு நூல் |
| பாக்காணூல் | நெசவு நூல் |
| பாங்கு பண்ணுதல் | நல்லுடை தரித்தல் |
| பாச்சுருட்டி | நெய்த ஆடையைச் சுருட்டும்நெசவுத் தறி |
| பாசம் | கவசம், தையல், நூல் |
| பாட்கம் | ஒருவகைத் துகில் |
| பாடி | கவசம், நெசவாளர் வசிக்குமிடம் |
| பாணம் | பூம்பட்டு |
| பாணி | பணித்தூசு |
| பாத்தோய்த்தல் | நெசவுப் பாவுக்குக் கஞ்சியிடுதல் |
| பார்வை வளம் | சீலையில்வெளிவைத்துக்கட்டக்கூடிய, தோற்றம் உள்ள பக்கம் |
| பாரகம் | இடுதிரை |
| பாரம் | கவசம் |
| பாவடி | பாவுதோயும் இடம் |
| பாவாடு குழல் | ஊடைகுழல் |
| பாவாடை | நடந்துசெல்லதரையில்விரிக்கும்சீலை, மகளிர் இடையாடை |

| | |
|---|---|
| பாவாடைக்காரன் | குஞ்சப் பாவாடை கட்டும் வேலைக் காரன் |
| பாவாடை வீசுதல் | வெண்துகிலைச் சமாதானக் குறியாக வீசல், அரசர் தலைவர் முன்பு ஒரு வகைப் பாவாடை வீசிஉபசாரம்செய் தல் |
| பாவாற்றுதல் | பாவோடுதல், நெசவுநூலைத் தறிக்குச் சித்தம்செய்தல் |
| பாவிலே வார்த்தல் | வெண்ணூலில் சாயநூல் சேர்த்து நெய்தல் |
| பாவு | நெசவுப்பா |
| பாவுகுழல் | பாவுநூல் சுத்தும் குழல் |
| பாவோங்குதல் | நூலை, நெசவுப்பா ஆக்குதல் |
| பாளங்கட்டுதல் | புண்ணுக்குத் துணி கட்டுதல் |
| பாளச்சீலை | புண்ணுக்கிடும் மருந்து பூசிய சீலை |
| பாளம் | சேலையின் கிழிவு |
| பாளி | பணித்தூசு |
| பாளிதம் | பட்டுவர்க்கம் |
| பாற்சாய வேஷ்டி | ஆடைவகை |
| பிர்க்கா | உடம்பை முழுவதும் மறைக்கும் அங்கி |
| பிரவாரம் | புடைவை |
| பிள்ளைச் சோமன் | சிறுதுணி |
| பிகுப்பட்டை | சேலைக் கச்சு |
| பிசின் | பஞ்சுநூல் |
| பிசுகம் | வேலிப்பருத்தி |
| பிசிர் | ஆடை முதலியவற்றில் எழும் சிம்பு |
| பிசங்கல் | பிசங்கற்சீலை |
| பிசங்கற்சீலை | அழுக்குத் துணி |
| பிடவை | புடைவை |
| பிடாம் | போர்வை |
| பிடிச்சீலை | கைப்பிடி துணி |
| பிடிதுணி | பிடிச்சீலை |
| பிடியல் | சிறுதுகில், நல்லாடை |
| பிணி | நெசவுத் தறியின் நூற்படை |
| பிணித்தல் | கச்சினைக் கொங்கையில் கட்டுதல் |
| பிணிமிதித்தல் | நெசவுப்பாவை மிதித்தல் |
| பித்தான் | சட்டையில் மாட்டும் குமிழ் |

| | |
|---|---|
| பிய்த்தல் | பிய்தல்,பஞ்சு முதலியன பின்னப் படுதல் |
| பிரச்சை | போர்வை |
| பிரவாணி | நாடா |
| பிராக்கு | சிறு குழந்தை உடை |
| பிரிசில் | பிரிதல் |
| பிருகா | திரை |
| பிரேதச்சீலை | சவத்தின்மேல் இடும் துணி |
| பில்ல் | நெசவுப் பாவைச் செம்மைச் செய்யும் கருவி, பில் |
| பிள்ளைத் தோம்பு | சிறுதுணி |
| பீற்றல் பொத்துதல் | கிழிசலைப் பொருத்துதல் |
| பீறல் | கிழிக்கை |
| பீறுதல் | கிழித்தல் |
| பீட்டி | உடுப்பில் இரட்டையாக இணைக்கப் பட்ட மார்புத்துணி |
| பீதகம் | துகில்வகை |
| பீதகவாடை | பீதாம்பரம் |
| பீதாம்பரம் | பொன்னாலான ஆடை, பட்டு |
| பீதாம்பரன் | பொன்னாடையுடையவன் |
| பீற்றல் | கந்தை |
| புக்கு | சட்டை அணியும் தன்மை |
| புகார் பிடித்தல் | ஆடையில் நீலநிறம் பற்றுதல் |
| புகையார்தல் | புகையூட்டிய ஆடை |
| புங்கம் | மெல்லாடை |
| புங்கர்க் காழகம் | துகில்வகை |
| புச்சம் | பின்புறம் தொங்கும் ஆடைகொடுக்கு |
| புஞ்சம் | நெய்த ஆடையின் அளவுவகை |
| புட்டகப் புடைவை | சீலைவகை |
| புட்டகம் | புடைவை |
| புட்டகவிலை | சீலைவிற்போருக்கிடும் வரி வகை |
| புட்டம் | ஆடை |
| புட்டா | ஆடையிற் செய்யப்பட்ட பூத்தொழில் |
| புட்டில் | விரற்கவசம், உறை |
| புடவை | துணி, மகளிர் சேலை |
| புடவைக் குஞ்சம் | சீலையின் முன்தானைக் குஞ்சம் |

| | |
|---|---|
| புடவை களைதல் | அசுத்தச் சீலையை நீக்குதல் |
| புடவை கொடை | மணமகன் மணமகளுக்குப் புடைவை கொடுப்பதாகிய விவாக வகை |
| புடவை போடுதல் | கோடி போடுதல் |
| புடவை யெழுதல் | சீலையில் அச்சடித்தல் |
| புடித்தலை | நூல்நூற்கும் ராட்டின் பகுதி |
| புடைவை | ஆடை |
| புத்தகம் | சித்திரப்படாம் |
| புதுக்கோடி | விதவைக்கு அளிக்கும் கோடிப் புடைவை |
| புதைத்தல் | போர்த்தல் |
| புலியூர்ப்பட்டு | பட்டுவகை |
| புலைத்தி | வண்ணாத்தி |
| புள்ளிப்பட்டு | பூத்தொழில் அமைந்த பட்டு வர்க்கம் |
| புளியங்கொட்டை | ஒருவகைச் சீலை |
| புளியிலைக் கம்பி | ஆடையில் புளியிலை போன்ற கரை வகை |
| பூங்கரைநீலம் | ஆடைவகை |
| பூங்கவணி | புடவை வகை |
| பூங்காவி | துணியில் படியும் காவி நிறம் |
| பூச்சட்டை | பூவினால் செய்த துணி |
| பூச்சல்லா | பூத்தொழிலமைந்த மெல்லிய துணி வகை |
| பூச்சுப் புடைவை | கஞ்சிப் பசையிட்ட புடைவை |
| பூச்சேலை | பூவேலை அமைந்த புடைவை |
| பூச்சொக்கா | பூ சொக்காய் |
| பூச்சொக்காய் | பூவேலையுள்ள துணியிற் தைத்த சட்டை |
| பூச்சி வெட்டு | ஆடையில் பூச்சிகளால்ஏற்படும்துளை |
| பூச்சு போடுதல் | கஞ்சி போடுதல் |
| பூசாந்தரம் | சேலைவகை |
| பூட்டு | சிலுப்பை, நூல் அளவு |
| பூணூநூல் | பூணூல் |
| பூ நீலம் | அவுரிவகை |
| பூந்துகில் | பூவேலை செய்த ஆடை |
| பூணூல் | துவிசர் தரிக்கும் முப்புரிநூல் |

| | |
|---|---|
| பூப்பாவாடை | தேவிக்கு பூவால் செய்து சாத்திய ஆடை |
| பூம்பட்டு | மெல்லியபட்டு |
| பூம்போர்வை | பூத்தொழிலையுடைய மேற்போர்வை |
| பூவாடைப்பானை | சுமங்கலிப் பிரார்த்தனையன்று பூவாடைக்காரிக்குச் சமர்ப்பிக்கும் சேலையை அடுத்த சுமங்கலிப் பிரார்த்தனைவரைச் சேமித்து வைக்கும் பானை |
| பூர்னீஸ் | கம்பளிப் போர்வை |
| பூரணம் | ஆடையின் குறுக்கிழை |
| பூளைப்பஞ்சு | பஞ்சுவகை |
| பூளைப்பூ | பூளைப்பஞ்சு, பூவைப்பூவாம் பிறவி |
| பெங்களூர்த் தலைப்பு | மகளிர் சீலைகளின் முன்றானை வகை |
| பெண்ணுடை | பெண்டிர்க்குரிய ஆடை |
| பெரிய திருப்பாவாடை | கடவுட்குப் படைக்கும் பெரிய நிவேதனம் |
| பெருவண்ணான் | வண்ணார சாதிவகை |
| பேட்டா | தலைப்பாகை |
| பேடகம் | துகில்வகை |
| பேடிகை | உறை |
| பேழி | புடைவை |
| பைஜாமா | முழுச்சட்டை |
| பொங்கலாடுதல் | பஞ்சுபோலப் பரவி எழுதல் |
| பொட்டணம் | ஒத்தடமிடும் சீலைப்பந்து |
| பொட்டரித்தல் | ஆடையைப் பூச்சி யரித்தல் |
| பொத்தகம் | இந்திரப் படாம் |
| பொத்தான் | சட்டையை உடலில் இட்டு மூடுவதற்கு உதவும் பொருள் |
| பொத்தி | சீலை |
| பொத்தித் தோலத்தி | நார்மடி |
| பொத்துதல் | தைத்து மூட்டுதல் |
| பொந்து கட்டுதல் | இழைகள் அதிகமாக வர அமைத்தல் |
| பொதர வண்ணான் | வண்ணான் |
| பொதைரையன் | வண்ணான் |
| பொது பொதெனல் | ஆடை முதலியன அழுத்தமின்மைக் குறிப்பு |

| | |
|---|---|
| பொந்தை | சீலைபோட்டை |
| பொய்க்கோலம் | இயற்கையுருவை மறைக்கும் வேஷம் |
| பொற்சுண்ணம் | அலங்காரமாக உடம்பில் அப்பிக் கொள்ளுதற்குரிய பொற்றூள் |
| பொன்னத்துப் பெட்டி | மணத்தில் தாலி கூறைகள் எடுத்துச் செல்லும் பெட்டி |
| பொன்னாடை | பீதாம்பரம் |
| பொன்னுறு மாலை | பொற்சரிகை கலந்து நெய்த கைத் துண்டுவகை |
| பொன்னூல் | பொற்பூணூல் |
| பொன்னெழுத்து | துகில்வகை |
| போர்ப்பு | போர்வை |
| போர்வை | மேனிமூடும் துணி, கவசம், உறை |
| போர்வைச் சீலை | போர்வை |
| மக்கட்டு | மல்கட்டு, அரையில் ஆடையின் மேற் கட்டும் கட்டு |
| மக்கம் | நெய்வோர் தறி |
| மக்மல் | கனமாய் மெத்தென்று இருக்கும் பட்டுவகை |
| மக்னா சீலை | சீலை வகை |
| மகமல் | மக்மல் |
| மகர கண்டிகை | சீலை வகை |
| மகரீசன் | வண்ணான் |
| மகிழம்பூ | புடைவை வகை |
| மங்கலத்துகில் | வெண்டுகில் |
| மங்கலவணி | மங்கலக் குறியாக அணியும் வெள்ளணி |
| மசக்குதல் | ஆடையைக் கஞ்சிப் பற்று நீங்கும்படி கசக்குதல் |
| மசகரி | திரை |
| மசகாரி | அமளித்திரை |
| மஞ்சட்டிச்சேலை | சேலைவகை |
| மஞ்சட்பாவாடை | கிராம தேவதைகளை வழிபடும்போது அணியும் மஞ்சணீரில் தோய்த்த புத்தாடை |
| மஞ்சள் விசிறி | சேலைவகை |

| | |
|---|---|
| மஞ்சள் வேஷ்டி | மணமகள் முதலியோர் அணியும் மஞ்சணீரில் தோய்த்த ஆடை |
| மட்டிக் கம்பி வேஷ்டி | பொடிக் கம்பிக் கரையுள்ள முருட்டு வேஷ்டி |
| மட்டிப்புடைவை | முருட்டுச் சீலை |
| மட்டித்தையல் | தையல்வகை |
| மடி | ஆடை, தூய்மையாக உடுத்தும் மரவுரி, பட்டு, பருத்தி முதலியவற்றாலாகிய ஆடைவகை, பல துண்டுகள் கொண்ட ஆடைவகை, பை போன்ற முந்திச் செருக்கு |
| மடிகட்டுதல் | ஆசாரவஸ்திரம் தரித்தல், ஆடையை உலர்த்தல் |
| மடிச்சீலை | மடியிற்கட்டிக் கொள்ளும் பணப்பை, மடிசீலை |
| மடிசஞ்சி | மடிவேஷ்டி வைத்தற்குரியதும் புல் அல்லது கம்பளியாலானதுமான பை |
| மடிசாறு | மடிதாறு |
| மடிதாறு | உடையின் பின் கச்சம் |
| மடிப்பிச்சை | இடுப்புத் துணியிலேற்கும் பிச்சை |
| மடிப்புடைவை | மடித்தனுடைய ஆடை, மகளிரின் ஆசாரச்சீலை |
| மடிப்புத் தையல் | மடித்துத் தைக்கும் தையல் |
| மடிப்பெட்டி | அரைமடியிற் கட்டிய பை |
| மடிவை | தழை |
| மணிசீலை | மருந்து புடமிடக் கலத்தின் மேற் சுற்றும் மண்ணூட்டிய துணி. |
| மண்ணான் | புதரவண்ணான் |
| மணக்கோலம் | கலியாணத்துக்குரிய அலங்காரம் |
| மணவணி | மணக்கோலம் |
| மதனகாந்தச் சேலை | புடைவை வகை |
| மந்தமாருதம் | சேலைவகை |
| மந்தாரை | புடைவை வகை |
| மந்தி மூலைத்தலைவாகை | ஓலையாற் செய்த தலைப்பாவகை |
| மந்திரக் கூறை | பூசைப்பட்டு |
| மந்திரக் கோடி | மந்திராசீர்வாதங்களோடு மணமகள் பெறும் கூறைப் புடைவை |

| | |
|---|---|
| மந்திர காளி | செங்காவி தோய்த்த சன்னியாச வுடை |
| மந்திர கஷாயம் | மந்திரகாவி |
| மந்தை | சட்டையின்பின்பக்கத்து ஒட்டுத்துணி |
| மயிர் ஒட்டியாணம் | சணலால் செய்த துணிவகை |
| மயிர்கட்டு | தலைமயிர் முடிச்சு, தலைப்பாகை |
| மயிர்க்கண் சேலை | புடைவை வகை |
| மயிர்க்கண்ணுருமால் | மயிர்க்கண்ணுரு அமைந்த ஒருவகை தலைப்பாகைத் துணி |
| மயிர்க்கண் காட்டுப்பத்தரி | மகளிர் சீலைவகை |
| மயிர்க்கழுத்துச் சீலை | மகளிர் சீலைவகை |
| மயிர்ச்சாலை | மயிர்ப்படாம் |
| மயிர்ச்சேணம் | மயிரடைத்துச் செய்த மெத்தை |
| மயிரகம் | மயிர்ப்படாம் |
| மயிலம் | பருத்திவகை |
| மரபுரி | முனிவர் முதலியோர் ஆடையாகக் கொள்ளும் மரப்பட்டை வகை |
| மருதந்துவர் | பௌத்த பிட்சுக்களின் ஆடைகளைத் தோய்ப்பதற்குரிய ஒருவகைச் சாயம் |
| மருப்புத் தாடி | யானைத் தந்தத்தாற் செய்த விரற்கவசம் |
| மல் | ஒருவகைத் துகில் |
| மல்மல் | மல் |
| மல்வேஷ்டி | ஆண்மக்கள் உடுக்கும் வெள்ளை வேஷ்டிவகை |
| மன்மதன்பாணம் | சேலைவகை |
| மனோ ரஞ்சிதம் விசிறி | சேலை வகை |
| மஹதாபி | பொன்வெள்ளிச் சரிகைகளால் செய்தசால்வை |
| மஸ்லீன் | ஒருவகை மெல்லிய ஆடை |
| மாடி | புடைவையின் விளிம்பு |
| மாடிகை | கவசம் |
| மாடியம் | மாடிகை |
| மாம்பழக்கட்டு | புடைவை யுடுக்கும் வகையுள் ஒன்று |
| மாம்பழக் கொடுக்கு | மாம்பழக் கட்டு |
| மாம்பழம் | புடைவை யுடுத்தும்போது செருகும் முடிப்பு |

| | |
|---|---|
| மார்க்கட்டு | இரவிக்கை; மார்பின் குறுக்கே இடும் வேஷ்டிக் கட்டு |
| மார்க்கவசம் | மார்பிலணியும் கவசம் |
| மார்த்தோல் | மரமேறிகள் மார்பிலிடுந் தோல் |
| மாராப்பு | பெண்கள் தம் மார்பின் மேலிடும் சீலைப் பகுதி, முதுகுடன் இணைந்து முட்டைக் கட்டும் கச்சை |
| மாராப்புச் சீலை | மாராப்பு |
| மாற்று | வண்ணான் வெளுத்த உருப்படி, மாற்றுப்புடவை |
| மாற்றுக் கொடுத்தல் | பிரசவம் முதலிய காலங்களில் மாற்றுடையாக கொடுக்கும் புடைவை |
| மாற்றுப் புடவை | மாற்றியுடுத்தும் சீலை |
| மாற்று வஸ்திரம் | மாற்றி உடுத்தும் ஆடை |
| மாறாப்பு | மார்யாப்பு, உத்தரியத்தை தோள் களில் மாறியிடுகை |
| மாறுகம் | சீல்லை |
| மான்புள்ளிக் கண்டாங்கி | சீலை வகை |
| மான்புள்ளிச் சேலை | சீலை வகை |
| மானகவசன் | மானத்தையே கவசமாகத் தரித்தோன் |
| மானமூடுதல் | உடை முதலியவற்றால் சரீரத்தை மறைத்து மானம் பேணுதல் |
| மிளகறையன் | புடைவை வகை |
| மீக்கோள் | மேலே போர்த்தல், போர்வை |
| மீப்போர்வை | மேற்போர்வை |
| முக்கட்டங்கி | மகளிருடைய தலை மறைவுச் சீலை |
| முக்காட்டுக் கூறை | மணப்பெண்ணுக்குப் பெற்றோர் உதவும் தலைமறைவுச் சீலை, ஒருத்தி விதவையாகும் போது அவளது பெற்றோர் கொடுக்கும் சீலை |
| முக்காட்டுச் சீலை | முக்காட்டங்கி |
| முக்காடு | முட்டாக்கு, தலைமறைவுச்சீலை |
| முகச்சாடு | முக்காடு |
| முகத்தீடு | பிரேதத்தின் முகமூடிச் சீலை |
| முகதலை | மகளிரின் சீலை முந்தானை |

| | |
|---|---|
| முகதலைப்பு | முகதலை, மோதலை, செறகு |
| முகப்பு | முகதலை |
| முகபடாம் | யானையின் முகத்தில் இடும் அலங்காரத்துணி |
| முகமல் | மகமல் |
| முகமூடி | பிணத்தின் முகத்தை மூடும் ஆடை |
| முகமூடி வஸ்திரம் | முக்காட்டங்கி |
| முகவாசம் | பிணத்தின் முகத்தை மூடும் ஆடை |
| முகவாசை | முகவாசம் |
| முட்டாக்கிடுதல் | முகத்தைப் போர்த்தல் |
| முட்டாக்கு | தலைமூடி சீலை |
| முட்டுச்சீலை | மாதவிடாயில் உடுக்கும் புடைவை |
| முட்டுப் பாந்தை | முட்டுச்சீலை |
| முடிச்சாத்து | தலைப்பாகை |
| முண்டாசு | தலைப்பாகை வகை |
| முண்டு | சிறுவேஷ்டி |
| முத்தங்கி | முத்துச் சட்டை |
| முத்துத்தரியம் | முத்தினால் அலங்கரித்த மேலாடை |
| முத்துவண்ணச் சேலை | முற்காலத்து வழங்கிய புடைவை வகை |
| முத்துவர்ணச் சேலை | முத்துவண்ணச் சேலை |
| முதுகுத் துணி | முருட்டுச் சீலை |
| முந்தாங்கி | நீளத்திற் கோடிட்ட மகளிர் சீலைவகை |
| முந்தாணி | முந்தானை |
| முந்தானை | முன்றானை |
| முந்தி | முன்றானை |
| முப்புரிச் சவுக்கம் | முப்பு நூலாமைந்த சிறிய ஆடை |
| முப்புரி முண்டு | முப்புரிச் சவுக்கம் |
| முரிகம் | முரி, மயிர்ப்படாம் |
| முலைக்கச்சு | இரவிக்கை |
| முலைக்கட்டு | முலைக் கச்சு |
| முழந்தாட் கச்சு | முழங்காலிற் கட்டும் கச்சை |
| முறி | முருட்டுத் துணி |
| முறிக்கலைச் சுருக்கு | துறவியின் முக்கோலிற் கட்டிய சிறு துண்டு |

| | |
|---|---|
| முறிச்சேலை | நெசவில் உண்டை மறித்த சேலை, நேர்த்தியான வெண்ணிற புடவை வகை |
| முறுக்கிழைச் சேலை | முறுக்கு நூலாலான புடவை |
| முன்மடி | ஆடையின் மடியிற் செய்து கொள்ளும் பை |
| முன்றானை | சீலைத் தலைப்பு |
| முன்றானைப் போடுதல் | முன்றானை விரி |
| முன்றானை விரித்தல் | ஒருவனுக்கு மனைவியாக இருத்தல் |
| முன்னிணைசு | தலைமுண்டாசு வகை |
| மூடாக்கு | முகசாடு |
| மூடு குப்பாயம் | நீண்ட அங்கி, மேற்போர்வை |
| மூடுசீலை | போர்க்கும் ஆடை |
| மூடுதார் | மூடுசீலை |
| மூடுதாறு | பிரேதச் சீலை |
| மூடுதிரை | மூடுசிலை |
| மூலக் கச்சம் | மூலைக் கச்சம் |
| மூலைக் கச்சம் | பின் கச்சத்திலிருந்து ஆடை நுனி தொங்கும்படி உடை கட்டும் வகை |
| மூளி முக்காடு | மகளிர் தலையை மறைக்கும் துணி |
| மெய்க்கவசம் | உடலில் இடும் காப்புச் சட்டை |
| மெய்ப்படாம் | உடலை மூடும் போர்வை |
| மெய்ப்பை | சட்டை |
| மெய்புகு கருவி | கவசம் |
| மெய்புதையரணம் | மெய்புகு கருவி |
| மெய்யாப்பு | சட்டை |
| மெய்யுறை | மெய்க் கவசம் |
| மெல்லணை | சட்டை |
| மெழுக்குத் துணி | நீர் ஊறாமலிருப்பதற்காக மெழுகு பூசின துணி, நனையாதிருப்பதற்காக மேற்பூச்சிட்ட துணி |
| மெழுகு சீலை | மெழுக்குத் துணி |
| மெழுகுத் துணி | மெழுக்குத் துணி |
| மேகவர்ணப் புடைவை | மேகவர்ணம், பலபடியாக நிறம் மாறும் புடைவை வகை, மேகவன்னப் பட்டு |

| | |
|---|---|
| மேகவர்ணச் சீலை | புடைவை வகை |
| மேசை விரிப்பு | மேசைத் துப்பட்டி |
| மேடம் | கவசம் |
| மேடிக்கம்பு | நெசவுக் கருவியின் உறுப்பு வகை |
| மேல் முந்தி | மேல் முந்தானை, உடுத்தும்போது மேற்புறமாக வரும் சீலையின் முகப்பு |
| மேல் வேஷ்டி | மேலாடை |
| மேலங்கி | மேற்சட்டை |
| மேலாக்கு | மகளிர் மார்பின் மேலிடும் சீலை |
| மேலாடை | அங்கவஸ்திரம் |
| மேலாப்பு | மேல் விதானம் |
| மேலுத்தரியம் | மேலாடை |
| மேழகம் | கவசம் |
| மேற்கட்டு | அங்கவஸ்திரம் |
| மேற்சாத்து | அங்கவஸ்திரம் |
| மேற்றட்டு | உடுத்தியிருக்கும் சேலையின் வெளிச்சுற்று |
| மேஜோடு | காலில் அணியும் உறைவகை |
| மேஸ்திரி | தையற்காரன் |
| மைசூர்க்கட்டு | தலைப்பாகை வகை |
| மொட்டைக் குல்லா | தட்டை வடிவமான குல்லா வகை |
| மொப்பு | குட்டிப் பாலைக் குடியாதபடி ஆட்டின் மடுவில் சுற்றி வைக்கும் துணி |
| மோடிப்புடவை | வெண்ணிறமுள்ள சீலை வகை |
| மோதலை | மூகதலை |
| மோஜா | மேஜோடு |
| யமளிகைப் புடவை | இடுதிரை |
| யாத்திரா காஷாயம் | சைவ மடங்களில் முதலில் மந்திரமின்றிக் கொடுக்கும் காவியுடை |
| யாத்திரைக் காவி | ஸ்தல யாத்திரை செய்வோர் தரிக்கும் காவி வஸ்திரம் |
| யோகப்பட்டம் | யோகிகள் தியானத்தில் அமர்ந்திருக்கும்போது முதுகையும் முழங்கால்களையும் சேர்த்து உதவும் கச்சை |
| யோகபட்டம் | யோகப் பட்டம் |
| யோக வேஷ்டி | இடதுதோள் மேலிருந்து குறுக்காக அணியும் மேலாடை |

| | |
|---|---|
| ரயில் விசிறி | சேலை வகை |
| ரவிக்கை | பெண்கள் மார்பில் அணியும் சட்டை |
| ரவைசல்லா | துணிவகை |
| ராட்டணம் | இராட்டினம் |
| ரெட்டைக் குலுக்கி | சேலைவகை |
| ரெட்டை வாழைப்பூ | சேலைவகை |
| ரெத்தினப்பள்ளி | சேலைவகை |
| ருத்திரக் கண்டி | சேலைவகை |
| ருமாலை | உருமால் |
| ரேந்தா | சித்திர பின்னற்குரிய ஊசிவகை |
| ரேந்தாத்தையர் | பூவேலைத் தையல் |
| ரேந்தை | பூவேலைத் தையல் |
| லங்கோடா | லங்கோடு |
| லங்கோடு | சல்லடம் |
| லுங்கி | முகமதியர் அணியும் ஆடைவகை |
| லேசு | ஒருவகை அலங்காரப் பின்னற் துணி |
| யவனிகை | இடுதிரை |
| யாப்புறுத்தல் | ஆடைகட்டுதல் |
| யானைக் கச்சை | யானைக் கழுத்திலிடும் கயிறு |
| யானைப்பட்டம் | யானையின் முகஆடை |
| வகம் | புடவை |
| வங்கச் சாதர் | துகில் வகை |
| வங்காரக் கண்டி | ஒருவகைச் சேலை |
| வங்கார விசிறி | சேலைவகை |
| வச்சிரக்கபாய் | வச்சிராங்கி |
| வச்சிரகங்கடம் | உறுதியுள்ள சட்டை வகை |
| வச்சிராங்கி | உறுதியான கவசம், வைரம் பதித்த கவசம் |
| வசனம் | உடை, தலைப்பாகை |
| வட்டத் தலைப்பா | தலைப்பா வகைகளுள் ஒன்று |
| வட்டம் | புடவை |
| வட்டு | சிறு துணி |
| வட்டுடை | இடுப்பைச் சுற்றியுடுக்கும் உடை |
| வடகப் போர்வை | மேலாடை |
| வடகம் | மேலாடை |
| வடக மீக்கோள் | மேலாடை |
| வண்ணடை | துகில் வகை |

| | |
|---|---|
| வண்ணம் கொளுஉதல் | வண்ண மூட்டுதல் |
| வண்ணாத்தி யுடுப்பு | வண்ணாத்தி கொடுக்கும் துணி |
| வண்ணார்ப் பாறை | வண்ணார்க்கு விதித்த ஒருவகை வரி வகை |
| வண்ணான் | துணி வெளுப்பவன் |
| வண்ணானழுக்கு | வண்ணானிடம் வெளுக்கச் சேரும் அழுக்காடை |
| வத்திரம் | ஆடை |
| வத்திராஞ்சலம் | ஆடையின் அருகு |
| வம்பு | கச்சு |
| வயிரக் குப்பாயம் | உறுதியான கவசம் |
| வயிரம் | மயிர்ப்படாம் |
| வயிரியம் | மயிர்ச்சீலை |
| வரணம் | சட்டை |
| வராடி | முரட்டு நூற்சீலை |
| வல்லவாட்டு | பூணூல்போல இடத்தோளின் மேலிருந்து அணியும் ஆடை |
| வற்கலை | மரவுரியாடை |
| வஸ்திரம் | துணி |
| வாகனப் புடவை | வாகனம் |
| வாகனம் | சீலை |
| வாசம் | ஆடை |
| வாசனம் | புடைவை |
| வாசல்வரி | வரிவகை |
| வாதனம் | சீலை |
| வாய்க் கட்டுதல் | மரியாதை குறிப்பாக வாயை மூடுதல் |
| வாய்புதைத்தல் | சீலையால் வாய்புதைத்தல் |
| வார் | முலைக் கச்சு |
| வாரணம் | சட்டை |
| வாலம் | கந்தைதுணி |
| வாலிது | சுத்தமான, சலவை செய்த ஆடை |
| வாளியோடுதல் | பாவாடுதலில் ஒரு செய்கை |
| விசிகை | முலைக் கச்சு |
| விசித்தல் | இறுகக் கட்டுதல் |
| விசிறி | வர்ணக்கோடுகள் உள்ள சீலைவகை |

| | |
|---|---|
| விசிறி மடிப்பு | பெருத்த அங்கவஸ்திரத்தில் விசிறி போல் ஒன்றின்மேல் ஒன்று அமையும் மடிப்பு |
| விசைக்கம்பு | நெய்வோர் கருவிகளுள் ஒன்று |
| விடங்கம் | கொடி |
| விதானம் | மேற்கட்டி |
| விரற்சாடு | விரலுறை |
| விரற்புட்டில் | விரற்சரடு |
| விரி | திரை |
| விரிபம் | சிறுதுகில் |
| விரிப்பு | விரிக்கை, கம்பளம் |
| வில் | பஞ்சு அடிக்கும் கருவி |
| வில்லுறுதி | வில்லுறுதிப் பட்டு |
| வில்லூதி | வில்லுறுதிப் பட்டு |
| வில்லூதிப்பட்டு | ஒருவகை சகலாத்து |
| விலோதனம் | பெருங்கொடி |
| விழுது | தறியின் பகுதி |
| விழுதுக் கயிறு | நெசவுக் கயிறு வகை |
| வில்வெட்டு | வில்லுதிப்பட்டு |
| விலங்கு இழை | மயிர், பட்டு போன்ற இழைகள் |
| விற்புட்டில் | விரலுறை |
| வீதிவர்ணச் சேலை | ஒருவகைப் புடைவை |
| வீதி வர்ணம் | வர்ணச் சேலை |
| வீரவாளிச் சேலை | வீரவாளிப் பட்டு |
| வீரவாளிப்பட்டு | அச்சுவேலையுள்ள பட்டுச் சேலை |
| வெட்டிப் புடவை | பழைய வரிவகை |
| வெட்டுச் சட்டை | பெண்களணியும் ஒருவகை அங்கி |
| வெண்டி | ஆடைநெய்யும் பாவகை |
| வெண்டுகில் | வெள்ளைத் துணி |
| வெண்பட்டு | வெள்ளைநிறப் பட்டு |
| வெண்பூம்பட்டு | வெண்பட்டாடை வகை |
| வெண்பொத்தி | துகில்வகை |
| வெல்வெட்டு | பளபளப்புள்ள துணிவகை |
| வெள்ளணி | வெண்மை நிறமுள்ள ஆடை |
| வெற்றறுவை | வெள்ளை வஸ்திரம் |
| வெள்ளாவி | ஆடையை வெளுக்க உதவும் நீராவி |

| | |
|---|---|
| வெள்ளை | வெளுப்பு |
| வெள்ளை கட்டுதல் | வெள்ளாடை யுடுத்தல் |
| வெள்ளைச் சீலை | வெள்ளைத் துணி |
| வெள்ளைச் சீலைக்குத் தடுக்கிடுதல் | பணக்காரர்க்குச் செய்யும் உபசாரம் |
| வெள்ளையாடை | விதவைகள் உடுக்கும் புடைவை |
| வெள்ளையெடுத்தல் | பாடையுடன் மேற்கட்டி யெடுத்தல் வெளுக்கத் துணி எடுத்தல் |
| வெள்ளை விரித்தல் | பெரியோரை வரவேற்க தரையில் வெள்ளாடை விரித்தல் |
| வெள்ளை விசுதல் | வெள்ளாடை விரித்து அடையாளம் காட்டுதல் |
| வெள்ளை வேட்டி | வெண்ணிற ஆடை |
| வெள்ளொலியல் | புடவைக் குஞ்சம் |
| வெளிது | வெண்மைநிற ஆடை |
| வெளியாடை | உடையை மூடிக்கொள்ளும் ஆடை |
| வெளியாடை | திரைச்சீலை |
| வெளுத்தல் | வெண்மையாதல் |
| வேட்டகம் | தலைப்பாகை |
| வேடம் | உடை |
| வேட்டி | 4 முழம், 8 முழம், 9 முழம் துணி, ஆடவர் ஆடை |
| வேதகாரன் | நெய்வோன் |
| வேதங்கம் | துகில்வகை |
| வேதகம் | சிறுதுகில் |
| வேர்க்குச்சு | நெய்வோர் கருவி |
| வேஷ்டாடை | பஞ்சகச்சம் |
| வேஷ்டி | ஆடவர் அணியும் ஆடை |
| வைகட்சம் | உத்தரீயம் |
| வைகுண்டச்சல்லா | பிரேதத்தை மூடும்சீலை, வெலவெலப்பான சேலை வகை |
| வைசூரிய பப்பளி | சேலை வகை |
| றாட்டு | தார் சுற்றும் றாட்டு, பாவோடும் றாட்டு |
| ஜகமோகன் விசிறி | சேலை வகை |
| ஜண்டிப் புடைவை | உயர்ந்த புடைவை வகை |

| | |
|---|---|
| ஜம்பர் | இரவிக்கை |
| ஜல்லாலி | சல்லாலி |
| ஜலபவித்திரம் | கோயில் மூர்த்திக்கு அணியும் ஆடை |
| ஜவளி | துணிவகைகள் |
| ஜிப்பா | மேலங்கி வகை |
| ஸூர்யபடம் | சூர்யகாந்தி பட்டு |
| ஹைறக்கோர்ட்டுப் பப்பளி | சேலைவகை |
| க்ஷௌமம் | வெண்பட்டு |

# ஆடை பற்றிய பழமொழிகள்

அப்பா எனக்குத் துப்பட்டி என்கிறர்ன் பிள்ளை;
அதற்கு அப்பன் கைகால் பட்டுக் கிழியப் போகிறது
மடித்துப் பெட்டியிலே வை என்கிறான்.

அக்காடு வெட்டிப் பருத்தி விதைத்தால்,
அப்பா சிற்றாடை என்கிறதாம் பெண்

அட்டமத்துச் சனி பிடித்தது, பிட்டத்துத் துணியையும்
உரிந்து கொண்டது

அணியத்திலே கிழிஞ்சாலும் கிழிஞ்சுது, அமரத்திலே
கிழிஞ்சாலும் கிழிஞ்சுது

அணியெல்லாம் ஆடையின்பின்

அத்தான் செத்தால் மயிராச்சு
கம்பளி மெத்தை நமக்காச்சு

அப்பச்சி கோவணத்தைப் பருந்து கொண்டோடுகிறது
பிள்ளை வீராவளிப் பட்டுக்கு அழுகிறது

அம்பாணி தைத்தது போலப் பேசுகிறான்
அம்மண தேசத்தில் கோவணங் கட்டினவன்

பைத்தியக்காரன்

அம்மா கெட்ட கேட்டுக்கு முக்காடு ஒன்றா?
அம்முக்கள்ளி ஆடையைத் தின்றால் வெண்ணெய் உண்டா?

அம்மையார் எப்பொழுது சாவார், கம்பளி எப்பொழுது நமக்கு
மிச்சமாகும்

அம்மையார்க்கு என்ன துக்கம்; கந்தை துக்கம்

அம்மையார் நூற்கிற நூலுக்கும்; பேரன்
அரைஞாண் கயற்றுக்கும் சரி
அரைச்சீலை கட்டக் கைக்கு உபசாரமா?

அரைஞாண் கயிறும் தாய் சீலையுமாய்
விடுகிறவளும் பெண்சாதி

அவளுக்கென்ன மகராசி முப்பாகம் புடவை கட்டுகிறாள்

அறுபது நாளைக்கு எழுபது கந்தை·

அனற்றை இல்லா ஊரிலே வண்ணாரிருந்து கெட்டார்கள்

அன்றுமில்லை தையல், இன்றுமில்லை பொத்தல்

அன்றைக் காடை இன்றைக்குக் கொடை

என்றைக்கு விடியும் இடையன் தரித்திரம்

அன்னம் மிகக் கொள்வானும் ஆடைட்
அழுக்கு ஆவானும் பதர்

ஆடிக்காற்றிலே அம்மி பறக்கச்சே
இலவம் பஞ்சுக்கு எங்கே கதி?

ஆடிக் காற்றிலே இலவம் பஞ்சு பறந்ததுபோல்

ஆடை இல்லாதவன் அரைமனிதன்

ஆடை உடையான் அவைக்கஞ்சான்

ஆடையால் அரைமனிதனும் முழு மனிதனாவான்

ஆடையால் மனிதனை அளவிடாதே

ஆணையும் வேண்டாம், சத்தியமும் வேண்டாம்
துணியைப் போட்டுத் தாண்டு

ஆண்டி கிடப்பான் மடத்திலே, அவன்
சோளி கிடக்கும் தெருவிலே

ஆத்தாள் அம்மணம் அன்றாடம் கோதானம்

ஆத்தாள் அம்மணம் கும்பகோணத்தில் கோதானம்

ஆயிரம் உடையார் அமர்ந்திருப்பார், கந்தை
பொறுக்கி தொந்தோம் என்று கூத்தாடுவான்

ஆள் பாதி ஆடை பாதி

ஆனைக்கு கோவணம் கட்டினாற்போல

இயற்கை வாசனையோ செயற்கை வாசனையோ
இரத்தினத்தைச் சேர்ந்த இழைபோல

இரவல் சேலையை நம்பி இடுப்புக் கந்தையை
எறிந்தாளாம்

இரவல் துணியாம், இரவல் துட்டாம், இழுத்துக் கொட்டு
மேளத்தை, இறுகக் கட்டு தாலியை

இழை ஆயிரம் பொன் பெற்ற இந்திர வர்ணப் பட்டு

ஈரச்சீலையைப் போட்டு கழுத்து அறுப்பான்

உடாப்புடைவை பூச்சிக்கு இரை

உடுக்காத புடைவையைச் செல்லு அரிக்கும்

உடுத்த சீலை (புடைவை) பாம்பாய்க் கடித்ததுபோல

உடுத்துக் கெட்டான் துலுக்கன், தின்று
கெட்டான் மாத்துவன்

உடுத்துக் கெட்டான் வெள்ளைக்காரன்
உண்டு கெட்டான் சோனகன்
புதைத்துக் கெட்டான் தமிழன்

உடுப்பது பீறலாடை, நடப்பது தந்தக் குறடாம்

உடுப்பு வேண்டாம் கையைவிடு

உடையவன் இல்லாச் சேலை ஒருமுழம் கட்டை

உண்ணாமல் ஒன்பது வீடுபோகலாம்,
உடுக்காமல் ஒருவீடும் போகல் ஆகாது

உண்ணாமல் ஊரெல்லாம் திரியலாம்,
உடுக்காமல் ஒருவீட்டுக்கும் போகலாகாது

உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம், எண்பது
கோடி நினைந்தெண்ணும் மனம்

உரலிலே துணி கட்டியிருந்தாலும்
உரிந்து பார்க்கவேண்டுமென்கிறான்

ஊசி ஒருமுழம் துணியையாவது கொடுக்கும்
உற்றார் அதுதானும் என்மர்கள் (என்ன கொடுப்பார்?)

ஊரார் வீட்டுக் கலியாணமே, ஏன் அவிழ்ந்தாய்
கோவணமே?

ஊரிலே கலியாணம் மாரிலே சந்தனம்

ஊரிலே எளியோரை வண்ணான் அறிவான்
சாதிப்பொன் பூண்டாரைத் தட்டான் அறிவான்

எக்குப் புடைவை சோர்ந்தால் கைக்குண்டோ உபசாரம்

எடுக்கிறது எருது மாட்டுச் சுமை, (தம்பி)
படுக்கிறது பஞ்சணைமெத்தை

எல்லா ஒட்டும் குல்லாவிலே
எல்லாத் தட்டொட்டும் என் குல்லாவுக்குள்ளே இருக்கிறது
எல்லாரும் கூடி எனக்கு குல்லா போட்டார்கள்
எல்லாரும் கூடிக் குல்லாவைத் தந்தார்கள்

எழுத்து அறிந்த வண்ணான், குறித்து எறிந்தான் ஓலை

எழுத்துக்குப் பால்மாறின கணக்கனும்
உடுக்கைக்குப் பால்மாறின தாசியும்
வருத்தம் அடைவார்கள்

ஏகாலி கோபம் துணிக்குச் சேதம்

கட்டை விளக்கு மாற்றுக்கு (துடைப்பத்துக்கு)ப்
பட்டுக் குச்சு (குஞ்சம்) கட்டினாற் போல

கதிர் நூல் குறைந்தாலும் கள்ளச்சி
கழுத்து நூல் குறையாது
கதிர்போலிளைத்துக் குதிர்போல் பருப்பது

கந்தை ஆனாலும் கசக்கிக் கட்டு
கூழ் ஆனாலும் குளித்துக் குடி

கந்தையை அவிழ்த்தால் குட்டி வெளிச்சம் தெரியும்

கந்தையை அவிழ்த்தால் சிந்தை கலங்கும்

கந்தையைக் கட்டி வெளியே வந்தால் கண்ணாட்டி
வெள்ளையைக் கட்டி வெளியேவந்தால் வெள்ளாட்டி

கம்பளி மூட்டையென்று கரடி மூட்டையை அவிழ்த்தானாம்

கம்பளிமேல் பிசின்

கம்பளியிலே சோற்றைப் போட்டு மயிர் மயிர் என்கிறதா?

கம்பளியில் ஒட்டின கூழைப்போல

கம்பளி விற்ற பணத்துக்கு மயிர் முளைத்திருக்கிறதா?

கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்

கம்மாளன் துணி வாங்கினால் கால்மயிர் தெரிய வாங்குவான், அதை சலவைக்குப் போடும்போது அடுப்பிலே போட்டாலும் வேகாது

கரடி கையில் உதைபட்டவனுக்குக் கம்பளிக்காரனைக்கண்டால் பயம்

கலகக் கந்தை கட்டிக் கொண்டு காணப் போனாளாம்
இரு கலக்கந்தை கட்டிக் கொண்டு எதிரே வந்தாளாம்

காசுக்கு ஒரு புடவை (சேலை) விற்றாலும்
நாயின் சூத்து அம்மணம்

காஞ்சிபுரம் சென்றால் காலாட்டிப் பிழைக்கலாம்
காய்ச்சின கஞ்சி வார்க்க ஆளில்லாமற் போனாலும்
கச்சை கட்ட ஆளிருக்கிறது

காலில் கட்டினால் விருது, குப்பையில் கிடந்தால் துணி

கால் அளவே ஆகுமாம் க்ப்பலின் ஓட்டம்,
நூல் அளவே ஆகுமாம் நூற்சீலை

காவியுடுத்தவர் எல்லாம் விவேகானந்தரா?

காற்றுக்கா மழைக்கா, போர்த்துக்க (போர்த்துக்கொள்ள)த் துணிக்கா?

கிழிந்த சிலை காசுக்கு இரண்டு
குடியிற் பெண்ணின் வயிறு எரிய,
கொடியிற் சேலை நின்று எரியும்

குமரிக்கு ஒரு பிள்ளை, கோடிக்கு ஒரு வெள்ளை

பாலைக் குடித்தாலும் பட்டைக் கட்டினாலும்
பட்டணத்துப் பெண்கள் பறக்கை (தட்டுவாணி)

கூழ் ஆனாலும் குளித்துக் குடி, கந்தை ஆனாலும்
கசக்கிக் கட்டு (உடு)

கெட்டாலும் செட்டி செட்டியே
கிழிந்தாலும் பட்டு பட்டே

கையால் ஆகாத சிறுக்கி வர்ணப் புடைவைக்கு
ஆசைப்பட்டாளம்

கொட்டை நூற்றுக் கப்பல் மூழ்கியக் கடன் தீர்க்க முடியுமா
கோடிப் புடைவையைக் கட்டிக்கொண்ட தைரியம் குச்சைக்
கொளுத்திக் கொண்டாளாம்

கோவணத்தில் ஒரு காசு இருந்தால் கோழி கூப்பிட
(கூவ) ஒருபாட்டு வரும்

கோழியின் காலில் கச்சையைக் கட்டினாலும்
குப்பையைச் சீக்கும்

சகதியில் கல்லை விட்டெறிந்தால் தன் துணி என்றும்
அசலார் துணி என்றும் பாராது

சந்நியாசி கோவணம் கட்டினது போல
சந்நியாசி கோவணத்துக்குக் கிச்சித்துச்
சமுகாரம் மேலிட்டதுபோல்

சமண சந்நியாசிக்கும் வண்ணானுக்கும் சம்பந்தமென்ன?

சமண நகரத்தில் தூசொலிக்கும் வண்ணானுக்குண்டோ வழக்கு?

சயினன் கைச்சீலைப் பேன்போல

சாணிச் சட்டி வைக்கிற இடத்தில் சாணிச் சட்டி வைக்கவேண்டும்

சரிகைச் சட்டி வைக்கிற இடத்தில் சரிகைச்சட்டி வைக்கவேண்டும்

சிரித்தாயோ, சேலை அவிழ்த்தாயோ?

சிரிப்பாணிக் கூத்துச் சிரிப்பாய் சிரித்துச்
சீலைப்பேன் குத்துகிறது

சிறுபிள்ளை கட்டின சிற்றாடைபோல
சிறுபெண் கட்டின சிற்றாடையா?

சிறுபோது படியாத கல்வி அழுக்குச் சேலையில்
சாயம் ஏற்றினதுபோல்

சிற்றப்பன் வீட்டுக்குப் போய் சிற்றாடை
வாங்கி வரலாம்

சீரங்கத்துக்குப் போகிறவன் ஏரியை
மாராப்புப் போட்டது போல

சீரங்கத்துக்குப் போகிறவன் வழியிலே
பாரியைப் பறி கொடுத்ததுபோல்

சீலைப்பாய் ஈழம்போய்ச் சீனி சர்க்கரை கட்டுமா?

சுமந்த தலையும் சும்மாடுமாய் திரிகிறது

சுமந்தவன் தலையிலே சும்மாடு (பத்து)

சும்மாட்டுக்கும் சும்மா இருப்பவனுக்கும் என்ன தெரியும்?

சுவர்க்கத்திற்கு போகிறபொழுது கக்கத்திலே ராட்டினமா?

சுற்றத் துணியும் இல்லை நக்கத் தவிடும் இல்லை

சூத்திலே கட்டத் துணியில்லை
கூத்தியார் இரண்டு

சூத்து துணியை நம்புகிறதில்லை

கூத்துப் புடவையை விட்டால் மாத்துப்
(மாற்று) புடைவை இல்லை

கூத்தை வழித்து முக்காடு போட்டாற்போல

செட்டி கெட்டால் பட்டு உடுப்பான்

செட்டி பணத்தைக் குறைத்தான்;
சேணியன் நூலைக் குறைத்தான்
செந்தணலை முந்தானை (முன்றானை)யில் முடியலாமா?

செருப்பால் அடித்துப் பட்டுப் புடைவை
(குதிரைக் கொடை) கொடுத்தாற்போல

செல்லப் பிள்ளை சீலை உடுத்ததாம்
பிள்ளைபெறு மட்டும்

சோறும் சீலையும் கேளாமலிருந்தால்
சொந்தப் பிள்ளையைப் போல வளர்த்துக் கொள்கிறேன்

சோறும் துணியும் தவிர மற்றதுக்கெல்லாம் குறைவில்லை

தகப்பனுக்கு ஒட்டுக் கோவணமாம், மகன்
எழுத்துப் போட்டது வேண்டுமென்கிறான்

தகப்பனுக்கு கட்டக் கோவணம் இல்லை, மகன்
தஞ்சாவூர்மட்டும் நடைப்பாவாடை போடச் சொன்னானாம்

தட்டாரச் சித்து தரையிலே
வண்ணாரச் சித்துக்கு வகையில்லை

தட்டாரச் சித்து தறிச்சித்து, வண்ணாரச் சித்துக்கு வராது

தன் காரியம் என்றால் தன்சீலையும் பதைக்கும்

தன்சோறு தின்னு தன்புடைவை கட்டி
வீண்சொல் கேட்க விதியா?

தாயைப் போல் மகள் நூலைப்போல் சேலை

தாய்ச்சீலைக்குச் சாண் துணியில்லை
தலைக்குமேலே சரிகை மேற்கட்டி

தாலிப்பறி, சீலைப்பறியா?

திகம்பர சந்நியாசிக்கு வண்ணான் உறவு ஏன்?

துக்குணிச் சிறுக்கிக்கு முக்கலக் கந்தை

துப்பட்டியிற் கிழிந்த கோவணந்தானே

துரோபதையைத் துகில் (துணி) உரிந்ததுபோல

துவைத்துத் தோள்மேற் போட்டுக் கொண்டான்

நாழிநெல்லுக்கு ஒரு புடவை விற்றாலும்
நாய்க்கு நிருவாணம் போகுமா?

நான் படும்பாடு பஞ்சுதான் படுமோ?

நிருவாண தேசத்தில் நீர்ச் சீலை
கட்டினவன் பைத்தியக்காரன்

நூலுக்கு ஏற்ற சரடு

நூற்க வேண்டுமானால் வெண்ணெய்க் கட்டிபோல் நூற்கலாம்

நூற்றுப் பத்தாயிரம் பொன்பெறினும் நூற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடும்

நெருப்பு சிறிது என்று முந்தானையில் முடியலாமா?

பச்சை கொடுத்தால் பாவம் தீரும்
வெள்ளை கொடுத்தால் வினைதீரும்

பஞ்சும் நெருப்பும்போல்

பட்டிக்காட்டுக்குச் சிவப்புத் துப்பட்டி பீதாம்பரம்

பட்டுக் கத்தரித்தது போலப் பேசவேண்டும்
பட்டுக் கத்தரித்தாற்போல்

பட்டுக்கு அழுவார் பணிக்கு அழுவார் வையகத்தில்
பாக்குக்கு அழுத பாரதத்தைக் கண்டதில்லை

பட்டுக்குத் தீட்டு இல்லை

பட்டு நூலுக்குள்ள சிக்கெல்லாம் இருக்கிறது

பட்டுநூல் தலைகெட்டாற்போல்

பட்டுப்புடைவை இரவல் கொடுத்ததுமல்லாமல்
பாயும் தூக்கிக்கொண்டு அலைய வேண்டியாச்சுது

பட்டுப் புடைவை இரவல் கொடுத்து மணை
எடுத்துக் கொண்டு திரிவதுபோல

பட்டுப் புடைவையில் ஊசித் தட்டுருவிப்
பாய்ந்தாற்போல

பட்டு மக்கினாலும் பெட்டியிலே

பட்டும் பட்டாடையும் பெட்டியிலிருக்கும்

காற்காசுக் கந்தை ஓடி உலாவும்

பருத்திக் கடையிலே நாய்க்குப் பணி என்ன?

பருத்திக்கு உழும் முன்னே தம்பிக்கு எட்டு முழம்

பருத்தி பட்ட பாடெல்லாம் படுகிறது

பருத்தி புடைவையாய்க் காய்த்ததுபோல

பருத்திப் பொதிக்கு ஒரு நெருப்புப் பொறிபோல

பாட்டி நூற்கற நூலுக்கும் பேரன் கட்டுகிற
அண்ணாக கயிற்று (அரைஞான்)க்கும் சரி

பிய்ந்த (கிழிந்த) சீலையும் பேச்சுகற்ற வாயும்
சும்மா இரா

பிய்ப்பானேன் தைப்பானேன்

பிள்ளை பிறந்த ஊருக்குப் புடைவை வேணுமா?

பிறந்த ஊருக்கு புடைவை வேணுமா?

பீறின புடைவை பெருநாள் இராது
பீற்றற் பட்டைக்கு அறுதற்கொடி

புதுப் புடைவையிலே பொறிப்பட்டாற் போல

பெருங்காற்றில் பூளைப் பஞ்சு (இலவம்பஞ்சு)
பறக்கிறது போல

பேச்சுப் பேசும்போதே, பீச்சிப் புடைவையில்
கட்டிக் கொள்கிறான்

பொட்டி (பெட்டி) முறித்த பயலுக்குச்
சட்டையும் தலைப்பாகையும் பார்

பொல்லாத காலத்துக்குப் புடைவையும் பாம்பாகும்

பொன் அகப்பட்டால், பொன் முடியத்
துணி அகப்படாதா?

பொன்னையும் புடைவையும் நீக்கிடில்
பெண் மலக் கூடு

போக்கற்றாள் நீக்கற்றாள், பொழுது விடிந்து
கந்தை அற்றாள்

மச்சான் செத்தால் மயிர்போச்சு,
கம்பளி எனக்கு ஆச்சு

மறைத்துக் கட்ட மாற்றுப் புடைவை யில்லை

மாப்பிள்ளை சொந்தம் துப்பட்டி இரவல்

மாமியார் உடை குலைந்தால் (துணி அவிழ்ந்தால்)
வாயாலும் சொல்லக் கூடாது, கையாலும் காட்டக் கூடாது

மாவு போச்சுது, மாவு கட்டின துணியும் போச்சுது,
இனி என்ன உறவு?

முக்காட்டின் கீழே கை காட்டுகிறது

முக்காட்டுக்குள்ளே கைக்காட்டா?

முக்காட்டுக்குள்ளே சமுதாடா?

முக்காட்டுக்குள்ளே மூடு மந்திரமா?

முட்ட நனைந்தவனுக்கு முக்காடு என்ன?

முந்தானை இருக்கிறது, நாலு வீடு இருக்கிறது

முள்ளுக்குமேல் சீலை போட்டால், மெள்ள மெள்ள
வாங்கவேண்டும்

மூடு முக்காட்டுக்குள்ளே போகிறவள் தான்
ஓடி ஓடி மாப்பிள்ளை கொள்ளுகிறது

மூன்று முழமும் ஒருசுற்று
முப்பது முழமும் ஒருசுற்று

மெத்தை நேர்த்தி தலையணை பீற்றல்

மோச நாசம் கம்பளிவேடம்

வண்ணானிடத்துத் துணியைப் போட்டுக்
கொக்கின் பின்னே அலைந்தாற்போல

வண்ணானுக்கு உழைத்த கழுதையும்
வாணியனுக்கு உழைத்த காளையும் சரி

வண்ணானுக்குப் போனான், வண்ணாத்திக்கு வந்தான்
வண்ணானுக்கும் நிர்வாணிக்கும் உறவென்ன?
விடிந்ததும் பெண்ணுக்கு முக்காடோ?
விட்டுச் சொன்னால் கட்டு (குட்டு)க் குலையும்
விரித்துடுத்தினால் அழுக்குப்படும்
வெள்ளைப் பாவாடை விரித்தாற்போல
வேண்டுமென்று நூற்றால் வெண்ணெயையும் நூற்றிடலாம்

## குடும்பப் பழமொழிகள்

**வாழ்க்கை**

உணவுக்காகவும் உடைக்காகவுமே நாம் இரண்டு கால்களாலும் ஓடித் திரிகிறோம். -சீனா

**பெண்கள்**

அழகான பெண்ணும் நீண்ட கிழிசலுள்ள அங்கியும் எந்த ஆணியிலும் மாட்டிக் கொள்ளும். -இங்கிலாந்து

செல்லமாக வளர்ந்த பெண் நூல் நூற்க மாட்டாள். -பல்கேரியா

ஒரு பெண்ணின் பாவு ஒன்பது பெண்களின் ஊடு. -எஸ்டோனியா

நன்றாக உடையணியும் ஒரு பெண் தன் கணவன் வேறு பெண்ணை நாடாமல் காத்துக் கொள்ள முடியும். -ஸ்பெயின்

ஊசியில்லாத பெண் நகமில்லாத பூனை. -எஸ்டோனியா

**காதல்**

பஞ்சை நேசிப்பது போல் என்னை நேசி; நூல் அதிக மென்மையாகும் பொழுது அதிகப் பஞ்சைவிட்டும், நூல் அறுந்தவுடன் ஒட்டியும் ஆதரவு காட்டுவதுபோல என்னை வைத்துக் கொள்ளவும். -ஆப்பிரிக்கா

**பெண் பார்த்தல்**

கரையைப் பார்த்துச் சீலை எடு, தாயைப் பார்த்து மகளை எடு. -துருக்கி

குடடையான பெண்ணை மணந்து கொண்டால் துணி அதிகம் தேவையிராது. -ஆப்பிரிக்கா

**திருமணம்**

கம்பளியை இரட்டையாக மடித்துப் போர்த்துக் கொண்டால் மேலும் குளிருக்கு அடக்கம்தான். -அயர்லாந்து

(உறவினருக்குள் விவாகம் செய்து கொள்ளல் மிகவும் நல்லது).

"அம்மா! விவாகம் என்பது என்ன?"

மாவ்ரைத்தல், நூல் நூற்றல் குழந்தைகள் பெறுதல் ஆடுதல் -மான்டினீக்ரோ

**கணவன்**

மனைவிக்குச் சீலைகள் வாங்கிக் கொடுத்தால் கணவனுக்கு அமைதி கிடைக்கும். -ஆப்பிரிக்கா

**மனைவி**

பெண்டட்டியென்றால் புடவை துணிமணிகள் என்று பொருள். -ஆப்பிரிக்கா

**வீடு**

பழைய வீடுகளில் எலிகள் அதிகம், பழைய துணிகளில் பேன்கள் அதிகம். -ஜெர்மனி

**இல்வாழ்க்கை**

ஏழுதிரைகளைத் தாண்டியும் வேலைக்காரியின் குறையைக் கண்டுபிடித்து விடுவாய்; யசமானி அம்மாவின் குறை ஒரே திரையில் மறைந்துவிடும். -இந்தியா

தொடக்கத்தில் இருவரும் ஒரே சட்டைக்குள் ஒணடியிருக்க முடிந்தது; பின்னால் அவர்கள் ஒரே குடிசையில் சேர்ந்திருக்க முடியவில்லை. -எஸ்டோனியா

**தாய் தந்தையர்**

தாய் வார்த்தை கேளாப் பிள்ளை நாய்வாய்ச் சீலை. -தமிழ்நாடு

**பழமை**

பழைய துணி—புதிய கிழிசல் -எஸ்டோனியா

**உடற்குறைகள்**

ஒடிந்த கையைச் சட்டைக்குள் மறைத்துக் கொள். -சீனா

**மரணம்**

சட்டை உடம்போடு ஒட்டியிருக்கும், அதைவிட ஒட்டியுள்ளது மரணம். -எஸ்டோனியா

உலக அனுபவம்

நாவிதரில் பழையவன், வண்ணாரில் பழையவன். -இந்தியா

உலகத்தோடு ஒழுகல்

நீ விரும்பிய தெல்லாம் உண்ணலாம், ஆனால் உடைமட்டும் மற்றவர்களைப் போலவே அணிந்து கொள்ள வேண்டும்.

-அரேபியா

## இணைப் பழமொழிகள் Parallel Proverbs

அக்காடு வெட்டிப்பருத்தி விதைத்தால் அப்பா எனக்கொரு துப்பட்டி என்கிறாளாம் பிள்ளை, சீச்சி முழங்காலில் மாட்டிக் கொண்டு மொடுக்கென்று கிழியப் போகிறது என்கிறானாம் அப்பன். அக்காடு வெட்டிப் பருத்தி விதைத்தால் அப்பா முழஞ் சிற்றாடை என்கிறதாம் பெண்.

Bachelors wives and maidens children are well trained. Catch the bear before you sell his skin. Count not the chickens before they be hatched. Sell not the bears skin before you have caught him. Stay till you have sheep before you shear them.

அம்மண தேசத்திலே கோவணங் கட்டினவன் பைத்தியக் காரன்.

When you are at Rome, do as Rome does.

ஆடையில்லாதவன் அரைமனிதன். ஆடையுடையான் சபைக்கஞ்சான்.

Good clothes open all doors.

இரக்கப் போனாலும் பரக்கப் போ.

Good clothes open all doors.

இரவல் சீலையை நம்பி இடுப்புக் கந்தையை எறிந்தாளாம்.

Quit not certainly for hope.

ஈரச் சீலையைப் போட்டுக் கழுத்து அறுத்தாள்.

To laugh in ones face and cut his throat.

ஊசி போகிறது கணக்குப் பார்ப்பான். பூசணிக்காய் போகிறது தெரியாது.

Catch not at the shadow and lose the subsstance. Penny wise and pound foolish.

ஊசியை ஊசிக் காந்தம் இழுக்கும் உத்தமனைச் சிநேகம் இழுக்கும்.

Like draws to like, a scabbed horse to an auld dike.

கந்தைக்குத் தக்க பொந்தை.

A little bird wants but a little nest. A little ship needs but a little sail. A little string will tie a little bird. A small pack becomes a small pedlar.

காசுக்கு ஒரு புடைவை விற்றாலும் நாயின் உடல் அம்மணம்.

If it should rain porridge, he would want his dish.

கெட்டாலும் செட்டி செட்டியே, கிழிந்தாலும் பட்டு பட்டே.

A diamond is valuable, though it lie on a dwng hill. A mystle among thorns is a mystle still. A myrtle standing among nettles, does not with standing retain the name of a myrtle. The moon is a moon still, whether it shines or not.

கையைச் செட்டிமார் குறைத்தால் காலைக் கைக்கோளன் குறைப்பான்.

Tit for tat.

கொல்லத் தெருவில் ஊசி விலை போமா? கொல்லத் தெருவில் ஊசி விற்றாற் போல. கொண்ட கடையிலேயே விற்கிறது.

Enchantments to Egypt, Indulgences to Rome, and pepper to Hindustan. To bring owls to Athens. To carry ceals to New castie. You bring owls to Athens.

கோழியின் காலில் கச்சையைக் கட்டினாலும் குப்பையைச் சீக்கும்.

An ape is an ape, a varlet is a varlet, though they be clad in silk and scarlet.

சமண சந்நியாசி கையில் சீலைப் பேன் அகப்பட்டது போல

Like a dog in the manager, you'll not eat yourself, nor let the horse eat.

சமண சந்நியாசிக்கும் வண்ணானுக்கும் சம்பந்த மென்ன?

As much a kin as tenson-hill to pilson-pin mere are two hills in windsor.

*சயினன் கைச்சீலைப் பேன் போல.*

Like a dog in the manager, you'll not eat yoursself, nor let the horse eat.

*சிரித்தாயோ சீரைக் குலைத்தாயோ சிரித்தாயோ சீலை அவிழ்த்தாயோ.*

A maid oft seen, a gown oft own, are diresteemed and held in scorn. A maid that laughs is half-taken. He who langheth too much hath the nature of a fool. Laughter is the hiccup of a fool.

*தாயைப் போற் பிள்ளை, நூலைப் போற் சீலை.*

As the old cock crows/so crows the young. Like father, like son. The younger cock crows as he heard the old one.

*திகம்பர சந்நியாசிக்கு வண்ணான் உறவு ஏன்?*

As much a kin as Lenson hill to piesenpin.

*துடைப்பக் கற்றைக்குப் பட்டுக்குச்சி கட்டினாற் போல.*

It looks as well as a diamond necklace about a sows neck.

*நாழி நெல்லுக்கு ஒரு புடவை விற்றாலும் நாய்க்கு நிர்வாணம் போகுமா?*

If it should rain porridge he would want his dish.

*நூற்க வேண்டுமென்றால் வெண்ணெய்க் கட்டி நூற்கலாம்.*

Where there is a will there is a way.

*பருத்திக் காடு உழுகிறதுக்கு முன்னே பொம்மனுக்கு ஏழு முழம் திம்மனுக்கு ஏழு முழம். பருத்திக்கு முன்னே உழு முன்னே தம்பிக் கெட்டு முழம்.*

Catch the bear before you sell his skin. Count not your not your chickens before they be hatched. Make not your sauce till you have caught the fish. Stay till you have sheep before you shear them.

*புதியதாய் வந்த மணியக்காரன் நெருப்பைக் கட்டி அடித்தானாம். புதிய வண்ணான் பொந்து கட்டி வெளுப்பான். புதுமைக்கு வண்ணான் பறைதட்டி வெளுத்தான்.*

A new broom sweeps clean. New brooms sweep clean.

மாமியார் உடை குலைந்தால் வாயாலும் சொல்லக்கூடாது. கையாலும் காட்டக் கூடாது.

If you want a pretence to whip a dog, it is enough to say he ate up the frying pan.

வண்ணானுக்கும் நிர்வாணிக்கும் உறவென்ன?

As much akin as Lensonhill to pilsen-pin(There are twe hills is windsor).

வாய்க் கொழுப்பு சீலையால் வடிகிறது.

Pride goes before and shame follows after.

வெறும் பிலுக்கு வண்ணான் மாற்று.

More goes to the making of fine gntleman than fine clothes

வேண்டுமென்று நூற்றால் வெண்ணெய்க் கட்டி போல் நூற்கலாம்.

A chip of the old block.

அஞ்செழுத்தும் பாவனையும் அவனைப்போல் இருக்கிறது. துப்பட்டியில் கிழிந்த துண்டு. நாட்டாள் பெற்ற குட்டி நாகரிகம் பேச வல்ல குட்டி.

A maid that laughs is half taken.

சிரித்தாயோ சீரைக் குலைத்தாயோ? சிரித்தாயோ சேலை அவிழ்த்தாயோ.

A man is a lion in his own cause.

தன் காரியம் என்றால் தன் சீலையும் பதைக்கும்.

A new broom sweeps clean.

புதிய வண்ணான் பொந்து கட்டி வெளுப்பான்.

A small pack becomes a small pedlar.

கந்தைக்கேற்ற பொந்தை. குருவிக்குத் தகுந்த இராமேசுவரம்.

A willing mind makes a light foot.

வேண்டும் என்று நூற்றால் வெண்ணெய்க் கட்டி போல நூற்கலாம்.

Among the blind, the one - eyed man is king. Among the people, Scoggin in a doctor.

பட்டிக் காட்டுக்குச் சிவப்புத் துப்பட்டியே பீதாம்பரம்.

An ape is an ape, a varlet, is a varlet,though may be clad in silk or scarlet. An ape is never so like an ape as when he wears a doctors cap.

An ass covered with gold is more respected than a good horse with a packsaddle. An ass is but an ass, though laden with gold.

கோழியின் காலில் கச்சையைக் கட்டினாலும் குப்பையைச் சீக்கும்.

As much akin as Lenson hill to pilsen-pin.
சமண சந்நியாசிக்கும் வண்ணானுக்கும் சம்பந்தம் போல
திகம்பர சந்நியாசிக்கு வண்ணான் உறவு ஏன்?
As the old cock crows so crows the young.
தாயைப் போல் பிள்ளை நூலைப் போல் சீலை.
Count not your ckickens before they be hatched,

பருத்திக்காடு உழுகிறதுக்கு முன்னே பொம்மனுக்கு ஏழு முழம் திம்மனுக்கு ஏழு முழம். பருத்திக் குழு முன்னே தம்பிக்கு எட்டு முழம்.

Frost and fraud have foul ends.
மோசம் நாசம் கம்பளிவேடம்.
Good clothes open all doors.
ஆடையுடையான் சபைக்கஞ்சான்.
He that hath been bitten by a serpent is afraid of a rope.
கரடி கையிலுதை பட்டவனுக்குக் கம்பளி கண்டால் பயம்,
If it should rain porridge. he would want his dish.

காசுக்கொடு புடைவை விற்றாலும் நாயின் உடம்பு அம்மணம்.

It looks as well as a diamond necklace about a sous neck.
Like draws to like, scabbed horse to an auld dike.

ஊசியை ஊசிக் காந்தம் இழுக்கும், உத்தமனைச் சிநேகம் இழுக்கும்.

Make not your sauce till you have caught the fish.
பருத்திக்கு உழு முன்னே தம்பிக்கு எட்டுமுழம்.

More goes to the making of a fine gentleman than fine clothes.

வெறும் பிலுக்கு வண்ணான் மாற்று.

New brooms sweep clean.

புதிய வண்ணான் பொந்து கட்டி வெளுப்பான்.

புதுமைக்கு வண்ணான் பறை கட்டி வெளுத்தான்.

Nothing is hard (or impossible) to a willing mind.

வேண்டுமென்று நூற்றால் வெண்ணெய்க் கட்டிபோல் நூற்கலாம்.

Old womans gold is not ugly.

கம்பளி விற்ற காசு மயிர் முளைத்திருக்குமா?

Reckon not your chickens before they are hatched.

ஆக்காடு வெட்டிப் பருத்தி விதைத்தால் அப்பா எனக்கொரு துப்பட்டி.

Silks and Satins put out the fire in the kitchen. Silks and Jatins, scarlets and velvets put out the kitchen fire.

உயர்ந்த உடுப்பு அயர்ந்த அடுப்பு.

To catch a Tartar.

கம்பளி மூட்டையென்று கரடிமூட்டையை அவிழ்த்தானாம்.

When you are at Rome,do as Rome does, Where ignorances is bliss, it is folly to be wise.

நிர்வாண தேசத்தில் நீர்ச்சீலை கட்டினவன் பைத்தியக்காரன்.

Youth and white paper take any impression

சிறுபோது படியாத கல்வி அழுக்குச் சேலையில் சாயம் ஏறினது போல.

# நம்பிக்கைகள்

அணிந்திருக்கும் ஆடையை ஊசியால் தைப்பது சரியல்ல

அம்மை வந்த வீட்டில் துணியால் குப்பையைப் பெருக்குதல் தேவையானது

ஈரத்துணியை எடுத்துக்கொண்டோ, உடுத்துக்கொண்டோ வெளியூர் போதல் நல்லதல்ல

உடலின் மேல் துணியின்றி குளிக்கலாகாது. ஏதாவது வஸ்திரம் உடுத்திக் கொள்ள வேண்டுமென்பர்

உடைகளில் குறிப்பிட்ட சில, அதிர்ஷ்டத்தையும், வேறு சில துரதிர்ஷ்டத்தையும் தரும் எனக் கருதுவர்

எரிந்த துணியை வீட்டில் வைத்தால் கஷ்டம் வரும்

கோவிலுக்குப் போகும்போது தூய நூல் புடவை அல்லது பட்டுப்புடவை கட்டிச் செல்லவேண்டும் என்பா

கோயிலுக்குள் ஆண்கள் சட்டை அணிந்து செல்லல் சரியன்று

சுமங்கலிகள் வெண்ணிற ஆடைகளை அணிதல் ஆகாது

திருமணப் பெண்ணிற்கு உடன் அனுப்பும் ஆடைகளில் கறுப்பு, வெள்ளை நிறங்கள் இருக்கலாகாது

திருமணம் நிச்சயமான பின்னர் வெள்ளிதோறும் கோயிலுக்குப் போகும்போதெல்லாம் புத்தாடைகளையே உடுக்கவேண்டும் என்பர்

புத்தாடைகள் கிடைக்கும்—உடைகளைத் தையல்பகுதி மேல் வரும்படி அறியாது அணிந்து சென்றால்

புத்தாடைகள் செவ்வாயன்று வாங்கமாட்டார்கள்

புத்தாடைகளைச் சனியன்று உடுப்பது நல்லதல்ல

புத்தாடைகளைத் துவைக்கும் முன்னர், அவை கிழிவது நல்லதல்ல

புத்தாடை நுனியில் மஞ்சள் தோய்த்துக் கட்டுவர்

புத்தாடைகளைப் புதன் அணிவது நல்லது என்பர்

புத்தாடைகளை அணிய வியாழன் நல்லநாள்

புத்தாடைகளைப் பூசை செய்து பின்னர் அணிவர்

புத்தாடையை அணிந்துகொண்டு உறங்கமாட்டார்கள்

பெண்கள் முந்தானையை அலையவிடக் கூடாது. அப்படி அலையவிட்டால் அவர்கள் வாழ்க்கையும் அலையும்

பெண்கள் முந்தானையை விரித்து அதில் படுக்கக் கூடாது அப்படிப் படுத்தால் அவ்வீடு விடியவே விடியாது என்றும் அந்த வீடு கெட்டுப் போவதாகவும் நம்புவர்

மாலையில் வாசலில் துணி உலர்த்தச் கூடாது
வண்ணான் அழுக்குத் துணிகளோடு எதிர்த்து வருதல் நல்லது

வண்ணான் வெளுத்த துணிகளோடு எதிரே வருதல் நல்லதுஅல்ல

விதவைகள் புத்தாடைகளை நனைத்து உடுப்பர்

விதவைகள் ரவிக்கை அணியலாகாது என்பர்

வீட்டில் துணிகளை நன்றாகப் பிழிந்து உலர்த்துவது நல்லது நீர் சொட்டலாகாது

# இலக்கியத்தில் ஆடை பயிலும் இடங்கள்

**அரத்தம்**

அரத்த முடீஇ அணிபழுப்பப் பூசி திணை.மாலை.நூற்.மரு.144
நீலமும் அரத்தமும் வாலிழை வட்டமும் பெருங். 1:42:208

புகைக் கொடிப்புத்தேள் பொருக்கென வூட்டி
அழற்கொடி அரத்த மறைத்தவோ எனவும் பெருங். 2.19:148-49

**அரணம்**

மெய்புதை அரணம் எண்ணாது பதி. 52:6

அரைசரு மமர் மலைந்தரணம் வீசினார் சீவக. 777

அடுபடை யிளையரு மரணம் வீசினார் சீவக. 1547

**அறுவை**

வெறியுற விரிந்த அறுவை மெல்லணை நற். மரு. 40

துறை போகு அறுவைத் தூமடியன்ன நற். மரு. 70

ஓடாப் பூட்கை யொன்பொறி கழற்கால்
இருநிலந் தோயும் விரிநூல் அறுவையர் பதி. 4:4

அறுவை தோயும் ஒருபெருங் குடுமி அகம். பாலை. 195

அறுவை, தூவிரி கடுப்பத் துவன்றி, மீமிசை
தண்பல விழிதரும் அருவி புறம். 154

கால்கழி கட்டிலிற் கிடப்பித்துத்
தூ வெள்ளறுவை போர்ப்பிலதே புறம். 286

தூ வெள்ளறுவை மாயோற் குறுகி புறம். 291

களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை புறம். 311

நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரியன்ன அறுவை நல்கி பொரு. 82-83

காம்பு சொலித்தன்ன அறுவை யுடீஇ சிறுபாண். 236

துவலைத் தண்டுளி பேணார் பகலிறந்
திருகோட்டறு வையர் வேண்டுவயிற் றிரிதர நெடு. 34-34

தோமறு கடிஞை சுவன் மேலறுவையும்
காவுந்தி-யையை கைப்பீலியும் கொண்டு சிலப். 10:98-99

இறுமென் சாயனுடங்க நுடங்கி
அறுவை யொளித்தான் வடிவென்கோயாம்
அறுவை யொளித்தான் தானயர வயரும்
நறுமென் சா்யன் முகமென் கோயாம் சிலப். 17:23

நூலினும் மயிரினும் நுழைநூற்பட்டினும்
பால்வகை தெரியாப் பன்ன றடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை வீதியும் சிலப். 14:205-8

வெள்ளிற் பாடையும் முள்ளீட்டறுவையும்
பரிந்த மாலையும் உடைந்த கும்பமும் மணி. 6:93

வண்ணவறுவையர் வளந்திகழ் மறுகு மணி. 28:53

முழுதும் அறுவை பல மூடினரும் நீல..468

அறுவைக் கோதிய ஐவகை வண்ணத்து பெருங். 2:5:128

அந்தரத் தறுவை வைப்பார் அந்தணர் அங்கை கொட்டி
சீவக. 1279

நுண்ணவிர றுவையன் நொசிந்த நோக்கினன் சீவக. 2010

பொன்றிசழ் அறுவை சாத்திய பூங்கச்சுப் பொலிய வீக்கி
பெரிய. இயற்கை-11

மாமறையோர் குழாத்தினுடன் மல்கு திருத்தொண்டர்
குழாம் மருங்கு சூழ்ந்து
தாமறுவை உத்தரியந் தனிவிசும்பில் எறிந்து ஆர்க்கும்
தன்மையாலே பெரிய. திருஞான. 95

அந்நகர் அதனில் வாழ்வார்; அறுவையர் குலத்து வந்தார்
பெரிய. நேசநாயனார். 2

**ஆசு**

காலாசோ டற வெறிந்த கனை கழற்கால் சீவக. 2236

**ஆடை**

துவர் செய்யாடைச் செந்தொடை மறவர் நற். 33

சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக் கொலைவில் எயினர்
ஐங். பாலை. 363

பொலம்புரி யாடை வலம்புரிவண்ண பரி. 3-88

ஒன்றன் கூறாடை யுடுப்பவரே யாயினும் கலித். 18

ஆடை கொண்டொலிக்கு நின் புலைத்தி காட்டென்றாளோ
கலித். 72

உதிர் துகள் உக்க நின் ஆடையொலிப்ப கலித். 81

அந்துவராடைப் பொதுவனோடு ஆய்ந்த, முறுவலாள் கலித். 102

காயாம்பூக் கண்ணிக் கருந்துவர் ஆடையை கலித். 108

வேட்டங் கண்ணியும் கொடுந்திரை ஆடையும் புறம். 275

எள்ளே பருத்தியே எண்ணெயுடுத்தாடை...
... இன்புற்று வாழ்வான் இயைந்து ஏலாதி. 50

ஐயமே, பிச்சை அருந்தவர்க் கூணாடை
ஐயமே இன்றி அறிந்து ஈந்தான் ஏலாதி. 70

உடுத்தாடை நீருட்பிழியார் ஆசாரக். 11

படைவரினும் ஆடை வளியுறைப்பப் போகார்
பலரிடை ஆடையுதிரார் ஆசாரக். 36

உடுத்தாடை யில்லாதார் நீராட்டும்...
காண அரிய கண் திரி. 71

அணியெல்லாம் ஆடையின் பின் பழ. நா. 26

படுக்கை இவராயக் கண்ணும் உடுத்தாடை
உண்டி வினவுவாரில் பழ. நா. 329

திரை நீராடை யிருநில மடந்தை சிலப். 4:7

அலைநீராடை மலைமுலையாக சிலப். 5:1

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூவாடை அதுபோர்த்து
சிலப். 7:25

பொலம் பூவாடையிற் பொலிந்து தோன்றிய சிலப். 11:50

புண்ணிய நறுமலராடை போர்த்து சிலப். 13:173

ஆடியும் ஆடையும் அணிதரு கலன்களும்
சேடியர் செவ்வியிலேந்தினர் ஒருசார் சிலப். 28:63-64

பொன்னிற் றிகழும் பொலம்பூவாடையன் மணி. 5:61

ஆடை பற்றெனவுரைத்த வவன் நீல. 188

பூங்கமழ் காராடை போர்த்த வம்புத்தர் நீல. 259

அத்திட்டாடை கோடலும் நீல. 356

பொங்காடை போர்த்தார்க்கு நீல. 470

நிலந்தோய்புடுத்த நெடுநுண்ணாடையார் பெருங். 1:32:64

அணிகலப் பேழையும் ஆடை வட்டியும் பெருங். 1:38:163

மாசிலருமணி மடைத்த வாடையர் பெருங். 3:1:119

வண்ணவாடையன் வந்திவன் தோன்றி பெருங். 5:4:38

அணியுமாடையுமணியும் நல்கி பெருங். 5:4:94

வயிரக் கிடங்காடை மதிற் கன்னியது கவினே சீவக. 105

ஆடை செம்பொன் அணிகலன்கள் யாவும்
யாரும் கவர்ந்தெழுநாள் சீவக. 307

தேன்சொரி முல்லைக் கண்ணிச் செந்துவ ராடையர் சீவக. 482

நானக் கிடங்காடைநகர் நாகத்திடை சீவக. 590

தெண்டிரை ஆடைவேலி இருநில மகட்கு சீவக. 744

கலந்தெழு திரை நுண்ணாடைக் கடிக்கயமடந்தை சீவக. 964

ஆய்ந்தளந்து இயற்றிய அத்துணாடையர் சீவக. 1848

வண்ணப் பூமாலை சாந்தம் வாலணிகலன்களாடை
கண்முகத் துறுத்தித் தூய்மை காண்டலாற் சீவக. 1893

உயிரை மதம்செய்யும் மதுத் தண்டொடு உடையாடை
சீவக. 1874

வேட்பன வடிசில் ஆடை விழுக்கலன் மாலைசாந்தம்
கோட் குறைவின்றாக்கி சீவக. 2078

தோழர்க் கெல்லாமணி கலமடிசிலாடை, வேற்றுமையின்றி
வேண்டூட்டமைத்தனன் சீவக. 2142

ஆய்ந்த முகிலாடைத் திங்கட்கன்னி ஆகாயமென்னும் அரிவை
சீவக. 2860

மாசித்திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித்துன்ன மூசிய ஆடையுடையாக சீவக. 2929

உடுத்துங் களைந்த நின் பீதக வாடையுடுத்து
நாலா. திவ். பெரி. திருப். 9

வல்லி நுண்ணிதழன்ன வாடை கொண்டு
நாலா. திவ். பெரி. திருப். 3-4:2

ஆடையுடுப்போம் அதன் பின்னே பாற்சோறு ஆண். திருப். 27

பீதகவாடை மூடி பூண் முதலா
மேதகு பல்கலன் அணிந்து நம்மா. திருவா. 1

படிச்சோதி யாடையொடும் பல்கலனாய் நம்மா.திருவாய்.3:1:1

உடையார்ந்த வாடையன் கண்டிகையனுடை நாணினன்
நம்மா. திருவாய். 3:7:4

எண்ணில் பல்கலன்களும் ஏலுமாடையுமஃதே
நம்மா. திருவாய். 4:3:5

திருமார்பு வாய் கண் கை உந்தி காலுடை
யாடைகள் செய்ய பிரான் நம்மா. திருவாய். 8:9:1

பொன்னொத்த வாடை பெரு. திரு. மொழி. 6:5

பொன்னிற வாடையைக் கையில் தாங்கி பெரு. திரு. மொழி 6:8

பொங்கிளவாடை யரையில் சாத்தி பெரு. திரு. மொழி. 6:9

பின்னல் துலங்கு மரசிலையும் பீதகச் சிற்றாடை யொடும்
பெரி. திரு. மொழி. 1:7:3

சிற்றாடையும் சிறுப்பத்திரமும், இவை கட்டிலின்
மேல்வைத்துப் போய் பெரி. திருமொழி. 3:3:5

கட்டி நன்குடுத்த பீதக வாடை பெரி. திருமொழி. 3:6:10

செய்ய நூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லள் அல்லள்
பெரி. திருமொழி. 3:7:1

பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி வந்து
பெரி. திருமொழி. 5:2:8

சக்கரமும் தடக்கைகளும் கண்களும் பீதக வாடையொடும்
செக்கர் நிறத்துச் சிலப்புடையாய் பெரி. திருமொழி. 5:3:7

சிவந்த வாடையின்மேல் சென்றதாம் என் சிந்தனையே
திருப்பான். அமலன். 2

அந்தி நிறத் தாடையும் திருப்பான். அமலன். 3

பெண்ணின் வருத்த மறியாத பெருமாள் அரையில் பீதக
வண்ண வாடை கொண்டு என்னை வாட்டம் தணிய வீசிறே
நாச்சி-திரு. 3:1

பீதகவாடை யுடைதாழப் பெருங்கார் மேக்க் கன்றேபோல்
நாச்சி-திரு. 4:5

வெளிய சங்கொன்றுடையானைப் பீதக உடையுடையானை
நாச்சி-திரு. 4:8

துவரியாடையார் மட்டையர் சமண்தொண்டர்கள்
நாச்சி-திரு. 2:1:6

காசையாடை மூடி யோடிக் காதல் செய்தான்
பெரிய. திருமொழி. 2:2:1

சேவடி கை திருவடிவாய் கண் சிவந்தஆடை
பெரிய. திருமொழி. 2:10:9

பவ்வநீருடை வாடையாகச் சுற்றி பெரிய. திருமொழி. 2:1:6

பொங்கு புணரிக் கடல் சூழாடை நிலமாமகள்
பெரிய. திருமொழி. 6:10:9

துவராடையுடுத்து ஒருசெண்டு சிலுப்பி பெரிய.திருமொழி.10:8:2

பொன்னின்மாமதிட்கு உடுத்த நீல ஆடை போலுமே கம்ப. 113

ஓதம் நெடும் கடல் ஆடை உலகினில் வாழ் கம்ப. 217

உடுத்த நீராடையள் உருவச் செவ்வியள் கம்ப. ஆரணிய 238

வண்ணமணி ஆடையுள மற்றும் உள பெற்றேன் கம்ப. 4690

அஞ்சுவணத்தினாடை யுடுத்தாள் கம்ப. சுந்தர 174

அண்ணன் வேலிராவணன் அரத்தவாடையன் கம்ப சுந்தர 369

எழு முகில் ஆடையா அகன்,
பந்தர் ஒத்தது நெடும் பரிதி வானமே கம்ப. 6815

மாமதில் ஆடை இலங்கையாள் கம்ப. 7182

நெய் கொள் சோரி நிறைந்த நெடுங்கடல்
செய்ய ஆடையள் அன்ன செஞ்சாந்தினள் கம்ப. 9571

பிறவும் ஆடையும் சாந்தமும் கம்ப. 9759

கொய்யுளைப் புரவி, திண்தேர் குஞ்சரம் ஆடை
இன்ன, மெய் உறக் கொடுத்த பின்னர் கம்ப. 10511

ஆடை கைத்தலத் தொருத்தி கொண்டது சூளா. 467

அருமணிக் கலங்களும் அரத்தவாடையும் சூளா. 1722

மணியும் பொன்னும் நல் ஆடையும் மற்றும் என்செய்ய
பெரிய. அமர். 29

அந்தரத்தமரர் போற்றும் அணிகிளர் ஆடைசாத்தி
சந்தனத் தளறு தோய்ந்த குங்குமக் கலவைசாத்தி
பெரிய. தடுத். 184

அரையிற் சரணத் துரி ஆடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளலகார்த்து விளிம்புசேர்த்தி
பெரிய. கண்ணப்ப. 61

யாப்புறு மென் சிறு மணி மேகலை யணி
சிற்றாடையுடன் பெரிய. மானக். 13

ஆடைவீசி இருவிசும்பின் வெளிதூர்த்தார் பெரிய திருஞான. 259

சாலுமெய்க் கலன்கள் கூடச் சாத்தும் பூண்ஆடை வர்க்கம்
பெரிய. சாக்கிய. 12

பாலன பிறவும் ஏந்தும் பரிசளம் முன்பு செல்ல பெரிய ஏயர். 377

துவராடை படம் புனைவேடம் தவிரார் பசுபதியார்
பெரிய. சாக்கிய. 12

அம்பொன் மணிப்பூண் நவமணிகள் ஆடைசாந்தம் அடற்பரிமா
பைம்பொற் சுரிகை முதலான பெற்று பெரிய. கழறிற்-63

ஆரம் நறுமென் கலவை மான்மதச் சாந்தாடை அணிமணிப்பூண்
சார எடுத்து வன்றொண்டர் சாத்தி பெரிய. கழறிற்-153

எழுந்திரை மாகடலாடை இருநில மாமகள் மார்பில்
பெரிய. இடங்கழி-1

**ஈரணி**

மகளிர் ஈரணி புலர்த்தர, வையை நினக்கு மடை
வாய்த்தன்று பரி. 11:8-67

ஈர்ந்தணி ஆடையை எல்லி மாலையை கலித்; குறிஞ். 16

ஈரணி சிதையாதெம் இல்வந்து நின்றதை மரு. 1

ஈரணிக் கேற்ற ஒடியாப் படிவத்து மரு. 93

வதுவை ஈரணிப் பொலிந்த நம்மோடு அகம். 166

இணர் துணை மகளிரொடு ஈரணி அகம். 266

இளையரும் ஈர்ங்கட்கு அயர வுளையணிந்து கார். நாற்பது- 22

நீரணி கொண்ட ஈரணி நீக்கி பெருங். 1.42.143

ஈரணிப் பள்ளிப் புக்கருவினான் சீவக. 373

## உடுக்கை

மரனார் உடுக்கை மலையுறை குறவர் நற். 64

குன்றி யேய்க்கும் உடுக்கை குறுந். கடவுள் வாழ்த்து

எரிதிரிந்தன்ன பொன்புனை யுடுக்கை பரி. 1

புதையிருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு பரி. 2

மாஅய் மெய்யோடு முரணிய உடுக்கையை பரி. 4

பொன்புனையுடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே பரி. 15

இரும்புலி வேங்கைக் கருந் தோலன்ன
கல்லெடுத்தெறிந்த பல்கிழியுடுக்கை அகம். 285

மாசுணுடுக்கை மடிவாயிடையன் புறம். 54

மாசொடு குறைந்த உடுக்கையள் புறம். 159

உடுக்கையுலறி உடம்பழிந்த கண்ணும்
குடிபிறப்பாளர் தம்கொள்கையிற் குன்றார் நாலடி. 141

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு குறள். 788

உடுக்கை யிகவார் ஆசாரக். 75

உண்டி உறையுள் உடுக்கை யிவை ஈந்தார்
பண்டிதராய் வாழ்வார் பயின்று ஏலாதி. 9

உடுக்கை மருந்துறையுள்
கொடுத்து குறைத் தீர்த்தலாற்றி பழமொழி. 338

புன்மயிர் சடைமுடிப் புலரா உடுக்கை சிலப். 25. 126

சாரார் வரைக் கொங்கை கண்ணார் கடலுடுக்கை
நாலா. திவ். திருமன். சிறிய திருமடல் பாடல்வரி-1

பொருவிடையேழ் அடர்த்துகந்த, கரையினார்
துவருடுக்கை கடையாவின் கழிகோல் கை
நாலா. திவ். திருவாய். 4.8.4

## உடுப்பு

தொடுத்த மணிக்கோவை யுடுப்பொடுத் துயல்வர மணி. 3:140

